# தமிழ் வில்லுப் பாட்டுகள்



தி.சி.கோமதி நாயகம்

# தமிழ் வில்லுப் பாட்டுகள்

தி. சி. கோமதிநாயகம் எம். ஏ.,
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை

''என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ் செய்யு மாறே''

தமிழ்ப் பதிப்பகம்
1, கால்வாய்க்கரைச்சாலை, கஸ்தூரிபாய் நகர்,
அடையாறு : : சென்னை—600 020.

**Bibliographical Data**


| | | |
|---|---|---|
| Title of the book | — | Tamil Villup Pattugal |
| Author | — | T.C. Gomathinayagam<br>Research Scholar<br>International Institute<br>of Tamil Studies<br>Adaiyaru, Madras-20. |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | March 1979 |
| Copyright holder | — | Author |
| Paper used | — | 15.2 Kg. D.Dy. |
| Size of the book | — | 22 5X18.5 Cms |
| Printing type used | — | 10 Point |
| No. of Pages | — | 334 |
| No. of Copies Printed | — | 2000 |
| Printers | — | Novel Art Printers<br>137, Jani Jhan Khan Road<br>Madras-600014. |
| Binding | — | Card Board |
| Price | — | Twelve Rupees |
| Publisher | — | Tamil Pathippagam<br>Canal Bank Road<br>Kasturibai nagar<br>Adaiyaru, Madras-600020 |
| Subject | — | Research on Tamil Bow-<br>Songs with presentation<br>of some originals |

The paper used for this book was supplied by the Government of India at concessional rates.

டாக்டர். தா. வே. வீராசாமி
இணைப்பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை—20
23—2—79

# முன்மொழி

பல தமிழகக் கலைகள் பெருங்குடி மக்களுக்கென்றே போற்றிப் பாதுகாக்கப் பெற்றுத் தனிச் சிறப்புடன் விளங்குகின்றன. ஆயின், பொதுமக்கள் கலையாக விளங்கியவை தக்க பாதுகாப்பின்றித் தோன்றிய வண்ணமே காலவெள்ளத்தில் கரைந்து விட்டன. எனினும் காலம் என்பது பொதுமக்கள் கையிலே அகப்பட்டவுடன் அது தன் வடிவை அவர்களுக்குத் தக்கவாறு மாற்றிக் கொள்கிறது. அம்மாற்றமே இன்றைய நாளில் பொது மக்களின் கலையும் இலக்கியமும் தளிர்விடத் தொடங்கும் வைகறைக் காட்சியாகப் பல இடங்களில் காண்கிறோம். அதன் முதல் குரலின் நல்லிசையாக வில்லிசைப் பாடல்கள் வெளி வருகின்றன.

பொதுவாகப் பொதுமக்கள்கலையைப் போற்றுதற்குப் படித்தவர் என்றும் முன்வருவது அருமையே. எனினும் திரு கோமதிநாயகம் வில்லுப்பாட்டை விரும்பிப் பயின்று அதனைத் தக்கவராம் திரு. பிச்சைக்குட்டிபோன்ற பெருமைமிக்க கலைவாணர்களுடன் கலந்து அக்கலைவண்ணமாகி அதனைப் பல இடங்களில் தாமே சென்று பரப்பி வந்ததால் நேர்முக அறிவை முதலில் பெற்றிருந்தார். அவ்வறிவும் அக் கலையை வளர்க்கும் ஆர்வமும் ஒன்றாய்க் கலக்கவே 'வில்லுப்பாட்டி' னைத் தமிழ் ஆய்வுக்குரிய பொருளாகத் தேர்ந்தெடுத்து அதற்குரிய பணிகளைச் செவ்வனே செய்து வருகிறார். அம் முயற்சியின் முதல்வடிவமாக இந்த நூல் பொதுமக்களுக்குக் காணிக்கையாகப் படைக்கப் பெறுகிறது. இப் படையலைப் பெறுகின்ற பொது மக்களின் மகிழ்ச்சி பெருகின் அது வில்லிசைப் பாட்டாகத் தமிழகமெங்கும் பரவிப் பின் உலகக் கலையரங்கில் அடி எடுத்து வைக்கத் துணை புரியும். இந் நூலாசிரியரும் இவர் படைத்த நூலும் வாழ்க! புது முயற்சி வெல்க!

தா. வே. வீராசாமி

இரா. தில்லைகோவிந்தன்
பேராசிரியர்,
அரசு கலைக்கல்லூரி, நந்தனம்,

சென்னை—35
24—6—79

# அணிந்துரை

என்னுடன் பணியாற்றிவரும் அருமை நண்பர் உயர்திரு தி. சி. கோமதிநாயகம் எம். ஏ., பி. டி. அவர்களைக் கடந்த நான்கு ஆண்டுகளாக நன்கறிவேன். அவர் எழுதிய 'தமிழ் வில்லுப் பாட்டுகள்' என்றநூலைக் கண்டு களிப்புறுகிறேன்.

நூலாசிரியர் நுண்மாண் நுழைபுலமுடையவர்; ஓயாத உழைப்பாளர்; தெளிவான சிந்தனையாளர்; பி எச். டி. பட்டம் பெறுவதற்காக வில்லுப்பாட்டு பற்றி அடையாறு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் கடந்த மூன்று ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து வரும் ஆர்வலர்.

'தமிழ் வில்லுப்பாட்டுகள்' எனும் இந்நூல் 311 பக்கங்களைக் கொண்டது. நூலின் மூன்றில் இருபங்காக (பக்கம் 101 முதல் 311 முடிய) ஐயன்கதை, இரணியன் சம்மாரம், சீதாகல்யாணம், நீலிகதை ஆகிய நான்கு தமிழ் வில்லுப்பாட்டுகளின் மூலக் கதைகள் ஆசிரியரவர்களின் அரும்பெரும் முயற்சியால் அழகுறத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. நூலைப் பயில்வார்க்கும் ஆய்வார்க்கும் பயனுகுமாறு நூலின் இறுதியில் சொல்லகராதி ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளது. எதையும் செம்மையாய்ச் செய்து முடிப்பது ஆசிரியர் தகைமை.

முதல் நூறு பக்கங்களில் மூன்றில் ஒரு பங்கான இடைப் பகுதியில் (பக்கம் 31 முதல் 69 முடிய) அக்கால ஐயன் கதை தொடங்கி இக்காலக் கட்டபொம்மன் கதை வரையிலான புராணம், இதிகாசம், தெய்வம், சமுதாயம், வரலாறு தழுவிய வகைவகையான தமிழ் வில்லுப்பாட்டுகளின் கதைச் சுருக்கங்கள் (மொத்தம் 26) சுவைபட வழங்கப் பட்டுள்ளன. இக்கதைச் சுருக்கங்களுக்கு முன்னும் பின்னுமாக ஆசிரியர் எழுதியுள்ள கருத்துரைகள் அவர்தம் தணியாத ஆய்வு வேட்கைக்குச் சான்ருகத் திகழ்கின்றன.

ஆசிரியரின் உழைப்பின் பயனையும் ஆராய்ச்சிப் போக்கின் சிறப்பினையும் பக்கம் 1 முதல் 31 முடிய ஒரு பகுதியிலும் (தொன்மை நூல்களில் வில்லுப் பாட்டின் கூறுகள் பற்றியது) பக்கம் 69 முதல் 100 முடிய மறுபகுதியிலும் (வில்லுப்பாட்டின் தோற்றமும் இன்றைய வளர்ச்சியும் பற்றியது) காணமுடிகிறது.

நண்பர் கோமதிநாயகம் வெறும் கையால் முழம் போட வில்லை. வில்லுக் கதை நிகழ்த்தி வில்லடித்த தம் கையாலேயே வில்லுப்பாட்டு பற்றி ஒரு நூலையும் எழுதியுள்ளார்.

பழந்தமிழ்க் கலைகளுள் ஒன்றாகிய வில்லுப்பாட்டைப் பற்றிய கட்டுரைகள் பல வந்திருக்கலாம்; சிறு நூல்கள் சிலவும் இருந்திருக்கலாம்.எனினும், திரு. தி. சி. கோமதிநாயகம் அவர்கள் எழுதியுள்ள விரிவான ஆராய்ச்சிப் பெருநூலாகிய இந்நூலே வில்லுப்பாட்டு இலக்கியத்திற்கு முழுமையான முந்து நூல் என மொழிவேன். நூலுக்கு மேலும் அழகும் விளக்கமும் தரும் வகையில் வில்லிசைக்குரிய கருவிகளும் அவற்றை இயக்கும் முறை களும் தனித்தனியே காட்டும் புகைப் படங்களும் இணைக்கப் பட்டுள்ளன. அறிஞருலகம் இந்நூலைப் பயன்படுத்திக் கொள்ளும் என்பது என் துணிபு.

நண்பரின் முயற்சியைப் பாராட்டி வளர்ச்சியை வரவேற்கி றேன்; வாழ்த்துகிறேன். வில்லுப்பாட்டு மக்கள் உள்ளத்தை அள்ளும் பாட்டாக வேண்டும் என்ற நூலாசிரியரின் கொள்கை வெல்லும் நாள் விரைவில் வருவதாக.

சென்னை-600035, இரா. தில்லைகோவிந்தன்
24—2—1979.

# நன்றியுரை

நாட்டுப்புறக் கலை இலக்கியங்கள் தொடர்பான ஆய்வியல் ஆர்வம் பெருகி வளரும் இன்றைய நிலையில், பழந்தமிழ்க் கலையாகிய 'வில்லுப்பாட்டு' பற்றிய அறிமுக நூலாகத் ''தமிழ் வில்லுப்பாட்டுகள்'' வெளிவருகிறது. இளமைக்காலம் முதல் இன்றுவரையும் இக்கலையுடன் யான் ஈடுபாடு கொள்ள நேர்ந்த பல்வேறு வாய்ப்புகளின் துணை கொண்டு, இயன்றவரை அறிமுகப் படுத்த முயன்றிருக்கிறேன். இந்நூலின் அறிமுகப் பகுதியில் காணப்படும் செய்திகள் மட்டுமே வில்லுப்பாட்டுக் கலைக்குரிய முழுமையான விவரங்கள் என்பதில்லை இன்னும் எவ்வளவோ உள்ளன.

என்றோ அரும்பிய எண்ணம் இன்று மலர்ச்சிபெற்றுத் தங்கள் கைகளிலே நூல்வடிவில் மணம் பரப்பும் இந்நிலையில்,

என்னை ஆளாக்கி வாழ்வளித்த பேரருட் பெருந்தகையாளர் திருநெல்வேலி நிறைதிரு இராம. கனகசபாபதி அவர்களின்திருவடி மலர்களை நெஞ்சார நினைந்து போற்றுகிறேன்.

எங்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர்.பேராசிரியர் டாக்டர். ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் எனக்களித்த பேருக்கமே இந்நூலின் ஆக்கத்திற்கு முழுநிலையில் காரணமாகி நின்றது என மொழிவேன். அவர்களுக்கு என் உள்ளம் கனிந்த நன்றி என்றென்றும் உரியது.

என் ஆய்வுப் பணியில் சீரிய நல்வழிகாட்டி,என்னைச் செம்மைப் படுத்திடும் டாக்டர். தா.வே. வீராசாமி அவர்கள் இந் நூலுக்கு நன்மொழியால் அமைந்த முன் மொழியினை வழங்கி யுள்ளனர். அவர்களுக்கும், அவ்வப்போது எனக்குத் தேவைப்படும் நல்லுதவிகளை அன்புடன் அளித்துவரும் டாக்டர். ஏ. என். பெருமாள் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித் துக் கொள்கின்றேன்.

இந்நூலினுக்கு எழில் வாய்ந்ததோர் அணிந்துரையினை அளித் தருளிய எங்கள் தமிழ்த் துறைத் தலைவர், பழகுதமிழ்ப் பண்பாளர் பேராசிரியர் இரா. தில்லை கோவிந்தன் அவர்களுக்கு என்றும் குன்றா நன்றியுடையேன்.

நூலின் அறிமுகப்பகுதியில் வில்லுப்பாட்டின் தற்கால வளர்ச்சி குறித்த கருத்துரைகளில் காணப்பெறும் கலைவாணர் பற்றிய பயன்மிக்க செய்திகளை எனக்குப் பேரன்புடன் தெரிவித் தருளிய உயர்திரு. வே. நாராயணன் (செயலாளர், கலைவாணர் நினைவுமன்றம் சென்னை. 17) அவர்களுக்கும்,

கலைநுட்பம் செறிந்த கருத்துகளையும் வில்லுப்பாட்டுக் கலையின்பால் தாம்கொண்ட ஈடுபாடு பற்றிய செய்திகளையும் நிறைந்த அன்புடன் எனக்குத் தெரிவித்தருளிய இலட்சிய நடிகர் உயர்திரு. எஸ். எஸ். இராஜேந்திரன் அவர்களுக்கும்,

கலைத் தொடர்பான பல்வேறு செய்திகளைக் கனிவுடன் தந்தருளிய நெல்லை, புலவர் உயர்திரு. ஐயம்பிள்ளை அவர்களுக்கும், அகத்தீசுவரம் உயர்திரு. ஆறுமுகப் பெருமாள் நாடார் அவர்களுக்கும், கலைமாமணி உயர்திரு. சுப்பு ஆறுமுகம் அவர்களுக்கும், உயர்திரு. குலதெய்வம் இராஜகோபால் அவர்களுக்கும் என்றென்றும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

நூலின்கண் இடம் பெற்றுள்ள நான்கு கதைகளில் ஐயன்கதை இரணியன் சம்மாரம், நீலிகதை ஆகிய மூன்றினையும் கொண்ட கையெழுத்துப்படியினை எனக்குப் பேரன்புடன் பெற்றுத்தந்த தூத்துக்குடி வில்லிசைக்கலைஞர் அருமை அண்ணு, திரு. சிவலிங்கம் அவர்கள், சீதாகல்யாணம் கதையின் கையெழுத்துப் படியினை ஆர்வமுடன் எனக்குஎழுதித்தந்து உதவிய தூத்துக்குடி வில்லிசைக் கலைஞர் அன்புத் தம்பி திரு. சு. மீனுட்சிசுந்தரம் ஆகிய இருவரும் என் இதயம் கனிந்த நன்றிக்கு என்றுமே உரியவர்.

கையெழுத்துப்படிகளில் அமைந்திருந்தவாறே கதைகளைத் தொகுத்துத் தந்துள்ளேன். கதை விளக்கத்திற்காகப் பிறைக்குறிகளிடையே காணப்பெறும் கதைத்தொடர்பு மொழிகளும், அடிக்குறிப்புகளும் எழுதிச் சேர்த்துள்ளேன்.

வில்லிசைக்கலையின்பால் ஆர்வம் தோன்றிய ஆரம்பநிலையில் எனக்கு அன்புடன் ஊக்கமளித்து என் வளர்ச்சிக்கு வித்திட்ட இனிய நெஞ்சங்களை எல்லாம் இன்று நன்றியுடன் நினைவு கூர்வதில் பெரிதும் மகிழ்கின்றேன்.

நூலினைப் படிக்கும் கலைப் பெருமக்களும், ஆய்வியல் வல்லுநர்களும் தாங்கள் காணும் குற்றம் குறைகளையும் தாங்கள் மேலும் அறிந்த கலைத்தொடர்பான செய்திகளையும் எனக்குக் கனிவுடன் தெரிவிப்பாராயின் மிகவும் நன்றியுடையேன். என் ஆய்வுப் பணிக்குப் பேருதவியாக அமையும்.

இந்நூலினை ஏற்றுச் சிறந்த முறையில் பதிப்பித்து வெளியிட்டருளிய தமிழ்ப்பதிப்பகத்தாருக்கு என் உளமார்ந்த நன்றி உரியது.

அழகிய முறையில் நூலினை அச்சியற்றித் தந்த 'நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ், உரிமையாளர் பேரன்புகெழுமிய கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் அவர்தம் அச்சக உழைப்பாளர் அனைவருக்கும் என் இனிய நன்றி.

தி. சி. கோமதிநாயகம்

## உள்ளே



---

நாளும் வில்லிசையால் தமிழ்பரப்பும்

நல்லிசைப் புலவர், கலைப்பெருமக்கள்

அனைவருக்கும்

இந்நூல்

**காணிக்கை**

---

# படவிளக்கம்

படம் 1. இடப்புறம் : மேலே. வீசுகோல்கள்
கீழே. கட்டப்பெற்ற வில்.
வலப்புறம் : மேலே. தாளம், கட்டை
கீழே. கட்டை, தாளம் ஆகிய கருவிகளை இயக்கும் முறை

படம் 2. இடப்புறம் : மேலே. உடுக்கின் தோற்றம் (தட்டுகள் கட்டப்பெறாத நிலையில்)
கீழே. உடுக்கு (தட்டுகளைப் பொருத்திக் கட்டிய நிலையில்)
வலப்புறம் : உடுக்கினை இயக்கும் முறை

படம் 3. மேலே : இடம்: 'பந்தாடை' (புரிமணை) யின்மேல் வைக்கப்பெற்றுள்ள குடத்தின் தோற்றம்.
வலம்: குடத்தினை இயக்கும் முறை
கீழே: குடத்தினை இயக்க உதவும் 'பத்தி' யும், 'சொட்டிக்கட்டை'யும்

படம் 4. ஐவர் அமைந்த வில்லுப்பாட்டுக் குழு. (குடத்துடன் வில் கட்டப்பட்டுள்ளது. பிற கருவிகளுடன் குழுவினர் இருப்பு முறைப்படி அமர்ந்துள்ளனர்.)

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 5 | தகுத்தவாறு | தகுந்தவாறு |
| 21 | (அடிக்குறிப்பு)1 | V. Vanamamalai | N. Vanamamalai |
| 23 | (அ. கு.) 2 | சிள்னச் | சின்னச் |
| 28 | 1 | முடிடிசெய்து | முடிவுசெய்து |
| 28 | (அ. கு.) 1 | 1-ஆம் | 9-ஆம் |
| 29 | 22 | படித்துவந்தளர் | படித்துவந்தனர் |
| 37 | 10-11 | வள்ளியம்கன் | வள்ளியம்மன் |
| 44 | (அ.கு) 1 | சிலப்பதிகாம் | சிலப்பதிகாரம் |
| 46 | 31 | றுளதாஅன் | ளதா அன்று |
| 47 | (அ.கு) 4 | P. Cottin | P. Coffin |
| 55 | 13 | சிள்னத்தம்பிகதை | சின்னத்தம்பி கதை |
| 56 | 28 | இவளே | இவனே |
| ,, | 32 | நிலேவில் | நிலேயில் |
| 64 | 10 | மன்னன் | மன்னன் |
| ,, | 23 | வீணுதிவீணுன் | வீணுதிவீணன் |
| 65 | 1 | பாண்டினின் | பாண்டியனின் |
| ,, | 12 | பண்டயை | படையை |
| ,, | 29 | படையெடுப்புர்கள் | படையெடுப்புகள் |
| 66 | 10 | மந்கிரியார் | மந்திரிமார் |
| 72 | 2 | டாக்டர் ஏ.என். பெருமான் | டாக்டர் ஏ.என். பெருமாள் |
| 79 | 2 | வில்லுபாட்டுகலே | வில்லுப்பாட்டுக்கலே |
| ,, | 22 | மாகோசங் | மாகேசங் |
| 79 | 32 | கின்ருப்பிறண்டி | கிள்ளுப்பிருண்டி |
| 80 | 29 | பல்லங்குழி | பல்லாங்குழி |
| 82 | 4 | அமைக்கிறது | அமைகிறது |
| 86 | 20 | ககுத்துகளே | கருத்துகளே |
| 92 | 2 | மலர்ச்கிக்குப் | மலர்ச்சிக்குப் |
| ,, | 3 | காரனமாணவர் | காரணமானவர் |
| ,, | 12 | கவைக்கும் | சுவைக்கும் |
| 97 | 18 | பக்கமேலங்களுடன் | பக்கமேளங்களுடன் |
| 98 | 28 | நடத்தியுள்ளார் | நடத்தியுள்ளனர் |
| 99 | 13 | வில்லுப்பர்ட்டுக்சுள் | வில்லுப்பாட்டுகள் |
| 100 | 12 | ஊக்கமளிப்பதிலும் | ஊக்கமளிப்பதும் |
| 108 | (அ.கு) 3 | ஏழைப்மெண்ணுக்கு | ஏழைப்பெண்ணுக்கு |
| 194 | (அ கு) 1 | மடுக்கையல்லோ | படுக்கையல்லோ |
| 209 | (அ.கு) 1 | நளர் | தளர் |
| 211 | (அ.கு) 3 | தொடர்கன் | தொடர்கள் |
| 239 | (அ.கு) 1 | இடந்திற்கு | இடத்திற்கு |
| 288 | பா. வரி. 656 | குனிந்தநிழல் | குளிந்தநிழல் |
| 290 | 3 | மந்துசேர்ந்தான் | வந்துசேர்ந்தான் |
| 293 | 20 | வழிமறிந்து | வழிமறித்து |
| 304 | (அ.கு) 1 | கொளிளக்குடம் | கொள்ளிக்குடம் |
| 306 | (அ.கு) 1 | செடிமறவிம் | செடிமறவில் |

# அறிமுகம்

## முன்னுரை

தமிழ் நாட்டுப் பாமர மக்களிடையே நெடுங்காலமாகவே பலவகையான பழங்கலைகள் நிலவி வருகின்றன. அவையாவும் நாட்டுப்புறக் கலைகள் எனப் பொதுவாகப் பெயர் பெறுகின்றன. பழங்கலைகளில் பலவும், போற்றுவார் இல்லாமையால் அழிந்தன. இன்றைய நிலையிலும் 'தற்கால' நாகரிகத்தின் தாக்குதலுக்கு ஈடு கொடுக்க முடியாமல், பலகலைகள் அழிந்து மறைந்துவரும் நிலையில் உள்ளன. மக்களின் வாழ்க்கையுடன் ஒன்றிக் கலந்து, இன்று வரை நின்று நிலவும் தமிழ்க் கலைகளுள் ஒன்றே 'வில்லுப்பாட்டு.'

தமிழகத்தின் தென்பகுதியிலே, திருநெல்வேலி கன்னியாகுமரி மாவட்டங்களிலும், இராமநாதபுரம் மாவட்டப் பகுதிகளிலும், சிற்றூர்த் தெய்வங்களுக்கு வழிபாடு நிகழும் 'கொடை' விழாக் காலங்களில், தெய்வ வரலாறுகளையும், தெய்வநிலை பெற்ற வீரர் வரலாறுகளையும், மக்களுக்கு எடுத்துச் சொல்லப் பயன்படும் இவ் வில்லுப்பாட்டு, ஓர் பழந்தமிழ் இசைக்கலை. இக்கலை, தன் எளிமையாலும் இனிமையாலும் யாவரையும் தன்பால் இழுக்கும் இயல்புடையது. இப்பாட்டின் கதைகளை இரவில் பலமணி நேரம் கேட்டு மகிழ்வர் மக்கள். அத்தகைய முறையில் அலுப்புச் சலிப்புக்கு இடமின்றி ஆரவாரத்துடன் அமைவது.

போர் வீரரின் முதற்கருவியாகிய வில்லே இக்கலையில் பயன் படும் முதன்மையான இசைக்கருவியாக அமைந்துள்ளது. இதற் குத் துணையாகப் பயன்படும் உடுக்கு, குடம், தாளம், கட்டை ஆகிய கருவிகள் மிகப்பழங்காலம் முதல், தமிழ் மக்களிடையே

வழங்கிவரும் எளிய, இனிய இசைக் கருவிகள். இவைகளின் கூட்டு ஒலியுடன், இந்த இசைக் குழுவின் முதல்வராக அமர்ந்து கதைபாடும் 'புலவரின்' பாட்டு ஒலியும், கேட்பவரைக் கிறுகிறுக்க வைக்கும்.

வில்லுப்பாட்டுக் கலையின் நல்லியல்புகளிலும் இசை இன்பத்திலும் உள்ளத்தைப் பறிகொடுத்தவர்கள், இதனை, ''எளிமையும், யாவரையும் ஈர்க்கும் இனிமையும் கொண்ட சீரிய நாட்டுப்புற இசைக்கலைகளிலே, தமிழ்க்கலைச் செல்வத்தின் அழியாத சின்னமாகத் திகழ்வது'' எனப் புகழ்ந்து கூறுவர்.[1] இதில் பாடப்பெறும் கதைகள் வெறும் பொழுதுபோக்கு நோக்கத்தில் மட்டும் அமையாமல் ''பொதுமக்களிடையே, பக்தி, பரோபகாரம், காதல், வீரம் முதலிய பெருங்குணங்களை வளர்க்கப் பயன்படுகின்றன'' எனப் பாராட்டுவர்.[2]

'வில்லுப்பாட்டு' என்பதனை வில், வில்பாட்டு, வில்லு (வில்லுப்பாட்டு) வில்லடி, வில்லடிப்பாட்டு, வில்லடிச்சான் பாட்டு என்றெல்லாம் பலவாறாக அழைப்பதும் உண்டு. இசை அமைதியும் இசைப்பவரும், இசைக்கும் கருவியும் பொறுத்துப் பாடல்கள் பெயர் பெறும் எனவும், 'வில்' என்னும் கருவியை முதன்மையாகக் கொண்டு 'வில்லுப்பாட்டு' எனும் பெயர் அமைவதால், இது இசைக்கும் கருவியால் பெறும் பெயர் எனவும் கருதுவர்.[3]

*அமைப்பின் சிறப்பு*

'வில்லுப்பாட்டு'—வில், உடுக்கை, குடம், தாளம், கட்டை ஆகிய உறுப்புகளைக் கொண்டு அமைந்துள்ளது இவ்வமைப்பின் முதன்மைக் கருவியாகிய வில்லும், அதற்குத் துணையாகும் பிற கருவிகளை இயக்குவதற்கான அடிப்படை ஒலிமுறையினை அமைத்துத் தரும் உடுக்கும், மிகவும் தொன்மையான சிறப்புடையவை. வேட்டைத் தொழிலிலும் போர்த் தொழிலிலும் வீரர்க்கு உதவிய வில்லின் நாண் அதிர்வினால் விளைந்த ஒலியே, பின்னாளில் படிப்படியாக வளர்ச்சிபெற்றுச் சிறந்த யாழ் வகைகள் அனைத்திற்கும் மூலகாரணமாக அமைந்தது எனலாம்.

---

1. K. P. S Hameed—'Bow Song' A Folk Art From South Travancore. Article in the 'Tamil Culture', Madras, Vol. V. No: 3 (July 1956) Page: 275.
2. கு. அருணாசலக் கவுண்டர்—'வில்லுப்பாட்டு' (கட்டுரை) கலைக்களஞ்சியம், 9-ஆம் தொகுதி, தமிழ் வளர்ச்சிக்கழகம். சென்னை (1968) பக்: 362.
3. மு. சண்முகம் பிள்ளை—முன்னுரை 'ஈனமுத்துப் பாண்டியன் கதை', தமிழாய்வு, தொகுதி 3. சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு (1974) பக்கம்: iv.

போர் வெற்றிக்குரிய கொற்றவைத் தெய்வம் தாங்கி நிற்பது வில்லேயாகும். மூவேந்தருள் சேரருக்கு இலச்சினையாகும் சிறப்பினைப் பெறுவதும் வில்லே. வீர மறவரை 'வில்லேருழவர்' எனப் பெருமைப்படுத்துவர்.

வில்லின் வடிவமே கொண்ட யாழ்வகையால் இசை எழுப்பிப் பாடும் ஓர் கலைஞனைப் பெரும்பாணாற்றுப்படையில் காண்கிறோம்.

> ''குமிழின்
> புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
> வில்யாழிசைக்கும் விரலெறி குறிஞ்சி''[1]

எனவரும் அடிகள், குமிழ மரத்தின் கொம்பினை வளைத்து, மரல் நாரினால் ஆன நாண்கொண்டு இழுத்துக் கட்டி, விரலால் தெறித்துக் குறிஞ்சிப் பண் பாடிய செய்தியைத் தெரிவிக்கின்றன.

கல்லாடம், ஒரே நரம்பினை உடைய யாழ் ஒன்றை ''மருத்துவப் பெயர் பெறும் வானக் கருவி''[2] என்று சிறப்பித்துக் கூறுகிறது.

'பாணர் கைவழி எனப்படும் யாழ்நூ'லில், கள்ளிக் கோட்டைக்கு அருகே, பெருந்தல்மன்னா என்னும் சிற்றூரை அடுத்து உள்ள காட்டில், மாடுகளை மேய்த்துக்கொண்டும், பிச்சை எடுத்துக்கொண்டும் வாழும் 'புள்ளுவர்' என்போர் தம் கையிலுள்ள ஒருவகை வில்யாழை இசைத்துக்கொண்டு, தம்மிடற்றாலும் பாடுகிறார்கள் என்றும், இப்பாட்டு 'வில்பாட்டு' என்று அழைக்கப்படுவதாகவும், இப்பாட்டின் மொழிகளில் எழுபது விழுக்காடு தமிழ்ச் சொற்களாகவே இருப்பன என்றும் கூறப்படும் செய்திகள் குறிப்பிடத்தக்கன.[3]

வில்லுப்பாட்டில் அமைந்துள்ள வில்லைத் திருச்செந்தூரில் வாழ்ந்த ஈஸ்வர பாகவதர் என்பார், 'ஒற்றைத் தந்தி யாழ்' என்று குறிப்பிடுவார் என்ற செய்தியினைத் திருநெல்வேலி, வில்லிசைப் பெரும்புலவர் ஐயம்பிள்ளை தெரிவித்தது இங்கே நினைவுகூரத் தக்கதாக உள்ளது.

வில்லினை அடுத்துள்ள சிறப்பான கருவியாகிய 'உடுக்கு', பழங்காலத்தில் பாணர் பயன்படுத்திய துடியே ஆகும். இதன்

---

1. கடியலூர் உருத்திரங் கண்ணனார்,—பெரும்பாணாற்றுப்படை. வரி: 180-182. கழக வெளியீடு. (1967) பக்கம் 6.
2. கல்லாடர்—கல்லாடம், பாடல் எண்: 85. வரி: 28. S. ராஜம் வெளியீடு. சென்னை-1. (1957) பக்கம்: 76.
3. ஆ. அ. வரகுணபாண்டியன்—பாணர் கைவழி எனப்படும் யாழ்நூல், சை. சி. நூ. கழகம் சென்னை-1. (1950) பக்கம்: 159.

வகையே ஆநிரை கவரும் காலத்தில் ஒலிக்கப்பட்டதெனவும் கொள்ளலாம். சாத்தனுரின் 'கூத்த நூல்' 'உடுக்கை' பற்றி மிகவும் சிறப்பித்துக் கூறுகிறது.

> "மோனத்து இருந்த முன்னேன் கூத்தில்
> உடுக்கையில் பிறந்தது ஓசையின் சுழலே
> ஓசையில் பிறந்தது இசையின் உயிர்ப்பே"[1]

என்னும் அடிகள், அநாதி முதல்வனும் முன்னேனுன ஆண்டவன் ஆடும் கூத்தில், அவனது வலக்கையில் உள்ள 'உடுக்கை'யில்தான் ஓசை பிறந்து சுழல்கிறது என்றும், இவ்வாறு சுழலும் ஓசை வட்டத்திடையில் உயிர்த்தெழுவதுதான் இசை என்றும் குறிப்பிடுகின்றன.[2] மேலும்,

> "உடுக்கையில் பிறந்தது ஓம் எனும் ஒலியே
> ஓம் எனும் ஒலியே நாட்டியத்து ஒலியாம்"[3]

எனவும் கூறி அந்நூல் உடுக்கையினைச் சிறப்பிக்கிறது.

அடியார்க்கு நல்லார் தண்ணுமைக் கருவிகளைத் தொகுத்தளிக்கும் மேற்கோள் ஒன்று குறிப்பிடுகிருர். அதன் முதல் அடியில், 'பேரிகை படகம் இடக்கை உடுக்கை'[4] என உடுக்கை பற்றிய குறிப்பும் காணப்படுகிறது.

வில்லுப்பாட்டில் பயன்படும் 'குடம்', வாய்ப்புறத்தில் தோலால் மூடிக் கட்டப்படுவதில்லை. எனினும் 'குடம்' என்ற பெயரில் அமையும் ஓர் கருவியினைக் கூத்தநூல் குறிக்கிறது. "குக்கிலி நொக்கமும் குடுக்கையும் குடமும்"[5] என்றவாறு வருகிறது. வாய்ப்புறம் தோலினுல் கட்டப்படாத நிலையில் கருவி வகைகளுள் எதிலும் சேர்க்க இயலாதவாறு தனித்ததோர் அமைப்புடையதாகி விடுகிறது.

1. சாத்தனுர்—கூத்த நூல். தோற்றுவாய் வரி: 1-3. ச. து. சு. யோகியார் பதிப்பு. தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம். சென்னை. (1968) பக்கம்: 15.
2. டாக்டர் மா. இராமலிங்கம், 'நாட்டுப்பாடல்கள்' எனும் கட்டுரையில் பாட்டின் தோற்றம் பற்றிக் கூறுகையில் T.S. எலியட் தரும் கருத்தினைப் பின்வருமாறு குறிப்பிடுகிருர். "பறையின் ஓசையில் ஈடுபட்டு உணர்ச்சி வசப்பட்ட மனிதன் அதனேடு சொற்களை இசைத்துப் பாட்டை இயற்றி இருக்கலாம்" இக்கருத்து இங்கே சிந்திப்பதற்குரியது. தாமரை மலர் 6 இதழ் 5, (அக். 1964) பக்கம்; 5.
3. சாத்தனுர்—கூத்தநூல். 'ஓம்' (2) வரி: 1-2. தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம். சென்னை (1968) பக்கம்: 19.
4. அடியார்க்கு நல்லார் உரை—சிலப்பதிகாரம் (அரங்கேற்று காதை:) உ. வே. சா. பதிப்பு (1978) பக்கம்: 105.
5. சாத்தனுர் கூத்தநூல். புணரியல் 146. (வரி:9) தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் சென்னை (1968) பக்கம்: 128.

ஏனைய தாளமும், கட்டையும் தட்டி ஒலிக்கப்படும் கருவிகளே நன்கு உருக்கப்பெற்ற தகடால் அமைந்து விளங்கும் தாளம், ''நுண்ணுருக்குற்ற விளங்கடர்ப்பாண்டில்''[1] என 'மலைபடுகடாம்' தரும் குறிப்பில் சிறப்பிக்கப்படுதல் காணலாம், வில்லுப்பாட்டுப் புலவரின் குரல் ஒலியுடன், பிற பக்க மேளங்களின் ஒலியமைப்பு களையும் சேர்த்து நோக்கினுல் வில்லுப்பாட்டிலே, நரம்புக் கருவி, தோற்கருவி, கஞ்சக் கருவி ஆகிய கருவி வகைகளுடன் மிடற்றுக் கருவியும் ஒருங்கமைந்த ஓர் சிறப்பான அமைப்பினைக் காணலாம்.

கருவிகளின் அமைப்பும் இயக்கும் முறையும்

வில் : வில்லுப்பாட்டின் முதன்மைக் கருவியாகிய வில்லினை உருவாக்கத் தேவையானவை, வில்கதிர், முனைக்குப்பிகள், வடம், மணிகள், மணிகளைக் கோர்த்திடத் தேவையான வளையங்கள், கம்பிகள், கயிறுகள் முதலியனவாகும். வில்கதிர் ஏறத்தாழ ஆறு முழ நீளத்தில் அமையும். இது, பொதுவாகக் கூந்தற்பனையின்[2] வைரம் பாய்ந்த அடிமரத் துண்டினின்றும் செதுக்கி எடுக்கப்படு வது. நாண் ஏற்றிக் கதிரின் இரு முனைகளும் வடத்தால் இழுத் துக் கட்டப்படுவதற் கேற்றவாறு உறுதிப்பட வளைந்து கொடுக்கும் வகையில் இருக்க, இக் கதிரானது கயிற்ருல் வரிந்து சுற்றப்பெற் றிருக்கும். இத்தகைய 'வரிவில்'லின்மேல் துணிகள் ஒட்டப் பெற்று அதன்மேல் தாள்களும் ஒட்டப்பெற்றிருக்கும். விருப்பத் திற்கேற்றவாறு தங்கத்தாள், பூந்தாள் ஆகியவை ஒட்டப்பெற்று அழகுபடுத்தி வைப்பதும் உண்டு. மணிகளைக் கோர்க்கத் தேவைப் படும் வளையங்கள் உரிய இடைவெளியிட்டுக் கதிரில் பொருத்தப் பெற்றிருக்கும். கதிர் பார்வைக்கு அழகு தரும் வகையில் பட்டுத் துணியாலாகிய சுற்று உறையும் போடுவதுண்டு. கதிரின் பருமன் இரு முனைகளையும் நோக்கிக் குறைந்து செல்லும். பனைமரத்தி னின்றும் செதுக்கி எடுக்கப்படுவதற்குப் பதிலாக இக்கதிர் மூங்கில் கழியாலும் தடித்த பிரம்பினுலும், உலோகத் தண்டினுலும் கூட அமைத்துக்கொள்வதுண்டு. பாட்டுக்காரர்கள் அவரவர் வசதிக் கேற்றவாறு இவ்வாறு அமைத்துக்கொண்டாலும் பனைமரக் கதிரே பொதுவாக எல்லோராலும் பயன்படுத்தப்பட்டு வரு கிறது.

கதிரின் நடுப்பாகம் குடத்தின் கழுத்துடன் சேர்த்துக் கட்டப் படுவதால் அதற்கேற்றவாறு சிறிது பருமனுக அமைக்கப்பட்

1. பெருங்கௌசிகனர்—மலைபடுகடாம்- (வரி: 4) பத்துப்பாட்டு, வை. மு. கோ. பதிப்பு, சென்னை (1961) பக்கம்: 2.

2. கூந்தற்பனை சிறப்புடையது எனினும் நன்கு வைரம் ஏறிய சாதாரண மான பனைமரத்துண்டும் பயன்படுத்துவர்,

டிருக்கும். குடம் மண்குடமாதலால் கதிரின் நடுப்பகுதியில் மெத்தென்று இருக்குமாறு துணி அமைப்புச் செய்துகொள்வதும் உண்டு. வில், குடத்துடன் கட்டியிருக்கும் நிலையில் நாண்வடம் மேலாகவும் கதிர்ப்பகுதி கீழாகவும் அமைந்திருக்கும்.

கதிரின் இரு முனைகளிலும் குப்பிகள் பொருத்தப்பெறும். இவை வெண்கலத்தாலோ பித்தளையாலோ அமைந்திருக்கும். யாளியின் வடிவில் வேலைப்பாடமைந்த அழகிய குப்பிகளைப் பொருத்துவதும் உண்டு. சிலர் இக் கதிர் முனைகளில் இரும்பாலான கொக்கி போலும் அமைப்புடைய குப்பிகளைப் பொருத்திக் கொள்வர். எவ்வாறாயினும் நாணுகைக் கட்டப்படும் வடத்தைக் கொண்டு இரு முனைகளையும் வலித்துக் கட்டப்படுவதற்கேற்ற முறையில் இவை அமைந்திருக்கும். குப்பிகளுக்குப் பதிலாக நடுவே துளையுள்ள மரத்தாலான வட்டுகளையும் பயன்படுத்துவர். இவ்வட்டுகளை முனைக்கு ஒன்றாகப் பொருத்தி அவற்றின்மேல் வடத்தை நாணுக இழுத்துக் கட்டுவர்.

நாணுகப் பயன்படுத்தப்படும் வடம் மாட்டுத் தோல் முறுக்கால் ஆனது. வில் கதிரின் இரு முனைகளோடும் இழுத்துக் கட்டப் பெறும் நாண், நெகிழ்ச்சியடையாத நிலையில் இருக்கவேண்டியே வடம் தோல் முறுக்கால் அமைக்கப்படுகிறது.

கதிரில், குறிப்பிட்ட இடைவெளியிட்டுப் பொருத்தப்பெற்றுள்ள வளையங்கள் மணிகளைக் கோர்த்திட உதவும். இவ்வளையங்களின் ஊடே கதிரின் இரு பக்கங்களிலும் இரு கம்பிகளைச் செருகி, அக்கம்பிகளிலே மணிகள் வளையங்களினிடையே தொங்கவிடப்பட்டிருக்கும். இம் மணிகள் உருண்டை வடிவில் வெண்கல வார்ப்பால் ஆனவை. வெவ்வேறு ஒலி அமைப்பைக் கொண்டவை. ஆநிரைகளின் கழுத்தில் அணியப் பெறுவனபோன்று அளவிற் பெரியவை. மணிகள், கதிரின் ஒரு பக்கம் ஆறும், மற்றொரு பக்கம் ஐந்துமாகப் பதினொன்று அமைந்திருக்கும். இது பொதுவான எண்ணிக்கை. இவ்வெண்ணிக்கையை ஐந்தும், நான்கும் ஆகக் கொண்டு ஒன்பதாகக் குறைத்தும், ஏழும் ஆறுமாக அமைத்துப் பதிமூன்றாகக் கூட்டியும் அமைத்துக் கொள்வர். எவ்வாறாயினும் மணிகளின் எண்ணிக்கை ஒற்றைப்படையிலேயே அமையும்.

பொதுவாகக் கதைபாடும் புலவர்தான் வில்லினை இயக்குவார். புலவர் கைக்கு ஒன்றாக இரு கோல்களை வைத்திருப்பார். ஒவ்வொன்றும் ஒன்றரைச் சாண் அளவில் அமைந்திருக்கும். இவற்றில் கைப்பிடியை அடுத்து உள்ளீடுபெற்ற கிண்கிணிகளும் பொருத்தப்பெற்றிருக்கும். இவை 'வீசு கோல்கள்' எனப்படும்.

இவ்வீசு கோல்களைக் கொண்டு வில் நாண்மீது புலவர் தாளத்திற் கேற்றவாறு தட்டும்போது கோலின் கிண்கிணி ஒலியும் வில் மணிகளின் ஒலியும் சேர்ந்து இனிய வில் ஒலி உண்டாகும். புலவர்கள் வீசுகோல் வீச்சிலேயே பல்வேறு நளினங்களைக் காட்டி வில்லடித்துப் பாடும்போது பார்க்கவும் கேட்கவும் இனிமையாக அமையும். பெண்பால் புலவர்கள் இவ்வீசுகோல் நளினங்களை மிகவும் திறம்படக் கையாளுவர். சில வேளைகளில் புலவர் கதை மட்டும் பாடுவார். வேறு ஒருவர் வீசுகோல்களைக் கையாண்டு வில்ஒலி எழுப்புவதுடன் புலவருக்குப் பின்பாட்டும் பாடுவார்.

உடுக்கு : வில்லுப்பாட்டில் தெய்வக் கதைகளும், வீர அவல உணர்ச்சிகளை மிகுதியாகக் கொண்டுள்ள கதைகளுமே, பெரும்பாலும் பாடப்பெறும். இக் கதைகளில் வரும் உணர்ச்சிகளை ஆவேசத்துடன், வெறியுடன் வெளிப்படுத்திக்காட்ட உடுக்கிலிருந்து உண்டாகும் ஒலியே பெரிதும் உதவுகிறது எனலாம். உடுக்கு, உடுக்கை எனவும் அழைக்கப்படும். இருபுற வாய்ப்பகுதிகளையும் இடை சுருங்கிய நடுப்பகுதியையும் கொண்ட வடிவுடையது. இவ்வடிவ அமைப்பினை நோக்க, மாதரின் இடைக்கு உவமையாகப் புலவோர் கூறும் 'துடி' எனும் பழங்காலத் தோற்கருவியும் இதுவும் ஒன்றே எனலாம். கன்னட மொழியில் இக்கருவி 'துடி' என்றே வழங்கப்படுதலும் இங்கே கருதத்தக்கதாம். பிற்காலத்தில் இடக்கை, எனத் தோற்கருவி ஒன்று பெயர் பெறுகையில் 'துடி'யும் உடுக்கை எனப் பெயர்பெற்றது போலும்.

உடுக்கை மட்டும் வைத்துக்கொண்டு கதைபாடும் உடுக்கடிப் பாட்டுக்காரர்கள், குறிசொல்லுவோர், மாரியம்மன் ஆடுவோர், ஆகியோர் பயன்படுத்தும் உடுக்கை பெரிய அளவிலானது. (இதனினும் பெரியதோர் அளவில் அமைந்ததனைத் 'தவண்டை' என்பர். இது தஞ்சை மாவட்டக் கோவில்களில் இறைவர் வீதிவலம் எழுந்தருளப் போவதை அறிவிக்கும் வகையில் இன்றும் ஒலிக்கப்படுகிறது. சிறிய கோல் கொண்டு தட்டியே இதனை இயக்குவர்.)

வில்லுப்பாட்டில் பயன்படுவது சிறிய அளவில் அமைந்த 'சித்துடுக்கை'யே ஆகும். இதன் உடல் வெண்கல வார்ப்பால் அல்லது பித்தளையால் அமைவது. மரத்தாலும், மண்ணாலும்கூட இது அமைக்கப்படும். மெல்லிய பிரம்பினால் அல்லது வளையமாக வளைத்துக் கொள்ளும் தன்மை கொண்ட சிலவகை மர'விளார்' கொண்டு, வட்ட வடிவில் கட்டப்பட்ட வளையங்களில், மாட்டுச் சவ்வினைப் பொருத்தமாக ஒட்டி உருவாக்கப்பட்ட இரு தட்டுகள் உடுக்கின் இரு வாய்ப்புறங்களிலும் பொருத்தப்பெற்றிருக்கும்,

இத்தட்டுகளை 'உடுக்குத்தட்டு' என்றே அழைப்பர். வளையங்கள் ஒவ்வொன்றிலும் ஒரே அளவு இடைவெளி கொண்ட ஆறு துளைகள் காணப்படும். இத்துளைகளின் வழியாக நூல் கயிற்றை மாறிமாறிக் கோர்த்து இரு தட்டுகளும் உடுக்கின் இருவாய்ப்புறத்தும் பொருந்தியிருக்குமாறு இழுத்துக் கட்டப்பெற்றிருக்கும்.

இவ்வாறாக அமைக்கப்பெறும் உடுக்கின் இடைப்பகுதியில் நூல்கயிற்றுப் பின்னலின் மேலாகத் துணியாலான 'பட்டை' ஒன்றைச் சுற்றிக் கொள்வர். அத்துணிப் பட்டையின் இருமுனைகளையும் இணைத்து இடக்கையால் இறுக்கிப் பிடித்துக்கொண்டு வலக்கை விரல்களால் உடுக்கின் ஒருபுறத்தில் தட்டி ஓசை எழுப்புவர். உரத்த ஓசையினையும், மந்த ஓசையினையும் மாறி மாறி உண்டாக்கத் துணிப்பட்டையினை இறுக்கியும் நெகிழ்த்தும் இக் கருவியினை இயக்குவர். விரல்களால் தனியானதோர் திறமையில் மாறி மாறிச் சுருள்படத் தட்டுவதும் இதன் மூலமாகத் துல்லியமான சொல்கட்டுகளைத் தோற்றுவிப்பதும் ஒரு தனிக்கலையாகும். உடுக்கின் தாளமுறையினையே 'சொல்கட்டு' என்பர். இச்சொல்கட்டு நான்கு காலங்களில் இசைக்கப்படுகிறது. இவற்றை முதற் காலம் இரண்டாம் காலம், மூன்றாம் காலம், நான்காம் காலம் எனக் குறிப்பிடுவர். உடுக்கினை இயக்குவதில் கால அளவை அடிப்படையாகக் கொண்டு கையாளப்படும் இம்முறையினை அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் முதல்நடை, வாரம், கூடை, திரள் ஆகியவற்றுடன்[1] பொருத்திப் பார்க்கையில் பெருவியப்பு ஏற்படுகிறது.

முதல்நடை, வாரம், கூடை, திரள் ஆகிய இச்சொற்களை வில்லுப்பாட்டு உடுக்குக்காரர்கள் அறியார் என்பது உண்மை தான். ஆனாலும் முதற்காலம் மிகவும் தாழ்ந்த நடையினையும், நான்காம் காலம் மிகவும் விரைவான நடையினையும், இரண்டாம் மூன்றாம் காலங்கள் முறையே தாழ்ந்த விரைந்த நடைகளையும் கொண்டன என அறிந்து அம்முறை பற்றி உடுக்கினை இயக்கும் திறம் மட்டும் எவ்வாறோ அவர்களிடம் தங்கிக் கிடக்கிறது.

உடுக்கின் ஒருபுறம் தட்டப்படும்போது மறுபுறத் தட்டின் மேல் குறுக்காகக் கட்டப்படும் குதிரைவால் மயிரினால் ஆன மெல்லிய 'வீணை' என்னும் கயிறுகள் அதிர்ந்து ஒலிநயம் சேர்க்கும். ஆனால் தற்பொழுது இவ்'வீணை' வில்லுப்பாட்டு உடுக்கில் பெரும்பாலும் அமைத்துக்கொள்ளப்படுவதில்லை.

1. அடியார்க்கு நல்லார் உரை—சிலப்பதிகாரம் (அரங்கேற்று காதை) உ. வே. சா. பதிப்பு (1978) பக்கம் : 111.

உடுக்கின் சொல்கட்டுகளுக்கு ஒத்த நிலையிலேயே குடத்தின் தாளம் அமையும். உடுக்கும் குடமும் ஒரே சீராக அமைந்து ஒரு சிறிதும் தாளம் தவறுதல் இன்றி இயங்குவதே வில்லுப்பாட்டின் தனிச் சிறப்பாகும்.

குடம் : பொதுவாக மக்கள் பயன்படுத்திவரும் மண்குடங்களை வனைவது போலல்லாமல் தனியானதோர் அமைப்பு முறையில் வனையப்படுவது 'வில்லுக்குடம்'. இதன் கழுத்துப்பகுதி மிகவும் உறுதியாகவும் வாய்விளிம்பு வளைவு இன்றியும் காணப்படும். வில்லின் நடுப்பகுதி குடத்தின் கழுத்துடன் சேர்த்துக் கட்டப்படுவதையும், தாளமிட்டு இயக்கப்படுவதையும் தாங்கிக்கொள்ளும் வகையில் இவ்வாறு அமைக்கப்படுகிறது. குடம் தகுந்த முறையில் உறுதியாக அமைய, மண்ணுடன் வேறு சில - மண்ணுடன் கலந்து உறுதிசேர்க்கும் - பொருள்களையும் சேர்த்தே வனையப் பெறும் என்பர். நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த சில ஊர்கள் வில்லுக் குடம் செய்வதிலே புகழ்பெற்றவை.

வில்லுக்குடம் வைக்கோல் புரியினால் ஆன 'புரிமணை' மீது வைக்கப்படும். இப்புரிமணையினைப் 'பந்தாடை' என்பர். பந்தாடையின் மீது வைக்கப்பட்ட நிலையில்தான் குடத்தின் கழுத்துடன் வில்கதிரின் நடுப்பகுதி சேர்த்துக் கட்டப்பெறும்.

குடத்தினை இயக்குவதற்குத் துணையாக அமைவன 'பத்தி', 'சொட்டிக்கட்டை' ஆகியவை. 'பத்தி' என்பது சிறிய பந்தடி மட்டை போன்ற வடிவில் அமைந்திருக்கும். இது 'கக்கரையடி, எனப்படும் தோல்களைச் சேர்த்துத் தைக்கப்பெறுவதாம். குடம் அடிப்பதற்குப் பனைமட்டையின் அடிப்பாகத்தில் செதுக்கி அமைக்கப்படும் 'பத்தி'யும் பயன்படுத்துவர். ஆயினும் இதுபோன்ற 'பத்தி'கள் பயன்படுத்துவதை விட முன்கூறிய தோல் பத்தியே யாவரும் பயன்படுத்துவர். ஏனெனில் அதுவே உறுதியானதாகவும் குடத்தின் வாய்ப்புறம் தட்டப்படும்போது உரிய ஓசையினை உண்டாக்க வல்லதாகவும் அமைவது. குடத்தின் வாய்ப்புறத்தைக்காட்டிலும் சிறிது அகன்ற வட்டவடிவுடனும் கைப்பிடியுடனும் கூடிய அமைப்புடையது 'பத்தி'. இப் 'பத்தி'யை வலக்கையில் பிடித்துக்கொண்டு குடத்தின் வாய்ப்புறத்தைத் தாளத்திற்கு ஏற்றவாறு தட்டுவர். இதே நேரத்தில் இடது கைவிரல் இடுக்கில் வைத்துள்ள சொட்டிக்கட்டையால் குடத்தினது கழுத்திற்குக் கீழ் உள்ளபகுதியில் தட்டுவர். சொட்டிக் கட்டைஎன்பது சிறுமரத்துண்டுதான். நூல்கண்டின் மத்தியிலுள்ள கட்டையினைத் தற்காலம் இதற்குப் பயன்படுத்துகிறார்கள். 'பத்தி' கொண்டு வாய்ப்புறம் தட்டும் ஓசையும், சொட்டிக்கட்டையால் குடத்தின்

மீது தட்டும் ஓசையும், மாறி மாறியும் சில வேளைகளில் சேர்ந்தும் ஒலிக்கும். குடத்துக்காரர் 'கைவரிசை' பலகாட்டி இயக்குதல் சிறப்பாக இருக்கும். உடுக்குத்தாளத்தின் இயக்கத்திற்கு ஏற்ற வாறு, தாள அமைதியுடன் குடமும் ஒத்து இசைக்கப்படும். உடுக்கும் குடமும் வில்லுப்பாட்டின் சிறப்பு உறுப்புகள்.

*தாளம் :* இரும்பினாலோ பித்தளையினாலோ ஆக்கப்பட் டிருக்கும் இணைக்கருவி 'தாளம்' எனப்படும். 'சல்' என்ற ஓசை யுடையது. இதனைச் சாலர் எனவும் கூறுவர். வட்ட வடிவில் நடுக்குழிவுற்று இணையானதாக இது அமைந்திருக்கும். குழிவின் நடுவே அமைந்துள்ள துளையின் வழியே சிறுதுண்டு நூல்கயிற்றை அமைத்துக் கையிற் பிடிப்பதற் கேற்றவாறு உள்ளொன்றும் புற மொன்றுமாக முடிச்சு இட்டு வைத்திருப்பர். உள்முடிச்சு, மேல் கீழாக அமையும் இணைத்தாளம் ஒவ்வொன்றிலும் குழிவின் உள்ளாகவே அமைந்துவிடுவதால் தாளம் தட்டப்படும்போது இடையூறு செய்வதில்லை. தாள இணையின் குழிவுபெற்ற வாய்ப் புறங்களை ஒன்றோடொன்று பொருந்தும்படியாகத் தட்டி ஒலிஎழச் செய்வர். உடுக்கு, குடம் ஆகியவற்றிற்கும் பாட்டிற்கும் உரிய 'தாள' அமைதியைத் தருவது இதுவே. மேலும் கீழுமாக அமைந்த இணைத்தாளத்தை ஒன்றோடு ஒன்று பொருந்தத் தட்டு வதுடன் விளிம்புகளில் மட்டும் சில நுட்பங்களுடன் தட்டி நயமான ஒலிஎழுப்பியும் இதனை இயக்குவர்.

*கட்டை :* உறுதியுள்ள கருங்காலி மரத்துண்டுகளை இணையாக அமைத்துத் தாளம் போடப் பயன்படுத்துவர். நீண்ட சதுர வடி வில் கையடக்கமாக இவை அமைந்திருக்கும். இவற்றைக் கட்டை கட்டைத்தாளம், தாளக்கட்டை என்ற பெயர்களால் வழங்குவர். உலோகத் தாளத்துடன் ஒத்து இயங்குமாறு இக்கட்டைத்தாள இணையை ஒன்றோடு ஒன்று தட்டி இயக்குவர்.

### பக்கமேளம் எட்டாகக் கொள்ளும் கருத்து

மேலே விவரிக்கப்பட்டுள்ள வில் முதலான கருவிகளுடன் பம்பை, உறுமி, தக்கை, துந்துமி என்று அழைக்கப்பெறும் தோற் கருவிகளும் வில்லுப்பாட்டில் பக்க மேளங்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுவன என்பதோர் கருத்தும் கூறப்படுகிறது. ஆனால், இங்கே குறிப்பிட்டுள்ள நால்வகைத் தோற்கருவிகளையும் பக்க மேளங்களாகக் கொள்ளும் வழக்கம் நெல்லைமாவட்டத்துப் பாட்டுக்காரர்களிடம் இல்லை. குமரிமாவட்டத்தில் இவ்வாறு இருந்திருத்தல் கூடும் என்றும் உறுதியாக எண்ண முடியவில்லை.

ஆயினும் இத்தகையதோர் கருத்திற்கு ஆதாரமாக நிற்பது 'தந்தனைத்தோம் என்று சொல்லியே வில்லினில் பாட, வந்தருள் வாய் கணபதியே' எனத் துவங்கும் ஒருவகை வணக்கப் பாடலே ஆகும். பாடலின் தொடர்ச்சி பின்வருமாறு அமைகிறது.

> ''தானதந்தத் தோடு — ஏழு
> சந்தங்களும் தாளத்தோடு
> ஆனபம்பை உறுமி தக்கை — துந்துமியோடு
> அத்தனையும் மேளத்தோடே.''[1]

இப்பாடல் பகுதியில் பம்பை, உறுமி, தக்கை, துந்துமி ஆகியன குறிக்கப்படுதல் காணலாம்.[2] காலஞ்சென்ற கலைவாணர் இந்தப் பாடலைப் பாடிவந்தார். அவரையே பின்பற்றி வில்லுப்பாட்டைப் பாடத் துவங்கியோர் அனைவரும் தற்காலத்தில் இப்பாடலையே வணக்கப்பாடலாகப் பாடிவருகின்றனர். இதில் ஓர் பெருங்குறை யாதெனில் வழக்கத்தில் இல்லாக் கருவிகளைச் சேர்த்துப் பாடும் இப்பாடலில் வில்லுப்பாட்டுக்கே இன்றியமையாதனவாகிய உடுக்கும், குடமும் இடம்பெறவில்லை என்பதே.

காலஞ்சென்ற புலவர் பிச்சைக்குட்டியும்[3] இதே வணக்கப் பாடலைப் பாடிவந்தார். அவர் (மேலே காணும் குறையினைக்கண்டு தானோ என்னவோ) சிறிய திருத்தத்துடன் மாற்றிப்பாடினார். அவர் பாடியது, ''தானதந்தத் தோடு - ஏழு சந்தங்களும் தாளத் தோடு'' என்றவாறு இன்றி, ''சந்தத்தோடு பானைத்தாளம் சித்துடுக்கை பம்பையுடன்'' என்றவாறு அமைந்திருந்தது. இப் பாடலுக்கு அவர் அமைத்துப் பாடிய இசையும் வேறுபட இருந்தது. இவ்விரண்டுள் எந்தப் பாடல் உண்மையானது என்றோ, இப்படியொரு பாடலை எவ்வாறு இவர்கள் கையாள நேர்ந்தது என்றோ தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டி, எடுத்துக்கொண்ட முயற்சிகள் இதுவரை சரியான பயன் அளிக்க வில்லை. எனினும், தற்காலம் வில்லுப்பாட்டின் பரந்துபட்ட வளர்ச்சிக்குக்கலைவாணரே பெருங்காரணமாயிருந்ததால் அவர்வழி பற்றிய அனைவருக்கும் இப்பாடலையே பாடிப் பாட்டைத் துவங் குதல் தவிர்க்கமுடியாதது ஆயிற்று. ஆயினும் மரபுவழியே பாடி

1. சுப்பு ஆறுமுகம் - 'காந்திவந்தார்' வில்லுப்பாட்டு. கலைவாணர் பதிப் பகம் சென்னை-17. (1969) பக்: 9.
2. சென்னை, தொலைக்காட்சி நிலையம் 8-11-'76ல் ஒளிபரப்பிய 'வில்லுப் பாட்டு' விளக்கத்திலும் இப்பாடலின் அடிப்படையிலேயே கருவிகள் பலவும் காட்டினர்.
3. புலவர் பிச்சைக்குட்டி, கலைவாணர் ஆகியோர் பற்றிய விவரங்கள் பின் னர் வரும் 'வில்லுப் பாட்டின் தற்கால வளர்ச்சி' எனும் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

வரும் புலவர்கள் பாட்டினில், இவ்வகைக் கருவிகள் இடம்பெறும் வழக்கமே இல்லை.

### பக்கமேளங்களின் தற்கால நிலை

பிச்சைக்குட்டி, கலைவாணர் ஆகியோரின் பெருமுயற்சி, செல்வாக்கு ஆகியவற்றின் விளைவாகத் தற்காலத்தில் புதுமுறையில் வில்லுப்பாட்டினைக் கையாளுவோர் ஆர்மோனியம், டோலக், பம்பை, கிளாரினட், மொராக்கோஸ், புல்புல்தராங், மோர்சிங், டேப் மற்றும் இசைக்கருவிகளை அவரவர் விருப்பம்போல் சேர்த்துக் கொள்கின்றனர். இப்புதிய கருவிகள் சேர்த்தலின் விளைவாக வில்லுப்பாட்டிற்கே உரிய உடுக்கும் குடமும்ஓரளவு,சிலவேளை முற்றிலும் புறக்கணிக்கப்பட்டுவிடுகின்றன. இதனால் வில்லுப்பாட்டின் உயிர்ப்பான ஒலிநயத்தைப் பாடும் கலைஞர்கள் கைவிட்டுவரும் நிலை கவலை அளிப்பதாகவே உள்ளது. உடுக்கும் குடமும் உரிய முறையில் இயக்குவதற்குப் போதிய பயிற்சிவேண்டும். இவ்வகையில் கலைஞர்கள் கவனம் கொள்வாராயின் அது கலையின் தனிச்சிறப்பினைக் காக்கும் பெரும் தொண்டாக அமையும்.

### மேடையில் பாட்டுக்காரர்களின் இருப்பு முறை

'வில்லுப்பாட்டுப் புலவரும் அவருக்குப் பக்கத்துணையாக உள்ள மற்ற பாட்டுக்காரர்களும் அவர்களுக்கென அமைக்கப்பட்டிருக்கும் மேடையில் ஒரு குறிப்பிட்ட இருப்பு முறையின்படி அமர்ந்து கொள்வார்கள். புலவரே குழுவின் தலைவர் ஆதலால் மேடையில் நடுநாயகமாக வீற்றிருப்பார். புலவரை நோக்கிய வாறு அவருக்கு இடப்பக்கத்தில் குடத்துக்காரர், குடத்தை இயக்குவதற்கு வசதியாகச் சிறிது உயரமான இருக்கையின்மீது அமர்ந்துகொள்வார். புலவரும் பலகையொன்று இட்டு அதன் மேல் எடுப்பாக அமர்ந்துகொள்வதுண்டு. இவர்கள் இருவரின் முன்பாகவே குடத்துடன் கட்டப்பட்ட வில் அமைக்கப்பட்டிருக்கும். புலவருக்கு முன்பாக உள்ள வில்லின் முனைப்பகுதி தரையை நோக்கித் தாழ்ந்திருக்கும். புலவர் வீசுகோலைக் கொண்டு வில் நாணைத் தட்டுவதற்கு வசதியாக இவ்வாறு அமைக்கப்படும். வில்லின் மற்றொரு முனைப்பகுதி குடத்துக்காரரை அடுத்து மேல் நோக்கியதாக இருக்கும். வில்நாணுகிய வடம் குடத்துக்காரரின் இடது தோளின் மேலாக அமைந்திட, வில்கதிரானது அவரது இடது கையின் கீழாக அமைந்திருக்கும். இடது கையால் வில் கதிரை ஆதரவாக அணைத்தவாறே சொட்டிக் கட்டையைக் குடத்தின்மீது தட்டுவதற்கேற்ற நிலையில் இவர் அமர்ந்திருப்பார்.

புலவருக்குப் பின்னால் வரிசையாகப் பின்பாட்டுக்காரர், கட்டை, தாளம் ஆகியவற்றை இயக்குவோர் அமர்ந்திருக்க, அதே வரிசையில் உடுக்குக்காரர், குடத்துக்காரரின் வலக்கையை அடுத்து அமர்ந்திருப்பார். உடுக்கும், குடமும் ஆகிய வில்லுப் பாட்டின் இன்றியமையாப் பக்கமேளங்கள் இரண்டும் ஒரே அளவில் ஒத்து ஒலிப்பதில்தான் மேளக்கட்டு நயமுடன் அமையும். எனவேதான் இவை இரண்டும் அருகருகே அமைக்கப்பெற்றிருக்கும்.

வீசுகோலைப் புலவர் கையாளாமல் வேறொருவர் கையாளுவாரென்றால், அவர் புலவருக்கு வலப்புறமாக அமர்ந்துகொண்டு வீசுகோலால் வில்நாணைத் தட்டுவதற்கு வசதியாக இருப்பார். புலவரே வீசுகோலையும் கையாளுவாராகில் குழுவில் குறைந்த நிலையில் ஐவரே இடம்பெறுவர். வீசுகோலுக்கென வேறொருவர் அமைந்தால் குழுவினர் அறுவர் ஆவர். பின்பாட்டுக்காக ஒருவரோ இருவரோ சேர்த்துக்கொள்ளும் நிலையில் எண்ணிக்கை ஏழு அல்லது எட்டாக உயரும்.

**கதைபாடத் தொடங்கும் முறை:** அனைவரும் உரியமுறைப்படி மேடையில் அமர்ந்தபின் நிகழ்ச்சி துவங்கும். வில்லின் முன்பாகத் தேங்காய், பழம், வெற்றிலைபாக்கு, கற்பூரம் முதலானவை வைக்கப்பட்டிருக்கும். வெற்றிலையுடன் ஒன்றேகால் ரூபாய் 'தட்சணைப்' பணம் வைத்தல் கொடை நடத்தும் கோயிலாளரின் கடமை. (தேங்காய், பழம், 'தட்சணைப்' பணம் முதலானவை புலவருக்குச் சேரும்.) குழுவினருள் முதியவர் ஒருவர் வில் முதலான கருவிகளின் முன்பாகத் தேங்காயினை உடைத்துக் கற்பூரம் காட்டுவார். வில் மணிகளை அசைத்து, வில் மற்றும் கருவிகளைக் குழுவினர் தொட்டு வணங்குவர். பின்னர் அம்முதியவர், ஒவ்வொருவரிடமும் அவரவருக்குரிய கருவியைப் பக்தியுடன் எடுத்துக் கொடுப்பார். அவற்றைப் பெற்றுக் கொண்டபின் குழுவினர் அனைத்துக் கருவிகளையும் உரிய முறையில் இயக்கித் துவக்கமேளம் கூட்டவும், கதை கேட்கக் கூடியுள்ள மக்கள் ஆர்வம் பொங்க மகிழ்ச்சியில் திளைப்பர். துவக்கமேளம் முடிந்தவுடன் புலவர் காப்பு விருத்தம் பாடி நிகழ்ச்சியைத் துவங்குவார்.

கோயில்களில் நிகழும் மரபுவழி அமையும் வில்லுப்பாட்டிலே காணும் முறைமைதான் இங்கு விளக்கப்பட்டுள்ளது. இக்காலப் புதுமுறை வில்லுப்பாட்டுகளில் இம்முறைமை கையாளப்படுவதில்லை.

**சில பொது மரபுகள்:** பழைய மரபுவழி வந்த வில்லுப்பாட்டுப் புலவர், கதை பாடும்போது தம் இடது உள்ளங்கையினால்

இடது காதினைப் பொத்திக் கொள்வதுபோல் வைத்துக்கொண்டு, வலது கையினை உயர்த்தியும், அவ்வப்போது தாளத்திற்கும், கதையுள் வரும் உணர்ச்சிகளுக்கும் தகுந்தவாறு ஆட்டி அசைத் தும், தலையையும், தோள்களையும், உடம்பினையும்கூடத் தாளத்திற் குத் தகுத்தவாறு அசைத்தும் பாடிப் பார்ப்போரை மகிழ்விப்பார். தமக்கு இடப்புறமாக அமையும் உடுக்கு, குடம் ஆகியவற்றின் ஓசை, கதைபாடும் தம்மை மிகுதியும் தாக்காதவாறு தடுத்துக் கொள்ளும் வசதிக்காக இவ்வாறு இடது காதைப் பொத்திக் கொண்டு பாடிவந்து, பின்னர் அதுவே ஓர் மரபாகி விட்டதோ எனவும் எண்ணத் தோன்றுகிறது. ஆயினும் தற்காலம் இதுபோல் புலவர் பாடுதலைக் காண்பது மிகவும் அரிது எனலாம்.

புலவர், கதைபாடும்போது, கருவிகள் மெல்லென ஒலிக்கும். இது புலவர் சொல்லும் கதையினை அவையோர் தெளிவாக அறிந்துகொள்ள உதவும். புலவர் பாட்டைப் பின்பாட்டாக மற்ற வர்கள் வாங்கிப் பாடும்போது கருவிகள் உரத்த நிலையில் இயக்கப் பெறும். மற்றவர்கள் பின்பாட்டுப் பாடும்போது புலவர் பாடிய அடியின் கடைசிச் சொல்லையோ அல்லது இரு சொற்களையோ, அடிமுழுவதுமோ திரும்பச்சொல்லிப் பாடுவர். அவ்வாறு பாடி முடிக்கையில் ஆ......ஆ......ஆ...; ஏ...ஏ...ஏ...; ஓ...ஓ...ஓ...; என் றெல்லாம் நெடுநேரம் இழுத்துப்பாடி முடிப்பர்.

புலவர், பாட்டின் இடையிடையே உரைநடையில் விளக்கம் தந்துகொண்டே போவார். பழைய முறையில், இவ்வுரைப்பகுதி யும் தாளமற்ற ஓர் பாட்டுப்போலவே இழுத்துச் சொல்லப்படும். புலவர் இவ்வாறு பாடியும் உரை சொல்லியும் செல்லும்போது, பின்பாட்டுக்காரரில் ஓரிருவர், குறிப்பாகக் குடத்துக்காரர், இடை யிடையே 'ஆமா,' 'ஆகா,' 'அப்படியா,' 'அப்படி,' 'ஓகோ,' 'எப்படி,' 'சரி' என்பன போலும் சொற்களை இடத்திற்குத் தகுந்த வாறு கூறிக் கதைக்குத் தெம்பு ஊட்டுவர். சிலவேளைகளில் புலவ ரின் கூற்றைக் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லும்படியாக வேண்டிக்கொள்வது போலவும் சொல்வதுண்டு.

ஒரே கருத்தினை அல்லது வருணிப்பினைப் பலமுறையும் வெவ்வேறு சொற்களால் திரும்பத்திரும்பச் சொல்லிச் சென்று அதற்கு அழுத்தம் கொடுத்துப் பாடும் முறையினை வில்லுப்பாட் டிலே, கதையின் ஒவ்வொரு உணர்ச்சிமிகும் கட்டத்திலும் காணலாம். இத்தகைய போக்கில் கதையானது பலமணிநேரம் அலுப்புச் சலிப்பிற்கு இடமின்றிச் செல்லும்.

தெய்வ அருள்வந்து ஆடும் 'சாமிகொண்டாடி'களும் வில்லுப் பாட்டு மேடையின் முன்பாக வந்து பாட்டுக்கேற்றவாறு அடி

யெடுத்துவைத்து ஆடுவது உண்டு. அந்நிலையில், அந்த அந்த தெய்வங்களின் பெயர்கூறிச் சிறப்பித்துப் பாடி அவர்தம் ஆட்டம் குறித்து,

“ தூக்கிவைக்கும் கால்களுக்கு—கால்களுக்கு
துத்திப்பூவால் சல்லடமாம் (மாடன்)
எடுத்துவைக்கும் கால்களுக்கு—கால்களுக்கு
எருக்கலம்பூச் சல்லடமாம்
மாத்தி வைக்கும் கால்களுக்கு—கால்களுக்கு
மல்லிகைப் பூச் சல்லடமாம்.”

என்றவாறெல்லாம் புலவர் பாடுவதும், அதற்கேற்றவாறு நிகழும் சாமியாட்டமும் மக்கள் பக்தியோடு பார்த்து மகிழும் காட்சியாக அமையும். தெய்வ அருள்வராது சிலவேளைகளில் தயக்கம் ஏற்பட்டாலும், புலவர் பக்தியுடன் தாமே ஆவேசம் வந்தவராகிப் பாடும் பாட்டோசை கேட்டே, அருள்வரப் பெற்றுச் சாமிகொண்டாடிகள் ஆடத் தொடங்கிவிடுவதும் உண்டு. அந்த அளவில் புலவர் பாட்டினில் ஆவேசம் ஏற்படும்.

கதையின் இடையே புலவரின் பாட்டைப் பாராட்டி அவையோர் “மொய்வைத்துச்” சிறப்புச் செய்வார்கள். பணம் வைப்பதும் உண்டு, அத்துடன் பட்டுவேட்டி, துண்டு, பெண்புலவராயின் சேலை முதலியன அளித்தலும் உண்டு. பாடும் புலவருக்கு ‘மொய்வைக்கும்’ உரிமை பூண்ட உறவினர் பாட்டு நிகழும் ஊரில் இருப்பாராயின் அவர்களும் புலவருக்கு இவ்வாறு பணம் வைத்து வேட்டி எடுத்துக் கட்டிச் சிறப்பிக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவர்.

மொய்வைத்துப் பாராட்டியவரைப் புலவர் உடனுக்குடன் தம் ஆசுகவிப் புலமையால் புதுப்புதுப் பாராட்டு மொழிகளைச் சொல்லிப்பாடி நன்றி தெரிவித்து வாழ்த்துவார்.

பின்பாட்டுக்காரர்களும் அவ்வப்போது விடுகதைகள், விடுபாட்டுகள் (தனிப்பாட்டுகள்) சிறுகதைத் துணுக்குகள், நகைச்சுவை நிகழ்ச்சிகள் ஆகியவற்றைக் கூறி அவையோரை மகிழ்விப்பர்.

சிலவேளைகளில் கதை முடியுமுன் பொழுது விடிந்துவிடும். கதை இடையே நிறுத்தப்பெற்று மறுநாள் தொடரும் நிலை ஏற்படும். அவ்வாறு தொடரும் நிலையில் “விட்டகதை நாங்கள் பாட, வேலவனே துணைவருவாய்” என்பது போலும் வணக்கப்பாடல் பாடித் தொடங்குவார் புலவர்.

குமரி மாவட்டத்தில் வில்லுப்பாட்டுக் குழுவினர் தமக்குள் இரு பிரிவினர் ஆகி, எதிர் எதிராகக் கேள்விகள் கேட்டு 'லாவணிப் பாட்டு' போன்றதோர் இடை நிகழ்ச்சியினை நடத்துவர்.[1]

மலையாளப் பகுதியில் 'வில்லடிச்சான் பாட்டு' என வழங்கி வரும் வில்லுப்பாட்டு நிகழ்ச்சியில் புலவர் உள்ளிட்ட குழுவினர் வேறு வேறு விதமாக ஒப்பனை செய்யப்பெற்ற தலைப்பாகைகளைத் (தலைக்கட்டு) தரித்துக் கொள்வதும் உண்டு.[2]

வில்லுப்பாட்டின் முதன்மைப் பாட்டுக்காரர், 'புலவர்' என அழைக்கப்பெறும் மரபு சிறப்பாகக் குறிக்கத் தக்கதாகும்.

இறுதியாகக் கதைபாடி முடியும் நிலையில், கோயில் கொண் டுள்ள எல்லாத் தெய்வங்களையும் வாழ்த்திப் பாடுவதும், கதை கேட்ட அவையோர், கோயில் பொறுப்பாளர், நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தோர் முதலியவர்களையும் வாழ்த்திப் பாடிமுடிக்கும் மரபும் உண்டு.

**இலக்கிய இயல்புகள்**

**வாய்மொழி இலக்கியம்:** வில்லுப்பாட்டிலே பாடப்பெறும் கதைகள் யாவும் பாடும் புலவர் பெருமக்களிடையே வழிவழியாக வழங்கிவருவன. இன்னாரால் இன்னகாலத்தில் இயற்றப்பெற்றன எனக் கூற இயலாதவை. காலந்தோறும் பல்வேறு மாறுதல்களைப் பெற்று வளர்ந்துவருவன. எளிய, இனிய பாமர மக்களின் மொழியிலே அமைவன. அம்மக்கள் நன்கறிந்த எளிய இசை யமைப்பினையே ஏற்றுக்கொண்டவை. சாதாரண மக்களின் வாழ்க்கைப் போக்குகள், உணர்ச்சி ஓட்டங்கள் முதலானவற்றைப் படம்பிடித்துக் காட்டுவன. அவர்களின் செம்மையான வாழ்வுக் குரிய சீரிய உலகியல் அறிவினை எடுத்துக் கூறும் வழிகாட்டிகளாக வும் திகழ்வன.

**உரை இடையிட்ட பாட்டு:** வில்லுப்பாட்டுக் கதைகள் நெடுங் காலமாக வாய்மொழி இலக்கியங்களாகவே வாழ்ந்து வரினும் அருகிய நிலையில் பாமர மக்களின் மொழியறிவுக்கு ஏற்றவாறு அமையுமாறு, ஏடுகளிலும் எழுதி வைக்கப்பெற்றன. தற்காலம் இவை ஏட்டுச்சுவடிகளாகவும் கையெழுத்துப்படிகளாகவும் காணப் படுகின்றன. அண்மைக்காலத்தில் சில அச்சுவடிவிலும் வெளிவந்

---

1. K.P.S. Hameed-'Bow Song' A Folk Art From .South Travancore Article the 'Tamil Culture.' Madras. Vol. V No: 3. (July 1956) Page: 282. 283.
2. Sheila Asirvatham-'Villupattu' A Form of Folk Ballad. Article in 'பத்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை' இ.ப.த. மன்றம் (1978). பக். 643.

துள்ளன. எண்ணற்றவை வாய்மொழியாகவே வாழ்ந்த நிலையில் தொடர்வோரின்றி மறைந்துபோயும் இருக்கலாம்.

இக்காலத்தில் கிடைக்கப்பெறும் கதைகளை நோக்கினுல் அவை இருவகையாக, இடையிடையே உரைநடை அமைந்து நெடும்பாட்டாகக் காணப்படுவனவாகவும், உரைப்பகுதியினை இடையிலே பெருமல் அமையும் நெடும்பாட்டாகவே காணப்படுவனவாகவும் உள்ளன. எழுதப்பெற்றுள்ள அல்லது அச்சிடப் பெற்றுள்ள நிலையிலேயே அவை இவ்வாறு காணப்படினும், வில்லடியில் பாட்டாகப் பாடப்பெறும் நிலையில் அவ்வப்போது உரிய உரைவிளக்கங்கள் தரப்பட்டே புலவர்களால் பாடப்படுகின்றன. எனவே உரைப்பகுதியினைப் புலவரின் விருப்பத்திற்கு ஏற்றவாறு, பாடும்போது இடையே பயன்படுத்திக் கொள்ளும் நிலையில் அவை வரையறுத்து எழுதப்படாமல் விடப்பட்டன எனக் கொள்ளலாம். மேலும், நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியவை பாட்டுப் பகுதிகளே என்பதால் அப்பகுதிகளை மட்டும் தொடர்ச்சியாகத் தொகுத்துவைத்துக் கொண்டனர் எனலாம்.

வில்லுப்பாட்டுக் கதைகளின் இத்தகைய உரையிடையிட்ட பாட்டு வடிவம், நீண்ட நெடுங்காலமாகவே வழங்கி வருவதொன்று என அறியலாம். "தொன்மைதானே உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே" எனத் 'தொன்மை' பற்றித் தொல்காப்பியர் தரும் இலக்கணத்திற்குப் பேராசிரியர், "தொன்மை என்பது உரை விராஅய்ப் பழைமையாகிய கதைப் பொருளாகச் செய்யப் படுவது" எனக் கூறி "அவை பெருந்தேவனுராற் பாடப்பட்ட பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன" என்பார்.[1] இவற்றுடன் "சிலப்பதிகாரமும் அதன்பாற்படும்" எனச் சேர்த்து வழங்குவார் நச்சினுர்க்கினியர்.[2] "இவ்வாறைந்தும் உரைநடையிட்ட பாட்டுடைச் செய்யுள்" எனச் சிலப்பதிகாரப் பதிகம் குறிப்பிடுகிறது.[3]

"பழம்பாட்டினூடு கலந்த பொருளே தனக்குப் பொருளாகப் பாட்டும் உரையும்போலச் செய்யப்படுவன பண்ணத்தி" எனப் பேராசிரியர் 'பண்ணத்தி' என்பதன் இலக்கணத்திற்குப் பொருள் விரித்துரைக்கிருர்.[4] இச் செய்திகள் யாவும் வில்லுப்பாட்டின்

1. தொல்காப்பியம். பொருளதிகாரம்-செய்யுளியல். பேராசிரியர் உரை நூற்பா: 549. கழக வெளியீடு. சென்னை-1.——(1972) பக்கம்: 428.
2. தொல்காப்பியம். பொருள், செய்யுளியல். நச்சினுர்க்கினியர் உரை. நூற்பா: 237. கழக வெளியீடு. சென்னை-1. (1965)பக்கம்: 267.
3. சிலப்பதிகாரம். பதிகம்: வரி 86, 87. உ.வே.சா. பதிப்பு. (1978) பக். 5.
4. தொல்காப்பியம். பொருள். பேராசிரியர், நூற்பா: 492. கழக வெளியீடு. (1958) பக்கம்: 393.

உரையிடையிட்ட வடிவ அமைப்பின் தொன்மையினை நன்கு எடுத்துக்காட்டத் துணைபுரிவன. மேலும், மிக எளிய சொற்களால் சாதாரண மக்கள் புரிந்துகொள்ளும் அளவில் அமைந்துள்ள வில்லுப்பாட்டுக் கதைகளைப் போன்ற மக்கள் மொழிப்பாட்டுகள் தொல்காப்பியர் காலத்தும் இருந்தன என்பதனை அறிகிறோம்.

''சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே''

எனவரும் நூற்பாவும் அதற்குப் பேராசிரியர் தரும் விளக்கமும்.[1] இதனை வலியுறுத்தும்.

பா அமைப்பு: நெடுங்காலமாகவே பாமர மக்களிடையே வழங்கிவந்த தெம்மாங்கு, தாலாட்டு, உலக்கைப்பாட்டு, ஒப்பாரி போலும் நாட்டுப்பாடல் வடிவத்தினையே மேற்கொண்டு நெடும் பாட்டாக அமைக்கப் பெற்றவையே வில்லுப்பாட்டுக் கதைகள் எனக் கருதலாம். இருசீர் அடிகள் இரண்டிரண்டாகத் தொடுத்து வர, இரண்டாம் அடியில் அடிமோனை அமைய, முதலடி இரண்டாம் சீருக்குப் பின் (சந்த) இசைக்கேற்றவாறு தனிச்சொல் கொண்டு அமைவதான ஓர் பா அமைப்பிலேயே வில்லுப்பாட்டுக் கதைகள் ஆரம்பகாலத்தில் பாடப்பட்டன என அறியமுடிகின்றது. காலவளர்ச்சியில் இத்தகைய பாடல்களுக்கு இடையே, கிளிக் கண்ணி, சிந்து, கும்மி, விருத்தம், மகுடி எனப்படும் பாம்பிசை, தரு மற்றும் பல்லவி, சரணம் முதலான அமையும் 'கீர்த்தனைகள்' ஆகிய பல்வேறு பா அமைப்புகள் இடம்பெறலாயின எனவும் அறியலாம். தற்பொழுது காணப்படும் பாடல்களைக் கொண்டு இத்தன்மைகளை நன்கு உணரலாம்.

எளிய மெட்டுகள் (சந்தங்கள்)

கதையின் பாடல் பகுதிகளைப் பாடுவதற்குரிய சந்தங்கள் பல்வேறுகக் காணப்படுகின்றன. மிகப் பெரும்பான்மையும் பயன்படும் சந்தம் கீழே காணும் முறையில் அமைகிறது.

'' தானைதந்தோம் தனனைதந்தோம் தானை
தந்தினத்தோம் தானைதந்தோம் ''

பாடல்களில் மிகப் பெரும்பகுதி இச்சந்த முறை பின்பற்றியே அமைந்து காணப்படுகிறது. சீர் அமைப்பு ஒரேவிதமாக அமையினும், இசைகூட்டிப் பாடும்போது எத்தனையோ விதமான

1 தொல்காப்பியம். பொருள் பேராசிரியர், நூற்பா: 553. கழக வெளியீடு சென்னை-1. (1972) பக்கம் 430.

வெவ்வேறு முறைகளில் பாடக்கூடிய வகையில் இச்சந்தமுறை அமைந்துள்ளது. ஆயினும், இதுபோலும் பல சந்தங்கள், வேறுபட்ட நிலையில் அமைந்துள்ளனவும், வில்லுப்பாட்டில் பயன்படுகின்றன. அவை பாட்டுக்குத் துணை வருமாறு தெய்வங்களை அழைத்துப் பாடும் நிலையிலும், வாழிபாடும் நிலையிலும், இடையிடையே வரும் உணர்ச்சி வேகங்களுக்கு ஏற்ற நிலையிலும் அவ்வப்போது ஏற்றவாறு சேர்த்துக் கொள்ளப்படுகின்றன.

"தோம்தனே தானேதனே தன்னன்னு—தந்தோம் தானன்னு-
தந்தோம்
தோம்தனே தானேதனே தன்னன்னு."

என்பதும்,

"தானே தந்தானே தன்னு தன்னே—தானே தானன்னு-
தானனே தானன்னு
தானே தந்தானே தன்னு தந்தோம்—தானனே தானன்னு-
தானே தானன்னு"

எனவும்,

"தந்தனேத்தோம் தானேதனனு-தானேதந்தோம்
தந்தனேத்தோம் தானேதனனு"

எனவும் வருவன சிலவகைகள். இவைபோல மேலும் பலவகை உள்ளன.

சிந்து, கண்ணி, மகுடி, கும்மி, நையாண்டி போலும் பாட்டு அமைப்புகள் இடையே சேரநேர்ந்த நிலையில் அவற்றிற்குரிய இசைகளும் பயன்படலாயின. விருத்தங்கள், கீர்த்தனைகளுக்குரிய இசைகளும்கூடத் தற்காலம் பயன்படுத்துகின்றனர்.

### அம்மானைப் பாடல்களும் வில்லுப்பாட்டுகளும்

தமிழில் பலவாகக் காணப்படும் கதைப்பாடல்களை வகைப்படுத்திக் காண்போர் வில்லுப்பாட்டுக் கதைகளையும் கதைப் பொருளுக்கேற்றவாறு அவ்வகைப்பாடுகளில் சேர்ந்துள்ளனர்.[1] ஆயினும் கதைப்பாடல்களை இவ்வாறு வகைப்படுத்தும்போது வில்லுப்பாட்டுக் கதைகளைத் தனியானதோர் வகைப்படுத்திக் காண்பதே பொருந்தும் எனலாம்.[2] ஏனெனில் அம்மானை, கதை, மாலை, மசக்கை, கும்மி, குறம், என்பன போன்ற பல பெயர்களில் காணப்படும் கதைப்பாடல்கள் யாவும் பொதுவாக அம்மானைப்

1. V. Vanamamalai: Studies In Tamil Folk Literature. NCBH. Madras-2. (1969) Page: 49.

2. "The Villup-pattu of course is in a separate class by itself"—M. Arunachalam. Ballad Poetry. Gandhi Vidyalayam, Tiruchitrambalam, Tanjavur Dist. (1976) 'Classification: Page 93-94.

பாடல்கள் அல்லது நங்கைப் பாட்டுகள்.[1] என்றே அழைக்கப்படுகின்றன. இவைகளினின்றும் வில்லுப்பாட்டுகள் சில அடிப்படை நிலைகளில் வேறுபடுகின்றன எனக் கருதலாம். நங்கைப்பாட்டுகளில் பெரும்பாலானவை மகளிர் படிக்கத்தக்க வகையில் அமைந்த புராண இதிகாசத் தொடர்புடைய பொழுதுபோக்குக் கற்பனைக் கதைகள். ஏனையவை வரலாறு (தேசிங்குராசன் கதை போல்வன) சமுதாயம் (நல்லதங்காள் கதை போல்வன) ஆகியவற்றோடு தொடர்புடையன. இவற்றைப் பொதுவாக ஊர்ப் பொது இடங்களிலோ அல்லது பெண்கள் ஒன்றுகூடும் ஒரு வீட்டிலோ இருந்துகொண்டு ஒருவர் படிக்க மற்றவர் கேட்டு மகிழ்வர். (காத்தவராயன் கதை, அண்ணன்மார் சுவாமி கதை, மதுரைவீரன் கதை போலும் சில கதைகளே உடுக்கடிப் பாட்டுக் காரர்களால் பாடப்படுகின்றன. 'கார்த்த வீரன் கதை' எனும் பெயரில் மாறுதல் பல பெற்ற, காத்தவராயன் கதையைத் தென் மாவட்டத்தில் அருகிய நிலையில் வில்லடியில் பாடுகிறார்கள் எனத் தெரிகிறது.)

ஆனால் வில்லுப்பாட்டுகளோ சிற்றூர்த் தெய்வங்களுக்குச் செய்யும் வழிபாட்டுடன் நெருங்கிய தொடர்புடையவை. அத் தெய்வங்களின் வரலாறுகளையே பெரும்பான்மையும் பொருளாகக் கொண்டவை. அவ்வழிபாடு நிகழும் காலத்தில் பாடப்பெறுவன.

இவ்வழிபாடும் பண்டைத் தமிழரின் வீரவணக்கத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சி பெற்றவை. வீரவழிபாட்டுக் காலங்களில் கல்நின்ற வீரர் வரலாற்றைப் பாடுவன என்ற நிலையில் வில்லுப்பாட்டுகள் பாடும் மரபு அம்மானைப் பாடல்கள் தோன்றி வழங்கிய காலமாகக் கருதப்படும் 16, 17 நூற்றாண்டுக் காலத்திற்கு[2] மிகவும் முந்தியவை என உறுதியாகக் கொள்ளலாம். மேலும், போர்க்காலத்திலும் வழிபாட்டுக்காலத்திலும் பயன் பட்ட கருவிகளையே பயன்படுத்திக்கொண்டு ஓர் குழுவினரால் இசைக்கப்படுவதும், இடையிடையே உரை விளக்கங்கள் கொண்டே அமைந்து காணப்படுவதும் வில்லுப்பாட்டுகளின் சிறப்புக் கூறுகள் எனலாம்.

முன்பு குறிப்பிடப்பெற்ற உடுக்கடிப் பாட்டுகள் சிலவே வழிபாட்டுக் காலங்களில் வில்லுப்பாட்டு போன்று பயன்படுவன எனலாம். மற்றவை யாவும் நங்கைப்பாட்டுகளே. நெடுங்கால

1. சி.கு. நாராயணசாமி முதலியார். நளவெண்பாப் பாடிய புகழேந்திப் புலவர் வரலாறு. செங்குந்தர் அச்சுக்கூடப் பதிப்பு கோவை (1932) பக்கம் 140.

2. M. Arunachalam-Ballad Poetry. G.V. (1976) 'Age of the Ballads' Page 53-54.

மாக வழங்கிவரும் தனித்தனிப் பாடல்களின் வடிவ அமைப்பினைத் தழுவியும் பின்பற்றியுமே தொடர்நிலைச் செய்யுள்கள் தோன்றி உருவாகியிருத்தலைச் சங்ககாலத் தனிப்பாடல்கள், தமிழ்க் காப்பியங்கள் ஆகியவற்றைக் கொண்டு அறியலாம். வில்லுப்பாட்டுகளும், முன்பு 'பா அமைப்பிலே' கூறியவாறு நெடுங்காலம் வழங்கி வந்த பல்வேறு நாட்டுப்பாடல் வடிவங்களையே தழுவியும் கையாண்டும் நெடுங்கதைகளாக உருவாகியிருத்தல் வேண்டும் எனலாம்.[1] நங்கைப்பாட்டுகளாகிய கதைப்பாடல்களும் இவ்வாறுகவே வடிவ அமைப்பினை மேற்கொண்டிருத்தல் வேண்டுமாதலின் இவ்விரு வகைப்பாட்டுகளும் தம்முள் ஒத்துள்ளனபோல் காணப்படுதல் இயல்பே. வில்லுப்பாட்டுகளும் கதைப்பாடல்களாகக் கருதப் படினும் எல்லாக் கதைப்பாடல்களும் வில்லுப்பாட்டுகள் அல்ல என்பது நன்கு அறியலாம்.

### கதைகளின் கட்டமைப்பு

கதைப் பொருளின் அடிப்படையில் வில்லுப்பாட்டுக் கதைகள் பல்வேறு வகையினவாக அமையினும், அவை அனைத்தும் பொதுவானதோர் கட்டமைப்பினைப் பின்பற்றியே உருவாகியிருத்தலைக் காணலாம்.

அக்கட்டமைப்பு முறையினைக் கீழ்க்காணுமாறு குறிப்பிடலாம்.

1. காப்பு விருத்தம்
2. வருபொருள் உரைத்தல்
3. குருவடிபாடுதல்
4. அவையடக்கம்
5. நாட்டுவளம் அல்லது கயிலைக் காட்சி
6. கதைத் தலைவன் அல்லது தலைவியின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சுவைகள் பலவும் அமைய எடுத்துக் கூறிக் கதையின் உச்ச நிலையில் அவர்தம் தலைமைச் சிறப்பு மேலோங்கிடுமாறு காட்டி முடித்தல்.
7. வாழிபாடுதல்

### 1. காப்பு விருத்தம்

பாடத்துவங்கும் கதை யாதொரு இடையூறும் இன்றி இனிது நிறைவேறவேண்டி இறைவனை வணங்கிப்பாடும் பாடலினையே

[1] "வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்குத் தற்காலச் சிறுகதை போன்று முற்காலத்தில் சங்க இலக்கியம் போன்ற சின்னச் சின்னப் பாடல்கள் தோன்றின. பிற்காலத்தில் கதைப் பாடல்கள் இதினின்று வளர்ந்தன"—டாக்டர் ச.வே. சுப்பிரமணியன். தமிழ்மொழியில் நாடோடி இலக்கியம் (கட்டுரை) மாந்தர் சிறப்பு, தமிழ்ப்பதிப்பகம் சென்னை-20, (1978) பக், 66,

'காப்பு' என்பர். இது பெரும்பான்மையும் விருத்தமாகப் பாடப்படுகிறது. எனவே காப்பு விருத்தம் எனப்படும். பொதுவாக எல்லாக் கதைகளிலும் காப்பு விருத்தத்தில் முதலில் விநாயகர் வணக்கமே பாடுகிறார்கள்.

*'' ஆனைமுகமும் ஒருகொம்பும் அகன்றமார்பும் சிறுகண்ணும்*
*பானைபோன்ற பெருவயிறும் பாங்கான பூணூல்அழகும்*
*தானேதோன்றி என்உள்ளத்தில் தயவாய் நிற்கும்விநாயகரே*
*நானேஉன்பாதம் தொழுதேன் நாவில் உதிப்பாய்கணபதியே''*[1]

மேலேகாணும் பாட்டு இக்காலம் பலராலும் காப்புவிருத்தமாகப் பாடப்பட்டுவந்தாலும், வில்லுச்சந்த அமைப்பிலே அமைந்த காப்புப் பாடலும், விருத்தம் பாடுதலுக்குப் பதிலாகப் பாடப்பெற்றிருக்கலாம் எனத் தெரிகிறது. அப்பாடல் வருமாறு

*'தந்தனைத்தோம் என்று சொல்லியே - வில்லினில்பாட*
*வந்தருள்வாய் கணபதியே.'*

புலவர் பிச்சைக்குட்டி இப்பாடலைக் காப்பாகப் பாடிவந்த போது, இரண்டாம் அடியை 'வந்தருள் சந்தான தெய்வமே' என்று மாற்றிப் பாடினார்.

கலைவாணர் பழைய சந்த முறையியேயே இதனைப் பாடினார். தற்காலம் இவர்களைப் பின்பற்றிப்பாடுவோர் யாவரும் இப் பாடலையே பாடி நிகழ்ச்சியைத் துவங்குகின்றனர். ஆயினும் 'கணபதியே' என்பதற்குப் பதிலாக அவரவர் விருப்பத்திற்கேற்ற வாறு 'கலைமகளே', 'தமிழ் மகளே' என்பன போலும் மாற்றங் களைச் செய்து கொள்கின்றனர்.

வில்லுப்பாட்டிலே பொதுவாகப் பெரும்பான்மையும். அமைந்துவரும் சந்த இசையையே பின்பற்றியும் காப்பு அமைவதை 'இரணியன் சம்மாரம்' வில்லுப்பாட்டில் காணமுடிகிறது. அப்பகுதி வருமாறு.

*''கணபதியே கசமுகவான் எங்கள்*
*கற்பகமே முன்னடவாய்*

*குணபதியே அறுமுகவா நல்ல*
*குமரகுரு தேசிகனே*

*கலைமகளே சரசோதியே பாலன்*
*கருத்தில்வந்து குடியிருப்பாய்*

1. 'சுடலைமாடன் வில் பாட்டு' கலைமகள் கம்பெனி. திருநெல்வேலி (1961) பக். 1.

அகில புவனம் அளந்தோனே எங்கள்
அச்சுதனே முன்னடவாய்

வைகுண்ட வாசகனே எந்தன்
மாயவனே போற்றிசெய்தேன்''

இப்பகுதியுள் கணபதியை அடுத்து, ஆறுமுகன், கலைமகள், திருமால் (மாயவன்) ஆகிய தெய்வங்களும் வணங்கப்படுதல் போலவே பல்வேறு வில்லுப்பாட்டுக்களிலும் தெய்வங்கள் பலவும் வணங்கப் பெறுகின்றன.

2. வருபொருள் உரைத்தல்

காப்புப் பாடலை அடுத்து, இன்ன கதையினைப் பாடப் போவதாகக் குறிப்பிடும் செய்தி அமைகிறது. இதனைப் பாட்டாக வும் சொல்வர். சிலவேளைகளின் உரைநடையாகவும் சொல்லி விடுவர். காப்பு விருத்தம் சொல்லும்போதே இன்ன கதைபாட இன்ன தெய்வம் காப்பதாக எனப் பாடிவிடுதலும் உண்டு.

''மெய்தவத்தில் நின்றரக்கன் விரல்தூண்ட வரம்வாங்கி
செய்யசிவனுர் தனைவிரட்டி திருமால் இடத்தில்மகிழ்ந்துசெல்ல
தையல் வடிவாய் பெண்வேசம்கொண்டு சத்தியம் செய்து
வரமழித்த
அய்யன் வரலாறு தனைப்பாட ஆனைமுகவன் தனைகாப்பு.''[1]

இப்பாடல் தவவலிமையால் பெற்ற வரத்தின் தன்மையை அறிய அதனைத் தந்தவனிடமே சோதித்துப் பார்க்க விரும்பிய வல்லரக்கன், திருமாலின் செயலால் அழிவுற்றதும், அய்யன் பிறந்த கதையும் கூறப் போவதைச் சுருக்கமாக எடுத்துச் சொல்லுதல் காணலாம்.

3. குருவடி பாடுதல்

தனக்குப் பாட்டுச் சொல்லிவைத்த ஆசானை நினைந்து வணங்கும் பகுதி அடுத்து அமைகிறது. இதனைக் 'குருவடி' என்பர், குருவின் திருவடி வணங்குதல் என்ற பொருளிலே. கீழ்வரும் குருவடிப்பாடல் 'சுடலைமாடன் கதையுள்' வருவது.

''கணபதியும் என்குருவும்
கனவிலேயும் நான்மறவேன் (எனக்குச்)
சொல்லிவைத்த வாத்தியாரைச்
சொப்பனத்தில் நான்மறவேன்

1. சாஸ்தா கதை வில்பாட்டு - கலைமகள் கம்பெனி, திருநெல்வேலி (1951) பக்: 1.

நானொருநாள் மறந்தாலும்
நாவொருநாள் மறப்பதில்லை
நெஞ்சொருநாள் மறந்தாலும்
நினைவொருநாள் மறப்பதில்லை.''[1]

'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லுநா நமசிவாயவே'[2] என்ற சுந்தரர் வாக்கினில் ததும்பும் உணர்ச்சியை இங்கேயும் தெளிவாகக் காணமுடிகிறது.

4. அவையடக்கம்

கதைகேட்கக் கூடியுள்ள பெருமக்கள் முன், பாடும் புலவர் தம் எளிமை தோன்றும்படியாக அவைக்கு அடங்கிப் பாடும் தன்மையினை எடுத்துரைப்பதாக அமைவதே அவையடக்கமாகும். 'வள்ளியம்மை கதை'யில் காணப்படும் அவையடக்கம் வருமாறு,

''முற்கதை பார்த்துநான் இக்கதை செப்பிய பாவுதான்-அது
முல்லைமலர்க் கிணையாமோ எருக்கலம் பூவுதான்
நாலடிச்சீரும் நயமறியாதவன் வில்லிசை - பாட
நாடிடுமாறுபோலாகுமே என்னுட சொல்லிசை
மாலையால் நாரும்மணம்பெற்ற தென்றெங்கும்
சொல்லுவார் - அந்த
வாறுபோல் கந்தன்பேர் வந்ததால் என்கவி கொள்ளுவார்''[2]

சில வேளைகளில் அவையடக்கம் உரைநடையில் கூறப்படுதலும் உண்டு.

''அதாவது நான்குவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்தி நான்கு கலைக்ஞானம், தொண்ணித்தாறு தத்துவம் இதிகாச புராணங்கள் எல்லாம் தெளிவாகக் கற்றுணர்ந்த பெரியோர்கள் முன்னிலையில் ஏதுமறியாத நான் பாடக்கூடிய பாடலில் ஏதாவது சொல்குத்தம் பொருள்குத்தம் இருப்பினும் என்னைப் பெற்றபிள்ளைபோல எண்ணிப் பிழை பொறுக்க வேணுமய்யா'' என்றவாறு கூறப்படும்.

5. நாட்டுவளம் அல்லது கயிலைக் காட்சி

பொதுவாக எல்லாக் கதைகளிலும் கீழே காணப்படுவது போன்றதோர் அமைப்பினிலேயே நாட்டுவளம் பாடப்பெறும்.

''நாடுநல்ல நல்லநாடு எங்கும்
நாவலர்கள் புகழும்நாடு

1. சுடலைமாடன் வில்பாட்டு - கலைமகள் கம்பெனி (1961) பக் 1.
2. கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் பதிப்பு வள்ளியம்மைகதை விற்பாட்டு (அகத்தீசுவரம்) பக்: 1.

இஞ்சிமஞ்சள் பூக்கும்நாடு நல்ல
இருவாச்சி மலரும்நாடு
கோடைமழை பொழியும்நாடு நல்ல
குளிர்ந்த தென்றல் வீசும்நாடு
மாதம் மூன்று மழைபொழியும் அங்கு
வருசம் மூன்று பூவிளையும்.''

ஆயினும், 'சுடலைமாடன் கதை' யானது

''மாணிக்கக் கயிலையிலே ஈசன்
மரகதசிம் மாசனத்தில்
ஆணிப் பொன்சிம்மாசனத்தில் நல்ல
அம்மை உமையாள் ஈஸ்பரியும்''

என்று தொடங்குவதும், 'சாஸ்தா கதை'யில்

''தானாகிய பொன்னும் கயிலாசத்தில்
தக்க சிவனாரும் வீற்றிருந்தார்''

என்று கூறியே கதை தொடங்குவதும் கொண்டு இதுபோலும் தெய்வக் கதைகளைச் சிவன் வாழும் கயிலைக் காட்சியுடன் தொடங்குதலே மங்கலமரபாகக் கொண்டனரோ எனவும் எண்ணலாம்.

6. தலைவன் அல்லது தலைவியின் கதை கூறுதல்

கதைத் தலைமை கொள்வோரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நிரல்படக் கூறி, அவர்தம் தலைமைச் சிறப்பை உரிய முறையில் எடுத்துக்காட்டும் பாங்கினை முத்துப்பட்டன் கதை வாயிலாக நன்கறிந்திட முடிகிறது.

கல்வி கேள்வியில் சிறந்த பட்டன் அண்ணன்மார் அறுவருடனும் மாறுகொண்டு, வேற்றுநாட்டு மன்னனிடம் சேர்ந்து சிறப்படைதலும், தேடிவந்த அண்ணன்மாரோடு உரிய பரிசுகளுடன் மீளும் வழியில், காணநேர்ந்த இரு கீழ்க்குலப் பெண்களை விரும்பி முறைப்படி மணக்கவும் முடிவு செய்தலும், சாதி வேறுபாடு குறுக்கிடவே அவர்களாகவே தன்னை இவன் ஆக்கிக் கொள்ளுதலும், பெண்களின் தந்தை மக்களை மனமொப்பி இவனுக்கு மணமுடித்துக் கொடுத்தலும், கதைத் தலைவனின் புரட்சிப்போக்கினைப் படிப்படியாக உயர்த்தி நிறுத்துகின்றன. மணக்கோலம் மாறாதநிலையில் பெண்வீட்டார்க்குரிய கால்நடைகளைக் கள்வர் கவர்ந்துசெல்லவே, அப்பழிதீர்த்துக் குடிப்பெருமை காத்தலைத் தனக்குரிய கடமையாகக் கொண்டு பகைவரை எதிர்த்து வீழ்த்துதலும், இறுதியில் வஞ்சனைக்கு ஆளாகி மடிதலும் அவன் வெறும் காமவசப்பட்டவன் அல்ல-ஒப்பற்ற கடமைவீரன் என்பதைக் காட்டிவிடுகின்றன. அரசனின் ஆசை மொழிகளுக்கும்

ஆட்படாமல் மனைவியர் இருவரும் உயிர்விட முடிடிசெய்து பட்டனுடன் உடன்கட்டை ஏறி மாளுதலும், கடவுளரால் மூவரும் தெய்வநிலை அடைதலும் கதையின் முடிவாக அமைகின்றன.[1]

7. வாழிபாடுதல்

பாட்டின் இறுதிப்பகுதியாக அமைவது வாழிபாடுதல். பொதுவாகப் பழைய வில்லுப்பாட்டுகள் யாவும் பின்வருமாறு வாழ்த்தி முடிகின்றன. கதைகேட்போரும் மற்றோரும் கடவுளர் அனைவரின் அருளும் பெற்று வாழ்க என வாழ்த்தலும் உண்டு.

"ஆல்போல் தான் தழைத்து நல்ல
அறுகுபோல் வேரூன்றி
மூங்கில்போல் அன்னசுற்றம் அவர்
முசியாமல் வாழ்ந்து வாரூர்."

குறுங்காப்பியங்கள்

கற்றவரால் இயற்றப்பெறும் ஏட்டுக் காப்பியங்களுக்கு உரிய இலக்கணங்களைத் தமிழில் தொகுத்துக் கூறியுள்ளனர்.[2] வில்லுப் பாட்டு நாட்டுக்காப்பியம், வாய்மொழி இலக்கியத்தின் தன்மைகளுக்கு ஏற்றவாறு அமைவது. தனக்கேற்றதான ஓர் காப்பிய அமைதியை வகுத்துக்கொண்டு பாமரமக்களிடையே வழங்கி வருவது. எனினும் ஏட்டுக்காப்பியத்திற்குரியனவாகச் சொல்லப் படும் இலக்கண அமைதிகள் பெரும்பாலும் ஒத்துக் காணப்படும். தொன்றுதொட்டு வாய்மொழி இலக்கியம் அமைத்து வளர்த்துக் கொண்ட அமைதிகளே பின்னுளில் ஏட்டுக்காப்பிய இலக்கணங்களாக வரையறுக்கப்பெறும் நிலையினை எய்தியிருத்தல் கூடும் என எண்ணுதலும் பொருத்தமானது எனலாம்.

வில்லுப்பாட்டுகளின் பயன் பொதுவாக மக்கள் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தலே எனலாம். கேட்போரை மகிழ்வித்தல் என்பதுடன் நில்லாமல், வீரப் பெருமக்களின் நினைவினைப் போற்றுதல், பெண்மைச் சிறப்பினை உயர்த்திப் பேசுதல், தனிப்பட்டோர் ஒழுக்கத்தையும் வற்புறுத்திச் சமுதாய அநீதிகளையும் சுட்டிக் காட்டுதல், இறை உணர்ச்சியைப் பெரிதும் வற்புறுத்துதல் ஆகியன யாவும் வில்லுப்பாட்டுகளில் இடம்பெறக் காண்கிறோம். பொதுவாக மக்களிடையே, நேரியதும் சீரியதும் ஆன

1. Sheila Asirvatham-Structural Study of TamilFolk – Ballads.I-ஆம் கருத்தரங்கு ஆய்வுக் கோவை தொகுதி 1. பக் : 240-245.—இக்கட்டுரை இங்கே ஒப்புநோக்கத் தகுந்தது.

2. தண்டியலங்காரம். நூற்பா 8. வை. மு. கோ. வெளியீடு. சென்னை. (1956) பக். 17.

வாழ்க்கைக்கு ஏற்ற உலக ஒழுக்க நெறிகளை வற்புறுத்திக் கூறும் குறுங்காப்பியங்களே வில்லுப்பாட்டுக் கதைகள் எனலாம்.[1]

**கதைகளின் வகைப்பாடு**

வில்லுப்பாட்டுகளை அவற்றின் கதைப்பொருளின் அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. புராணத் தொடர்பான தெய்வக் கதைகள்
2. இதிகாசம் தழுவிய கதைகள்
3. கொடுந்தெய்வக் கதைகள்
4. சமுதாயப்பாங்கான கதைகள்
5. வரலாற்று வீரர் கதைகள்

*புராணத் தொடாபான தெய்வக் கதைகள் :*

வில்லுப்பாட்டிலே புராணத் தொடர்பான தெய்வக்கதைகள் பல உள்ளன. புராணக் கதைகளை எடுத்துச் சொல்வதிலும் அவற்றைக் கேட்டு மகிழ்வதிலும் மக்களுக்குள்ள நீங்காத ஆர்வத்தின் காரணமாகவே அவை அழியாவரம் பெற்றுத் திகழ்கின்றன. இத்தகைய ஆர்வத்தின் விளைவினைப் பின்வரும் குறிப்பால் அறியலாம்.

''இந்திய நாட்டுப் பண்டை இலக்கியங்களை வேதநூல்கள் என்றும், இதிகாச புராண நூல்கள் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம். வேத நூல்கள் ஒருசாராருக்கே உரிமையுடையனவாக இருந்தன. ஆதலால் சமூக மக்கள் இதிகாச புராண நூல்களையே படித்து வந்தனர். கிராமங்களில் அவைகளுக்குப் பொருள் கூறப்பட்டு வந்தது. மக்கள அவற்றைக் கேட்டு ஒழுக்கமும் கல்வியும் பெற்று வந்தனர். புராணங்களும் இதிகாசங்களும் மக்களுடைய பொதுப் பண்பாட்டுக்குப் பெரிதும் துணை செய்துவந்தன.''[2]

இதனல் வேத நூல்களை அறிந்து அவற்றின் வாயிலாக உலகியல் ஒழுக்கங்களை அறிந்துகொள்ளும் வாய்ப்பு இல்லாதவர்களுக்கு அந்நெறிகளைப் புராணங்கள்தான் புகட்டின என அறியலாம். ''வேதகாலத்திற்கு முன்பே புராணங்கள் பழைய கதை

1. ''All things Considered, The Villup-pattu was an upholder of morals''—M. Arunachalam. Ballad Poetry. Gandhi Vidyalayam, Tanjavur Dist. (1976) Page: 207.

   ''உள்ளத்தில் நற்பண்புகளை வளர்ப்பதற்கும் வீர உணர்வுகளைத் தூண்டி எழுப்புவதற்கும் வீரர்களின் கதைகள் மக்களிடையே வழங்கலாயின''—டாச்டர் ச.வே. சுப்பிரமணியன், 'தமிழ் மொழியில் நாடோடி இலக்கியம் (கட்டுரை) மாந்தர் சிறப்பு. தமிழ்ப் பதிப்பகம், சென்னை-20. (1978) பக. 68.

2. வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர்—புராணங்கள் (கட்டுரை) கலைக்களஞ்சியம் தொகுதி 7. தமிழ் வளர்ச்சிக் கழகம் சென்னை (1960) பக். 436.

களாக இருந்தனவே அன்றி நூல்களாக இருக்கவில்லை'' என்பர்.[1] வடமொழியில் காணப்படும் புராணங்கள், மகா புராணங்கள் பதினெட்டு,[2] உப புராணங்கள் பதினெட்டு,[3] அதிபுராணங்கள் பதினெட்டு என்றவாறு பெயர்பெறுகின்றன.[4] உப புராணங்கள் இருபத்தொன்று எனவும் காண்கிறோம்.[5]

புராணங்கள் தமிழில் எழுந்த காலத்தைப் பதினைந்தாம், பதினாறும் நூற்றாண்டு என்பர்.[6] இந்தக் கால எல்லையில் மக்களிடையே புராணங்கள் பற்றிய செய்திகள் மிகுதியாகப் பரவியிருத்தல் கூடும் எனலாம். கற்றவரும் மேல்நிலை மக்களும் நூல்கள் வாயிலாகப் புராணக்கதைகளை அறிந்துகொள்ளும் வாய்ப்பு உண்டு. ஆனால் கல்லாத பாமரமக்கள் கேள்வி அறிவாலேயே அக்கதைகளைத் தெரிந்துகொள்ளும் நிலையில் இருந்திருப்பர்.

வீரப்போர் புரிந்து உயிர்துறந்த பெருமறவர்களை நினைவு கூரும் நிலையில் அமைந்த நடுகல் தெய்வங்களே நாட்டுப்புற மக்களால் வழிவழியாக வணங்கப்பெற்றுவரும் சிறு தெய்வங்கள் எனப் பலரும் கருதுகின்றனர்.[7] இச் 'சிறு தெய்வங்'களுக்கு வழிபாடு நிகழும் 'கொடை' விழாக்களில் ஆங்காங்கே கோயில் கொண்டுள்ள அத்தெய்வங்களின் வரலாறுகளைக் கற்பனை நயத்துடன் கலந்து மக்களுக்கு எடுத்துச்சொல்லப் பயன்படுவதோர் அரிய இசைக்கலையே வில்லுப்பாட்டு. இலக்கியங்கள் தரும் சான்றுகளின்படி இக்கலை பெரிதும் பரவி வழங்கி வந்ததாகத் தெரிய வரும் காலமே புராணக் கதைகள் தமிழில் மொழிபெயர்த்தெழுதப்படும் அளவுக்குத் தமிழகத்தில் செல்வாக்குடன் பரவியிருந்த காலமாகவும் அமைவதால், வீரவரலாறுகளை விளக்கிப் பாடிய வில்லுப்பாட்டு, மக்களுக்கு விருப்பமான புராணக் கதைகளையும் எடுத்துச் சொல்லும் நிலையை அடைந்திருத்தல் கூடும் என்பதனை அறியலாம்.

இக்கால எல்லையில்தான் வில்லுப்பாட்டிலே பாடப்பெற்ற ஒவ்வொரு வீரவரலாறும் புராணத்தன்மை ஊட்டப்பெற்று, அத

---

1. வி ஆர். இராமச்சந்திர தீட்சிதர்—......
2. ,, ,, ,, ,,
3. ,, ,, ,, ,,
4. சோமதேவசர்மா—வடமொழிப் புராணங்கள். (கட்டுரை) கலைக்களஞ்சியம் தொகுதி 7. த.வ:க. சென்னை (1960) பக். 438.
5. ,, ;, ,, ,,
6. தெ.பொ.மீ. தமிழ்ப்புராணங்கள் (கட்டுரை) கலைக்களஞ்சியம் தொகுதி 6. பக். 436.
7. டாக்டர் க. கைலாசபதி—பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும். பாரி நிலையம் சென்னை-1. (1966) பக், 59.

னதன் தெய்வத்தன்மையை மேலும் மேம்படுத்திக்கொண்ட நிலைமையும் ஏற்பட்டிருக்கலாம்.

இளங்கோவடிகள் காலத்திலேயே வெற்றி விளக்கும் கொற்றவைத் தெய்வத்தின் வரலாறு எந்த அளவுக்குப் புராணத் தன்மையூட்டிச் சுவையோடு சொல்லப்படுகின்றது என்பதும் இங்கே கருதிப் பார்க்கையில், புராணங்கள் தமிழில் எழுதப்பட்ட காலத்தின் முற்பட்டும்கூட வில்லுப்பாட்டு வீர வரலாறுகள் புராணத்தன்மை பெற்றுச் சிறப்படைந்திருத்தல் கூடும் எனலாம்.

'வேட்டுவவரி' தரும் கொற்றவையாகிய ஐயையின் தெய்வத் தன்மைகள் கொண்டவனுகவே சாத்தன் ஆகிய ஐயன் தெய்வமும் வில்லுப்பாட்டில் சிறப்பிக்கப்பட்டிருத்தல் வேண்டும் எனவும், பின்னுளில் ஐயன் தெய்வம் அரிஅரன் புத்திரனுகப் புராண ஆதாரத்துடன் காட்டப்பட்டிருத்தல் கூடும் எனவும் கருதலாம்.

வில்லுப்பாட்டிலே புராணத் தொடர்புடையனவாகப் பாடப் பெற்று வரும் தெய்வக் கதைகளுள் முதன்மைச் சிறப்புடையது 'ஐயன் கதை' எனப்படும் சாத்தா கதையே ஆகும். இதனைத் தொடர்ந்தே பல்வேறு புராணத் தொடர்புடைய கதைகளும் வில்லுப்பாட்டிலே இடம்பெற்றிருக்கலாம். அவ்வாருன கதைகளுள் 'இரணியன் சம்மாரம்', வள்ளியம்மன் கதை', 'பார்வதி' யம்மன் கதை', 'மார்க்கண்டன் தவசு' (காலசுவாமி கதை), அரிச்சந்திரன் கதை (மாசானசுவாமி கதை) கிருஷ்ணசுவாமி கதை, பெருமாள்சுவாமி கதை, மாகாளியம்மன் கதை ஆகியவை குறிப்பிடத்தக்கன. மேலும் பல கதைகளும் காணப்படுகின்றன.

ஐயன் கதை என்னும் சாஸ்தா கதை

வில்லுப்பாட்டுப் புலவர் பெருமக்களால் முதன்மைச் சிறப்பளித்துப் பாடப்பெற்றுவரும் 'ஐயன் கதை', வல்லரக்கன் என்பானின் அழிவுபற்றி விவரிக்கும் கதையாகவும் அமைவதால் 'வல்லரக்கன் கதை' எனவும் வழங்கப்பெறுகிறது. அரி, அரன் ஆகிய இரு தெய்வங்களின் அமிசமாகத் தோன்றியவன் ஐயன் எனக் கதையுள் கூறப்படுவதால் இது 'அரிகர புத்திரன் கதை' எனவும் அழைக்கப்படும்.

புலவர்களால் வழிவழியாகப் பாடப்பெற்றுவரும் ஐயன் கதை வருமாறு :

பாதாளத்தை ஆளும் வல்லரக்கன் என்பான் தன்னை எதிர்த்த பகையரசரை மாய்ப்பதற்குரியதோர் வரம்பெறும் பொருட்டுப் பரமனை நோக்கிக் கடுந்தவம் செய்கின்ருன். அரக்கனின் தவ வலிமை கண்ட அரனுர், அவன் வேண்டும் வரமளிக்கத் திருவுளம்

கொள்கிறார். யார் சிரசுக்கு நேராகத் தன் 'தூண்டு' விரல்களை நீட்டினாலும் அவர் தலை வெடித்து வீழ்வதற்கான வரத்தினை அரனருளால் பெறுகின்றான். ஆயினும், அவ்வாறு அரன் அளித்த வரத்தின்மீது அரக்கனுக்கு ஐயம் எழுகின்றது. வரம் அளித்த அரனிடமே அதனைச் சோதித்துப் பார்க்கத் துணிகின்றான். அது கண்ட சிவன் அஞ்சித் தப்பிஓடி ஆநிரைகாக்கும் மாயவனைத் தஞ்சம் அடைகிறார். மாயவனும் 'மோகினிக்' கோலம் கொண்டு அரக்கனை வஞ்சித்து அவன் வரத்தாலேயே அவனை அழிக்கிறார். அந்த 'மோகினிக்' கோலத்தின் அழகு கண்டு காமுற்றுச் சேர்ந்த அரனார்பால் தோன்றியவரே ஐயனார் என்னும் சாத்தா. இவர் பின்னர் பார்வதியால் வளர்க்கப் பெறுகிறார். வளர்ந்து வீரனாகிய பின் வேட்டைமேல் விருப்பம் கொண்டு கான்வேட்டையாடுகிறார். அப்பால் கயிலாயம் சேர்ந்து அம்மையப்பருடன் வாழ்கிறார்.

வில்லுப்பாட்டுகள் பல ஐயன் பிறப்புடனேயே முடிவடைந்து விடுகின்றன. பிறவகையான கதைகளைப் பாடுவதாக இருந்தாலும்கூட, ஐயன் பிறப்பை முதன்முதல் சுருக்கமாகவேனும் பாடியதன் பின்னரே பாடுதல் வேண்டும் என்னும் ஓர் மரபினை இன்றும் வில்லுப்புலவர்கள் கையாண்டுவருவதே இதற்குக் காரணம் எனலாம். இவ்வாறு இக்கதைக்குச் சிறப்பிடம் தந்து முதன்மைப்படுத்தும் வழக்கம் இருப்பதானது வில்லுப்பாட்டிலே பாடப்பெறும் பிற கதைகள் யாவும் வழக்கத்திற்கு வருமுன்னர், சாத்தன் கதையே முதன் முதலாக - நெடுங்காலமாகப் பாடப் பட்டுவந்த கதையாக இருக்கக்கூடும் என எண்ண இடமளிக்கிறது.

ஐயன் பிறந்தபின் பார்வதியால் வளர்க்கப் பெற்று வீரனான நிலையில் வேட்டைமேல் விருப்பம் கொண்டு, வேட்டையாடி முடித்தபின் கயிலாயம் சேர்ந்து சிவபெருமானுடன் வாழ்வதாக முடிவுறும் கதை அந்நிகழ்ச்சிகளைப் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

"வேட்டையாடி ஐயனாரும்
வேடர்களைத் தான்கூட்டி
வனங்கடந்து வனங்கடந்து
வந்தார்கை லாசம்தன்னில்
கைலாச பருவதத்தில்
கறைக்கண்டனார் இடமதிலே
வரங்கள் மிகவேபெற்று
வாழ்ந்து வாறார் கைலாசத்தில்"[1]

1. பெ. பிச்சையாண்டி நாடார் (பதிப்பு) சாஸ்தா கதை வில்பாட்டு. கலைமகள் கம்பெனி. திருநெல்வேலி, (1959) பச்: 17.

இங்கே, அரக்கனின் அழிவு, ஐயன் பிறப்பு ஆகிய நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து, ஐயன் வேட்டைமேல் நாட்டம் கொள்வதாகவும், வேட்டையினை நன்றாக முடித்தபின்பே கைலாசம் செல்வதாகவும் காட்டப்படுதல் சிந்திப்பதற்குரியதாகும்; அரிகர புத்திரனாகத் தெய்வாம்சம் பெற்றவனாகப் பிறந்தவனுக்கு உலகில் வேட்டையாடும் விருப்பம் எழுவதேன் என எண்ணும் போது, வேட்டைத் தெய்வமாகவே ஒருகாலத்தில் தொழப்பட்டு வந்த ஐயனாகிய சாத்தன் தெய்வம்தான் பின்னர் புராண காலச் செல்வாக்கினால் அரிகர புத்திரனாகக் காட்டப்பட்டிருத்தல் கூடும் எனக் கருதத்தோன்றுகிறது.

ஐயன் தெய்வத்தைத் தமிழ்மக்கள், புராணப் பாதிப்புக்கு முன் வேட்டைத் தெய்வமாகவே கருதி வழிபட்டுவந்திருத்தல் கூடும் எனும் கருத்தினை வலியுறுத்தும் வகையில் அமைந்த சில செய்திகளை இங்கே காணலாம்.

வில்லுப்பாட்டு, ஐயன் பிறப்பிற்குக் காரணமாகி நிற்கும் 'வல்லரக்கனின்' அழிவு பற்றிய கதையைக் கொண்டுள்ளது. இவ்வரக்கனின் கதை "ஸ்ரீமத் பாகவதம்" கூறும் பஸ்மாசுரன் கதையினை[1] ஒத்துள்ளது. பாகவதத்தில் இந்தப் பஸ்மாசுரன் நாராயணனால் அழிவு பெறுகிறான் என்றே காணப்படுகிறது. அரக்கனை அழிக்கவும், அரனை அவனிடமிருந்து தப்புவிக்கவும், நாராயணன் பிரம்மச்சாரியின் வேடம் கொண்டு வந்ததாகவும், அவ்வடிவில் இருந்தே அவனைத் தந்திரமாக வஞ்சித்துக்கொன்று ஒழித்ததாகவுமே குறிக்கப்பட்டுள்ளது. இங்கே 'மோகினிக் கோலம் கொண்டு அரக்கன் அழிக்கப்பட்டான்' என்ற செய்தி இல்லை என்பது குறிப்பிடத் தகுந்ததாகும்.

மகா சாத்தனின் பிறப்பினை உணர்த்தும் கந்தபுராணச் செய்திகளை இனிக் காணலாம்.

பாற்கடல் கடைந்த காலத்தில் மோகினி அவதாரம்கொண்ட திருமாலைச் சிவன் காமுற்றுச் "சாளக்கிரம" க்ஷேத்திரத்திற்கு அழைத்துச்சென்று கூடவும் ஆங்கே ஐயன் தோன்றினான் என்பதைப் பின்வருமாறு கச்சியப்பர் கூறுகிறார்.

> 'இந்தவண்ண மிருக்க முராரியும்
> அந்திவண்ணத் தமலனு மாகியே
> முந்துகூடி முயங்கிய வெல்லையில்
> வந்தனன் எமை வாழ்விக்கும் ஐயனே!'

---

1. கார்த்திகேயன் (தொகுப்பு) ஸ்ரீமத் பாகவதம் வாசு பிரசுரம் சென்னை-14 99691 பக்: 50.

"மைக்கருங்கடல் மேனியும் வானுலாம்
செக்கர் வேணியும் சென்டுறு கையுமா
யுக்கிரத்துடன் ஓர்மகன் சேர்தலும்
முக்கண் எந்தை முயக்கினை நீங்கினுன்"

"அத்தகுந் திருமைந்தற் கரிகர
புத்திரன்னெனு நாமம் புனைந்துபின்
ஒத்த பான்மை உருத்திரர் தம்மொடும்
வைத்துமிக்க வரம்பல நல்கியே."[1]

இங்கே, மாயன் மோகினி அவதாரம் எடுத்தது பாற்கடல் கடைந்தபோது எனக் குறிக்கப்படுகிறது. ஆனுல், இதே பாற் கடல் கடைந்த கதையினையும் அப்போது மோகினி அவதாரம் மாயவன் கொள்ள அதுகண்டு, பார்வதிதேவியுடன் வந்த பரமன் தன் மனம் பறிகொடுப்பதுமாகிய நிகழ்ச்சிகள் 'பாகவதத்தில்' காணப்படுகின்றன. ஆனுல், மாயமோகினியின் மயக்கத்தில் சிக்குண்ட மகேசன் அதனின்றும் தன்னை விடுவித்துக்கொள்கிருர். இதனை அறிந்த மாயவன் உண்மை உருவினைக் காட்டிப் "பார்வதி நாதா! நீ ஒருவன்தான் என் மாயையில் சிக்குண்டாலும் அதனின்று மீண்டுவரும் சக்தி படைத்தவன்" என்று கூறிச் சிவனை வெகுவாகப் பாராட்டுகிருர்'[2]. பாற்கடல் கடைந்த கதையின் முடிவுபற்றிக் கந்தபுராணம் கூறுவதும், பாகவதம் கூறுவதும் எவ்வாறு முரண்பட்டுக்கிடக்கின்றன எனக் காணலாம்.

பாற்கடல் கடைந்த நிகழ்ச்சியைக் கம்பரும் காட்டுகிருர். துருவாச முனிவரின் சாபத்தால் இந்திரனின் தேவருலகச் செல்வம் யாவும் கடலின் அடியிலே சென்று மறைகின்றன. தேவர்கள் திருமாலைச் சரணடைந்துவிடவே, திருமாலின் விருப்பப்படியே அசுரரும் தேவரும் ஆழியைக் கடைகின்றனர். மறைந்தவை அனைத்தும் மீளவும் பெற்ற வானவர், ஆங்கே தோன்றிய அமிழ் தத்தை அசுரர் பெருதவாறு தாமே அருந்தி இன்புறுகின்றனர். அசுரரை வஞ்சித்து அவர்கள் அமிழ்தம் பெருதவாறு செய்தது திருமால் கொண்ட மோகினிக் கோலமேயாகும். கம்பர்தரும் செய்தி இவ்வளவே.[3] கறைக்கண்டனுகிய சிவன் கார்வண்ணனின் மோகினிக் கோலம் கண்டு காமுறுதலும் அதன் பின்விளைவுகளும்

1. கச்சியப்ப சிவாச்சாரியார்– கந்தபுராணம் அசுரகாண்டம் மகாசாத்தாப் படலம். தா. குப்புசாமிநாயக்கர் கம்பெனி வெளியீடு. (1967) பக்: 322.
2. கார்த்திகேயன். (தொகுப்பு) ஸ்ரீமத் பாகவதம்,வாசுபிரசுரம், சென்னை-14 (1969) பக் : 260.
3. கம்பராமாயணம், அகலிகைப்படலம். (பாடல்: 5-26) வை மு.கோ. பதிப்பு (1973) பக் : 359-374.

கம்பனில் காட்டப்படவில்லை. பாற்கடல் கடைந்த கதையினைக் கம்பன் கையாள நேர்ந்த நிலையில், அரியும் அரனும் தொடர்பு கொண்ட பின் நிகழ்ச்சிகள் தேவையில்லையென்பதால் விட்டு விட்டார் போலும்.

மேலும், தாருகாவனத்து இருடிகளின் ஆணவமாதி இறுமாப்புக்களை அடக்குதற்கு அரியும் அரனும் எழுந்தருளிய காலத்து, மோகினி வடிவாகிநின்ற மகாவிஷ்ணுவின்பால் பிச்சாடனக் கோலத்திருந்த சிவபெருமானுக்கு மகனாகப் பிறந்தவரே ஐயனார் என்றதோர் கதையும் காணப்படுகிறது.[1]

இத்தனை முரண்பட்ட 'பிறப்பு' வரலாறுகளுக்கிடையே சாத்தன் பிறப்புக்குத் தெய்வத்தன்மை ஊட்டும் முயற்சியினை மேற்கொண்ட வில்லுப்பாட்டு, பாகவதத்தின் பஸ்மாசுரன் கதையில் காணும் முற்பகுதியினையும் கந்தபுராணம் காட்டும் பிற்பகுதியினையும் இணைத்து இன்றுள்ள ஐயன் கதையை ஒரு வகையாகப் புனைந்து கொண்டது என்றே கருதமுடிகிறது.

'அரிகர புத்திரனென்னும் சாஸ்தா வில்லுப்பாட்டு' எனும் பிறிதொருகதை, புலிப்பால் கொண்டுவந்து மாற்றாந்தாயின் (அரசியின்) சூழ்ச்சியை ஒழித்துக் கட்டிய ஐயப்பன் என்பான் ஐயன் தெய்வத்தின்-சாத்தாவின்-மறு அம்சமே எனக்கூறி அவனது கதையினையும் கொண்டு முடிவதைக் காண்கிறோம்.[2]

'சபரிமலை ஐயப்பன்' எனும் கேரள நாட்டுப்புறக் கதை மதுரைப் பாண்டியனிடம் தளபதியாகப் பணியாற்றிய மலையாள நாட்டு வீரன் ஒருவனே ஐயப்பன் என்றும், இவன்மீது பொறாமை கொண்டவர்கள் செய்த சூழ்ச்சியின் விளைவாகவே இவன் புலிப்பால் கொண்டுவரச் சென்றதாகவும், புலிப்பால் கொண்டுவந்த பெருவிந்தை கண்ட அரசன் தன் தளபதி தெய்வத்தன்மையுள்ளவன் எனத் தெரிந்து அவன்பால் மன்னிப்புக் கோரியதாகவும் அதன்பின் அங்கிருக்க மனமில்லாத ஐயப்பன் கேரள நாடு அடைந்து, சபரிமலைமீது பரசுராமரின் விருப்பப்படியே தெய்வநிலை கொண்டதாகவும் கூறுகிறது.[3] தற்காலம் வழங்கிவரும் ஐயப்பன் வரலாறுகளின்படி ஐயப்பன் மன்னரின் வளர்ப்புப்பிள்ளை எனவும். மாற்றாந்தாயாகிய அரசியின் மாயநோய் தீரவே புலிப்பால்

---

1. ப.அ. கிருஷ்ணசாமி பிள்ளை, ஐயனார் (கட்டுரை) கலைக்களஞ்சியம் தொகுதி 2. த.வ.க. (1955) பக் : 632.
2. கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் (தொகுப்பு) சங்கு நூலகம், திருநெல்வேலி. பக். 18—36.
3. K. Jacob. (26) The God Ayyappen of Sabarimala. Folk Tales of Kerala. Sterling Publishers. New Delhi. (1972) Page: 64—67.

கொண்டுவரப்பட்டதெனவும், இதன்பொருட்டுக் கானகம் சென்றபோதே ஐயப்பன் அவதார நோக்கம் ஆகக் கருதப்படும் 'மகிஷி சம்காரம்' நடந்ததெனவும் அறிகிறோம்.[1]

எனவே, நெடுங்காலமாகவே கொற்றவையாகிய 'ஐயை' தெய்வத்திற்கு ஒப்பானதோர் போர்த்தெய்வமாக, வேட்டைத் தெய்வமாக 'ஐயன்' தெய்வமும் மக்களால் வழிபாடு பெற்றிருத்தல் கூடும் எனக் கருதலாம். (இதன் தொடர்பான மேலும் சில செய்திகள் பின்னரும் காணலாம்.)

*இரணியன் சம்மாரம்*

வில்லுப்பாட்டிலே 'இரணியன் சம்மாரம்' முழுவதுமாகப் புராணம் தழுவி அமைக்கப்பெற்ற எளிய, இனிய கதை. இரணிய கசிபுவின் கதை 'ஸ்ரீமத் பாகவதத்தில்' காணப்படுகிறது.[2] அதே நிலையில் இக்கதை வில்லுப்பாட்டிலே ஒருசில மாற்றங்கள் மட்டும் பெற்று அமைந்துள்ளது.

இரணியன் மைந்தன் பிரகலாதன், தந்தை நாமம் சொல்ல மறுத்து நாராயணன் நாமம் சொல்ல, அதனை மாற்ற முயன்ற இரணியன் முயற்சிகள் யாவும் தோல்வியே காண, மகன் எனவும் பாராமல் பிரகலாதனைப் பலவழியாலும் கொல்விக்க முயன்று அவையும் பலனளிக்காமல் போகவே, இறுதியில் இரணியன் தானே அவனைக் கொல்லத் துணிந்து, மகன் வணங்கும் மாயன் தூணிலும் உண்டோ எனச் சீறித் தூணை வாளால் வெட்டவே அதனின்றும் நரசிங்கமூர்த்தி வெளிப்பட்டு அரக்கர் கூட்டத்தையும் இரணியனையும் அழித்த கதையே' இரணியன் சம்மாரம்,

வீடணன், இராவணனுக்கு அறிவுரை கூறும் நிலையில், இரணியன் வீழ்ச்சியை எடுத்துக் கூறியதாகக் கம்பர் தம் காவியத்துள் 'இரணியன் கதை'யினைக் கையாளுகிறார்.[3] ஆணவம் அழிவையே தரும் எனும் உலகநெறியினை உணர்த்தும் இக்கதையினைத் தனக்கே உரிய தன்மையில் சொல்லிச் செல்கிறது வில்லுப்பாட்டு.

பிற இரணியன் கதைகளில் இல்லாத விதமாக இரணியன் தன் மைந்தனுக்குக் கொடுக்கும் ஒவ்வொரு தண்டனையும் நிறை

---

1. நாகர்கோவில் கிருஷ்ணன்—சபரிமலை ஐயப்பன். மகேஸ்வரி பிரசுரம், சென்னை-4. (1973) பக் : 70-77.
2. கார்த்திகேயன் (தொகுப்பு) ஸ்ரீமத் பாகவதம், வாசு பிரசுரம் சென்னை-14. (1969) பக. 224:
3. கம்பராமாயணம், யுத்தகாண்டம், இரணியன் வதைப்படலம். வை.மு. கோ. பதிப்பு. (1970) பக். 76-165.

வேற்றப்படும் முன், இரணியன் மனைவி 'கயாது' மைந்தனைக் கண்டு மனத்தை மாற்றிக்கொள்ள வேண்டிப் புலம்புவதாகவும், மைந்தனோ தாயையும் மறுத்துத் தந்தை தரும் தண்டனை ஒவ்வொன்றையும் ஏற்றுக்கொள்வதாகவும் வில்லுப்பாட்டுக் கதையில் காண்கிறோம். இதன்மூலம் தாய் மகன் பாச உணர்வினைக் கதை கேட்போர் நன்குணரும் வகையில் நயம் கொழிக்க எடுத்துச் சொல்கிறது வில்லுப்பாட்டு.

வள்ளியம்மன் கதை

தமிழ் முருகன் வள்ளிக்குறமாதைத் திருமணம் புரிந்துகொள்ளும் வள்ளித் திருமணக் கதைதான் வில்லுப்பாட்டில் வள்ளியம்கன் கதை என வழங்கப்படுகிறது.

கச்சியப்பர் தமது கந்த புராணத்துள் கற்றோர் உள்ளம் களிக்க 'முருகன்-வள்ளி' திருமணத்தைப் பாடிச் செல்லும் முறையினைப் பின்பற்றிச் சிற்றூர் மக்கள் சிந்தை களிக்கும் வண்ணம், தெளிந்த நடையில் எளிய இசையமைப்பில் அமைந்துள்ளது இவ் வில்லுப்பாட்டு.

" வளமான தர்மா புரத்தினில் வாழ்ந்திடும் வண்மையாய்—நமசி
வாயகம் வள்ளிகதை வில்லிற் பாடினேன் தன்மையாய் "[1]

என்று காப்புப் பாடலுள் கூறப்படுவதால் இக்கதை பாடியவர் தருமாபுரம் எனும் ஊரைச் சேர்ந்த நமசிவாயம் என்பவராக இருத்தல் கூடும்.

பார்வதியம்மன் கதை

பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணத்திலே திருவாலவாய்க் காண்டத்துள் காணப்படும் 'வலை வீசின படலம்' தரும்.[2] கதைப் பொருளைக் கொண்டதே 'பார்வதியம்மன் கதை' எனினும் கதை நிகழ்ச்சிகளில் பல்வேறு மாற்றங்களைத் தனக்கேற்றவாறு செய்துகொண்டுள்ளது வில்லுப்பாட்டு.

பரஞ்சோதியார் தரும் வலைவீசின படலத்துக் கதையின் சுருக்கம் வருமாறு :

இறைவன் ஓர் சமயம் தனியிடத்தமர்ந்து இறைவிக்கு மறைப் பொருள் உணர்த்துகையில் அதனை அம்மை மனமொன்றிக் கேட்

1. கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் (பதிப்பு) வள்ளியம்மன் கதை. நாகர் கோவில். பக். 2.
2. பரஞ்சோதி முனிவர். திருவிளையாடல் புராணம். சை. சி. கழக வெளியீடு. (1961). பக்கம் 427-435.

காதது கண்டு சினங்கொண்டு அம்மையை வலைஞர் மகளாகப் பிறக்குமாறு சாபம் தருகிறார். அம்மை வேண்டவும் அரனார் தாமே வலைஞராக வந்து மணந்துகொள்வதாக வாக்களிக்கிறார்.

இவ்விவரம் அறிந்த விநாயகரும் முருகரும் மறைநூல்களை வாரிக் கடலில் எறிகின்றனர். காலம் கருதாமல் இவர்களை வர விடுத்த குற்றத்திற்காக நந்தியம் பெருமானைக் கடலில் சுறாவாகு மாறு விதித்து, வணிகர் வீட்டில் ஊமையாகப் பிறக்குமாறு வடிவேலனைப் பணிக்கிறார்.

பாண்டி நாட்டு வலைஞர் பாக்கத்துச் சேர்ப்பன் ஒருவனின் திருமகளாகப் பிறந்து வளர்ந்து பருவமுறுகிறாள் உமை. நந்தி தேவரும் கடலிலே சுறாவாகித் திரிந்து மீனவர் அனைவருக்கும் தொல்லை தருகிறார். சுறாவின் கொடுமைகளை அடக்க வழியறியாத சேர்ப்பன் அதனைப் பிடித்துத் தருவோருக்குத் தன் மகளையே தருவதாக வாக்களிக்கிறான். இறைவன் வலைஞர் வடிவிலே வந்து சுறவினை வலைவீசிப் பிடித்தருள்கிறார். அம்மையை மணக்கிறார். விண்ணிடை விடைமேற் காட்சி தந்து வலைஞர் தலைவனை வாழ்த்தி, வடிவம் மீண்ட நந்தியுடன் மறைகிறார். உத்திரகோசமங்கை சார்ந்து உமைக்கும் அடியார் அறுபதினாயிரவருக்கும் அருமறை உணர்த்தி மதுரை மீள்கிறார்.

வில்லுப்பாட்டு இக்கதையினைச் சொல்லிச் செல்லும் வகை யினை இனிக் காண்போம்.

மீனவர் தலைவன் அதியரசன் என்பானும் அவன் மனைவி அருணவல்லியும் மகப்பேறு வேண்டித் தவமிருக்கின்றனர்.

சிவபெருமான் தம் திருவிளையாடல்களின் தத்துவப் பொருள் களைக் கடல் நடுவே உள்ளதோர் தனியிடத்தில் அமர்ந்து உமை யம்மைக்கு உணர்த்துகிறார். அப்போது மைந்தன் வடிவேலன் வண்டு வடிவுகொண்டு அம்மையின் திருமுடியில் மறைந்திருந்து அனைத்தையும் கேட்பதனை அறிகிறார் பரமன். தாம் கூறிய தத்து வப் பொருளை ஒளிந்திருந்து கேட்ட குற்றத்திற்காகக் கடலில் மகர மீனாகித் திரியுமாறு மைந்தனுக்கும், அவ்வாறு ஒளித்து வைத் திருந்த குற்றத்திற்காக வலைஞர் மகளாகப் பிறக்குமாறு அம்மைக் கும் சாபம் கொடுக்கிறார் சங்கரனார்.

முருகனாகிய மகர மீன் உமையம்மையாகிய குழந் தையை ஓர் பெட்டகத்தில் தாங்கிவந்து கடலில் கலம் செலுத்திவரும் அதியரசனிடம் சேர்த்துவிட்டுச் சென்றுவிடுகிறது. குழந்தை கண்ட அதியரசன் மகிழ்ந்து தன் மனைவியிடம் கொடுக்க

வும், அன்றுமுதல் வலைஞர் மகளாக வளர்ந்து பருவமுறுகிறாள் அம்மை.

கடலில் திரியும் மகர மீனால் மீனவர்கள் கணக்கற்ற துன்பம் அடைகின்றனர். அவர்களைக் காக்க வேறு வழியின்றிப் போனநிலையில், மகரத்தைப் பிடித்துத் தருவோனுக்குத் தன் மகளையே மணம் செய்து தருவதாக அறிவிக்கிறான் அதியரசன். பெருமான் நந்தியுடன் வலைஞர் வடிவில் வருகின்றார். அதியரசனைக் கண்டு மகளை மணந்த பின் மகரம் பிடித்துத் தருவதாகச் சொல்கிறார். ஆனாலும் நந்தியின் யோசனைப்படி, அலைகடல் மேல் சென்று வலை வீசி மகரத்தைப் பிடித்துவந்து கரை சேர்க்காது நிறுத்திக்கொண்டு மணம் கொள்ளவேண்டி அதியரசனிடம் வருகிறார் பெருமான். பெண்ணைத் தந்தால் மீனைத் தருவேன் என்கிறார். அதியரசனும் ஒப்புகிறான்.

ஆனாலும், ஊர் மக்கள் அனைவரும் இத்திருமணம் நிகழ்தலை விரும்பாமல் மனங்கலங்கி மொழிந்த சொற்களைக் கேட்டுப் புண்பட்ட நெஞ்சினளாகி நஞ்சுண்டு மாள்கிறாள் அருணவல்லியாகிய அன்னை. தன்னாலன்றோ இந்நிலைமை தாய்க்கு நேர்ந்ததெனக் கூறி மகளாகிய மணப்பெண்ணும் அவ்வாறே மடிகின்றாள். செய்தியறிந்த வலைஞர் மாப்பிள்ளையோ, பிணமாயினும் மணப்பேன் எனத் துணிகின்றார். தண்ணீரும் கண்ணீரும் தான் கலந்து மகளைத் தாரைவார்த்துக் கொடுக்கிறான் அதியரசன்.

சீதனங்கள் பலவும் பெற்றுக்கொண்டபின் திருநீறு கொண்டு மணப்பெண்ணை உயிர்பெற்று எழச்செய்கிறார் மணமகனாகிய வலைஞர் பெருமான். நந்தியாம் வலைஞரும் அவ்வாறே திருநீறு கொண்டு அருணவல்லியை உயிர்பெற்று எழச் செய்கின்றார். பின்னர் மகிழ்வு பொங்கிட மணம் நிறைவேறுகிறது. அந்நிலையில் இறைவன், இறைவி, முருகன், நந்தி ஆகியோர் தத்தம் உண்மை உருக்காட்டி யாவருக்கும் அருள் தந்து மறைகின்றனர்.

பரஞ்சோதியார் தரும் கதையுள் உமை, முருகன், நந்தி ஆகியோர் சாபம் பெறுகின்றனர். விநாயகர் விடப்படுகிறார். இந்த நிகழ்ச்சிகளை முற்றிலும் வேறுபட்ட நிலையில் நயமுடன் கூறிச் சென்று விடுகிறது வில்லுப்பாட்டு. இங்கே முருகனே மகரமீன் ஆகிறார். நந்தி சாபம் பெறாமல் சிவனுக்குத் தோழனாகிறார். இதன்பின் வரும் நிகழ்ச்சிகள் யாவும் கற்பனையால் புனையப் பெற்றவையே.

ஏதோ வலைஞர் வடிவில் இறைவன் வந்தார், வலை வீசினார், மணந்தார் என்றில்லாமல் நிகழ்ச்சிகளைப் பாமர மக்களுக்குப்

பெரிதும் இன்பமூட்டும் நோக்குடன் சுவைபெறத் தொகுத்துக் கூறிச் செல்கிறது வில்லுப்பாட்டு.

**மார்க்கண்டன் தவசு (காலசுவாமி கதை)**

சோழநாட்டுத் திருக்கடவூரைச் சேர்ந்த 'மிருகண்டு' முனிவர் 'மருத்துவதி' ஆகியோர் அவ்வூர் ஈசனை நோக்கித் தங்களின் மக ளில்லாக் குறை நீங்கிட நோன்பு இருந்தனர். அவர்தம் நோன் புக்கு இரங்கிய ஈசன், 'தவநெறி ஒழுகும் பதினாறு வயது ஆயுள் கொண்ட பிள்ளை அல்லது அங்க ஈனமும் அறியாமையும் உடைய நூறு வயது ஆயுள் கொண்ட பிள்ளை, இவருள் யார் வேண்டும் எனக் கேட்பீர்' என அவர்களைப் பார்த்துக் கேட்டார். மிருகண்டு முனிவரோ பதினாறு வயது ஆயுள் உடைய பிள்ளையே விரும்பி வேண்டினார். ஈசன் அருள்புரிய மைந்தன் பிறந்தான். நல்ல நெறிப்படி வளர்க்கப்பட்ட அவன் பதினாறு வயது அடையும் நிலையில், மனம் கலங்கிய பெற்றோர் அவனுக்குச் செல்லத் திருமணம் நிகழ்த்திப் பார்க்க விரும்பினர். உண்மை உணர்ந்த மைந்தன் தன் ஆயுள் நீடிக்க வேண்டித் திருக்கடவூர் ஈசனையே பணிந்து தவஞ் செய்தான். உரிய நேரம்வர யமதூதர் உயிர் கவர வந்தனர். அவர்களை மறுத்துரைத்து அனுப்பிவைத்தான் அம்மைந்தன்.

இதுகேட்ட எமதருமன், தானே 'பாசத்'துடன் உயிர் கவர வந்தான். தவமைந்தனோ சிவனை இறுகப் பிடித்தான். பரமன் வெளிப்போந்து காலனைக்காய்ந்து காலால் உதைத்துவிடவே, யமனும் தூதரும் பாதாளத்தில் வீழ்ந்து இறந்தனர். இதனால் உலகில் உயிர்த்தொகை பெருகலாயிற்று. பூதேவி பாரம்தாங்கா மல் பெருமானை வேண்ட அவரும் மனம் இரங்கி மீண்டும் யமனைப் பிறவி செய்து தந்தார். தொடர்ந்து உயிர்கவரும் தொழில்புரியத் தயங்கிய எமனுக்குத் துணையாகச் சித்திரபுத்திரர் அனுப்பப்பட் டார். அதுமுதற்கொண்டு உலகம் மீண்டும் முன்போலவே செயல் படுவதாயிற்று. 'மார்க்கண்டன் தவசு' கூறும் கதை இதுதான்.

'காலசுவாமி கதை' எனவும் அழைக்கப்படும் இவ்வில்லுப்பாட் டிலே, சுவையான பகுதிகள் பல காணப்படுகின்றன. 'மருத்துவதி' யின் திருவயிற்றிலே மார்க்கண்டன் கருத்தரித்த காலையில், அக்கரு முழுமையான மகவாகும் வரையிலான வளர்ச்சி நிலைகளைப் படிப் படியாகத் தகுந்த உவமைகளைத் தந்து விளக்குதல் அழகுற அமைந் துள்ளது.[1] மார்க்கண்டன் சிவபூசை செய்து இறைவனைப் பாடித்

1. இப்பகுதி வேறுபல வில்லுப்பாட்டுகளிலும் ஒரே தன்மையில் காணப் படுவதாம்.

துதிக்கின்ற முறையும், பல்வேறு பாவங்களைச் செய்தோர் அவரவர் வினைக்கேற்றவாறு தண்டனை பெறுதலும் சுவையோடு சொல்லப் படுகின்றன.

களங்கமில்லா உள்ளத்தோடும், கலக்கமில்லா உறுதியோடும் கடவுளின் கருணை மீதில் நம்பிக்கை வைப்போரால் காலனையும் வெல்லுதல் கூடும் என்னும் கருத்தை வலியுறுத்துவதே இக்'கால சுவாமி கதை' எனலாம்.

அரிச்சந்திரன் கதை

பாராளும் உரிமையும் பல்வகைப் போகமும் இழந்தும், தாரத் தையும் தனயனையும் விற்றுப் பின்பு தன்னையே விற்கும் நிலைநேர்ந் தும், சுடலை காத்துத் துன்பத்தின் எல்லையே கண்டபோதும், கொண்ட கொள்கையில் தவறாமலும், கொடுத்த வாக்கினில் வழுவாமலும் நின்று வெற்றி கண்ட வாய்மை வேந்தனாகிய அரிச் சந்திரன் கதை வில்லுப்பாட்டிற்கு ஏற்றதோர் கதையே எனலாம்.

'தேவி பாகவத'த்துள் காணப்படும் இம் மாமன்னன் கதை யினைத்[1] தமிழில் நெல்லூர் வீரனென்னும் ஆசுகவிராயர் தந்துள் ளார். பொதுவாக வில்லுப்பாட்டுக் கதைகள் யாவுமே அவல நிகழ்ச்சிகளை அதிக அளவில் கொண்டுள்ள நிலையில், அரிச்சந்திர மன்னனின் வாழ்க்கையில் அடுத்தடுத்துத் தொடர்ந்த அவல நிகழ்ச்சிகள் கதை கேட்போருக்கு இரக்க உணர்வினைப் பெரிதும் தருமாதலால் இக்கதை வில்லுப்பாட்டிலே விரும்பிப் பாடப்பெற் றது, கேட்கப்பெற்றது எனலாம்.

கிருஷ்ணசுவாமிகதை

மக்களின் வாழ்க்கையிலே நாளும் கலந்து புராணங்கள் பெருகி வளர்ந்த நிலையில் "இந்தியச் சமய உணர்வுப் போக்கின் ஆழ்ந்த ஆற்றலுடைய அறிகுறியாகப் பிருந்தாவனம் மாறியது' என்பர்.[2] 'தேவகி மைந்தனாய் வந்து யசோதை வாரி அணைக்க வளர்ந்த கண்ணன், பிருந்தாவனத்திலே புரிந்த விளையாடல்கள் அனைத்தும் பாகவதத்தில் புகழ்ந்து பேசப்படும். தன் தாய் மாமனான கம்சனை வதைத்த கதையும் அங்கே காணப்படுகின்றது. இந்தக் கம்சன் வதையைத்தான் 'கிருஷ்ண சுவாமி கதை' என்னும் வில்லுப்பாட்டு விளக்குகிறது.

1. அரு. இராமநாதன். (பதிப்பு). தேவி பாகவதம். 2-ஆம் பாகம். பிரேமா பிரசுரம். சென்னை-23. (.969) பக்: 283-316.

2. டாக்டர் தா. வே. வீராசாமி புராணத்தில் புராணம் (கட்டுரை) வெற் றியின் இருமுகம். மெர்க்குரி புத்தகக் கம்பெனி கோவை-1(1969)பக்:66

"சீலமாய் மாமன் கஞ்சன் செயலினை அழித்த காதை"[1] எனக் குறிப்பிடுகிறது இப்பாட்டிலே வரும் காப்பு விருத்தம். கம்சனைக் கஞ்சன் என்றும் கஞ்சராஜன் என்றும் நாட்டுப்புற மக்களின் மொழி நடைப்படியே குறிப்பிடுகிறது இப்பாட்டு. கண்ணனின் விளையாடல்களைக் கேட்பதில் மக்கள் கொண்ட ஆர்வத்தின் அடிப்படையிலேயே இக்கதை வில்லுப்பாட்டாக வடிவெடுத்திருத்தல் வேண்டும் எனலாம்.

பெருமாள்சுவாமி கதை

திருவரங்கத்தில் பள்ளி கொண்ட பெருமாள் திருவனந்தபுரம் வந்து பள்ளி கொண்டதற்கான காரணத்தை விளக்கிச் சொல்கிறது 'பெருமாள் சுவாமி கதை' எனும் இவ்வில்லுப்பாட்டு. திருவரங்கர் திருவானைக்கா முதல் பல ஊர்களும் கடந்து வரும் திறம் மிகவும் சுவையுறக் கூறப்படுகின்றது. இது கற்பனைப் புனைவான கதை என்றே தோன்றுகின்றது.

எனினும், இவ்வில்லுப்பாட்டின் பல்வேறு பகுதிகள் நயமும் அழகும் பொருந்த அமைந்துள்ளன. திருவரங்கர் தென்திசைப் பதி எழுந்து வரும் வழியில் உள்ள முக்கியமான பதிகளாகத் திருவானைக்கா, திருவையாறு, உறையூர், திருவாரூர், சிதம்பரம், மதுரை, அவனியாபுரம், சீவலிப்புத்தூர், திருக்குற்றாலம், திருநெல்வேலி, திருக்களந்தை, திருக்குறுங்குடி, வள்ளியூர், முப்பந்தல், தோவாளை, சுசீந்தரம், கோட்டாறு, குழித்துறை, நெய்யாற்றின் கரை ஆகியனவும் பிறவும் வரிசையாகக் கூறப்பட்டிருத்தல் சிறப்பாக உள்ளது. ஒவ்வொரு ஊரின் வளமும் சிறப்பும் நன்கு சொல்லப்படுகின்றன. ஆங்காங்கே அமர்ந்தருளும் தெய்வங்களிடம் விடைபெற்று மீள்கின்றார் அரங்கர். அவ்வப்போது தாம் தென்திசை ஏகுவதன் காரணத்தை எடுத்து மொழிகின்றார்.

திருவரங்கத்திலே எம்பெருமாள் எழுந்தருளியிருக்கையில் ஆங்கு வாழ்ந்த வேதியர்கள் தமக்குள் ஒற்றுமையின்றிப் போனாராக, முன்முறை செய்ய வேண்டிய வேதியன் ஒருவனின் பூசை முறை தவிர்க்கப்படுகிறது. இதனை அரசரும் கவனிக்காது போகவே பூசைமுறையினை இழந்த வேதியன் அரங்கரை வேண்டிக் குறையிரக்கிறான். அவனுடைய நிலைக்கு இரங்கிய அரங்கர், அவனுக்கு அருள்பாலிக்கும் பொருட்டாகவே தென்பதி நோக்கிஎழுந்தருளத் தீர்மானிக்கிறார். தென்பதியில் அவ்வேதியனின் பூசையையே தாம் கொள்ளப் போவதாகவும் அதனால் அவனையும் தம்முடன் தென்பதி வருமாறும் பணிக்கின்றார்.

---

1. கு.ஆறுமுகப் பெருமாள் நாடார் (பதிப்பு) கிருஷ்ண சுவாமிகதை.சங்கு நூலகம் நெல்லை. பக்: 11

அரங்கர் நாஞ்சில் நாடு வரும்போது அந்நாட்டு வளமும், நாட்டவரின் பண்பாடும் வெகுவாக வியந்துரைக்கப்படுகின்றன. பின்னர், அடுத்துள்ள மலைநாட்டின் பீடும் பெருமையும் பெருமளவில் பேசப்படுகின்றன.

இறுதியில் திருவனந்தை வந்தடைந்த அரங்கரையும் வேதியனையும் தேசமன்னர் கண்டு விவரம் யாவும் அறிகின்றனர். அரங்கருக்கு ஓர் திருக்கோயிலைப் பெருமகிழ்வுடன் உரிய முறையில் அமைக்கின்றனர். ஆங்கே, அரங்கர் அவ்வேதியன் முன் நிற்கப் பூசைகொண்டு, அனந்தபத்மநாதராக அமர்ந்தருளுகிறார்.

மாகாளியம்மன் கதை

சோழ நாட்டில் புட்டாபுரம் எனும் திருத்தலத்தில் துர்க்கா பரமேஸ்வரி என்னும் மாகாளியம்மன் பூதப்பரிவாரங்கள் சூழத் திருக்கோயில் கொண்டு அருள்புரிகின்றாள்.

அந்நாட்டிலுள்ள 'ஏருடி' மலை அருகே அமைந்த 'ஏலாகினி' எனும் சுனையில் எழுவர் கன்னியர் நாள்தோறும் நீராடிச் செல்லுதல் வழக்கம். ஓர்நாள் நீராடவந்த அக்கன்னியரை விரும்பி வித்யாதர முனிவர் உபாயமாய் மருவிட வலங்கையர் என்ற பெயரில் ஏழு குழந்தைகள் தோன்றுகின்றனர். இவர்கள் அம் முனிவரால் மேற்கூறப்பெற்ற மாகாளியிடம் ஒப்படைக்கப்படுகின்றனர். அவர்களும் வளர்ந்து கலையிலும் வீரத்திலும் நிலை சிறந்து விளங்குகின்றனர்.

அந்நாளில் பரமன் வாழும் கயிலையைச் சுத்தி செய்து வரும் சண்டத்தி என்பாளுக்குப் பிறந்தவனான தாருகன் முதலானோர் தேவர்கள் வருந்தும் படியாகக் கொடுமைகள் புரிகின்றனர். மாகாளியின் துணையால் அவர்களை அழிக்கப் பரமன் எண்ணுகிறார் அதன்படியே வலங்கையர் மக்களின் துணையுடன் தாருகன் முதலான அனைவரும் மாகாளியம்மனால் அழிவுறுகின்றனர்.

இந்தக் கதை புராணத் தொடர்புடையது போன்றே அமைந்திருப்பினும் வலங்கையர் என்பாரது தோற்றம் குறித்து எழுந்த கதையாக இருப்பது கொண்டு இதனைச் சமுதாயப் பாங்கான கதைகளுள் ஒன்றாகவும் வகைப்படுத்துவர்.[1]

தாருகன் என்னும் அரக்கன் பரமேஸ்வரியின் வீரத்திருவுருவினைக் கொண்ட மாகாளியம்மனால் கொன்றொழிக்கப்படும்

1. M. Arunachalam, Ballad poetry, Gandhi Vidyalayam, Tanjavur dist. (1976) p.180

நிகழ்ச்சியே இக்கதையில் குறிக்கப்படும் பொருளாகி நிற்பதும் கருதத் தக்கதாகவே உள்ளது. "தாருகன் பேருரங்கிழித்த பெண்ணும் அல்லள்"[1] என்னும் சிலப்பதிகார அடியும் இங்கே நினைவுகூரத்தக்கதாம்.

இதுவரையிலும் எடுத்துக் கூறப்பெற்ற புராணத் தொடர் பான வில்லுப்பாட்டுகளே யன்றி மேலும் பலவும் இவ்வகையில் காணப்படுகின்றன. அனைத்துக் கதைகளும் காலத்திற் கேற்ற வாறும், மக்களின் புராணம் கேட்கும் ஆர்வத்திற்கும் பக்தி உணர் வுக்கும் பொருந்தும் படியாகவும் புலவர்களால் உருவாக்கிக்கொள் ளப்பட்டன என்றே கருதலாம். பொதுவாகப் புராணக்கதைகள் யாவும், மறமும் ஆணவமும் மடிந்து ஒழிய, அறமே வெற்றி பெற்று நிலைத்த வாழ்வு பெறும் என்ற அடிப்படை உலகநெறி யினையே உணர்த்தி மக்களைச் செம்மை நெறியில் செலுத்துவன வாக அமைகின்றன. மக்களின் மனமாசுகளை நீக்கி அவர்களை நல் வழிபற்றி ஒழுகுமாறு செய்யத் துணை நிற்கின்றன. இதனாலேயே "புராணங்கள் மக்கள் அகவாழ்வில் நலமூட்டும்நற்செல்வ இலக்கி யங்களாக விளங்குகின்றன" என்பர்.[2]

*இதிகாசம் தழுவிய கதைகள்*

இராமாயண, மகாபாரத இதிகாசங்கள், ஏட்டில் எழுதப் பெறுவதற்குப் பலகாலம் முன்பிருந்தே மக்களிடையே வாய் மொழிக் கதைகளாக வழங்கி வந்தவை. வால்மீகி தமது காவி யத்தை எழுதுமுன் நாரதரே வால்மீகிக்கு இராமன் சரித்திரச் சுருக்கத்தை அறிவிக்கிறார்.[3] கம்பர் இராமகதையைத் தமிழில் தருமுன்பே சங்க இலக்கியங்கள், காப்பியங்கள் முதலானவற்றில் இராமாயணக் கதைத் தொடர்பான நிகழ்ச்சிகள் இடம்பெறு கின்றன.[4] அவ்வாறே பாரதக் கதைத் தொடர்பான குறிப்பு களும் காணப்படுகின்றன.[5]

---

1. சிலப்பதிகாம் (வழக்குரை கதை) உ.வே. சா. பதிப்பு. (1978) பக்: 478 வரி 39.40
2. டாக்டர் தா. வே. வீராசாமி புராணத்தில் புராணம் (கட்டுரை) வெற்றியின் இருமுகம். மெர்க்குரி புத்தகக் கம்பெனி. கோவை-1 (1969) பக், 81
3. வால்மீகி ராமாயண வசனம். அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் மொழி பெயர்ப்பு வி.என்.தேவநாதன் பதிப்பு. சென்னை (1971) பக்:5
4. வால்மீகி இராமாயணமும் தமிழக மக்களிடையே வழங்கிய இராமனின் கதையுமே கம்பனின் காவிய ஆக்கத்திற்கு அடிப்படையாக அமைந்தன என்பர். டாக்டர். ச.வே.சுப்பிரமணியன். கம்பன் கற்பனை. தமிழ்ப் பதிப்பகம். சென்னை.20.(1978)பக்:4
5. சான்றுக, பாரதப்போரில் இருபடைக்கும் பெருஞ்சோறு வழங்கிய சேரனின் செய்தி. புறநானூறு. 2 வரி: 13-16. உ.வே.சா. பதிப்பு சென்னை 1971 பக்:4

''பக்தி இலக்கியம் எழுந்த காலத்தில், திருமாலின் அவதாரங் களைப் பற்றிய பாரதம் இராமாயணம் ஆகிய இதிகாச நூல்கள் தமிழ் நாட்டில் செல்வாக்கான இடம் பெற்றன'' என்பர்.[1] கற்ற வர்கள் இதிகாசக் கதைகளை அறிந்து இன்புறுவதில் காட்டிய ஆர்வம் போலவே பாமரமக்களும் அவைகளைக் கேட்டு மகிழ்வதில் ஆர்வம் கொண்டிருத்தல் வேண்டும். இதன் காரணமாகவே பாமர மக்களிடையே ஊர்த்தெய்வ வரலாறுகளை இசையோடு எடுத்துச் சொல்லும் வில்லுப்பாட்டு, இதிகாசக் கதைப் பகுதிகளை யும் தனக்குரிய முறையில் கதைகளாக்கிக் கொண்டது எனலாம். அவ்வாறாக அமைந்தவைகளில் 'சீதாக் கல்யாணம்', 'ஸ்ரீராமர் அஸ்வ மேதயாகம்' ஆகிய இராமாயணக் கதைப்பகுதிகளும், 'கீசகன் சண்டை', 'உத்திரகுமாரன் சண்டை' ஆகிய மகாபாரதக் கதைப் பகுதிகளும் குறிப்பிடத் தகுந்தவை.

*இராமாயணக் கதைகள்*

'சீதாக் கல்யாணம்' : இராமாயணக் கதையின் பாலகாண்டப் பகுதியே வில்லுப்பாட்டில் 'சீதாக்கல்யாணம்' என்ற கதையாகப் பாடப்படுகிறது. எனினும் வில்லுப்பாட்டில் வழங்கி வரும் கதை, வால்மீகியின் கதையுடனும் கம்பனின் கதையுடனும் ஒப்பிட்டுக் காணும்போது பல இடங்களில் மாறுதலான போக் கினைக் கொண்டு அமைந்துள்ளது. சான்றுக்கு ஒன்று காணலாம்:

இராமன் சிவதனுசை முறித்துச் சீதையை மணக்கும் முன் அவனும் சீதையும் ஒருவருக்கொருவர் சந்திப்பதாக வால்மீகி குறிப்பிடவில்லை. கம்பனோ 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்று கூறி அழகியதோர் காதல் காட்சியைப் படைத்துவிடுகிறான்.[2] வில்லுப்பாட்டு, இப்பகுதியில் பெரிதும் வேறுபட்ட விதமான கதைப் போக்கினைக் கொண்டுள்ளது. அதனைக் காணலாம்.

மிதிலையின் வடபுறம் நந்தவனம், அதிலோர் நாவல் மர நிழலில் முனிவர், இராமன், இலக்குவன் மூவரும் 'அசதியாகப் படுத்திருக்கும்' வேளையில், வனம் காணவும் பந்தாடவும் விரும்பிய சீதை தந்தையின் அனுமதியை அரிதில் பெற்றுத் தோழியருடன்

1. டாக்டர் மு.வரதராசனார். தமிழ் இலக்கிய வரலாறு. காப்பியங்கள் சாகித்திய அக்காதெமி. புதுதில்லி (1972) பக். 141.

2. கம்பராமாயணம். பாலகாண்டம். மிதிலைக் காட்சிப் படலம் பாடல் 35 வை.மு. கோ. பதிப்பு சென்னை. 1973. பக். 449.

அதே நந்தவனம் வருகிறாள். ஆர்வமுடன் சீதை அடித்த 'ஐவர்ணப் பந்து' வான்வழி எழுந்து நாவல் மரத்தின் கீழே துயிலும் 'இராமனையும் பணிவது போல்' அவன் காலடியில் விழுகிறது. பந்தின் அழகினைக் கண் விழித்துக் கண்ட காகுத்தன் உள்ளத்தில் பல்வேறு எண்ணங்கள். பந்துவந்த திசையில் நோக்க ஆங்கே அழகின் உருவான சீதையைக் கண்டு சிந்தை மயங்குகிறான். முனிவனும் தம்பியும் துயில் கலையாதவாறு அப்பந்தை அதே திசையில் இடதுகால் பெருவிரலால் தட்டவும் அதுசென்று சீதையின் இடதுதோளில் விழவே அதனால் மயங்கிச் சாய்ந்த மங்கையைக் கண்டு மருண்ட தோழியர் அவளை விரைந்து அரண் மனைக்கு எடுத்துச் சென்று விடுகின்றனர். இராமனின் நிலை ஒரு தலைக் காமமாகவே ஆகிநிற்கிறது.

விழித்தெழுந்த முனிவர்,குமாரர் இருவருடன் நகரத்தின் வீதி கள் பலகடந்து நங்கையின் கன்னிமாடத்து அருகே வருகிறார்கள். 'சீதை மணவாளன் வாரானென்று' பறவைகள் பாடுகின்றன. அவ்வொலியினைக் கேட்ட சீதை தெருவை நோக்கவும், எழிலின் எல்லையாய்ச் செல்லும் இராமனைக் கண்டு அவன்பால் இதயத்தை இழக்கிறாள். இராமனோ அவளைக் காணாமலே சென்று விடுகிறான். சீதையின் நிலையும் இங்கே ஒருதலைக் காமமாகவே ஆகி நிற்கிறது.

எதிர் எதிர் நோக்கி இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தும் நிலை இங்கே இல்லை.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில், சுட்டி ஒருவர் பெயர் கொண்ட கைக்கிளைக்குச் சான்றாகப் பின்வரும் பாடல்பகுதியை நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டியுள்ளார்.

> "ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன்
> வேள்வி போற்றிய விராம னவனொடு
> மிதிலை மூதூர் எய்திய ஞான்றே
> மதியுடம்பட்ட மடக்கட் சீதை
> கடுவிசை வில்நா ணிடியொலி கேளாக்
> கேட்ட பாம்பின் வாட்டமெய்தித்
> துயிலெழுந்து மயங்கின ளாதாஅன் மயிலென
> மகிழ் ............... ...... ... ......"[1]

மேலும், இம்மேற்கோள் கம்பனுக்கு முன்னர் தமிழில் எழுதப் பட்டிருந்த ஓர் இராமசரிதப் பகுதியே எனக் கருதுவர்.[2] இவை

1. தொல்காப்பியர். பொருள். நச்சினார்க்கினியம். அகத்திணையியல் சை.சி. கழகவெளியீடு. 1970 பக்.125.
2. எஸ்.வையாபுரிப்பிள்ளை. காவியகாலம். தமிழ்ப்புத்தகாலயம். சென்னை.14. 1962 பக்:83.

களை நோக்க, வில்லுப்பாட்டு விளக்கிச் செல்வது போல இராமனும் சீதையும் ஒரே நேரத்தில் வில் முறிக்கப்படும் முன் எதிர்எதிர் கண்டு கருத்தால் ஒருப்படாமலே சென்றதாகச் சொல்லும் கதைப் போக்கும் அக்காலத்தில் இருந்திருத்தல் கூடும் எனக் கருதலாம்.

இவ்வாறே மேலும் பல மாறுதல்களைப் பெற்று விளங்குகிறது 'சீதாக் கல்யாணம்' வில்லுப்பாட்டு. ஆயினும், எளிய நிலை மக்களுக்கு இன்பம் தரத்தக்க வகையிலேயே அவை அமைந் துள்ளன. வால்மீகியை நோக்கக் கம்பர் செய்துள்ள மாறுதல்களைப் பற்றிக் கூறுகையில் ''வான்மீகத்தோடு கம்பராமாயணத்தை ஒப்பிட்டுக் காணும்போது கதையின் அடிச்சட்டம் மாறவில்லை. கதைப் போக்கில் பல மாற்றங்களைச் செய்துள்ளார்......இவற்றை எல்லாம் ஒன்றுகத் தொகுத்துக் காணும்போது காப்பிய அமைப்பு சீராகவும் மாந்தர் தம் பெருமை உயரவும் தமிழ்மரபு நிலைகாக் கவும் இவை உதவுகின்றன'' என்பர்.[1] வில்லுப்பாட்டுக் கதையில் காணும் மாறுதல்களும் அந்நிலையிலேயே அமைந்தவை எனலாம். மேலும் வாய்மொழி இலக்கியங்களின் உயிரோட்டமே அவை காலந்தோறும் அடையும் மாறுதல்கள்தான் எனக் கருதுவர்.[2] ஆதலின் அந்நிலையிலும் அம்மாறுதல்கள் வில்லுப்பாட்டில் அமைந் துள்ளன எனலாம்.

எனினும் பிற இதிகாசத்தொடர்பான வில்லுப்பாட்டுகள் இலக்கியங்களில் காணப்படும் கதைப்போக்கினை அவ்வாறே பின் பற்றிச் செல்வதனைக் காண்கிறோம்.

*ஸ்ரீராமர் அஸ்வமேத யாகம் :* துணிவெளுக்கும் 'ஏகாலி' ஒருவன் சொல்லிய பழிச்சொற்களைக் கேட்டு உள்ளம் உடைந்த இராமன், சீதை கருவுற்றிருக்கும் நிலையினையும் கருதிப்பாராத வனுகிக் காட்டில் விட்டுவரச்செய்தலும், தனித்துத் துயர்உற்ற அவளுக்குத் தவமுனிவன் வால்மீகி தஞ்சமளித்தலும், சீதையின் புதல்வராக இருவர் வளர்ந்துவரும் நாளில், இராமன் 'அசுவமேத யாகம்' செய்து அவனியெங்கும் சுற்றிவருமாறு அனுப்பி வைத்த யாகப்புரவியினை சீதையின் குமாரர்கள் கைப்பற்றிக் கொள்ளு தலும், அதன் விளைவாக ஏற்படும் போர்களில் சிறுவர்கள்

1. டாக்டர். தா. வே. வீராசாமி. இலக்கியக் கொள்கை கம்பராமாயணம். தமிழ் இலக்கியக் கொள்கை தொகுதி 1. உலகத் தமிழாராய்ச்சி நிறு வனம். சென்னை. 1975. பக் : 237.
2. Tristram P. Cottin 2. The Heritage of folklore 'A Time of Harvest.' vora & Co. Publishers. Bombay.2, 1966. Page. 10.

இராமனையும் எதிர்த்துநிற்கும் நிலை ஏற்படுதலும், சீதை பற்றியும் சிறுவர்கள் பற்றியும் இராமன் தெரிந்து கொண்டு துயருறுதலும், மீண்டும் ஓர் 'அக்கினிப் பிரவேசத்தின்' பின் சீதை இராமனைச் சேர்தலும் ஆகிய உத்திரகாண்டத்துக் கதை நிகழ்ச்சிகளைக் கொண்டு அமைந்து காணப்படுவதே 'ஸ்ரீராமர் அஸ்வமேத யாகம்' எனப்படும் வில்லுப்பாட்டு. எளிமையும் இனிமையும் இழையோடு மாறு விளங்குகிறது இக்கதை.

*பாரதக்கதைகள்*

*கீசகன் சண்டை :* பாரதப் பெருங்கதையிலே, விராடபருவத்துள் அமைந்து காணப்படும் நாடுகரந்துறை சருக்கம், மற்போர்ச் சருக்கம், கீசகன் வதைச் சருக்கம் ஆகியவற்றின் கதை நிகழ்ச்சிகள் அடங்கியதே 'கீசகன் சண்டை' என்னும் வில்லுப் பாட்டு. பாண்டவர் பன்னிரண்டு ஆண்டு வனவாசம் கழிந்தபின், ஓராண்டு கரந்துறை வாழ்வு மேற்கொள்ள வேண்டி வெவ்வேறு கோலமும் பெயரும்தாங்கி விராடனின் மச்ச நாட்டிலே மறைந்து வாழ்தலும், அந்நாளில் வேற்று நாட்டிலிருந்து வந்து, மற்போரில் தனக்கு நிகர் எவருமில்லை எனத் தருக்கிய மாமல்லன் ஒருவனை, மாற்றுருவத்திருந்த வீமன் வென்றழித்தலும், விராடன் தேவியான சுதேட்டிணையிடம் பணிப்பெண்ணாக இருந்த பாஞ்சாலியின் பால் காமுற்ற கீசகனை வீமன் வஞ்சகவேடம் தாங்கிக் கொன்றொழித்தலும், கீசகனின் ஈமஅழலில் இடுவதெனப் பாஞ்சாலியை உபகீசகர் பற்றிக்கொண்டு செல்வதறிந்த வீமன் அவர்களையும் கொன்றழித்தலும் ஆகிய செய்திகள் 'கீசகன் சண்டையாக' வில்லுப்பாட்டில் பாடப்பெறுகின்றன.

*உத்திரகுமாரன்சண்டை :* விராடபருவத்தின் எஞ்சிய சருக்கங்களாகிய நிரை மீட்சிச் சருக்கம், வெளிப்பாட்டுச்சருக்கம் ஆகியவற்றின் நிகழ்ச்சிகளைக் கொண்டு அமைந்துள்ளதே 'உத்திர குமாரன் சண்டை' எனும் வில்லுப்பாட்டு. பாண்டவர்தம் கரந்துறை வாழ்க்கையின் இறுதிநிலையில், அவர்கள் விராட நகரத்தில் வாழ்ந்துவரலாம் என ஊகித்து உணர்ந்த துரியோதனன் படை கொண்டு சென்று விராடன் நாட்டுப் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்ற நிலையில் துரியோதனின் படைத்தலைவனாகிய திரிகர்த்தன், அருச்சுனன் அல்லாத பிறரால் வெல்லப்படுதலும், விராடன் மகனான உத்திரனுக்குச் சாரதியாகச் சென்ற பேடிவடிவம் கொண்ட அருச்சுனன் துரியோதனையும் கர்ணனையும் பிறரையும் வெற்றிகொள்ளுதலும், அதற்கு முந்திய நாளே கரந்துறை வாழ்க்கைக்குரிய காலக்கெடு முடிவடைந்துவிட்ட நிலையில் பாண்டவர்

உண்மை உருக்கொண்டு வெளிப்படுதலும், யாவும் அறிந்து விராடன் வியந்து மகிழ்தலும், உத்திரன் தன் தங்கை உத்திரையை அருச்சுனனுக்கு உரியவளாக்க உள்ளம் கொள்ளுதலும் அருச்சுனன் அதனை மறுத்துத் தன் மகன் அபிமன்யுவுக்கு அவளை மணம் செய்வித்தலும் ஆகிய செய்திகளைக் கூறிச் செல்லுகிறது 'உத்திர குமாரன் சண்டை' வில்லுப்பாட்டு.

மேலும், அருச்சுனன் கர்ணனை வெல்லும் கர்ணபருவத்துக் கதையினைக் 'கர்ண மகராசன் சண்டை' என்னும் கதையாக வில்லுப்பாட்டில் பாடப்பெறுவதையும் அறிகிறோம். இராமாயணக்கதை முழுவதுமே வில்லுப்பாட்டில் அமைந்துள்ளதாகவும் அறிகிறோம்,

இதிகாசத் தொடர்பான கதைகள் இவ்வாறெல்லாம் வில்லுப் பாட்டில் இடம் பெற்றிருந்தாலும், ஊர்த்தெய்வங்களின் வரலாறுகளைப் பாடும் அளவுக்கு இக்கதைகள் பாடப்பெறுவதில்லை என்றே தெரிகிறது. ஸ்ரீராமர் அஸ்வமேதயாகக் கதையின் இறுதியில், ஊர்த்தெய்வமான 'கருப்பன்' பிறப்பு வரலாற்றை இராமாயணக் கதையுடன் தொடர்புடையதாகக் கற்பனை செய்துவிடுகின்ற நிலையும் அமைந்துள்ளது. கதையின் இறுதியில், இராமனின் விருப்பப்படி சீதை அக்கினிப் பிரவேசம் செய்கையில் இளையகுமாரன் தீயில் மறைந்து விடுவதாகவும், தம்பியை இழந்த மூத்த குமாரனனின் துயரம் தீருமாறு வால்மீகி மீண்டும் அம்மைந்தனைத் தன் மந்திர வலிமையால் தோன்றச் செய்வதாகவும், அவன் கரியதோற்றத்தில் காணப்படவே அவனுக்குக் ''கருப்பசாமி என்று சொல்லிக் கார் வண்ணன் பெயர் கொடுத்து, ஆக்கவரம் அழிக்கவரம் அத்தனையும் தான் கொடுத்து, பூலோகம் போவாயென்று புகழுடனே வரங் கொடுத்தார்'' என்று முடிகிறதும் காண்கின்றோம்.

### கொடுந்தெய்வக் கதைகள்

மக்கள் பேரச்சத்துடன் வழிபடும் சுடலைமாடன், இசக்கியம்மன் போன்ற தெய்வங்களின் வரலாற்றைப் பாடும் கதைகளைக் கொடுந்தெய்வக் கதைகள் என்று கூறலாம். சுடலைத் தெய்வம் என்றும் மயானத் தெய்வம் என்றும் அழைக்கப்படும் மாடன், கொடுமைகளுக்கு அஞ்சாத துடியான தெய்வம். நீலி எனப் பெயர்பெறும் இசக்கியம்மனும் அவ்வாறே கொடுமைகளுக்குப் பெயர்பெற்றதாகக் கருதப்படும் தெய்வம். மாடன், சிவனுக்கும் பார்வதிக்கும் மைந்தன் என்று காட்டப்பட்டாலும் கைலாயத்தில் வாழமுடியாத கொடுங்குணங்கள் பெற்றவனுகக் காணப்படவே, பூலோகத்திற்கே அனுப்பி வைக்கப்படுகிறான். சிவலோகப்

பிறப்பு இவனுக்குக் கற்பிக்கப்பட்டபோதிலும் புராணக்கதைத் தொடர்புடைய பிற தெய்வங்களினின்றும் பெரிதும் வேறுபட்டுப் பயங்கரமான பலிகளைப் பெறும் தெய்வமாக விளங்குகின்றான்.

அதுபோலவே, சமுதாயப் பாங்குடைய கதைபோலும் தன்மையில் தோன்றிடினும் நீலிகதை பிற சமுதாயப் பாங்கான கதைகளுடன் ஒப்பிடுகையில் பெரிதும் வேறுப்பட்டுக் காணப்படுகிறது. பெரிதும் அஞ்சத்தக்கவளாகப் பல்வேறு இலக்கியங்களிலும் பேசப்படும் பழையனூர் நீலி, கதைத் தலைவனின் மனைவியாகவே கருதப்படுவாள்.[1] ஆனால், வில்லுப்பாட்டுகள் அவளைக் கதைத் தலைவனின் ஆசை நாயகியாக, கணிகையாகவே காட்டுகின்றன. இது மிகப்பெரும் வேறுபாடாக அமைந்துள்ளது.

இவ்வாறான நிலைமைகளில் இத்தெய்வங்களின் கதைகளைப் பிறவகையான கதைகளுடன் சேர்த்துக் காண்பதினும் தனித்ததோர் வகைப்படுத்திக் காணுதலே பொருந்தும் எனலாம்.

சுடலைமாடன் கதை

தூண்டப்பெற்ற விளக்கின் சுடரிலிருந்து வீழும் எண்ணெய்த் துளிகளைத் தன் முந்தானையில் ஏந்துகிறாள் பார்வதி. சிவனின் திருவருள் விருப்பத்திற்கிணங்க அவை ஒன்று திரண்டு சுடலைமாடனாக உருவெடுக்கின்றன. தொட்டில் பிள்ளையாக இருக்கையிலேயே மாடன் சுடுகாட்டுப் பிணம் தின்பதில் விருப்புக் கொள்கிறான். இது கண்ட சிவனும் பார்வதியும் இவனைப் பூலோகம் அனுப்ப விரும்பி அவனுக்குத் துணையாக முன்பு படைத்த முறைப்படியே சுடலைமாடத்தி என்னும் பெண்ணையும் படைத்துக் கொடுக்கிறார்கள். அவன் விரும்பியவாறு கயிலாயத்திலேயே வில்லோடும் முரசோடும் அவனுக்கு ஊட்டுப் போட்டுக் கொடுக்கிறார்கள். மாடனும் மாடத்தியுமாக மண்ணுலகம் வருகின்றனர். கூடுவிட்டுக் கூடு பாய்தல் போலும் மந்திரங்களில் வல்ல இவன் யாவரையும் அஞ்சி நடுங்க வைக்கும் கொடுஞ் செயல்கள் புரிகின்றான்.

பகவதியம்மை அருளுடன், தொண்டுகிழவன் வடிவிலே மலையாளம் செல்கிறான். மாபெரும் மந்திரவாதியான காளிப் புலையனின் மகளை அவனது காப்பமைந்த மாளிகையுள்ளே பல்லி வடிவில் சென்று கற்பழிக்கிறான். அப்புலையனோ தன் மந்திர வலிமையால் இவனை வசப்படுத்திச் சிமிழில் அடைத்திட, அதனை உடைத்து வெளியேறுகிறான் சுடலை. சூலியான புலையன் மகளைத்

1. இவ்வாறு கொண்டே நீலிகதையினைக் கண்ணகி கதையுடன் ஒப்புமைப் படுத்திக் காண்பர். கே. பி. எஸ். அமீது, 'பழையனூர் நீலியும் கண்ணகியும்' (கட்டுரை) தாமரை. மலர் 9. இதழ் 10: (ஏப்ரல் 1968) பக். 26-34

தனக்குப் பலியாகப் பெறுகிறான். அரசமன்னனின் பட்டத்து யானையைக் கொன்று, ஆனைப் பலியும் பெறுகிறான். இதன் விளைவாக அரசன் புலையனை யானைக்காலிலிட்டுக் கொல்லவே, அவனையும் பலியாகக் கொள்கிறான் மாடன்.

பின்னரும் பல்வேறு கொடுமைகள் புரிந்து பலவிடங்களும் அலைந்து திரிந்து இறுதியில் நாகலாபுரம் புதூர் இராமலிங்கக் கோடாங்கியின் சிமிழில் அடைபடுகிறான். பலிபெறும் துடியான தெய்வமாக நிலை கொள்கிறான்.[1]

*நீலிகதை*

இலட்சுமி எனும் கணிகையை அவள் ஆசை நாயகனான வேதியன் கொலைசெய்து விடுகிறான். அவளது நகைகளைக் கவர்ந்து செல்கையில் அரவம் தீண்டி இறக்கிறான். கணிகையின் முடிவுகண்டு கதறிய அவள் அண்ணன், தானும் தற்கொலைசெய்து மாள்கிறான். மூவரும் மறுபிறவி எடுக்கின்றனர். அண்ணனும் தங்கையும் சோழனுக்கு இரட்டைக் குழந்தைகளாகப் பிறக்க வேதியன் காவிரிப்பூம்பட்டினத்திலே ஓர் வணிகன் மகனாகப் பிறக்கிறான்.

சோழன் குழந்தைகள் அரண்மனைப் பாலினால் பசி அடங்காது, பேயுருக் கொண்டு வெளியேறி எருமைகளையும் பசுக்களையும் கொன்று தின்கின்றனர். விடியுமுன் யாருமறியாமல் மீண்டும் தொட்டிலில் வந்து முடங்கிக்கொள்கின்றனர். ஓர் நாள் இம் மாயத்தைக்கண்டுகொண்ட மன்னவன், இவர்களைக் காட்டில்விட்டு விடக் கட்டளையிடுகிறான். வேம்பு ஒன்றில் தங்கியிருந்த நிலையில் அது ஊர் மக்களால் வெட்டப்படவே, அதில் இருந்த அண்ணன் மடிய நேரிடுகிறது. தங்கையோ முற்பிறப்பில் தன்னைக் கொலை செய்தவனைப் பழிவாங்கும் எண்ணத்தில் அலைந்து திரிகிறாள்.

வணிகன் மகனாகப் பிறந்து வாழும் அவன், ஓர் நாள் இவள் வழியே வர நேர்கிறது. காத்திருந்த பேய்நங்கை கள்ளிக்கொப்பு ஒன்றினைப் பிள்ளையாக மாற்றி, அதனைச் சாட்சியாகக் காட்டித் தானே அவன் மனைவி எனக் கூறித் தடுத்து நிறுத்துகிறாள். தன்னுடன் வருமாறு அழைக்கிறாள். அவன் மறுக்கிறான். முடிவில்

1. 'சுடலை பிறப்பு' பற்றிய இக்கதை நெல்லை மாவட்டத்தில் வழங்கிவரும் முறையைத் தழுவி எழுதப் பெற்றது. குமரிமாவட்டத்தைச் சேர்ந்த கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் பதிப்பித்த சுடலைமாடசுவாமி விற் கதை, தக்கன் யாகம் அழிககப்பட்ட பின், அந்த யாககுண்டத்திலே சுடலை பிறந்ததாகக் கூறிச் செல்லும். இவ்வாறு மாறுதல்களைப் பெற்று விளங்குதல் இத்தகைய பல பாட்டுகளுக்கும் அமைந்த ஓர் பொது இயல்பே எனலாம்.

இவர்கள் வழக்கு அருகிலுள்ள ஊர்மக்களிடம் செல்கிறது. அவ்வூரார் இவளை நம்புகின்றனர். அவர்களின் விருப்பத்திற்கு இணங்க ஊர்மடத்தில் அன்றிரவு தங்கியபோது, நீலியான அவள் நினைத்ததை நிறைவேற்றிவிடுகிறாள்.

பின்னரும், அவள் வணிகன் மகனின் தாயாக வடிவெடுத்து மகனைக் கொன்ற குற்றத்திற்காக வஞ்சனையால் ஊரார் அனைவரையும் ஒழித்துப் பழிதீர்த்துக் கொள்கிறாள். தமையனைக் கொன்ற அவ்வூராரை நீலி இவ்வாறு தண்டித்துவிடுகிறாள். முடிவில் அங்கிருந்து தென்னாடு சென்று முப்பந்தல் எனும் ஊரிலே யாவரையும் அஞ்சி நடுங்க வைக்கும் தெய்வமாக நிலை கொள்கிறாள்.

வில்லுப்பாட்டிலே இம்முறையில் பாடப்பெறும் இக்கதை வெவ்வேறு வேறுபாடுகளையும் கொண்டு வழங்கி வருகிறது. பல்வேறு இலக்கியங்களும் இந்நீலியின் பெயர் குறித்துப் பேசுகின்றன.[1] ஆய்வுக்குரியதோர் பெருஞ் செய்தியாக இவள் கதை அமைந்துள்ளது.

### சமுதாயப் பாங்கான கதைகள்

சாதிகளிடையே ஏற்றத்தாழ்வு கருதுதல், சாதிக்கட்டுப்பாடுகள் வற்புறுத்தப்படுதல், காதலின் திறத்தால் இவை தகர்த்தெறியப்படும்போது காதலர்கள் சமுதாயச் சதிச் செயல்களுக்கு பலியாதல், சில மூட நம்பிக்கைகள் பேராசைகள் இவைகள் காரணமாக நிகழும் கொடுமைகள், சமுதாயத்தில் கீழ்நிலை மக்களிடையே பிறந்தோர், மக்கள் போற்றும் பெரும்புகழ் பெறும் நிலையில், உயர்நிலை மக்களின் வயிற்றெரிச்சலுக்கு ஆளாகி வஞ்சனையால் பழிவாங்கப்படுதல், ஆகிய இவைபோலும் சமுதாய அவலங்கள் மக்களிடையே இரக்க உணர்ச்சியைப் பெரிதும் விளைவித்த நிலையில், அவை வில்லுப்பாட்டாக வடிவெடுத்த பாங்கினை இவ்வகைக் கதைகளின் வாயிலாகக் காண்கின்றோம்.

முத்துப்பட்டன் கதை, மந்திரமூர்த்தி கதை என்னும் தடிவீரசாமி கதை, சின்னத்தம்பி கதை, மாரியம்மன் கதை எனும் அனந்தாயி கதை, தோட்டுக்காரியம்மன் கதை, பொன்னிறத் தம்மன் கதை ஆகியவை சமுதாயப் பாங்கான கதைகளுள் முக்கியமானவை எனலாம்.

### முத்துப்பட்டன் கதை

ஆரிய நாட்டைச் சேர்ந்தவனும், அனைத்துக் கலைகளிலும் வல்லவனாகத் திகழ்வோனும் ஆகிய முத்துப்பட்டன் என்பான்

1. டாக்டர் சு. சண்முகசுந்தரம் (தொகுப்பு) பழையனூர் நீலி. கொடுமுடி சண்முகப் பிரசுதம் பதிப்பு. (1978) பக்: 27-31.

ஆறு அண்ணன்மாருக்கும் இளையவன். மூத்தவர்களுடன் கருத்து வேறுபாடு கொண்டு பிறந்த ஊர் விட்டு வெளியேறிக் கொட்டாரக் கரைவந்து மன்னர் ராமராசனிடம் சேவகத்தில் அமர்கிறான். தம்பியைப் பல இடங்களிலும் தேடிவந்த தமையன்மார் கொட்டாரக் கரையில் அவனைக்கண்டு வீடுதிரும்ப வேண்டுகின்றனர். இதனை அறிந்த மன்னர் பரிசுகள் பல வழங்கிப் பட்டனை வழியனுப்பி வைக்கிறார்.

ஊர்திரும்பும் வழியில் நீர்த்துறை ஒன்றில் தான் கேட்டு மகிழ நேர்ந்த பாட்டிலும் அதனைப் பாடிய பகடைப் பெண்களின் பருவ அழகிலும் மனத்தைப் பறிகொடுத்த பட்டன், அவர்களையே மணக்க முடிவு செய்கிறான். பெண்களின் தந்தை இட்ட நிபந்தனைகள் அனைத்தையும் ஏற்று முழுமையாகத் தானும் ஒரு பகடைச் சாதியானாகவே மாறிவிடச் சம்மதிக்கிறான். இச்செய்தியை அண்ணன்மாரிடம் வந்து அறிவிக்க அவர்கள் ஆத்திரம் கொண்டு தம்பியைக் கல்லினால் கட்டிய அறையில் சிறைப்படுத்துகின்றனர். முத்துப்பட்டனோ அந்தச் சிறையிலிருந்து தப்பிச் சென்று பகடை வாழ்க்கையை மேற்கொண்டு, மங்கையர் இருவரையும் முறைப்படி மணந்து கொள்கின்றான். மணக்கோலத்தில் மூவரும் மகிழ்ந்திருக்கின்றனர்.

இந்நிலையில் அன்றிரவே பகடைச் சாதியாரின் கால்நடைகள் கள்வரால் கவர்ந்து செல்லப்படுகின்றன. செய்தியறிந்த பட்டன் பெருஞ்சினம் கொண்டு படைக்கலம் ஏந்திச் சென்று பகைவரை ஓடஓட விரட்டி அடித்துவிடுகிறான். ஆனால் கள்வரில் ஒருவன், புதரில் மறைந்துநின்றவன், கைகால் கழுவ நீர்த்துறைக்குப் பட்டன் சென்ற நிலையில் அவனறியாவாறு வெளிப்பட்டு வந்து பட்டனைக் குத்திச் சாய்க்கிறான். பட்டனோ அந்நிலையிலும் எதிர் மாறிக் குத்தி அவ்வஞ்சகனைக் கொன்று விடுகிறான். ஆனாலும் எதிர்பாராத விதமாகத் தான் ஏற்ற தாக்குதலால் பட்டன் இறந்து வீழ்கிறான்.

பட்டனின் நாய் தனித்து வீடுவந்த நிலையைக் கண்ட மனைவியர் இருவரும் களம் சென்று கணவனைக் கண்டு கதறி, அவனுடன் உயிர்துறக்க முடிவு செய்கின்றனர். சிங்கம்பட்டி சமீன்தாரின் அனுமதி பெற்றுப், பட்டனுடன் தீப்பாய்ந்து உயிர் விடுகின்றனர். இறைவனருளால் மூவரும் தெய்வநிலை பெற்று மக்களால் வழிபாடுபெறும் சிறப்பினையும் அடைகின்றனர்.

''கதையின் உயிர்நாடியே கீழ்ச்சாதியில் பட்டன் மணம் செய்து கொண்டது. அவர்கள் வாழ்க்கையில் இணைந்து ஒன்று

பட்டது. அவர்களது நலனைப் பாதுகாக்க உயிர்விட்டது ஆகிய வையே'' எனக் கருதுவார் நா. வானமாமலை.[1]

உயர் வகுப்பினனாகிய அந்தண இளைஞன், இழிந்த சக்கிலியர் சாதிப் பெண்களை மணப்பதும் அவர்களுக்காகப் போரிட்டு மாய்வதும் வழக்கத்தில் காண அரிதான புதுமை என்றும் 18 ஆம் நூற்றாண்டில் நிலவிய அயலார் ஆட்சியின் விளைவாகப் பழைமைச் சாதிமுறைகளைத் தகர்க்கும் புதிய சமுதாய மாற்றம் தலைதூக்க முயன்றதன் முன் அடையாளமாக இப்பட்டன் கதை அமைந்துள்ளதாகக் கருதலாம் என்றும் மு. அருணாசலம் குறிப்பிடுவார்.[2]

இக்கதை நிகழ்ச்சி உண்மையானதே என்பதற்குப் பாவநாசம் (நெல்லைமாவட்டம்) ஊரிலுள்ள சொரிமுத்தையன் கோவில், அதனையடுத்த பட்டவராயன் கோவில், ஆகிய இடங்களில் காணப்படும் குறிப்புகளும், இன்றும் சொரிமுத்தையன் கோயில் விழாவில் தீகுளிப்பு நிகழ்ச்சி நடைபெறுதலும் சான்றுகளாக அமைகின்றன. சாக்கிலியர் வகுப்பினர் தமிழகத்தில் நுழைந்த காலம் ஆகிய 1658 – 1738 ஆண்டுகளின் கால எல்லையிலேயே இக்கதை நிகழ்ந்திருக்க வேண்டும் எனக் கருதுவர்.[3]

*மந்திர மூர்த்தி கதை*

தாழ்ந்த வகுப்பினர்களாக இருந்தவர்களிடையேயும் உயர்வு தாழ்வு என்ற நிலைமையும், அதனால் விளைந்த கொடிய முடிவுகளும் காட்டும் கதை 'மந்திர மூர்த்தி கதை'. 'தடிவீரசாமி கதை' எனவும் வழங்கும். திருநெல்வேலியிலே வடமலையப்ப பிள்ளை ஆட்சிபுரிந்த காலத்தில் நடந்த கதை இது.

'குடும்பமார்' வகுப்பினர்க்கு 'நாட்டாமைக்காரன்' ஆன செம்பரக்குடும்பனின் மகள் 'சோணமுத்து' என்பாளுக்கும், அவ்வகுப்பினருக்குத் துணிவெளுத்துத் தொழில்புரியும் 'வாசமுத்து என்பவனுக்கும் காதல் உறவு ஏற்படுகிறது. (மந்திரங்கள் பல கற்ற வாசமுத்து 'மந்திரமூர்த்தி' எனப் புகழப்பெறுகிறான்.) வாசமுத்துவிடம் மந்திரங்கள் கற்ற 'புதியவன்' என்பான், வாசமுத்துவைப் பகைத்துக்கொள்கிறான். சோணமுத்து, வாசமுத்துவிடம் கொண்டுள்ள கள்ள உறவை அவளது அண்ணன்மாரிடம் காட்டிக்

1. நா. வானமாமலை. (பதிப்பு) முத்துப்பட்டன்கதை. மதுரைப் பல்கலைக் கழகம். மதுரை-2. (1971) பக் : 16.
2. M. Arunachalam, Ballad Poetry. Gandhi Vidyalayam, Tanjavur Dist 1976 Page ; 186
3. நா. வானமாமலை. (பதிப்பு). முத்துப்பட்டன் கதை. (1971) பக் : 9, 10.

கொடுத்துவிடுகிறான். புதியவனின் உதவியுடன் வாசமுத்துவை ஒழித்துக் கட்டமுயன்ற அண்ணன் மாரிடமிருந்து, தன் மந்திர வலிமையால் வாசமுத்து மாற்றுருவங்கள் பல எடுத்துத் தப்பிவிடு கின்றான். ஆயினும், வாசமுத்து, அந்த அண்ணன்மாரால் ஏவப் பட்ட கொலைஞர்களின் வஞ்சனைக்கு ஆளாகிக் கொல்லப்படுகிறான் புதியவனைப் பேய் வடிவில் சென்று பழிவாங்கி விடுகிறான் வாசமுத்து. எனினும், வாசமுத்துவின் மன்னிப்பைப் பெற்று விடுகிறான் புதியவன்.

வாசமுத்துவுடன் உயிர்துறக்கும் அவன் மனைவி சாத்திப் பிள்ளையும், ஆசைநாயகி சோணமுத்துவும் அவனுடன தெய்வ நிலை பெறுகின்றனர். புதியவன், வாசமுத்துவின் (தடிவீரசாமி) முன்னோடித் தெய்வமாகிறான்.

**சின்னத்தம்பி கதை**

இழிந்த குலத்தோர் எனக் கருதப்பட்ட 'சக்கிலியர்'[1] வகுப்பில் தோன்றிய சின்னத்தம்பி என்பான் வேப்பலாங்குளம் எனும் ஊரில் பிறந்தவன். காட்டு விலங்குகள் பயிர்களை எல்லாம் அழிக்கவே அவ்வூர் மக்கள் மிகவும் துன்புற்றனர். விலங்குகளை விரட்டி வேட்டையாடுவதற்கு யாவரும் அஞ்சினர். இந்நிலையில் வலிமையும் துணிவும் கொண்ட வீரனாக விளங்கிய சின்னத்தம்பி தன் போன்ற இளைஞர்களுடன் சென்று விலங்குகளை வேட்டை யாடிக் கொன்றொழித்தான். இதனால் அவனது ஆற்றலும் வீரமும் வெளிப்படவே மக்களால் மதிக்கப்படும் தலைவன் ஆனான். அவ்வூர்ச் சமீன்தார் இவனது வீரத்தை மெச்சி இவனைத் தன் படைத்தலைவனாக நியமித்தார். கீழ்மகன் ஒருவனுக்கு இத்தகைய வாழ்வு கிடைத்தது மற்றவர்களின் பொறாமைத்தீ கொழுந்து விட்டெரியக் காரணமாயிற்று. இதன் விளைவாக, இவனை ஒழித்துக் கட்டச் சதி செய்து, புதையல் எடுத்தல், அதற்காக நரபலி கொடுத்தல் என்ற நம்பிக்கைகளின் பேரால், இவனை வஞ்சித்துக் கொலை செய்துவிட்டனர். இவனை மணந்து கொள்ள இருந்த மாமன் மகள் சோணைச்சி, இச்செய்தி கேட்டதும் தூக்கிட்டுக் கொண்டு மடிந்தாள். சின்னத்தம்பி கொலை செய்யப் பட்ட ஊராகிய 'பாப்பாங்குடி'க் காட்டாளம்மன் அருளால் இவர்கள் தெய்வநிலை பெற்றனர். அவன் அந்த அம்மனுக்குக் காவல் தெய்வம் ஆனான்.

வில்லுப்பாட்டுக் கதைகளுள் மக்கள் மிகவும் விரும்பிக் கேட்கும் உருக்கமான கதை இது.

---

1. N. Vanamamalai. Studies in Tamil Folk Literature- NCBH. Madras. 1969 Page : 114-115.

### சின்ன நாடான் கதை

வில்லுப்பாட்டாகப் பாடும் வழக்கத்திலிருந்து மறைந்து போனவையாக இருகதைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறுர் நா. வான மாமலை. அவற்றுள் ஒன்று இந்தச் 'சின்ன நாடான் கதை.'[1] உயர்வகுப்பு ஆடவன் ஒருவன் தாழ்ந்த சாதிப் பெண்ணுடன் மணஉறவு கொண்டதால் அவல முடிவினை அடையும் கதை இது. இக்கதையிலே நாடார் வகுப்பைச் சேர்ந்த இளைஞன் நாவிதர் வகுப்பு நங்கை ஒருத்தியுடன் உறவு கொண்டு வாழ்கிறுன். அதற்குக் காரணம், அவனுக்குத் திருமணப் பெண்ணுகப் பெரி யோரால் நிச்சயிக்கப்பட்டு இவனை மணக்கிறவள் நான்கு வயதே நிரம்பிய சிறுமி. இவள் 'பெரியவளானதும்' சமூகப் பெரியோர் முறைப்படி மணந்த இவளுடன் வந்து வாழுமாறும், முன்னவளின் தொடர்பைக் கைவிட்டுக் குலப்பெருமை காக்குமாறும் அவ்விளை ஞனுக்கு அறிவுரை கூறுகின்றனர். அவனே அவர்களின் சொற்களை அடியோடு மறுத்துவிடுகிறுன். இதனுல் கொதிப்படைந்த அச் சாதிவெறியர்களின் சதிச்செயலால் இளைஞன் கொலைசெய்யப்படு கிறுன். இவனது அவல முடிவு மக்கள் மனத்தில் நீங்காத நினை வாகவே, வில்லுப்பாட்டு இவனை ஓர் கதைத் தலைவனுக்கிக் கொண்டது.

### கவுதலமாடன் கதை.[1]

நகரத்து மக்களுக்கு நாள்தோறும் தயிரும் நெய்யும் கொண்டு சென்று விற்று வருகிறுள் ஓர் தாழ்ந்தகுலப் பெண். இவளை ஒவ் வொரு நாளும் வழிமறித்து வம்புசெய்கிறுன் ஓர் உயர்குலத்து இளைஞன். நிலைமை மிகவும் மோசமாகவே ஓர்நாள் தனக்குத் தெரிந்த 'பட்டாணி' அண்ணனிடம் இதனைத் தெரிவித்து விடுகி றுள். ஆத்திரமுற்ற அவன் அன்று அவளுக்குத் துணையாய் வரு கிறுன். வழக்கம்போல் வம்பனும் வரவே, அவனை எச்சரிக்கிறுன். 'பட்டாணி'. இதனுல் சினம் கொண்ட வம்பன், இவனை வெறி கொண்டு தாக்குகிறுன். 'பட்டாணி' அண்ணனும் பதிலுக்குத் தாக்குகிறுன். ஒருவரை ஒருவர் கடுமையாகத் தாக்கிக்கொண்டு, முடிவில் இருவருமே மடிகின்றனர். இளைஞர் இருவரின் கோர முடிவை நேரில் கண்ட நிலையில், தாங்காத துயரால் அப்பெண் ணும் தற்கொலைபுரிந்து மாள்கிறுள்.

கதைத் தலைப்பிலுள்ள 'கவுதலமாடன்' என்னும் பெயர் வம்பு செய்து உயிர்நீத்த வாலிபனின் பெயராக வில்லுப்பாட்டில்

1. N. Vanamamalai. Studies in Tamil Folk Literatnre. NCBH Madras (1969) Page: 120.

கொள்ளப்பட்டிருக்குமானால், அதன் காரணமாகவே இப்பாட்டு பாடும் வழக்கத்திலிருந்து விரைவில் மறைந்திருத்தல் கூடும்.

மாரியம்மன் கதை (அனந்தாயி கதை)

'சீவகுண்டப்' பதியில் வாழும் 'அரிகிட்டிணன்' எனும் அந்தணனின் மனைவி அனந்தாயி, இருபது ஆண்டுக்காலம் பிள்ளையின்றி ஏங்கியவள், இறைவன் அருளால் பெண்மகவு ஒன்றைப் பெறுகிறாள். தவமிருந்து பெற்ற பிள்ளைக்குச் 'சர்ப்ப தோஷம்' எனச் சோதிடம் சொல்கிறது. எனவே 'தோஷம்' தீர்க்கும் 'பிராயச்சித்தமாக' ஓர் கீரிப்பிள்ளையை வீட்டில் வளர்க்கிறார்கள். ஓர் நாள் அனந்தாயி வீட்டில் இல்லாதபோது, குழந்தையின் அருகே சீறிவந்த பாம்பினைக் குதறி எறிகிறது கீரிப்பிள்ளை. கீரை அறுத்துக்கொண்டிருக்கும் தன்னிடம் வாயெல்லாம் குருதிவழிய அக்கீரி வந்து நிற்பது கண்டவுடன், குழந்தையைக் கொன்றதெனக் கருதிக் கீரைக் கத்தியால் எறிந்து அதனைக் கொல்கிறாள் அனந்தாயி.

ஓடிவந்து வீட்டில் பார்க்கையில் உண்மை அறிகிறாள். ஆராயாது பழிசெய்ததால் அலறி அழுகிறாள். இதனை அறிந்த அந்தணன், மனைவியின் பாவம் தீரவேண்டித் தோழருடன் கூடிப் பாவநாசம் செல்கிறான் 'தீர்த்தமாட'. தீர்த்தமாடித் திரும்பி வரும் வழியில் பாம்பு தீண்டப்பெற்று மாள்கிறான். தோழர்கள் வாயிலாகச் செய்தி அறிந்த அனந்தாயி துடிதுடிக்கிறாள். சொக்காரனோ ஆண்மகவு இவளுக்கில்லை எனச்சொல்லி, இவளுக்குரிய சொத்துகள் அனைத்தும் பறித்துக்கொண்டு, வீட்டைவிட்டும் வெளியேற்றுகிறான்.

ஊர்த்தலைவனிடம் வழக்குரைக்கிறாள் அனந்தாயி. அவன், சொத்துகள் யாவும் இவளுக்கே சேரும் என்று தீர்ப்பளிக்கிறான். இது கேட்ட சொக்காரன், ஊர்த்தலைவனுக்குக் கைக்கூலி ஆயிரம் பொன் கொடுத்து அவனைச் சரிக்கட்டிவிடுகிறான். ஊர்த்தலைவனாகிய நாட்டாண்மைக்காரன் மறுநாள் நடுநிலை தவறி, அனந்தாயிக்கு ஏதும் கிடையாதென அநீதி வழங்குகிறான். பொங்கி எழுந்த துயருடன் அவள் மகளையும் கையிலேந்தியவளாய், நாட்டாண்மைக்காரனின் ஒரே பெண்ணும் நாசமாய்ப் போகச் சாபமிட்டுப் பொதிகைமலைச் சுனைக்கு வந்து சேர்கிறாள். குழந்தையுடன் சுனையுள் வீழ்ந்து உயிர்விடத் துணிந்து தவமிருக்கிறாள்.

ஊரிலே, நாட்டாண்மை மகளுக்குத் திருமணம் நடக்கிறது. திருப்பூட்டு நிகழ இருக்கையில் பெருமழை, பேய்மழை பெய்கிறது. பொதிகைமலைச் சுனையிலும் அதே மழை. அதனால் பொங்கிப்

பாய்ந்த சுனையுள்ளே குழந்தையுடன் வீழ்ந்து மடிகிறாள் அனந் தாயி. மேலும் மேலும் பொங்கிப் பெருகிய வெள்ளம் 'சீவகுண்டப் பதி' நோக்கிப் பாய்ந்து வருகிறது.

நாட்டாண்மை மகளுக்குத் திருப்பூட்டு நடைபெறவில்லை. சீறிவந்த வெள்ளத்தால் திருமண வீட்டார் அனைவருமே அடித்துச் செல்லப்படுகின்றனர். அழிவழக்குச் சொன்னவன் சீமையும் அழி கிறது. அனந்தாயியின் சாபமே அழிவின்றிப் பலித்தது. வெள் ளத்தில் மிதந்துவரும் குழந்தையையும் தாயையும் கண்ட சிவனும் உமையும், அவர்களைக் கயிலைக்கு அழைத்துச் செல்கின்றனர். அரனார் அருளால் அன்னையும் குழந்தையும் மஞ்சனமாரி வெள்ள மாரி என மறுபெயர் பெறுகின்றனர். நல்லோர்க்கு நன்மையும் தீயோர்க்குத் தீமையும் செய்யும் வரங்களையும் இறைவனிடம் பெறுகின்றனர். பரமன், மேலும் அருளிய பதினெட்டு மாரிப் பெயர்களுடன் பூவுலகம் வந்து கோயில் கொள்கின்றனர்.

இக்கதையிலே, நெறிதவறி நீதிசொன்ன நாட்டாண்மைக் காரன் உறவோடும் ஊரோடும் அழிவுறுகிறான். அவன் அவ்வாறு அழிவுற அனந்தாயியின் கற்புத் திறமே காரணமாகிறது. கதைத் தலைவியின் எதிர்பாரா இன்னல்களுக்கெல்லாம் ஊழ்வினையே காரணம் என ஒவ்வொரு நிலையிலும் சொல்லிச் செல்கிறது இக்கதை. இவைகளை நோக்குகையில், இக்கதை சிலப்பதிகாரக் கதையினைஒருவாறு ஒத்துள்ள போக்கினைக்கொண்டு அமைகிறது எனக் கொள்ளலாம்.

தோட்டுக்காரி அம்மன் கதை.

நாஞ்சில் நாட்டிலே கோனுண்டிராசன், கொந்தளப்பராசன் என இரு குறுநிலமன்னர் கோட்டை கட்டி வாழ்ந்தனர். கோனுண்டியின் தவப்புதல்வி தோட்டுக்காரி. பருவ எழில் கொழிக்கும் பாவை. இவள் தன் தோழியருடன் பந்தாடி மகிழ்ந்த காட்சியைக் கொந்தளப்பன் மகன் குமரப்பராசன் காண நேர்ந்தது. மங்கையின் அழகிலே மயங்கிய குமரன் அவளையே மணக்கவும் முடிவு செய்தான். அரண்மனை திரும்பியவன் தந்தை யிடம் தன் எண்ணத்தை வெளியிட்டான். மன்னனும் மகிழ்ந்து கோனுண்டியிடம் பெண் கேட்டு ஓலை அனுப்பினான். ஓலையைக் கிழித்தெறிந்த கோனுண்டி, அதைக் கொண்டுவந்த தூதனையும் சிறுமைப்படுத்தி அனுப்பினான். இதனை அறிந்த கொந்தளப்பன் கொதித்து எழுந்தான். பழித்தவனைப் பழிவாங்கப் படை கொண்டு புறப்பட்டான். குமரப்பன், தந்தையைத் தடுத்துத் தானே படைகொண்டு சென்றான்.

குமரப்பனுக்கு வாய்ப்பாகத் தோட்டுக்காரி தன் தோழியருடன் பொய்கையில் நீராடிக்கொண்டிருந்தாள். இதுகண்ட குமரப்பன் பொய்கையை முற்றுகையிட்டு அப்பூங்கொடியைச் சிறையெடுத்துவந்து தன் கோட்டையுள் சிறைவைத்தான். இதன் விளைவாகக் கோட்டையர் இருவருக்கும் கொடும்போர் நடந்தது. இருதரப்பு அரசர், படைவீரர் யாவரும் மாண்டனர். எஞ்சியவன் குமரப்பன் மட்டுமே. இக் கொடுமைகளை அறிந்த தோட்டுக்காரி சிறையிலிருந்து தப்பிச்சென்று அலைவாய்க்கரை அடைந்தாள். அங்கிருந்த வெள்ளியம்பாறை மீதில் தீவளர்த்தாள். தன்னால் விளைந்த கொடுமைகளுக்கு வருந்தித் தழல்பாயத் துணிந்தாள்.

தோட்டுக்காரி தப்பியதை அறிந்த குமரப்பன், வெள்ளியம் பாறைத் தீயினைக் காண நேர்ந்தது. ஓடோடி வந்தான். இவன் தன்னை நோக்கி ஓடிவருதலைக் கண்ட தோட்டுக்காரி உடனே தீயுள் பாய்ந்தாள். எல்லையில்லா ஏமாற்றம் கண்ட குமரப்பனும் அதே தீயுள் பாய்ந்தான். இருவரும் மாய்ந்தனர். குமரனைத் தொடர்ந்து வந்த அவனது தோழன் சிறுக்கன் என்பான் இருவரும் மாய்ந்த திறம் கண்டு கலங்கித் தானும் வாளில் பாய்ந்து மடிந்தான். அரனார் அருளால் மூவரும் முறையே தோட்டுக்காரி அம்மை, குமரப் பெருமாள்,வெடிகாரன் என்ற பெயரில் தெய்வங்களாயினர்.

பொன்னிறத்தம்மன் கதை

நெல்லை மாவட்டத்தில், கடையம் என்னும் ஊரில் எழுவர் அண்ணன்மாருக்கு இளையவளாகப் பிறந்தவள் பொன்னிறத்தம்மை. வளர்ந்து பெரியவளாகி மணப்பருவம் அடைந்தாள். இரண சூரப்பெருமாள் என்பவன் இவளை மணந்தான். தலைப் பிள்ளை பேறுகாலத்திற்காகத் தாய்வீடு வந்தாள். ஒருநாள் தோழியருடன் பொய்கையிலே நீராடச் சென்றாள். தீக்குறிகள் பல நேர்ந்தன. எனினும் புறப்பட்டுச் சென்றாள். திரும்பும் நேரம் பெருமழையும் புயலுமாகி எங்கும் இருள் சூழ்ந்தது. இருட்டோடு இருட்டாக எல்லோரும் கரையேறித் திரும்புகையில் பொன்னிறத்தாளும் உடன்வந்து விட்டதாகவே மற்றவர்கள் எண்ணினர். ஆனால் அவளோ பொய்கையிலேயே தங்கிவிட்டாள். எல்லோரும் தன்னைவிட்டுச் சென்று விட்டதை அறிந்து ஏங்கினாள்,திகைத்தாள். வழியறியாது மயங்கி ஓர் ஆலமரத்தின் அடியில் வந்து நின்றாள்.

காட்டின் நடுவே காட்டாளம்மன் கோயில் இருந்தது. அதன் அருகிலே கருவூலப் புதையல். இதனைக் கவர்ந்து செல்லத் திட்டமிட்டுக் கள்வர் எழுபத்தொன்பது பேர் அன்றிரவு கூடிவந்தனர். கருவூலத்தைக் கைப்பற்ற வேண்டுமாயின் அதனைக் காத்து நிற்கும்

வாதைகளுக்கெல்லாம் ஊட்டுக்கொடுக்க வேண்டும். நரபலியே நல்லபலி என்றும், அதுவே நிறைசூலிப் பலியாக அமைந்துவிட்டால் நினைத்தது நிச்சயம் நிறைவேறும் என்றும் கள்வருள் ஒருவன் குறிப்பிட்டான்.

இந்நிலையில் காட்டாளம்மைக்குச் சாமபூசை செய்ய வந்த வேதியன், வரும்வழியில் பொன்னிறத்தாள் தனித்து நின்றதைக் கண்டு அவள் நிலைக்கு வருந்தியவன், பூசை முடித்துத் திரும்பி வந்து அவளை அவள் வீட்டுக்கு அழைத்துச் செல்வதாகச் சொல்லி, அதுவரை அவளை அங்கேயே காத்திருக்குமாறு வேண்டிக் கொண்டு கோயிலை நோக்கி வந்தான். வந்த வேதியன் கள்வர்கள் கண்ணில் பட்டான். அவனையே பலிகொடுத்துவிட அவர்கள் துணிந்த போது அவனே தான் வழியிலே நிறைசூலி ஒருத்தியைக் கண்டதாகவும் அவளைப் பலி கொடுத்தலே மேலானதென்றும் சொல்லித் தன்னளவில் தப்பித்துப் பொன்னிறத்தாளைக் காட்டிக் கொடுத்து விட்டான். களிப்பு எல்லை மீறிய கள்வர், அம்மை நின்ற இடம் தேடிவந்து வஞ்சகமாகப் பேசி வீடு செல்லும் வரை வழித்துணைக்கு வருவதாக ஏமாற்றி அழைத்து வந்தனர். வழியிலேயே இவர்களின் வஞ்சகத்தைப் புரிந்துகொண்டாள் அம்மங்கை. தன்னைக் கொல்லாது விடுமாறு கெஞ்சிக் கெஞ்சிப் புலம்பினாள். கிஞ்சித்தும் பயனில்லை. கொடிய முறையில் அவளை இழுத்துவந்து, இரக்கமில்லா அவ்வரக்க நெஞ்சினர் தாங்கள் எண்ணியதை நிறைவேற்றினர். மங்கையவள் மாளும்முன்னே மனமாரச் சாபமிட்டாள். ஊட்டுப் பெற்ற வாதைகள் ஒதுங்கிக் கொண்டன. கருவூலம் கைப்பற்றிக் காட்டுவழி நடந்தனர் கள்வர் அனைவரும்,

ஓரிடத்தில் அத்தனை பொன்னையும் அளந்து பார்த்துப் பங்கு போடத் தங்கினர். மூங்கில் வெட்டி நாழிசெய்து முறையாக அளந்திடலாம் என்றான் ஒருவன். எல்லோரும் உடன்படவே மூங்கில் வெட்டலாயினர். இதனால் காட்டு விலங்குகள் காடு கலைத்து ஓடிவந்தன. பொன்னிறத்தம்மையின் சாபம் பலித்தது. விலங்குகள் கள்வர் அனைவரையும் விரட்டின. தொடர்ந்து பற்றிப் பிடித்தன, கடித்துக் குதறின. அத்தனை கள்வரும் அழிந்தனர்.

பொன்னிறத் தம்மையைக் காணவில்லை என்ற செய்தியைத் தோழியர் வாயிலாக அறிந்த அண்ணன்மார் ஆறாத்துயர் கொண்டு ஆறு, குளம், கிணறு அத்தனையும் தேடினர். எங்குமே காணாமல் ஏக்கமுடன் வீடு வந்தார். காட்டாளம்மனை அடுத்துப் பொன்னிறத்தாளும் தெய்வமானாள். ஊட்டும், பூசனையும் ஏற்றுக் கொண்டாள். தன்னைக் கொலைசெய்த கொடியவரின்

கொடிவழிக்கும் கொடுமை செய்தாள். தன்னை நம்பி வணங்கிய நல்லவர்களுக்கு நன்மைகள் பலவும் செய்தாள். முச்சந்தியில் ஆலமரமூட்டில் நிலையம் கொண்டாள். அரனார் திருவருளால் 'பொன்னிறத்தம்மன்' என்று பெயர் பெற்றாள்.

இங்கே காட்டப் பெற்றுள்ள கதைகளேயன்றி வேறுபல கதைகளும் காணப்படுகின்றன. பொதுவாகச் சமுதாயக் கதைகள் எனக் கருதப்படுவன யாவும் அவல முடிவையே கொண்டுள்ளன' கதை கேட்போர் நெஞ்சுருகிக் கேட்டு நிற்கும் நிலையில் தெய்வ நிலை பெற்ற கதைமாந் தர்பால் பக்தியும் நம்பிக்கையும் ஏற்பட இவ்வகைக் கதைகள் பெரிதும் பயன்படுகின்றன. அவல முடிவு எய்தும் கதைமாந்தர் இறுதியில் தெய்வநிலை அடைதலும், ஆண் பால் தலைமைக் கதைகள் யாவும் சமுதாய ஏற்றத்தாழ்வுகளின் கொடிய விளைவுகளை எடுத்துரைப்பனவாகவும், பெண்பால் தலைமைக் கதைகள் யாவும் பெண்மையின் மாட்சியினைப் பெருமைப் படுத்திப் பாடுவனவாகவும் அமைந்துள்ள நிலையும் இச் சமுதாயப் பாங்கான கதைகளின் பொதுத்தன்மைகளாகக் காணப் படுகின்றன.

ஆனால், பிற்காலத்தில் சமுதாயத்தில் கண்டிக்கத் தகுந்த குற்றங்கள் புரிந்தோர் கொலையுண்டோ, தண்டனை பெற்றோ மாண்ட நிலையில் அவர்களுக்கும் வில்லுப்பாட்டு இயற்றிப் பாடும் வழக்கம் ஏற்பட்டநிலையினைக் காண்கிறோம். அவ்வாறு எழுந்த பாட்டுகள் விரைவில் வழக்கிலிருந்து அழிந்துவிட்டன.

*வரலாற்று வீரர் கதைகள்*

அயலார் ஆட்சியின் ஆதிக்கம், ஆணவம், அநீதி ஆகியவற்றிற்கு அடிபணியாமல், வீறும் வெறியும் கொண்டு புரிந்த உரிமைப் போரிலே புகழ்நிறுத்தி வீழ்ந்துபட்ட வீரர்களின் நினைவு மக்கள் மனத்திலே நீங்காமல் நிலைகொண்டுவிடும். அத்தகைய வீரர் சிலரின் வரலாறுகள் வில்லுப்பாட்டில் இடம் பெறலாயின. இவ் வகையில் அமையும் கதைகளாக 'ஐவர் ராசாக்கள் கதை', 'இரவிக் குட்டிப் பிள்ளை போர்', 'கான் சாகிபு சண்டை', 'கட்ட பொம்மன் கதை' ஆகியவற்றைக் கொள்ளலாம். இக்கதைகளின் நிகழ்ச்சிகள் 15-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி தொடங்கி 18-ஆம் நூற்றாண்டின் இறுதி வரையிலான கால எல்லையைச் சேர்ந்தன என்பர்.[1]

1. N. Vanamamalai. Studies in Tamil Folk Literatnre. NCBH .(1959) Page. 52.

இக்கால எல்லையையும் மூன்று பகுதிகளாகப் பிரித்துக் காண்பர். (1) பாண்டியர் மரபு அரசர்களுக்கும் கன்னடிய மன்னர்களுக்கும் போர் நிகழ்ந்த காலம். (2) நாயக்கமன்னர்களுக்கும் (பாளையக்காரர்களாயிருந்த) மறவர் தலைவர்களுக்கும் இடையே போர் நிகழ்ந்த காலம். (3) ஆங்கிலேயக் 'கம்பெனி' ஆட்சியாளர்களுக்கும் பாளையக்காரர்களுக்கும் இடையே போர் நிகழ்ந்த காலம்.[1]

*ஐவர்ராசாக்கள் கதை*

'ஐவர்ராசாக்கள் கதை' வில்லுப்பாட்டு முதல் பகுதிக் காலத்தைச் சேர்ந்ததாகும்,

பாண்டியர் மரபைச் சேர்ந்த குலசேகரப் பாண்டியன் என்பான் வள்ளியூர் என்னும் ஊரில் கோட்டை கட்டி வாழ்ந்தான். இவன் மாலையம்மாள் என்பவளின் புதல்வன். இவனது மரபினர் தொடர்ந்து வள்ளியூரில் ஆண்டுவரும் நாளில் கன்னடியன் ஒருவன் தன் படைகளுடன் பாண்டி நாடு வந்தான். வள்ளியூரில் அப்பொழுது ஆட்சிபுரிந்த குலசேகரன் என்பான் தன் தம்பியர் நால்வர் துணைகொண்டு கன்னடியனை முறியடித்தான். இதனால் பாண்டியன் வள்ளியூர்க் கோட்டையைக் காளிங்கன் எனும் அதிகாரியின் பொறுப்பில் விட்டுவிட்டு மதுரைக்குச் சென்று வாழ்ந்தான். இந்நிலையில் வள்ளியூர்க் கோட்டையில் குழப்ப மிக்க சூழ்நிலை நிலவியது.

குலசேகரன் போரிலே காட்டிய வீரம் பற்றிக் கேள்விப்பட்டும் அவனது அழகிய உருவத்தைப் படத்தின் வாயிலாகக் கண்டும், அவனையே மணக்க வேண்டும் என விரும்பினாள் கன்னடிய மன்னனின் மகள். தனது ஆசையைத் தந்தையிடம் தெரிவிக்கவே, அவனும் குலசேகரன்பால் தூது அனுப்பினான். பாண்டியனோ 'பகைவர் மகளை மணந்து அவர்களுக்கு அடிமையாக மாட்டேன்' எனக்கூறி மறுத்துவிட்டான். வடுக மன்னன் ஒருவன் மகளை மணத்தல் தன் குலத்திற்கு இழிவு என எண்ணியும் இவ்வாறு மறுத்திருத்தல் கூடும். இதனால் ஆத்திரம் அடைந்த கன்னடியன் குலசேகரனைச் சிறைப்பிடித்துச் சென்று தன் மகளுக்கு மணம் முடித்து வைப்பதெனத் தீர்மானித்து வள்ளியூர் நோக்கிப் படைகொண்டு வந்தான்.

அப்பொழுது வள்ளியூர்க் கோட்டையுள் இருந்த குலசேகரன் பல ஆண்டு முற்றுகைக்கு ஆளானான். முடிவில் கோட்டை கன்ன

1. நா. வானமாமலை. (பதிப்பு) கான்சாகிபுசண்டை. மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.2. 1972 பக் : 4.

டியன் வசமே ஆயிற்று. ஐவர் பாண்டியரும் தப்பிச் சென்று தங்கள் உறவினனான திருவாங்கூர் மன்னனிடம் அடைக்கலம் ஆயினர். அவனோ கன்னடியனுக்கு அஞ்சி இடந்தர மறுத்தான். எனவே காடுகளில் மறைந்து வாழலாயினர். அப்பொழுது மீண்டும் கோட்டையைக் கைப்பற்ற அவர்கள் எடுத்த முயற்சிகள் வீணே ஆயின. இவர்கள் ஒளிந்திருந்த இடத்தை அறிந்து கொண்ட கன்னடியன், பெரும்படை கொண்டு அவர்களை முற்று கையிடச் செய்தான். ஆங்கு நிகழ்ந்த போரிலே உடன்பிறந்தார் நால்வரும் உயிரிழந்தனர். குலசேகரன் சிறைப்பட்டான்.

சிறைப்பட்ட பாண்டியனைச் சிவிகையிலேற்றித் தன் ஊர் கொண்டு சென்றான் கன்னடியன். ஆனால் மானவீரனான பாண்டியன் பல்லக்கிலிருந்தவாறே யாருமறியாவண்ணம் தன் அரையிலிருந்த கத்தியால் கழுத்தில் குத்திக்கொண்டு மாண்டான். 'பாட்டின்' கதை இவ்வாறு கூறினாலும் செவிவழிச் செய்திகள் வைரம் தின்று மடிந்தான் எனவும், அரைஞாணை எடுத்துக் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு இறந்தான் எனவும் பலவழியாகக் கூறும்.

சிவிகையைத் திறக்கையில் மணமகனாக வேண்டிய மன்னன். மடிந்து கிடப்பதைக் கண்ட கன்னடியன் மகள் துடிதுடித்தாள் இறந்தாலும் அவனே தன் கணவன் என உறுதி பூண்டாள் நகரை அணிசெய்யச் சொல்லித் தானும் மணக்கோலம் பூண்டு பாண்டியனின் பிணத்திற்கு மாலையிட்டாள். அவனை எரித்த சிதையுள் அவளும் குதித்து உயிர் நீத்தாள். 'பாட்டு' இவளை வடிவு அம்மாள் என்று பெயர் குறிப்பிடுகிறது.

வில்லுப்பாட்டில் பாடப்படும் சமுதாயக் கதைகளில் வரும் கதைத்தலைவன் தலைவியரும் இறுதியிலே இறைவன் அருளால் தெய்வநிலை அடைவதாகக் காட்டுவது வழக்கம். அம்முறையினைப் பின்பற்றியே இந்த ஐவர் ராசாக்கள் கதையிலும் 'வன்கொலையாக' மாண்டவர்கள் தெய்வநிலை அடைகின்றனர். பரமசிவன் பார்வதி ஆகியோரிடம் பல்வேறு வரங்களையும் பெற்று ''ஆலயங்கள் பதிதோறும் அவர்களெல்லாம் பூசை கொண்டார்.''

5371 அடிகளைக் கொண்டு நீண்ட பாடலாகக் காணப்படும் இதன் பெரும்பகுதி வில்லுப் பாட்டுச் சந்த அமைப்பிலே அமைந்து காணப்படுகிறது. சிந்து வகைகள், விருத்தங்கள் இடையிடையே காணப்படுகின்றன. என்றாலும் அச்சில் வந்துள்ளவாறு அமைந்த

இக்கதை[1] முழுவதுமாக வில்லுப் பாட்டாகப் பாடப் பட்டிருக்குமா என்பது ஐயுறவாகவே உள்ளது. எனினும் குலசேகரனின் மானவீரம், அதனையும் விஞ்சும் அளவிற்குக் கன்னடியன் மகள் அவன் பிணத்திற்கு மாலையிட்டு உடன்கட்டை ஏறிய திறம் ஆகியவை மக்கள் மனத்திலே மாறாத இடம்பெற்றிருக்கும். ஆதலால் இக்கதையின் முக்கியமான பகுதிகள் வில்லுப் பாட்டாகப் பாடப் பெற்றிருக்கும் எனலாம். இக்கதையிடையே காணப்படும் 'பாடும் பரசி கதை,' 'மன்னன், மதிப்பன் கதை' 'இடைச்சி கதை' ஆகியவை தனித்தனியே காட்டப்படுகின்றன. மன்னன் முன்னிலையில் வந்து தன் பதினெட்டு வகை நாடகத் திறமும் காட்டி ஆடிய பாடும் பரசி அவன் ஆசை நாயகி ஆகிவிடுகிறாள். மன்னன், மதிப்பன் ஆகியோர் பாண்டியன் படையைச் சேர்ந்தவர்கள். கன்னடியன் படைகளுக்குக் கோட்டைக்குள் தண்ணீர் கொண்டு செல்லும் கள்ளமடைப் பாதையைக் காட்டிக் கொடுத்தவள் ஓர் இடைச்சி. வில்லுப்பாட்டாகப் பாடப்பட்ட நிலையில் இவர்களின் கதைகள் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கும் எனலாம். பாடும் வழக்கம் நின்ற நிலையில் கதைப் பொருளின் சுவைகருதி இப்பகுதிகள் விரிவாக ஆக்கப்பெற்று முன்னிருந்த கதையுடன் சேர்த்துப் படிக்கத் தகுந்த கதைப்பாட்டாக இன்றைய நிலையில் உள்ளவாறு அமைக்கப்பட்டிருக்கலாம்.

வள்ளியூர்க் கோட்டையில் குழப்பமிக்க சூழ்நிலை ஏற்பட்ட காலத்தில் அதனைப் பயன்படுத்தித் தன்னை உயர்த்திக் கொண்டவன் வீரணாதி வீரணன் என்பான். இவன் கதை தனித்ததோர் பாட்டாகக் காணப்படினும்[2] தற்காலத்தில் வில்லுப் பாட்டாகப் பாடும் வழக்கில் இல்லை.

ஐவர் ராசாக்கள் கதை வில்லுப்பாட்டாகப் பாடப்படுவதில்லை எனவும், அகத்தீசுவரம் பக்கத்தில் ஐவர் ராசாக்கள் கோயில் ஒன்று இருப்பதாகவும், அங்கு இப்பாட்டு பாடப்பட்டு வந்ததாகவும், அங்கும் கோயிலை நிருவகிப் போரிடையே ஏற்பட்ட சச்சரவால் விழாக்கள் நடை பெறாத நிலையில் இப்பாட்டைப் பாடும் வழக்கமும் நின்று போய்விட்டதென்றும் நா. வானமாமலை குறிப்பிடுகிறார்.[3]

எனினும், தம்பியரைக் கொன்ற, தன்னைச் சிறைப்படுத்திய, பகையரசன் மகளை மணப்பதைக் காட்டிலும் மாண்டுபோவதே

1. நா. வானமாமலை (பதிப்பு) ஐவர் ராசாக்கள் கதை, மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை 2 (1674)
2. ,, ,, ,, பக்: 221
3. நா. வானமாமலை (பதிப்பு) ஐவர் ராசாக்கள் கதை, மதுரைப் பலகலைக் கழகம். மதுரை 2 (1974) பக்: 29.

மேல் என எண்ணி உயிர்விட்ட பாண்டினின் வீரமும், தன் மனத்தில் குடியேறி விட்ட அவனைத் தன் மணவாளனே எனக்கொண்டு அவன் பிணத்திற்கு மாலையிட்டுத் தானும் மடிந்த வடிவம்மையாகிய கன்னடியன் மகளது தீரமும் என்றும் மறப்பதற்குரியன அல்ல.

இரவிக்குட்டிப் பிள்ளை போர்

அடுத்துக் காணப்படும் சிறப்பான வில்லுப்பாட்டுக் கதை இரவிக்குட்டிப் பிள்ளை போர் என்பது. இப்பெருவீரர் நடத்திய போர் மதுரை, திருமலை நாயக்கரின் ஆதிக்க எண்ணத்தை எதிர்த்துச் செய்யப்பட்டதாகும்.

திருமலை நாயக்கர் மதுரையில் 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் மன்னராக விளங்கியவர்.[1] மைசூர்ப் படையை வென்றவர். கி.பி. 1634-இல் நாஞ்சில் நாட்டிலே படையெடுத்துத் தமிழகத்தின் தென் எல்லையிலும் தன் ஆதிக்கம் நிலை பெறவேண்டும் என்ற அவரது ஆவலினால் விளைந்த போர் இது. அரசரின் இந்த ஆதிக்கஆவலை நிறைவேற்றி வைக்கும் பொறுப்பினை ஏற்ற படைத்தலைவர் தளவாய் இராமப்பய்யன் என்பவர்.[2]

இக்காலத்தில் திருவிதாங்கூர் அரசராக இருந்தவர் இரவிவர்மா என்பவர். அக்காலத்தில் திருவிதாங்கூர் ஆட்சிப் பகுதியைச் சேர்ந்ததே நாஞ்சில் நாடு. பகவதி வாழும் தென்முனை இந்த நாஞ்சில் பகுதியில் அடங்கும். இத் திருத்தலத்தைப் புண்ணியத் துறையாகப் பக்திமான்கள் கருதினர். பாண்டிய வேந்தர்களும் பிற்காலச் சோழ மன்னர்களும், விசய நகரத்து அரசர்களும் இத்திருத்தலத்தைத் தங்கள் தங்கள் வசத்திலிருக்கும்படியாகச் செய்துகொள்ள அடிக்கடி முயன்றனர். இத்தகைய முயற்சிகளின் விளைவாக ஒவ்வொரு காலத்தில் இத்தலம் இம்மன்னர் ஒவ்வொருவர் ஆட்சிக்குக் கீழ் இருந்து வந்ததற்குச் சான்றுகள் பல உள்ளன என்பதையும், அக்காலத்தில் நாஞ்சில் நாட்டின் மீது அடிக்கடியும் படையெடுப்புகள் நடந்த வண்ணம் இருந்தமைக்குக் கன்னித்துறையைக் கைவசப்படுத்திக் கொள்வதில் மன்னவர்கள் மனத்தெழுந்த மட்டற்ற ஆசையே காரணம் என்பதையும் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகிறார்.[3]

---

1. அ.கி. பரந்தாமனார் மதுரை நாயக்கர் வரலாறு பாரிநிலையம், சென்னை.1 (1971) பக்: 150
2. ,, ,, ,, ,, ,, பக்: 162.
3. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கிய விளக்கம், தமிழ்ப்புத்தகாலயம் சென்னை (1965) பக்: 17

இராமப்பய்யனின் நாஞ்சில் படையெடுப்புக்கு அண்மைக் காரணமாக அமைந்தது வேலய்யன் கொலைநிகழ்ச்சியாகும். அதாவது, நாயக்கர் ஆட்சிக்குரிய திறைப்பணம் தண்டிச் செல்வதற்காக நாஞ்சில் நாடு சென்றவன் வேலய்யன் என்ற படைத் தலைவன். இவனை நாஞ்சில் மந்திரிமார் நயவஞ்சகமாகக் கொன்றுவிட்டனர். எனக் கூறப்படுகிறது. இக்கொலை நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற திருமலை மன்னர் கொண்ட ஆத்திரத்தின் விளைவாக உடனடியாக இராமப்பய்யன் தலைமையில் பழிவாங்கும் எண்ணத்துடன் படை புறப்பட்டது.

அக்காலத்தில் இருந்த நாஞ்சில் மந்திரியார், இரவிக் குட்டிப் பிள்ளை மீது மிகுந்த காழ்ப்புணர்ச்சி கொண்டிருந்தனர். போரில் வெற்றியை இழந்து விட்டாலும் கேடில்லை, இரவிக் குட்டியை இவ்வாய்ப்பில் ஒழித்துக் கட்டிவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர். இராமப்பய்யனை எதிர்க்கச் செல்லும் முன்னணிப் படைக்கு இரவிக்குட்டியே தலைமை தாங்கிச் செல்ல வேண்டும் என்ற சூழ்நிலையை வெகு திறமையுடன் உருவாக்கினர். பின்னர் ஓர் வஞ்சகச் செயலும் நடந்தது. "உண்மையான வீரன் என்றால் இரவியின் தலையைக் கொண்டுபோக உன்னால் முடியுமா? அப்படிக் கொண்டுபோய் விடுவாயானால் அப்புறம் போரேது ஒன்றேது" என்று குறிப்பிட்ட ஓர் உள்ளோலையைத் தந்திரமாக இராமப்பய்யனுக்கு அனுப்பினர். மேலும் படைநடத்தும் ஆற்றல் தங்களுக்குள் எவருக்கும் இல்லை என நழுவி விட்டனர். இரவிக் குட்டியோ தானே அப்பொறுப்பை ஏற்றுக் கொண்டு புறப்பட்டார்.

தாயின் தீக்கனா, மனைவியின் மயக்கம், இவர்களின் தடுப்புரைகள் மற்றும் பல்வேறு தீக்குறிகள் யாவும் இரவியின் முனைத்தெழுந்த முடிவுக்குமுன் பொடிப் பொடியாயின போரில் இராமப்பய்யனைத் தான் ஒருவனாகவே எதிர்க்க நேர்ந்த சூழ்நிலையிலும், சூழ்ச்சிக்காரர்தம் நாடகம் வெற்றியுடன் நிறைவேறிய நிலையிலும் அஞ்சாது போர் புரிந்து வீரமரணம் அடைந்தான் இரவி. உள்ளோலைக் குறிப்பின்படி அவன் தலை இராமப்பய்யனிடம் சேர்க்கப்பட்டது. இரவியின் வளர்ப்பு மகன் காளிநாயர் என்பான் இராமப்பய்யனிடமிருந்து தந்தையின் தலையைப் பெற்றுவந்து உரிய பெருமையுடன் கிரியைகள் நடத்தினான். மக்கள் மனத்திலே மாறாத இடம் பெற்ற இரவிக்குட்டி வில்லுப்பாட்டின் கதைத் தலைவன் ஆனான். மீண்டும் மீண்டும் அவன் வீரவரலாற்றைக் கேட்டு மக்கள் மகிழ்ந்தனர், வியந்தனர்,

விருத்தங்கள் இடையிடையே வர இக்கதைப்பாட்டு முழுமையும் கும்மி அமைப்பிலேயே எழுதப்பட்டுள்ளது.

**கான்சாகிபு சண்டை**

'கான் சாகிபு சண்டை' என்னும் கதைப்பாட்டு வில்லுப் பாட்டுச் சந்த அமைப்பைஒத்துள்ளதோர் வேறுபட்ட சந்தஅமைப் பில் முழுவதுமாகப்பாடப்பட்டுள்ளது. இக்கதைப்பாட்டைப் பாடி யவர் யார் என அறிய இயலவில்லையெனினும், முதல் காப்பு விருத் தத்தில் தார்வளர் கூடல் மேவுந் தந்தி பொற்பதம் காப்பாமே எனக் கூறுவதும், இறுதி வாழ்த்துப் பாடலில் கதையைப் பாடினுர் பாண்டியன் மீனுளைப் போலப் பாக்கியம் பெருகி வாழ்க எனக் கூறுவதும், 'தென் மதுரைச் சொக்கய்யர் வாழி? தேவிமீனுள் கயற்கண்ணியும் வாழி!' எனக் கூறுவதும்.[1] இக்கதைப் பாட்டு ஆசிரியர் மதுரையைச் சேர்ந்தவராக இருத்தல் கூடும் என எண்ண இடமளிக்கின்றன.

கான்சாகிபு பிறப்பினைப் பற்றி இவன் வரலாற்றை எழுதிய வர்கள் பல்வேறுபட்ட கருத்துக்களைக் கூறுகின்றுர்கள். பிறந்த ஆண்டு தெரியவில்லை. பிறந்த ஊர் இராமநாதபுரத்தைச் சேர்ந்த பனையூர் எனவும் பிறப்பால் வேளாளனுகப் பிறந்து மருதநாயகம் பிள்ளை எனும் பெயரை உடையவனுக இருந்து அடங்காப் பிள்ளை யாக வளர்ந்ததால் பெற்றேரை விட்டு ஓடிவர, முகமதிய தையற் காரர் ஒருவரால் வளர்க்கப்பெற்று முகமதுயூசப் என்ற பெயரில் முகமதிய மதத்தவனுகவும் மாறினுன் எனக் கருதுவர்.[2]

ஆனுல் 'பனையூர்' மதுரையை ஒட்டியுள்ள ஊரே என்றும் பிறப்பால் வேளாளன் அல்ல என்றும் தையற்கார முகமதிய ஏழையின் மகனே என்றும் மாறுபட்டகருத்துகளும் கூறப்படு கின்றன.[3]

எவ்வாறே, தன் பேராற்றலால் தமிழகம் முழுவதும் அறிந்த பெருவீரனுகத் திகழ்ந்தவன் இவன் என்பது தெளிவாகிறது. கதைப்பாட்டு இவன் பிறப்பு வளர்ப்பு பற்றி முதலில் மிகச் சுருக்க மாகச் சொல்லி ஆர்க்காட்டு நவாபின் படையிற் சேர்ந்து படைத் தலைவனுக – கமாண்டராக—உயர்ந்து கம்மந்தான் கான்சாகிபு ஆனுன் என்று கூறுகிறது. பின்னர் ஆங்கிலேயரிடம் படைத் தொழில் புரிந்தவன் பிரஞ்சுப் படைகளுக்கு எதிராகப் போரிட்டு வென்றுன். பரங்கிப்பெண் 'மாஷா' என்பாளை மணந்தான்.

1. கான் சாகிபு சண்டை சரஸ்வதி புத்தகசாலை,கொழும்பு (1958) பக்:3, 98
2. டாக்டர் ந. சஞ்சீவி. கும்மந்தான் கான்சாகிபு. பாரி நிலையம்: சென்னை- (1960) பக்: 1.
3. 'மஹதி'. மாவீரர் கான்சாகிப். யுனிவர்சல் பப்ளிஷர்ஸ். சென்னை -1 (1961) பக் : 14.

அடங்காதிருந்த பாளையக்காரர்கள் அனைவரையும் அடக்கி ஆங்கிலேயருக்கு வரி செலுத்தச் செய்தான். இதன் விளைவாக ஆங்கிலேயர் இவனை மதுரைக்குச் சுபேதார் ஆக ஆக்கினர். பாளையக்காரர்களுடன் புரிந்த பல்வேறு போர்களின்போதும் வெற்றியே பெற்றான். நாளடைவில் சுதந்திர மன்னனைப்போல இவன் நடந்துவருவதை அறிந்த ஆங்கிலக் கம்பெனியாரும், நவாபும் இவனைப் பதவியிலிருந்து நீக்க முடிவு செய்தனர். கர்னல் மன்சார் என்ற படைத்தலைவனின் கீழ் அனுப்பப்பட்ட ஆங்கிலப்படை கடுமையாக முற்றுகையிட்டு மதுரைக் கோட்டையைப் பிடித்துக் கான்சாகிபைச் சிறைப்படுத்தியது. எந்த ஆங்கிலேயர்களுக்கு ஆதரவாக இந்நாட்டுப் பாளையங்களையெல்லாம் அதிரவைத்து ஆட்டிப் படைத்தானோ அந்த ஆங்கிலேயராலேயே தூக்கிலிடப்பட்டான். இவனது வீரமும் வீழ்ச்சியும் மக்களின் மனத்தில் பெரிதும் இடம்பெற்றதாலேயே இவனைத் தலைவனாகக் கொண்டு கதைப் பாட்டும் தோன்றியது எனலாம். கான்சாகிபு கதை 'வில்லுப் பாட்டு' எனக் கூறப்பட்டாலும் பாடும் அளவில் அமையவில்லை தற்போது வில்லுப்பாட்டாகப் பாடப்படுவதும் இல்லை.

### கட்டபொம்மன் கதை

வெள்ளையரை எதிர்த்து வீரம் விளைவித்த வீரபாண்டியக் கட்டபொம்மனின் கதையும் வில்லுப்பாட்டாகப் பாடப்பட்டு வந்தது. எனினும் தற்காலம் வழக்கத்தில் இல்லை. பாஞ்சாலங்குறிச்சியில் நடைபெறும் விழாவில் சில ஆண்டுகளில் பாடப்படுவதைத் தவிர வேறு இடங்களில் பாடப்படுவதில்லை.

பாஞ்சாலங்குறிச்சி அரச மரபின் 47ஆம் வேந்தனாகத் தோன்றிய வீரபாண்டியன் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன்.[1] இவனது வீரவரலாறு கூறும் 'வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல்' கும்மிச் சந்தத்தில் முழுவதுமாகப் பாடப்பட்டுள்ளது. அளவில் பெரியதாகவும் உள்ளது. 7410 வரிகள் அமைந்த இப்பாடல் கட்டபொம்மு சரித்திரக் கும்மி என்றே தலைப்பிடப்பட்டுள்ளது.[2] எனினும் இரவிக்குட்டிப்பிள்ளை போர்ப் பாடலைப் போலவே இதுவும் வில்லுப்பாட்டாகப் பாடப் பெற்றிருக்கலாம்.

1. ஜெகவீரபாண்டியனார். பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம். திருவள்ளுவர் நிலையம். மதுரை (1954) பக் : 45.

2. நா. வானமாமலை (பதிப்பு) வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல் மதுரைப் பல்கலைக் கழகம் (1971) பக்: 23.

இவ்வாறாக, வரலாற்று வீரர்களைப் பற்றிய பாடல்கள் வில்லுப்பாட்டு வடிவத்தில் ஆக்கப் பெற்றனவாகவும், கும்மிப் பாட்டு மெட்டில் அமைந்து வில்லுப்பாட்டில் பாடத் தகுந்தவாறு அமையப் பெற்றனவாகவும் இருப்பினும் ஓரொரு காலத்தில் பாடப்பெற்றுப் பின்னர் வில்லுப்பாட்டாகப் பாடும் வழக்கினை இழந்துவிட்டன. இதற்குரிய காரணத்தைப் பின்வருமாறு நா. வானமாமலை கருதுவதை இங்கே குறிப்பிடலாம்.

''தெய்வங்களைப்பற்றிய பாடல்கள் இன்னும் மக்கள் நினைவிலிருந்து அழியாமல் இருப்பதற்குக் காரணம் அத் தெய்வங்களின் வழிபாட்டு நாட்களில் அவை பாடப்படுவதே. இன்றும் கொடை நாட்களில் நெல்லை மாவட்டத்தில் அம்மன் கதைகளும் மாடன் கதைகளும் வில்லுப்பாட்டுகளாகப் பாடப்படுகின்றன. ஆனால் வரலாற்று வீரர்கள் தெய்வங்களாக வணங்கப்படுவதில்லை. கட்டபொம்மனுக்கோ தேசிங்குராஜனுக்கோ கோவில்கள் இல்லை. கொடை நடத்துவதும் இல்லை.''[1]

பிற வரலாற்று வீரர்களுக்குக் கோயில் இல்லை என்றாலும் ஐவர் ராசாக்கள் என்பார் தெய்வங்கள் ஆகியிருத்தலை அறிகிறோம். ஐவர் ராசாக்கள் கதை இரவிக்குட்டிப் பிள்ளை போர் ஆகியவை ஆங்கில ஆதிக்கம் ஏற்படும் முன் நிகழ்ந்த வரலாற்றுச் செய்திகளையும் கான்சாகிபு சண்டை கட்டபொம்மன் கதை ஆகியவை ஆங்கில ஆதிக்கம் ஏற்பட்ட காலத்து வரலாற்றுச் செய்திகளையும் எடுத்துரைக்கின்றன.

மேலும் கான்சாகிபுவின் முடிவு, கட்டபொம்மனின் முடிவு ஆகியவை பாட்டு வடிவில் மக்களிடையே பரவி ஆங்கிலேய ஆதிக்கத்திற்கு எதிரான சுதந்திர வேட்கையையும் நாட்டுப்பற்று உணர்ச்சியையும் வளர்த்தன.

மிகவும் அருகிக் காணப்படும் வரலாற்று வீரர்கள் பற்றிய வில்லுப்பாட்டுகள் பாடும் வழக்கத்திலிருந்து முற்றிலும் மறைந்து விட்டன என்றே கூறிவிடலாம். எனினும் அவை இலக்கிய வடிவில் படித்துப் பயன்பெறத் தக்கதான பாமரர் பாடல்களாக நிலவி வருகின்றன.

### வில்லுப்பாட்டின் தோற்றம்

'வில்லுப்பாட்டு', சிற்றூர்த் தெய்வங்களுக்கு வழிபாடு நிகழ்த்தும் 'கொடை' விழாக்களிலேயே சிறப்பிடம் பெறுவது. பாட்டுப்

1. நா. வானமாமலை (பதிப்பு) கான்சாகிபு சண்டை. மதுரைப் புல்கலைக் கழகம். மதுரை-2. (1972) பக்: 3,

புலவர்கள், மற்றும் கலைஞர்கள் வாயிலாக இக்கலை பலதலைமுறைகளாக வழங்கிவருவதென அறிகின்றோமேயன்றி, இன்னவாறு இன்ன காலத்தில் தோன்றி வளர்ந்தது எனத் தெளிவாகக் கூறுவதற்குரிய சான்றுகள் இல்லை. பொதுவாக எல்லாக் கலைகளின் நிலையும் இதுவே எனலாம். எனவேதான் கலைகள் பலவற்றின் தோற்றங்கள் கடவுளர்களுடன் தொடர்பு படுத்தப்பட்டன எனக் கருதலாம்.

எனினும் இக்கலையின்பால் ஆர்வமும் ஈடுபாடும் கொண்ட பெருமக்கள் இதன் தோற்றம் குறித்துச் சிந்தித்ததன் விளைவாக எழுந்த சில கருத்துக்களைக் காணலாம்.

''வில்லிசை என்னும் வில்லுப்பாட்டு, தென்பாண்டி நாட்டிற்கே உரியதொரு அரிய கலை. தமிழ்ப் பொதிகைக் காட்டிடத்தே வேட்டையாடப் புகுந்த வில்வீரன் ஒருவன் பகற்பொழுதெல்லாம் வேட்டையாடிக் களைத்துச் சோர்ந்தவன், மாலை நேரத்தில் செழித்த மரமொன்றின் அடியில் அமர்ந்தான். தன் கையமர்ந்த வில்லைத் தரையில் சார்த்தி, அம்புக்கோலால் அவ்வில் நாணில் மெல்லிய தாளவோசை தோன்ற அடித்து, அத்தாளத்திற்கேற்ப இன்னிசைத் தமிழ்ப்பாடல் பாடித் தன் களைப்பு நீங்கப் பெற்றான்.

''வில் வீரனது களைப்பை மாற்றவந்த கலையாகிய வில்லிசை மலைநாட்டுச் சிறுதெய்வப் பெரும்பூசைக் கொடை நாட்களில் பொதுமக்கள் உள்ளத்தைப் பரவசப்படுத்தும் நல்லிசைக் கலையாக உருவாயிற்று.''[1]

நெல்லைப் பகுதியில் சிறுதெய்வக் கோயிலைப் 'பேய்க் கோயில்கள்' என வழங்குவர். இந்தப் 'பேய்க்கோயில்'களிலே நிலை கொண்ட தெய்வங்களின் கதைகளைப் பாடப் பயன்பட்ட வில்லுப் பாட்டினைச் சைவப் பெருமுனிவர் வரலாறுகளையும், தமிழ், கண்ணகி, வள்ளுவர் வரலாறுகளையும் பாடிப் பரப்புவதற்குப் பயன்படுத்தும் புதுமையைப் படைத்தனர், நெல்லை அருணகிரி இசைக் கழகத்தார். அந்நாளில் கழகத்தார் கருத்தில் உருக் கொண்ட எண்ணமே மேலே காண்பது.

வில்லுப்பாட்டுக் கதை பாடும்போது கதையின் வேகத்தால் அவ்வப்போது 'வீராவேச ஆரவாரம்' மேலோங்கி நிற்கும். இதற்கேற்றவாறு, பாட்டு நிகழும் கோயிலின் சூழ்நிலைகள் பேரச்சம்

1. செந்தமிழ்ச் செல்வி, சித்தாந்த மலர் (சிலம்பு: 26. பரல்: 10) கழக வெளியீடு. சென்னை; [ஜூன் 1952] பக்: 477.

தரும் பின்புலத்தை அமைக்கும். இந்நிலையில் இக்கலையினைக் காணவும் கேட்கவும் நேர்ந்த எஸ். மகாராஜன் பின்வருமாறு கருதினார்.

"ஆதிமனிதன் வாழ்ந்த உலகமானது பயம் நிறைந்த உலகம். புளியமரத்தடியிலே பூதம் இருக்கும், சந்தியிலே முக்கடிக் கருப்பன்; வேங்கை மரத்திலே வேதாளம். எதைப் பார்த்தாலும் மனிதனுக்கு மருட்சி; சொல்ல முடியாத பீதி; ஈரலைக் கலக்கி ஆன்மாவையே கலக்கும் எல்லையற்ற பயங்கரம். இந்த உணர்ச்சியைச் சமாளிப்பதற்காகவே தான் ஆதிமனிதன் ஒரு விசித்திரமான சங்கீதத்தைச் சிருஷ்டிக்க ஆரம்பித்தான். இந்தச் சங்கீத ரகத்தைச் சேர்ந்துதான் நாம் திருநெல்வேலி ஜில்லாவில் கேட்கக் கூடிய வில்லுப்பாட்டு."[1]

வில்லுப்பாட்டின் முதன்மைக் கருவியான வில், வீரர்களின் வேட்டைக்கருவியாகவும், போர்க்கருவியாகவும் தொன்று தொட்டுப் பயன்பட்டுவரும் கொலைக்கருவியாகும். கூரிய நேரிய அம்பினைக் குறிதவறாமல் செலுத்துவதன் மூலமாக, எதிர் நிற்போருக்கு இன்னலும் இறுதியும் தந்திடும் ஓர் கொலைக் கருவி, எதிர் இருந்து கேட்போருக்கு இன்பம்—இசையின்பம்—விளைவிக்கும் கலைக்கருவியாக அமைந்தது எவ்வாறு? இவ்வாறு சிந்தித்து இவ்வினாவிற்கு விடைகாண முனைந்த புலவர் பிச்சைக்குட்டி தரும் செய்தி வருமாறு :

"வில்லின் நாணொலியை நமது மக்கள் கேட்டு ஆனந்தித்துள்ளார்கள். பிற்காலத்தில் வெண்கலம் போன்ற உலோகங்களினால் ஆக்கப்பட்ட சிறிய சதங்கைகளை வில்லின் இரண்டு நுனிகளிலும் பொருத்திக் கொள்ளும் வழக்கம் வந்தது. வெற்று நாணொலியை விடச் சதங்கைகள் பொருத்தப்பட்ட பின்னர் நாணினுடைய அதிர்ச்சி சதங்கைகளில் பரவ அதனால் ஏற்படும் நாதமும் நாணொலியும் சேரும்போது மிகவும் இங்கிதமான இனிய ஓசை கிளம்பலாயிற்று. வேட்டையாடிக் களைத்த சமயங்களிலும் கூட்டமாக இருந்து கேளிக்கையாகப் பொழுதுபோக்க விரும்பிய காலங்களிலும் சதங்கைகள் பொருத்தப்பட்ட வில்லின் நாணைத் தட்டி ஓசை எழுப்பிக்கொண்டே பாட்டுக்கள் பாடி ஆனந்திக்கத் தொடங்கினார்கள். இப்படி ஏற்பட்ட அனுபவம்தான் பின்னர் தங்களுக்கு நன்கு பழக்கப்பட்ட தாளக் கருவிகளாகிய குடமுழவு, உடுக்கு, தாளம், பம்பை ஆகியவற்றையும் இணைத்துக் கூட்டு இசையாக மலரச் செய்தது.

---

1. எஸ். மகராஜன், ஒலிச் செல்வம். மனோன்மணி பதிப்பகம். மதுரை (1974) பக்: 40.

''பழைய போர்க்கருவியாக இருந்த வில்லைச் சற்றே பெரி தாக்கி அதன் முதுகுப் புறத்தில் பெரிய சதங்கைகளைப் பொருத்தி அசல் கலைக்கருவியாக்கி விட்டார்கள். கொலைக் கருவியாக இருந்த வில் கலைக்கருவியாக மாறின கதை இதுதான்''.[1]

இக்கலை தோன்றிய பாங்கினைப் பற்றி டாக்டர். ஏ. என். பெருமாள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

''வில்லுப்பாட்டை மிகச்சிறந்த நாட்டுப்புறக்கலையாகக் கூறலாம். வில்லின் நாணொலி மகிமையை அறிந்த மனிதன் அதனை முறைப்படுத்தி விரைவில் இசையின் வசப்படுத்திக் கருவி களின் துணையினை அதோடு இணைத்து வில்லிசையைச் செம்மைப் படுத்தி ஒரு நல்ல பெரும் கலையாக்கி மகிழ்கிறான். இன்று நெல்லை, குமரி ஆகியவற்றில் வில்லுப்பாட்டுக்கலை சீருடனும் சிறப்புடனும் வளர்க்கப்படுகிறது.''[2]

கவிஞர் சுப்பு ஆறுமுகம் தரும் கருத்து வருமாறு :

''தென்பாண்டி நாட்டுப் பகுதியில் அன்றுள்ள வேடர்கள் காட்டில் தங்கள் வேட்டை முடிந்ததும் மரத்தடி நிழலில் கூடி யிருந்து தோளிலிருந்த வில்லை மடியில் சாய்த்து அம்பை அந்த நாணில் தட்டித் தட்டிப் பாட்டைத் துவக்கியிருக்கிறார்கள். பாவத்தின் கரையில் புண்ணியம். ஆடலின் முடிவில் பாடல். கொல்லும் விளையாட்டின் ஓய்வில் வில்லுப்பாட்டு. இதுதான் வில்லுப்பாட்டுக்குச் சொன்னால் பொருந்தக் கூடிய சுவையான வரலாறாக இருக்கமுடியும்.''[3]

'சோமலெ' பின்வருமாறு கருதுகிறார் :

''கட்டபொம்மனின் வீரவாழ்க்கையை உணர்ச்சியோடு உரைப்பதற்கு வில்லுப்பாட்டுக்கலை தோன்றிற்று... சிறு தெய்வங் களை வழிபட வில்லுப்பாட்டு நன்கு அமைகிறது... வேட்டையாடிய வில்வீரன் களைப்புற்ற நிலையில் பாடிய பாடல்களே இவை.''[4]

மு.சண்முகம்பிள்ளை வழங்கும் விளக்கம் வருமாறு :

---

1. சா. பா. பிச்சைக்குட்டி, 'வில்லிசை' கட்டுரை. தமிழ்வட்டம். 2-ஆம் ஆண்டு மலர். (11-4-1969). பக்: 165-166.
2. டாக்டர். ஏ. என். பெருமாள்—நாட்டுப்புறக் கலைகளின் வரலாறு. (கட்டுரை). கிராமியக் கலைவிழா, சிறப்புமலர். தமிழ்நாடு இயல் இசை நாடகமன்றம். சென்னை. (1678) பக்:40.
3. சுப்பு ஆறுமுகம். காந்தி வந்தார். (வில்லுப்பாட்டு) கலைவாணர் பதிப்ப கம் சென்னை-17. (1969). பக்:5.
4. சோமலெ. நமது தமிழ்நாடு. திருநெல்வேலி மாவட்டம். பாரிநிலையம் சென்னை-1. 1965 பக்:136,

"பண்டை மனிதர்களின் வேட்டைத் தொழிலுக்கும் போர்த் தொழிலுக்கும் பயன்பட்ட முக்கியமான கருவி வில். இக் கருவியில் மணி கோத்திருப்பது வழக்க மென்பதைக் கம்ப இராமாயணம் போன்ற காவியங்கள் வாயிலாய் அறிந்து கொள்ளலாம். இராமனுடைய வில்மணி ஓசை ஒலிக்கேற்ப யானை முதலிய எதிரிகளின் படைகள் வீழ்ந்தன என்பதைக் கம்பர், "கடுமணி நெடியவன் வெஞ்சிலை, கணகண கணகண எனும் தொறும்" (யுத்த : மூலபல : 214) என்று குறிப்பிடுகின்றார். இங்ஙனம் வெற்றிபெற்ற வீரர்கள் மகிழ்ச்சியால் வில் நாண், வில்மணி ஒலிக்கேற்ப மகிழ்ச்சிக் கூத்து ஆடினர். இந்த வில்மணி ஓசை. மகிழ்ச்சிக் கூத்தாட்டத்திற் கேற்ப அமைந்திருப்பது கொண்டு, வீரர் வழிபாட்டிலும் வில்லை இயக்கி ஆடிப்பாடும் மரபு தோன்றியிருக்கலாம். மற்றும் இதுபற்றிய இன்னொரு கருத்தும் உண்டு. அதாவது வேட்டைத் தொழிலில் ஈடுபட்டு வீர வாழ்வு நடத்திய மனிதன் ஓய்வு நேரங்களில் இளைப்பாறும் போது வில்மணி ஓசைக்கேற்பப் பாடியிருக்கலாம் என்பதே. எவ்வாறாயினும் வில்லிசை எழுப்பிப் பாடும் பாடல் வீரர்களின் எழுச்சிக்காகவே முதன் முதலில் தோன்றியிருத்தல் வேண்டும். பின்னர் அது வீரர் வழிபாட்டிற்கும் பயன்பட்டிருக்க வேண்டும் எனக் கருதுவது இயல்பே".[1]

பல்வேறு கருத்துகள் வில்லுப்பாட்டின் தோற்றம் குறித்துக் காணப்படும் நிலையில், வழிவழியாக வில்லுப்பாட்டைக் கையாண்டு வரும் கலைஞரிடையே வழங்கும் ஓர் பாடல், இக்கலையின் தோற்றத்திற்குத் தெய்வநிலை ஏற்றி அமைதி கொள்ளும் வகையும் இங்கே காணலாம்.

> "விநாயகர் குடம்போட—வெற்றி
> வேலவர் வலம்பாட
> பார்வதியாள் வில்லடிக்க—எங்கள்
> பரமசிவம் கதைகள் கேட்க"

இவ்வாறெல்லாம் கூறப்பெறும் கருத்துகள் அனைத்தும் 'வில்லேர் உழவர்' ஆகிய வீரர்களின் கதை சொல்லும் ஆர்வம், ஆற்றல் ஆகியவற்றின் அடிப்படையிலேயே வில்லுப்பாட்டுக்கலை தோன்றியிருத்தல் கூடும் எனவே பொதுவாகக் குறிப்பிடுதலைக் காணலாம். 'வேட்டம்' மேற்சென்று மீண்ட வீரர், ஆநிரை கவரவும், மீட்கவும் செய்த போரில் வீரம்காட்டி மடிந்தவர் பற்றிய செய்திகளைப் பிறர்கேட்டு மகிழுமாறு தம் திறமைக்கு

1. மு. சண்முகம்பிள்ளை. ஈனமுத்துப்பாண்டியன் கதை முன்னுரை. தமிழாய்வு. ௨. சென்னைப்பல்கலைக்கழகம். 1974. பக்;V.

ஏற்ப எடுத்துரைக்கும் நிலை ஏற்படுதல் இயல்பே ஆகும். அவ்வாறு எடுத்துரைக்கும்போது கையிலுள்ள வில்லைத் தட்டிக்கொண்டே உணர்ச்சிப் பெருக்கால் இசைகூட்டிப் பாடியிருத்தலும் கூடும்.

இவ்வாறு பாடும் முறையே, பின்னர் வெற்றி விளைக்கும், கொற்றவையை வழிபட்டு வாழ்த்தி நிற்கும் காலத்திலும், வீழ்ந்த வீரர்களுக்கு நடுகல் நாட்டி வழிபாடு செய்யும் காலத் திலும், கொற்றவை வரலாற்றினையும் நடுகல்லின் தெய்வநிலை பெற்றோர் வரலாறுகளையும் பாடுவதற்கும் பயன்பட்டிருத்தல் கூடும். கையிலுள்ள வில்லைத் தட்டிப் பாடிய போது ஆநிரை, கவருங்கால் துணைபுரிந்த துடியாகிய இசைக்கருவியும், வழிபாட்டுக் காலங்களில் ஒலிக்கப் பெற்ற பிற இசைக்கருவிகளும் அத்துடன் பக்கத் துணையாகச் சேர்ந்திருத்தலும் இயல்பே.

நாளடைவில், 'ஐயன் வரலாறு' எனத் தெய்வ வரலாறு முறையாகப் பாட நேர்ந்த நிலையில், ஆசுகவிப் புலமை வாய்ந்த ஒருவர்—பாணர் போன்றோர்—வீரர் தம் வில்லினையே முதன்மைக் கருவியாகக் கொண்டும் பிறகருவிகளைப் பக்கமேளங்களாகச் சேர்த்துக் கொண்டும் கதைபாடத் தொடங்கியிருத்தல் கூடும். இவ்வாறாக வில்லினை முதன்மைக் கருவியாகக் கொண்டதோர் கூட்டிசைப் பாட்டு தோற்றமெடுத்துப் படிப்படியாகப் பக்க மேளங்களிலும், பாடும்முறைகளிலும், கதைப் பொருளிலும் மாற் றங்களைப் பெற்று நாளடைவில் முழுநிலை வில்லுப்பாட்டுக் கலை யாக வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும் என்றே கருதலாம்.

மேலும், வில்லுப்பாட்டு அமைப்பிலே, வில்லில் பொருத்தப் பெற்றுள்ள மணிகள் ஆநிரைகளின் கழுத்தில் அணியப்படுவன போன்று பெரிய அளவில் காணப்படுதல், அவை ஆநிரை கவர்ந்த வெற்றிக்கு அறிகுறியாக அந்த ஆநிரைகளின் கழுத்து மணி களையே வீரர்கள் தங்கள் வில்லில் பொருத்திக் கொண்டனரோ என எண்ண இடம் தருகின்றது.

ஆநிரை கவர்ந்திடும் காலத்தில் துணை புரிந்ததும், வழி பாட்டுக் காலத்தில் சிறப்பாக ஒலிக்கப் பட்டதும் ஆகிய துடியே முக்கியமான துணைக் கருவியாக அமைந்துவிட நேர்ந்ததும் காண்கி றோம்.

இன்று வரையிலும் 'குடம்' பயன்படுத்தப்பட்டு வரும் நிலை யினை நோக்கும் போது, களத்திலிருந்து மீண்டபின் கள்ளுண்டு[1]

1. "தொட்டிமிழுங் கழன் மறவர், மட்டுண்டு மகிழ்தூங்கின்று"—14, உண்டாட்டு, வெட்சிப்படலம், ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பா மாலை, கழகவெளியீடு. (1972) பக்:22.

மகிழ்ந்த வீரர், களிப்பு மிகுதியால் காலியான அக்குடங்களையே கையால் தட்டித் தாளமிட்டவாறு கதைபாடுவோருடன் சேர்ந்து கொண்டு பாடி மகிழப் பின்னர் அதுவே வில்லுக்குரியதோர் துணைக் கருவியாகக் 'குடமும்' அமைந்துவிடக் காரணமாகி இருத்தல் வேண்டும் என்றே எண்ணத் தோன்றுகிறது.

கஞ்சக்கருவிகள், பாணர் போன்றோர் பழங்காலம் தொட்டே தங்களுடன் வைத்துக் கொண்டிருந்தவை. ஆதலால் தாளத்திற்காக அவையும் சேர்த்துக் கொள்ளப் பெற்றிருத்தல் கூடும் எனவே கருதலாம்.

வீரர்கள் தம் கையிலிருந்த அம்பினால் வில்லைத் தட்டிப் பாடினர் எனும் கருத்தும் பொருத்தமானதே. தற்போது புலவரால் பயன்படுத்தப்படும் 'வீசுகோல்கள்' அம்பினுக்குப் பதிலாக இடம் பெற்றவையே என்பதைத் தெளிவாகக் காட்டுவன போன்றே அமைந்துள்ளன.

எவ்வாறு தோன்றியிருத்தல் கூடும் என்பதற்குரிய எண்ணங்களே மேலே கூறப்பெற்றன. இனி வில்லுப்பாட்டு எந்தக் கால எல்லையில் தோன்றியிருத்தல் கூடும் என்பதனைக் காண உதவும் சில இலக்கியச் செய்திகளைக் காணலாம்.

### இலக்கியச் செய்திகள்

தற்காலத்தில், இந்த 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுந்த 'மருமக்கள்வழி மான்மியம்' எனும் நூலிலே வில்லுப் பாட்டு நிகழ்ச்சியைப் பற்றிய குறிப்புக்களைக் காணலாம்.

> ''ஆண்டுதோறும் ஆலடி மாடன்
> கொடைக்கு ரூபாய் கொஞ்சமா செல்லும்
> போன கொடைக்குப் புதிதாய் வந்த
> வில்லுக்காரி வீரம்மைக்கு
> நாலுசேலையும் ரூபாய் நாற்பதும்
> கொடுத்தது நீயும் கூடியல்லவா''[1]

ஒவ்வொரு ஆண்டிலும் ஆலமரத்தடி மாடன் தெய்வத்திற்குக் கொடை நடத்தல், அது மிகுதியான பொருட்செலவில் சிறப்பாக நிகழ்தல், கொடைவிழாவின் முக்கிய நிகழ்ச்சியாக வில்லுப் பாட்டு நடைபெறுதல், ஆண்டுதோறும் புதிய வில்லுப்பாட்டுக் காரர்களின் நிகழ்ச்சிக்கு ஏற்பாடுசெய்தல், பெண்டிர் புலவராக அமர்ந்து கதை பாடுதல், அவர்களுக்குச் சேலைகளும் பணமும்

1. தேசிக விநாயகம்பிள்ளை—மருமக்கள் வழிமான்மியம். (7. கருடாஸ்திரப் படலம்) பாரி நிலையம், சென்னை-1, (1970). பக் : 47.

கொடுத்துச் சிறப்புச் செய்தல் ஆகிய வில்லுப்பாட்டுச் செய்திகள் பலவும் இப்பகுதியால் அறியமுடிகிறது.

நாஞ்சில் நாட்டு ஒருசார் மக்களின் சமுதாய வழக்கத்தினைச் சுட்டிக்காட்டும் இந்த 'மருமக்கள்வழி மான்மியம்' அப்பகுதி மக்களிடையே வில்லுப்பாட்டு அடைந்துள்ள செல்வாக்கினை நன்கு புலப்படுத்துகிறது எனலாம்.

'பள்ளு' நூல்களுள் தலைசிறந்ததாகிய 'முக்கூடற்பள்ளு' ஆறை அழகப்ப முதலியார், திருமலைக்கொழுந்துப் பிள்ளையன் ஆகியோர் வாழ்ந்த காலமாகிய கி.பி. 1676 முதல் 1682-க்குள் இயற்றப்பட்டதாகலாம் என்பர்.[1] 17-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியைச் சேர்ந்த இந்நூலுள் வில்லுப் பாட்டு'ச் செய்திகள் காணப்படுகின்றன.

இந்நூலில் வரும் மூத்தபள்ளி, பண்ணை ஆண்டையிடம் தன் கணவனுகிய வடிவழகக் குடும்பனைக் குறித்து முறையீடு செய் கையில், அவன் கொட்டு, கூத்து, கொடை என்றே காலம் கழித் தான் என்றும், ஊர்க்கொடையை ஒட்டி ஏற்பாடு செய்யப்பெற்ற வில்லுப்பாட்டிற்கும் கணியான் பாட்டுக்குமாக மக்களிடம் வரி மேல் வரியாக அரித்துப் போட்டுவிட்டான் என்றும் வில்லுப் பாட்டுக்கு அளவுக்கு அதிகமாகவே 'மொய்'வைத்துப் பாராட்டுச் செய்தான் என்றும் குறிப்பிடுகிறுள்.

> "உரத்திடும் காளை - சூழியன்
> நரைத்நலை மோழை - புதியவன்
> ஊட்டுக்குக் குறித்தான் - வில்லடிப்
> பாட்டுக்குப் பொறித்தான்"[2]

> "ஆருக்கும் பணியான் - சீவலப்
> பேரிக்குள் கணியான் - வில்லென்னும்
> அரிப்பிட்டுப் போட்டான் - பள்வரி
> தெரிப்பிட்டுக் கேட்டான்"[3]

'வில்லுப்பாட்டு' வில் என்றும் 'வில்லடிப்பாட்டு' என்றும் வழங்குதலை இப்பகுதிகள் குறிப்பிடுகின்றன. மேலும் ஓர் சிறப் பான செய்தியும் இங்கு அறியமுடிகிறது. குறிப்பிட்டுள்ள முதல் பகுதியுள் காணப்படும் 'புதியவன்', நெல்லைமாவட்டத்தில்

1. ந. சேதுரகுநாதன் (உரை) முக்கூடற் பள்ளு. கழகவெளியீடு, சென்னை-1. (1970) பக், 31
2. ந. சேதுரகுநாதன் (உரை) முக்கூடற்பள்ளு, கழக வெளியீடு, சென்னை, (1967) பக்: 114.
3. " " " பக்: 118.

பரவலாக வணங்கப் பெற்றுவரும் 'தடிவீரசாமி'யின் முன்னோடித் தெய்வம்; வடிவழகக் குடும்பன் இப் 'புதியவன்' தெய்வத்திற்கு ஊட்டுப் போட்டுக் கொடுக்க விரும்பி, அதற்காகும் செலவினங்களுக்காகவே குறிப்பிடப்பட்டுள்ள காளைகளை விலைகுறித்து விற்று விட்டான் என அறிகிறோம்.

'ஊட்டுப்' பெறும் புதியவன் எவ்வாறு தடிவீரசாமி (மந்திர மூர்த்தி)யின் முன்னோடித் தெய்வமானான் என்ற கதையினை மந்திர மூர்த்தி கதை வில்லுப்பாட்டின் வாயிலாக அறியலாம். குலத் தாழ்ச்சியைப் பற்றிக் கவலைகொள்ளாமல் மந்திரமூர்த்தியிடம் மாணவனாகச் சேர்ந்து அவன்பால் பல மந்திரங்களைக் கற்றுணர்ந்த பின், புதியவனுக்கு ஆணவம் மேலிடுகிறது. அதன் விளைவாக ஆசானுக்கும் மாணவனுக்கும் இடையே எழுந்த பகைமையாலேயே மந்திரமூர்த்தியைக் காட்டிக்கொடுக்கிறான் புதியவன். இதனால் மாண்டுபோக நேரும் மந்திரமூர்த்தியோ பேய் வடிவந் தாங்கிப் புதியவனைப் பழிவாங்கிவிடுகிறான். எனினும், செய்த பிழைக்கு வருந்தி மன்னிப்புக் கேட்கவே, புதியவனை மன்னித்துத் தன் முன்னோடித் தெய்வமாகவும் ஏற்றுக்கொள்கிறான் தடிவீர சாமி ஆன மந்திரமூர்த்தி.

இந்த மந்திரமூர்த்தி திருநெல்வேலிச் சீமையை ஆண்ட வட மலையப்ப பிள்ளை காலத்தில் வாழ்ந்தவனாகக் காட்டப்படுகின்றான். முக்கூடற்பள்ளு 'புதியவன்' தெய்வமாகி வழிபாடுபெறும் நிலையைக் குறிப்பதால் 'மந்திரமூர்த்தி' வாழ்ந்தகாலம் முக்கூடற்பள்ளு எழுந்த காலத்திற்கு முந்தியதே என்பது தெளிவு. இக்காலத்தில் ஆண்டிருந்தவராகக்குறிக்கப் பெறும் வடமலையப்பபிள்ளை 16-ஆம் நூற்றாண்டிலேயே மச்சபுராணத்தைத் தமிழில் தந்து புகழ்பெற்ற வடமலையப்பபிள்ளையன்[1] என்பாரே எனக் கொள்ளலாம். முக்கூடற்பள்ளு 'வடமலேந்திரன்'[2] எனக் குறிப்பிடும் வடமலையப்ப பிள்ளையனும் இவரே யாதல் வேண்டும் எனலாம். அவ்வாறாயின் 16-ஆம் நூற்றாண்டில் வில்லுப்பாட்டு பரந்த நிலையில் வழங்கப் பட்டுவந்த பான்மையினை அறியலாம்.

இந்நிலையில், 16-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்[3] எழுந்த 'தெய்வச் சிலையார் விறலிவிடுதூது' எனும் நூலினுள் வில்லுப் பாட்டைக் குறித்த செய்தி சிறப்பாக அமைவதைக் காணலாம்.

---

1. டாக்டர் தெ. பொ. மீ. தமிழ்ப்புராணங்கள் (கட்டுரை) கலைக் களஞ்சியம் தொகுதி 7 தமிழ்வளர்ச்சிக் கழகம் சென்னை. (1960) பக்: 438.
2. ந. சேதுரகுநாதன் (உரை) முக்கூடற் பள்ளு, கழக வெளியீடு. (1970 பக்: 22.
3. மு. அருணாசலம்—தமிழ் இலக்கிய வரலாறு, காந்தி வித்யாலயம், மாயூரம். (1976) பக்: 293.

இந்நூலின் கதைத்தலைவனாகிய 'நடலிங்கப் பட்டன்' என்பான் மாமனுருடன் ஏற்பட்ட சச்சரவால் தன் மனைவியைப் பிரிந்து சென்று சங்கரநயினார் கோவிலைச் சேர்ந்த 'அதிரூப ரத்தினம்' என்ற தாசியின் மையலில் சிக்கித் தன் கைப்பொருள் யாவும் இழக்கிறான். அந்த நங்கையின் நன்மைக்காக ஆங்குள்ள தாய்க்கிழவியின் யோசனைப்படி, சுடலைமாடன் கோயிலுக்குத் தன் செலவில் தனிக்கொடை கொடுத்து வழிபடும் நிலைமை அவனுக்கு நேர்கிறது. இதனைக் குறித்துவருந்தும் நிலையில் விறலியிடம் பின் வருமாறு விவரிக்கிறான்.

> "................. வெறுக்கரிது
> தொந்தமுள்ள நாள்வரைக்குத் தோற்றுது வேறொன்றுஞ்
> செந்தளிர்க்கை நல்லாள் திரண்டநாள் - வந்துதொட்ட
> மாடெனன்ற தேவதைக்கு வைச்சு வணங்குவளாம்
> ஆடுபன்றி கோழியிவை யல்லாமல் - பாடுகின்ற
> வில்லாம் முரசாம்கை வெட்டும் கணியானும்
> எல்லா வகைக்கும் எழுபதுபொன் செல்லுமென்று
> கேட்ட படிக்குக் கொடுத்தேன்..."[1]

இப்பகுதியுள் 'பாடுகின்ற வில்லாம்' என்ற சொற்கள் வில்லுப் பாட்டைக் குறித்து நிற்கின்றன. மக்களனைவரும் சேர்ந்து கொடுக்கும் ஊர்க்கொடையில் மட்டுமன்றி ஒருவரே தன் செலவில் கொடுக்கும் தனிக்கொடையிலும்கூட வில்லுப்பாட்டு இன்றியமை யாத நிகழ்ச்சியாக அமைகின்ற தன்மையும் இங்கே அறியலாம். இதனால் 16-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வில்லுப்பாட்டு பெருவழக்குடையதாக இருந்தமை தெளியலாம்.

தமிழ்நாட்டு நாட்டுப்புற இயல் பற்றிய "The Folklore of Tamil Nadu' எனும் ஆங்கில நூலுள் வில்லுப்பாட்டைப் பற்றிய விவரம் தரப்படுகிறது. இதில் 15-ஆம் நூற்றாண்டில் அரசப் புலவர் என்னும் ஒருவரால் 'வில்லுப்பாட்டு' உருவாக்கப் பெற்றது என்ற செய்தியைக் காண்கிறோம்.[2] இச் செய்திக்கு உரிய ஆதாரம் ஏதும் தெரியவில்லை. என்றாலும் முன்பு கூறப்பட்ட இலக்கியச் சான்றுகளைக் கொண்டு காணும்போது 15-ஆம் நூற்றாண்டில் இக் கலை தோற்றம் பெற்றதெனக் கொள்வதிலும் தவறில்லை எனலாம். எனினும் இதற்கும் முந்திய காலத்திலேயே இக்கலை வழக்கிலிருந் திருக்க வேண்டும் எனக்கருதலாம். 16-ஆம் நூற்றாண்டின் இடைப்

1. குமாரசாமி அவதானி, தெய்வச்சிலையார் விறலிவிடுதூது(1936) பக்:32.
2. 'Somalay' Folklore of Tamil Nadu, National Book Trust India (1973) page, 150.

பகுதியில் பெருவழக்குப் பெற்றிருந்த நிலையில் இதற்குச் சில நூற்றுண்டுகளுக்கு முன்பேனும் வில்லுப்பாட்டுகளை உருவாக்கம் பெற்றிருத்தல் வேண்டும் எனலாம்.

'ஐயனுக்குப் பாடும் பாட்டு'

'வில்லுப்பாட்டு' எனும் களஞ்சியக் கட்டுரையுள் 'பாமர மக்கள் பரம்பரையாகப் பாடிவருகிற பாடலைப் பல்வரிக்கூத்து என்பர் அடியார்க்கு நல்லார். இதன் வகையில் ஒன்று எனலாம் வில்லுப்பாட்டை' என்று ஆசிரியர் கு. அருணுசலக் கவுண்டர் குறிப்பிடுகிறுர்.[1]

அடியார்க்கு நல்லார், சிலப்பதிகார அரங்கேற்றுக் காதையுள் 'பல்வரிக்கூத்தும் விலக்கினிற் புணர்த்து' எனும் அடிக்குப்பொருள் விரிக்கையில், அவ்வுரைப்பகுதியின் இறுதியில் வரி எட்டுவகைப் படும் எனக் கூறுவதன்மேல் ''இவ்வரி என்பதனைப் பல்வரிக் கூத் தென்பாரும் உளர் என்னை'' எனக்குறிப்பிட்டுப் பின்வரும் மேற் கோளைத் தருகிறுர்.

''சிந்துப் பிழுக்கை யுடன்சந்தி யோர்முலை
கொந்தி கவுசி குடப்பிழுக்கை-கந்தன்பாட்
டாலங்காட் டாண்டி பருமண னெல்விச்சி
சூலந் தருநட்டந் தூண்டிலுடன்-சீலமிகும்
ஆண்டி அமன்புனவே டாளத்தி கோப்பாளி
பாண்டிப் பிழுக்கையுடன் பாம்பாட்டி-மீண்ட
கடவுட் சடைவிர மாகோசங் காமன்
மகிழ்சிந்து வாமன ரூபம்-விகடநெடும்
பத்திரங் கொற்றி பலகைவாள் பப்பரப்பெண்
டத்தசம் பாரந் தகுணிச்சங்-கத்து
முறையீண் டிருஞ்சித்து முண்டித மன்னப்
பறைபண் டிதன்புட்ப பாணம்-இறைபரவு
பத்தன் குரவையே பப்பறை காவதன்
பித்தனெடு மாணி பெரும்பிழுக்கை-எத்துறையும்
ஏத்திவரும் கட்களி யாண்டு விளையாட்டுக்
கோத்த பறைக்குடும்பு கோற்கூந்து-மூத்த
கிழவன் கிழவியே கின்ருப் பிருண்டி
அழகுடைய பண்ணிவிக டாங்கம்-திகழ்செம்பொ
னம்மனை பந்து கழங்காட லாலிக்கும்

1. கு. அருணுசலக் கவுண்டர்,ர்வில்லுப்பாட்டு, (கட்டுரை) கலைக் களஞ்சியம் தொகுதி, 9. தமிழ்வளர்ச்சிக் கழகம், சென்னை, (1968) பக் : 362.

விண்ணகக் காளி விறற்கொந்தி-அல்லாத
வாய்ந்த தனிவண்டு வாரிச்சி பிச்சியுடன்
சாந்தமுடைய சடாதாரி-ஏய்ந்த விடை
தக்க பிடார் நிர்த்தந் தளிப்பாட்டுச் சாதுரங்கம்
தொக்க தொழில் புனைந்த சோணுண்டு-மிக்க
மலையாளி வேதாளி வாணி குதிரை
சிலையாடு வேடு சிவப்புத்-தலையில்
திருவிளக்குப் பிச்சி திருக்குன்றயிற்பெண்
டிருண் முகத்துப் பேதை யிருளன்-பொருமுகத்துப்
பல்லாங் குழியே பகடி பகவதியாள்
நல்லார் தந் தோள்வீச்சு நற்சாழல்-அல்லாத
உந்தி யவலிடி யூராளி யோகினிச்சி
குந்திவரும் பாரன் குணலைக்கூத்-தந்தியம்போ
தாடுங் களிகொய்யு முள்ளிப்பூ வையனுக்குப்
பாடும்பாட் டாடும் படுபள்ளி-நாடறியும்
கும்பீடு நட்டங் குணட்டங் குணலையே
துஞ்சாத சும்மைப்பூச் சோகை-மஞ்சரி
ஏற்ற வுழைமை பறைமுத லென்றெண்ணிக்
கோத்தவரிக் கூத்தின் குலம்''[1]

கலிவெண்பா யாப்பில் எழுதப்பெற்ற இந்த நீண்ட மேற்கோள் நாட்டுக்கலைகளின் சுரங்கம் எனலாம். இது யார் கூற்று என அறிய இயலவில்லை. ஏறத்தாழ நூறு வகை நாட்டுப்புறக்கலைகள் இங்கே குறிக்கப்படுகின்றன எனலாம். ஒவ்வொரு வகையினையும் தனித்தனியே விரித்துரைக்கும்இலக்கணங்களும் இருந்திருக்கலாம். ஆனல் அவற்றை நாம் அறியமுடியவில்லை. எனினும் இம் மேற்கோள், அந்தக் காலத்திலே நாட்டுப் புறக்கலைகளின் மீது நாட்டம் செலுத்தி அவைகுறித்து ஆய்ந்து இலக்கணமும் காணுகிற நிலை இருந்ததனைத் தெளிவாக்குகிறது.

அம்மனை, பந்து, கழங்கு, பல்லங்குழி ஆகியன இன்றும் வழக்கிலிருப்பவை 'பிழுக்கை' எனும் சொல் நான்கு இடங்களில் வருகின்றது. இச்சொல் கூத்து என்னும் பொருள் உடையதாக இருக்கலாம். சிந்துப் பிழுக்கை என்பது சிந்துபாடி ஆடும் கூத்தாகலாம். முருகனுக்கு ஆடும் காவடியாட்டமாகவும் இருக்கலாம். மன்மதனை நோக்கிப் பாடும் சிந்து காமன் மகிழ்சிந்து எனப் பின்னல் கூறப்படுகின்றது. ஓர் முலை கொந்தி என்பது கண்ணகி கதை

1. சிலப்பதிகாரம் மூலமும் அடியார்க்கு நல்லார் உரையும். உ.வே.சா. பதிப்பு. (1960) பக் 88-89

குறித்த கூத்தாகலாம். குடப்பிழுக்கை, பதினொரு வகை ஆடலுள் ஒன்றாகிய குடக்கூத்து எனும்[1] குடம் கொண்டு ஆடும் ஆட்டமாகலாம். இதுவே, இன்றைய நிலையில் 'கரக ஆட்டம்' எனும் நிலையில் எஞ்சி நிற்பதாகலாம். பாண்டிப் பிழுக்கை என்பது பள்ளி எழுச்சிப்பாட்டாகலாம். 'பாண்டிகன்' எனும் சொல் பள்ளி எழுச்சி பாடுவோன் எனப் (வைதாளிகன்) பொருள்படுகிறது.[2] அல்லது 'பாண்டில்' எனும் கஞ்சக்கருவியினை இயக்கிப் பாடும் பாட்டாகலாம். பாம்பாட்டி என்பது 'மகுடி' என வழங்கும் பாம்பிசை ஆகலாம். இறைபரவு பத்தன் குரவை, மாயோனையோ முருகனையோ வாழ்த்தும் குரவையாட்டம் ஆகலாம். கோற் கூத்து கோலாட்டம் ஆகலாம். மூத்த கிழவன் கிழவியே என்பது, இன்றும் நரைமுடிக் கோலத்துடன் ஆடிப்பாடும் 'பகல் வேடக் காரர் எனப்படுவோர் நிகழ்த்தும் கூத்தினைப் போன்றதாகலாம். ஆலிக்கும் விண்ணகக் காளி என்பது இன்றும் நெல்லைமாவட்டத் தின் சில பகுதிகளில் வழக்கில் இருக்கும் 'காளிவேட' ஆட்டமாகலாம். கிள்ளுப் பிறண்டி என்பதும் ஒருவகை ஆடலாகும். வாய்ந்த தனிவண்டு, திருவாசகத்துள் காணப்படும் திருக் கோத்தும்பி போன்றதோர் வகையில் அமைந்தது ஆகலாம்.

சாந்தமுடைய சடாதாரி என்பது சிவனின் கூத்தாகவும். ஏய்ந்த விடை தக்க பிடார் நிர்த்தம் என்பது சின விடை மேல் நின்று அருளும் காளியின் (கொற்றவை) ஆட்டமாகவும் கொள்ள லாம். சாதுரங்கம், சதுரங்க ஆட்டமாகலாம். குதிரை என்பது பொய்க்குதிரை ஆட்டமாகவும் கருதலாம். நல்லார்தம் தோள் வீச்சு, நற்சாழல், உந்தி ஆகியவை முறையே திருவாசகத்துள் காணப்படும் திருத்தோள் நோக்கம், திருச்சாழல், திருவுந்தியார் என்பனவே எனலாம். அவலிடி என்பதும் திருப்பொற் சுண்ணம் போன்றதோர் 'உலக்கைப்பாட்டு' வகை எனலாம். குணலைக் கூத்து என்பது 'வென்றிக்கூத்து' போன்றதாகலாம்.[3] அந்தியம் போதாடும் களி என்பது மாலைக்காலத்து ஆடுவதோர் கூத்தாக லாம். கொய்யு முள்ளிப்பூ என்பது திருவாசகத்துத் திருப்பூவல்லி

1. சிலப்பதிகாரம் கடலாடுகாதை (அடியார்க்குநல்லார் உரை) உ.வே.சா பதிப்பு. (1978) பக்: 191.
2. V. Visvanatha pillaih. A Tamil English Dictionary. The Madras School Book and Literature Society. (1972) page: 525
3. 'குணலை a warrior's shout of triumph, joy, valour or defiance, V. Visvanatha pillai A Tamil English Dictionary. The M.S.B.L. society 1972 page: 255

போன்றதாகலாம் ஏனையவும் இவ்வாறே ஒரொரு கூத்து வகையினைப் போன்றதாக இருக்கலாம்.[1]

'ஐயனுக்குப் பாடும் பாட்டு' என்பதும் அவற்றுள் ஒன்றாக அமைக்கிறது. ஐயன் எனும் தெய்வம் குறித்துப் பாடப்பெறும் பாட்டு என்பது தான் இத்தொடரின் பொருள் எனலாம். தெய்வத் தொடர்புடையதெனத் தெளிவாக அறியமுடிகிற கந்தன் பாட்டு, ஆலங்காட்டாண்டி, சூலந்தரும் நட்டம், காமன் மகிழ் சிந்து, வாமன ரூபம், பிடார் நிர்த்தம், இருளன், பகவதி போலும் வகைகள் கூறப்படுவதினின்றும் வேறுபட்டுப் 'பாடும் பாட்டு' எனக் குறிப்பிடப்படுவது கொண்டு 'ஐயனுக்குப் பாடும் பாட்டு' என்னும் இவ்வகை பலரால் கூட்டாகப் பாடப்படும் பாட்டாக அமைவதெனவும் மற்றவை ஓரளவு கூத்து நிகழ்ச்சிகளாக அமைவன எனவும் கருதலாம். ''பாடுகின்ற வில்லாம்' என்ற தெய்வச்சிலையார் விறலிவிடுதூதின் தொடரும் இங்கு எண்ணிப் பார்க்கத் தக்கதாம்.

வில்லுப்பாட்டுப் புலவர் பெருமக்களால் வழிவழியாகப் பாடப்பெற்றுவரும் தெய்வக் கதைகளுள் முதன்மைச் சிறப்புடையது ஐயன் கதை எனப்படும் சாத்தா கதையே ஆகும். பிற தெய்வக் கதைகளையோ அல்லது சமுதாயத் தொடர்புடைய பிற வகைக் கதைகளையோ வில்லில் பாடுவதாக இருந்தாலும்கூட ஐயன் பிறப்பை முதன் முதல் சுருக்கமாகவேனும் பாடிமுடித்த பின்னரே அன்று குறிப்பிட்ட கதையினைப் பாடும் ஓர் மரபினை இன்றும் வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகளில் கையாளுகின்றனர்.

சங்க காலத்திலேயே பெருவழக்குடையதாக இருந்துவந்த சாத்தன் வழிபாடு இன்றுவரை அந்நிலையிலேயே மக்களிடை நிலவி வருகிறது[2]. இச்சாத்தனே ஐயன் எனவும் வழங்கப்பட்டான் என்பதைப் 'பாசண்டச் சாத்தற்கு' எனும் தொடருக்குச்

---

1. மு. அருணாசலம் இர்மேற்கோள்பற்றிக் கருத்துத் தெரிவிக்கையில், கழங்கு, துணங்கை, குரவை, பகடி, பகவதி, பந்து, பறை, பாம்பாட்டி, பிடாரன் ஆகியவை தத்துவராயர் பாடுதுறையுள் (15-ம் நூற்) இடம் பெற்றுள்ளன என்றும், ஆலங்காட்டு ஆண்டி என்பது காரைக்கால் அம்மை கதையுடன் தொடர்புடையது எனவும், சும்மைப்பூ ஓர் வள்ளைப்பாட்டு என்றும் 'ஆடும்படுபள்ளி 'பள்ளு நூலாக வளர்ச்சி பெற்றிருக்கலாம் என்றும் சோழன் கல்வெட்டுகளில் காணும் திருவிளக்குப் பிச்சன் என்பதன் பெண்பால் திருவிளக்குப் பிச்சி என்றும் கூறியுள்ளார்.
   தமிழ் இலக்கிய வரலாறு 12-ம் நூற்றாண்டு (2) காந்தி வித்தியாலயம் மாயூரம் (1975) பக் 591
2. பி.எல். சாமி, சாத்தன் வழிபாடு (கட்டுரை) 'ஆராய்ச்சி' மலர்: 4. இதழ்: 2. (ஜனவரி 74) பக்: 152.

'சாத்தன் என்ற ஐயன் கோவிலிலே' என அரும்பத உரைகாரர் பொருள் கூறுவதிலிருந்து அறியலாம்[1].

சிலப்பதிகார வேட்டுவவரிக் கொற்றவைத் தெய்வத்தின்—ஐயையின்—இயல்புகளாக அரன் அரி ஆகிய இரு தெய்வங்களின் ஆற்றல்களும் ஒருங்கே வைத்துக் கூறப்படுகின்றன.[2] ஐயன் அல்லது சாத்தா ஆகிய தெய்வம் அரன் அரி ஆகிய இரு தெய்வங்களின் இணைப்பால் தோன்றியதாகவே புராணக் கதைகள் சொல்கின்றன. இவ்விரண்டினையும் பொருத்திப் பார்க்கையில் கொற்றவை எனவும் 'ஐயை' எனவும் வழங்கி வந்த அத் தாய்த் தெய்வத்தின் அமிசங்களையே கொண்டதாகக் கருதி அடுத்து வணங்கப்பெற்ற 'மகன்' தெய்வமே 'ஐயன்' என அறியலாம்.

சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதையுள் கோவலன் பாணருடன் யாழிசைத்துப்பாடிய செய்தியைக் காண்கிறோம். இளங்கோவடிகள் இதனை "ஆடியல் கொள்கை அந்தரி கோலம் பாடும் பாணரிற் பாங்குறச் சேர்ந்து" எனவும் 'பாய்கலைப்பாவை பாடற்பாணி ஆசான் திறத்தின் அமைவரக் கேட்டுப் பாடற்பாணியளைஇ" எனவும் குறிப்பிடுகிறார்.[3] இவற்றால் வெற்றி விளக்கும் கொற்றவையாகிய 'ஐயை'யின் கோலத்தினை விளக்கிப் பாடும் பாட்டினைப் பாணர்கள் பாடும் வழக்கம் அக்காலத்தில் இருந்தமையும், அது பாய்கலைப் பாவைக்குப் பாடும் பாட்டாக அமைவதும் நன்கு அறியலாம். இவ்வாறே அத்தாய்த் தெய்வத்தின் இயல்புகளைக் கொண்ட 'ஐயன்' தெய்வத்திற்குப் பாடும் பாட்டும் பாணர்களால் பாடப்பெற்றிருத்தல் வேண்டும் எனக் கருதலாம்.

வில்லுப்பாட்டினில் இன்றுவரையும் ஐயன் கதை பெற்றுள்ள முதன்மைச் சிறப்பினை நோக்க, ஐயன் வரலாறு பாடும் வழக்கமே முதன் முதல் வில்லுப்பாட்டிலே இடம் பெற்றிருத்தல் கூடும் என எண்ணலாம்.

மேலும், 'பாட்டு' என்னும் சொல்வழக்கு இன்றுவரை வில்லுப்பாட்டுக் கலைஞர்களிடையே 'வில்லுப்பாட்டு' என்னும் பொருளிலேயே பயன்பட்டு வருதலும் காண்கிறோம்.

---

1. சிலப்பதிகாரம். கனாத்திறம் உரைத்த காதை. அரும்பத உரை. உ.வே.சா. பதிப்பு. (1960),பக்: 240.
2. சிலப்பதிகாரம். வேட்டுவவரி பாடல்கள்: 8, 9, 10, 11, 21, 22, 23. உ.வே.சா. பதிப்பு (1978) பக்: 316-319.
3. சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதை. வரி: 104-105; 111-183. கழக வெளியீடு சென்னை-1. (1972) பக்: 71-72,
4. சிலப்பதிகாரம் 'வேட்டுவவரி' (வரி: 13) 'வெட்சிப் புறநடை' (வரி: 4) உ. வே. சா. பதிப்பு (1978) பக்: 312-317.

கொற்றவையாகிய ஐயையின் போர்க் கருவியாகவும்; பின் ஐயன் தெய்வத்தின் போர்க் கருவியாகவும் அமைந்த வில்லே வில்லுப் பாட்டின் முதன்மைக் கருவியாக அமைந்துள்ளது எனலாம்.

இவை யாவும் நோக்க, அடியார்க்கு நல்லாரின் மேற்கோளில் காட்டப்பெறும் 'ஐயனுக்குப் பாடும் பாட்டு' எனும் தொடர் முழு அளவில் வளர்ச்சி பெற்ற அல்லது பெரும் அளவில் வளர்ச்சியுற்ற நிலையிலான வில்லுப்பாட்டுக் கலையினையே குறித்து நிற்பதாகும் எனக் கொள்ளலாம்.

அடியார்க்கு நல்லாரின் காலம் குறித்தும் ஆய்வாளர் கருத்து வேறுபாடு கொள்கின்றனர். இவர் காலம் 12-ஆம் நூற்றாண்டு எனவும்,[1] 14-ஆம் நூற்றாண்டு எனவே கருதலாம் எனவும்.[2] தெளிவுறுத்துவர். 'ஐயனுக்குப் பாடும் பாட்டு' எனும் தொடர் வில்லுப்பாட்டுக் கலையினைக் குறிப்பதெனக் கொள்ளலாம் எனின், அடியார்க்கு நல்லார் காலமாகிய 14-ஆம் நூற்றாண்டிற்கு முன்பே தோன்றிய அம் 'மேற்கோள் ஆசிரியர்' காலத்திற்கும் முற்பட்ட தான காலப்பழமை உடையதோர் கலை, வில்லுப்பாட்டு என அறியலாம்.

### புலவர் ஐயம்பிள்ளையின் கருத்து

இதுவரையிலும் அறியமுடிகிற வில்லுப்பாட்டின் காலம் குறித்த இலக்கியச் செய்திகள் இவ்வாறெல்லாம் உள்ளன. இனி, வில்லுப்பாட்டினைப் பரம்பரையாகவும் பழைய மரபுவழியும் கையாண்டு வரும் திருநெல்வேலி முதுபெரும்புலவர் ஐயம்பிள்ளை நேரில் தெரிவித்த ஓர் செய்தியினைக் குறித்தும் இங்கு எண்ணிப் பார்த்தல் நலம். இக்கலை தோன்றிய காலம் குறித்து அன்னார் தெரிவிக்கையில், 'வில்லுப்பாட்டு' மாணிக்கவாசகர் காலத்தி லிருந்தே வழங்கி வருவது என்பதே பலகாலமாகச் சொல்லப்பட்டு வரும் செய்தி' என அறிவித்தனர். இதனைச் செவிவழிச் செய்தி தானே எனப் புறக்கணிக்க முடியவில்லை. இதிலும் உண்மை இருக்கலாம்.

நாட்டுப்புறக் கலைகளின் செல்வாக்கு மணிவாசகரின் திருவாசகத்துள் சிறப்பாக அமைந்திருப்பதைக் காணலாம்.[3] நாட்டுப்

1. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு- 12ஆம் நூற்றாண்டு 2-ஆம் பாகம். காந்தி வித்தியாலயம் மாயூரம் (1973) பக்: 537.
2. டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் 'அடியார்க்கு நல்லார்' அடியார்க்கு நல்லார் உரைத் திறன். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை. (1976) பக்: xx vii.
3. டாக்டர் சு. சண்முக சுந்தரம் நாட்டுப்புற இலக்கியத்தின்செல்வாக்கு இலக்கிய மாணவர் வெளியீடு சென்னை-5 (1979) பக்: 29-32.

பாடலின் பண்புகள் பல திருவாசகத்துள் காணப்படும் பாங்கினை எடுத்துக் காட்டுவர்.[1]

அடியார்க்கு நல்லார் காட்டும் நாட்டுப்புறக் கலைகள் அடங்கியதான 'சிந்துப் பிழுக்கை' எனத் துவங்கும் மேற்கோளில் திருவாசகத்தில் எடுத்தாளப்படும் அம்மானை, உந்தியார், சாழல் போன்றவை தெளிவாகக் குறிக்கப்பெறுதலை முன்பே கண்டோம்.

'தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச் சிற்றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடி
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக்கு ஊட்டாங்காண் சாழலோ.[2]

இத்திருவாசகப்பாடல் காளிக்கு ஊட்டுப் போட்டுக் கொடுத்தல் பற்றிக் குறிப்பிடுகிறது. ஊட்டுப் போட்டுக் கொடுத்தல் என்பதும் 'கொடை' கொடுத்தல் என்பதும் ஒரே பொருளில் வழங்கப்படுவன. ''வில்லோட முரசோட ஊட்டுப் போட்டுத் தருவார்கள்'', ''வில்லோடே முரசோடே கொடை கொடுத்தார் அந்நேரம்'' எனவரும் 'சுடலைமாடன்கதை'யின் வரிகள்.[3] இதனை உணர்த்தும்.

மணிவாசகர் காலத்திலேயே காளியூட்டு எனப்படும் தெய்வ வழிபாட்டுமுறை பெருவழக்காக இருந்ததால்தான் அது அவர்தம் பாடலில் இடம்பெற நேர்ந்தது எனக் கருதலாம். ஊட்டு அல்லது கொடை நடைபெறுதல் அதனையொட்டி நடைபெறும் பாட்டு நிகழ்ச்சிகளும் மேளங்களும் இல்லாமல் நடைபெறுவதே இல்லை. மேலே கூறப்பெற்ற 'சுடலைமாடன் கதை'யின் வரிகளிலும், 'கொடையும்', 'ஊட்டும்' பற்றிக் குறிப்பிடும் தெய்வச் சிலையார் விறலிவிடுதூது, முக்கூடற்பள்ளு போலும் நூல்களில் காணும் பாடல் பகுதிகளிலும், வில்லுப்பாட்டும் கணியான் பாட்டும் கொடையில் இன்றியமையா நிகழ்ச்சிகள் எனக் குறிக்கப்பெறுதல் காணலாம்.[4]

பேய்க்கொடை, காளியூட்டு இவற்றைக் குறிப்பிடும்போது, மேற்கண்ட திருவாசகப் பாடலை மேற்கோள் காட்டும்

---

1. தா. சேதுபாண்டியன் திருவாசகத்தில் நாட்டுப் பாடற் கூறுகள் (கட்டுரை) ஆறுவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை. இ.ப.த.ம. (1974) பக்: 347-352
2. மணிவாசகர் திருவாசகம் திருச்சாழல் பாடல் 14 திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியீடு (1969) பக்: 89
3. சுடலை மாடன் வில்லுப் பாட்டு. கலைமகள் கம்பெனி திருநெல்வேலி 1961 பக: 4, 5
4. இங்கே குறிக்கப் பெறும் பாடல் பகுதிகளை முன்னரே காணலாம்.

மு. சண்முகம் பிள்ளை, "சிறுதெய்வங்களின் வழிபாட்டையொட்டி அதற்கான இசையும் கூத்தும் பாட்டும் எழுந்திருத்தல் இயல்பே" என்பர்,[1] இன்றும், கணியான் பாட்டு இல்லாவிட்டாலும் கூட, வில்லுப்பாட்டு இல்லாமல் கொடை கொடுக்கும் வழக்கம் தென் மாவட்டங்களில் இல்லை.

மாணிக்கவாசகர் காலம் குறித்துப் பல்வேறு விதமான கருத்து களைக் கூறுவர். எனினும் ஒன்பதாம் நூற்றாண்டு என்பதே பலரும் ஒப்பக் கூறும் கருத்தாம்.[2] காளியூட்டு அல்லது காளியம்மன் கொடை நடைபெறுதல் பெருவழக்காக இருந்திருத்தல் கூடும் எனக் கருத இயலும் மாணிக்கவாசகர் காலத்தில் அக்கொடை விழாவின் இன்றியமையாத நிகழ்ச்சிகளாக வில்லுப்பாட்டும் அது போலும் பிற இசை நிகழ்ச்சிகள் கூத்து நிகழ்ச்சிகளும் நடந்திருத் தல் வேண்டும் என்றே கொள்ளலாம்.

மேலும் முன்னர் விவரித்த 'ஐயனுக்குப் பாடும் பாட்டு' எனும் தொடர், திருவாசகப் பாடல்வகை பலவற்றைக் குறிப் பிடும் அடியார்க்கு நல்லார் காட்டும் மேற்கோளிலேயே அமைந்து காணப்படுவதும் இங்கே சிந்திப்பதற்குரியது.

எனவே, புலவர் ஐயம்பிள்ளை தரும் செய்தி உண்மைக்குப் பொருந்தவதாகவே கருத இடமுள்ளது எனலாம்

வில்லுபபாட்டின் தோற்றம் குறித்த பல்வேறு கருத்துகளை யும் இலக்கியச் செய்திகளையும் இதுவரையிலும் அறிந்தவாறு தொகுத்துக் கண்டோம். இதன் தொடர்பாக மேலும் செய்தி கள் கிடைக்கப் பெறுமாயின் தெளிவான உண்மைகள் இன்னும் பல வெளியாகலாம்.

### வில்லுப்பாட்டின் தற்கால வளர்ச்சி

"காலத்துக் கொவ்வாத சில அம்சங்களை நீக்கிவிட்டு வில்லுப்பாட்டை ஒரு கலைக்கருவியாய் அமைக்க வேண்டியது தமிழர் கடமை. இந்தக் கடமையைத் திறமையுடன் செய்து வருகிறார் சாத்தூர் பிச்சைக்குட்டி" என்று முன்னாள் நீதிபதி

---

1. மு. சண்முகம் பிள்ளை ஈனமுத்துப் பாண்டியன் கதை முன்னுரை. தமிழாய்வு.3. சென்னைப்பல்கலைக் கழகம் 1975 பக்: xi

2. 1. மு.சு. அருள்சாமி தமிழ் இலக்கிய வரலாறு பாரிநிலையம் சென்னை-1 1978 பக்: 178--180

   2. மு. அருணாசலம் தமிழ் இலக்கிய வரலாறு 9-ஆம் நூற்றாண்டு 1 காந்தி வித்தியாலயம் மாயூரம் 1875 பக்: 35J, 438

   3. அ.ச. ஞானசம்பந்தன். மாணிக்கவாசகர் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1974 பக்: 37

எஸ். மகராஜன் குறிப்பிட்டுள்ளார்.[1] தற்கால வில்லுப்பாட்டின் வளர்ச்சிக்கு முன்னோடியாக நின்று முதல் வித்திட்டவர் இங்கே குறிப்பிடப் பெற்ற காலஞ்சென்ற சாத்தூர் பிச்சைக்குட்டியே ஆவார்.

இவருடைய சீரிய முயற்சியாலேயே, சிற்றூர்த் தெய்வங்களின் கோயில் கொடை விழாக்களில் மட்டுமே இடம்பெற்று அத்தெய்வங்களின் கதைகளையே பாடிவந்த 'வில்லுப்பாட்டு', கோயில் அல்லாத பொது மேடைகளிலும் இடம்பெற்று, இலக்கியத் தொடர்பான கதைகளையும், தேசத்தந்தை காந்தியடிகள் போன்றோரின் வரலாறுகளையும் பாடும் நிலைக்கு வந்தது. பாமர மக்கள் மட்டுமே கேட்டு இன்புற்று வந்த இக்கலை, படித்தவர் மத்தியிலும் ஒலிக்கத் தொடங்கிய நிலையில் கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பினைத் தரும் கலையாக விளங்கத் தலைப்பட்டது.

*பிச்சைக்குட்டியின் பெரும்பணி*

வில்லுப்பாட்டுக் கலைக்குப் புதியதோர் பொலிவைத் தேடித் தந்த பிச்சைக்குட்டி, சாத்தூர் உயர்நிலைப்பள்ளியில் இடைநிலை ஆசிரியராகப் பணியாற்றியவர். அந்தக் காலத்தில் இவர் வாழ்ந்த சாத்தூர்ப் பகுதியில் அம்மை நோய் வெகுவாகப் பரவியது. மக்கள் பெரிதும் அல்லலுக்கு ஆளாயினர். ஊர்மக்கள் அம்மன் கோயிலுக்குக் கொடை விழா நடத்தினர். விழாவின் சிறப்பு நிகழ்ச்சியாக வில்லிசைப் புலவர் ஐயம்பிள்ளையின் வில்லுப்பாட்டு பல நாட்கள் தொடர்ந்து நடத்தப்பட்டது. பாட்டை நாள் தோறும் கேட்டு மகிழும் வாய்ப்புக் கிடைத்த ஆசிரியர் பிச்சைக் குட்டிக்கு இக்கலையில் ஆர்வம் பிறந்தது. அவரிடம் இயல்பாக அமைந்திருந்த கலையுணர்வு (நாடகங்கள் பலவற்றில் நடித்த அனுபவமும் இவருக்கு உண்டு) வில்லுப்பாட்டுக் கலையின் பால் அவருக்கு ஏற்பட்ட ஆர்வத்திற்கு உறுதுணையாய் அமைந்தது. தமது பள்ளியிலேயே ஓர் வில்லிசைக் குழுவை உருவாக்கினார். மாணவர்களைக் கொண்டு முதலில் அமைக்கப்பட்ட இக்குழு புதிய கருத்துகளையும், வரலாறுகளையும் வில்லுப்பாட்டின் வழியே வெளியிட்டது. இக்குழு இவரது கலையாற்றலினால் பல இடங்களிலும் நிகழ்ச்சிகளை நடத்திப் புகழ்பெறலாயிற்று.

ஆசிரியரின் கலை ஆர்வம் இதனால் மேலும் மேலும் வளர்ந்தோங்கவே, தாமே புலவராக இருந்து பாடும் ஓர் குழுவினை அமைத்துக் கொண்டார். புலவர் ஐயம்பிள்ளையின் பாட்டுகளை

1. எஸ். மகராஜன் 'வில்லுப்பாட்டு' (கட்டுரை.) (1940-இல் ஒலிபரப்பாகிய பேச்சு) ஒலிச்செல்வம், மனோன்மணி பதிப்பகம், மதுரை, (1974) பக்:45

ஆர்வமுடன் கேட்டுச் சுவைத்த அனுபவத்தைக் கொண்டு, அவர் தம் பாட்டு 'முறைகளைப் பின்பற்றிப் பாடிப் பயிற்சி செய்து, வில்லுப்பாட்டு மெட்டுக்களைப் புதிய மெருகுடன் பாடும் திறம் வாய்ந்தவர் ஆனார். (பிச்சைக்குட்டி, தம் வாழ்வின் இறுதிவரையும் புலவர் ஐயம்பிள்ளையே தமக்கு வழிகாட்டியும் ஆசானும் ஆவார் எனக்கருதி, உரிய மதிப்பும் மரியாதையும் காட்டிவந்தார் என்பது குறிப்பிடத்தக்கது)

தம்முடைய குழுவின் மூலமாகப் பல்வேறு கருத்துகளையும் எடுத்துரைத்துப் பிரச்சாரம் செய்யலானார். இவர் கொண்டிருந்த முற்போக்குக் கொள்கைகள் இவர் பாட்டின் இடையிடையே தலை காட்டின. சமுதாயச் சிக்கல்கள் பலவற்றையும் பொருத்தமாக வும் நயமாகவும் பாட்டோடு பாட்டாகப் பரப்பினார். கதை நிகழ்ச்சிகளுக்கு ஏற்றவாறு பல்வேறு துணைக்கதைகளைப் பொருத்த மான நகைச்சுவையுடன் எடுத்துரைத்துக் கேட்கும் மக்கள் அனை வரையும் அடிக்கடியும் சிரிக்கச் செய்வதிலும் அதே நேரத்தில் ஆழ்ந்து சிந்திக்கச் செய்வதிலும் ஒப்பற்ற தனித்திறமை கொண்டு விளங்கினார். ஆயினும், இவர்தம் முற்போக்குக் கொள்கைகள் அரசியல் ஈடுபாடுகள் ஆகியவை காரணமாகத் தாம் பார்த்துவந்த ஆசிரியர் வேலையினின்றும் இவர் விலகும்படியாக ஆயிற்று ஆனாலும், இதுவே வில்லுப்பாட்டுக்கலை இவரால் ஆக்கம் பெற்றுத் திகழ்வதற்கோர் நல்வாய்ப்பாகவும் அமைந்தது எனலாம்.

*புதிய மாறுதல்கள் இடம் பெறுதல்*

வேலையினின்றும் விலகியபின் வில்லுப்பாட்டில் முழுமூச்சாக இறங்கினார். முழுநேரக் கதைகள் பாடினார். அந்நாளில் இவர் பாடிய 'சீதாக் கல்யாணம்' வில்லுப்பாட்டு, இலக்கியச் சுவை யோடும் புதிய மெருகுடன் அமைந்த மெட்டுகளிலும் பாடப் பெற்றது. வில்லுப்பாட்டுக்கலை, புதிய பாதையில் நடைபோடத் துவங்கியது. எனினும் பழைய மரபுகள் சிதையாமல் வில்லுப் பாட்டிற்குரிய தனித்தன்மைகள் கெடாமல் நிகழ்ச்சிகளை நடத் தினார். ''சீதாக்கல்யாணம்'', பாடும் முறையிலும், உரை சொல்லும் முறையிலும் பழமைக்கும் புதுமைக்கும் இடைப்பட்ட நிலையில் அமைந்திருந்தது. (இசைத்தட்டாக வெளிவந்த இவ் வில்லுப்பாட்டினைக் கேட்போர் இதனை நன்குணரலாம்.)

நாளடைவில் தமக்குரிய தனித்திறமையால் வில்லுப் பாட்டிலே பல புதுமைகளைப் புலவர் பிச்சைக்குட்டி புகுத்தலானார். (1) பாடும் முறை (2) பாடும் நேரம் (3) பக்கமேளங்கள் (4) இசையின் அமைப்பு (5) கதைப் பொருள் ஆகியவற்றில் இவர்

கையாண்ட மாறுதல்கள் குறிப்பிடத்தக்கன ஆகும். அவற்றை ஒவ்வொன்ருகக் காணலாம்.

(1) பாடும் முறை : வில்லுப்புலவர்கள் தம் கதைநிகழ்ச்சிகளில் பொதுவாகப் பாடல்களையே மிகுதியும் பாடுவர். இடையிடையே உரை விளக்கப்பகுதி அமையும். ஆனாலும் அவ்வுரைப் பகுதிகள் தாளமற்ற ஒருவகையான இசையோடு இழுத்துச் சொல்லப் படுவனவாகவே அமையும். பிச்சைக்குட்டி இந்த முறையை மாற்றி, உரைப்பகுதியை நன்கு நிறுத்திக் கூறும் தெளிவான சொற்பொழிவு முறையில் அமைத்தார். இதனால் பாடல் பகுதிக்குக் கருத்து விளக்கம் தருவதைக் கேட்போர் தெளிவாகப் புரிந்துகொள்ளும் நிலை ஏற்பட்டது. பாட்டும் உரையும் முழுமை யாக வேறுபடுத்திக் காட்டப்பெறும் எடுத்துரை அழகும் அமைவ தாயிற்று.

(2) பாடும் நேரம் : கோயில்களில் நிகழும் வில்லுப்பாட்டு கள் இரவு முழுவதும், பல இரவுகள் தொடர்ந்தும் பாடப் பெறுவன. கோயில் அல்லாத பிற பொது இடங்களில் நிகழ்ச்சி கள் இவ்வாறு நடைபெற இயலாது. எனவே இத்தகைய நீண்ட நேர அளவைக் குறைக்கச் சில திருத்தங்கள் செய்யப் பெற்றன. கோயில் விழாக்களில் நடைபெறும் வில்லுப்பாட்டில், கதைநிகழ்ச் சிகள் பலவற்றையும் பல அடிகளில் வெவ்வேறு சொற்களிலே மீண்டும் மீண்டும் விளக்கமாகப் பாடுவர். பின்பாட்டுக்காரர்கள் தொடர்ச்சியாகப் புலவர் பாட்டை நீண்ட நேரம் வாங்கிப் பாடுவர். (புலவர் பாடி முடிக்கும் ஒவ்வொரு நிலையிலும் ஏ...ஏ...ஏ; ஆ . ஆ...ஆ; ஓ...ஓ...ஓ என்றெல்லாம் இழுத்துப் பாடி முடிப்பர்.) பக்கமேளங்களும் நீண்டநேரம்—துவக்க மேளம், முடிப்பு மேளம் ஆகியவை தட்டப்படும் போதும், பாட்டின் இடையிடையேயும்—இயக்கப் பெறும். இத்தகைய காலம் நீட்டிக்கும் முறைகளைக் குறைத்துக் கொண்டு கதைகளைச் சுமார் மூன்று அல்லது மூன்றரை மணிநேரத்திற்குள் பாடிமுடிக்கும் நிலை யினை ஏற்படுத்தினர். இதன் வளர்ச்சியாகவே தற்பொழுது வானொலி நிகழ்ச்சிகள் பதினைந்து அல்லது பத்து நிமிட அளவில் கூட அமையும் நிலை ஏற்படலாயிற்று.

(3) இசையின் அமைப்பு : வில்லுப்பாட்டிற்குரிய பழமை யான அமைப்புகளையே பிச்சைக்குட்டி போற்றிக் கையாண்டார். எனினும், மிகுதியும் ஒரே இசைவகையை மீண்டும் மீண்டும் பாடு வதை விடுத்தும், அதிகமாக இழுத்துப் பாடாமலும், தெளிவாக வேறுபாடு தெரியும்படியாகப் பலவகையான மெட்டுவகைகளை

அளவுடன் ஒலி கூட்டிப் பாடியும், மாற்றம் தோன்றும்படியாக அவ்வப்போது வேறுபட்ட இசைகளை மாறி மாறிப் பாடியும், கேட்பவர்களுக்குப் புதுச்சுவை ஊட்டினர்.

இவ்வாறு வில்லுப்பாட்டிற்கே உரிய பழைய சந்தங்களைக் காலத்திற்கேற்றவாறு மெருகூட்டிச் செம்மைப்படுத்திப் பாடினரே யல்லாமல், வில்லுப்பாட்டின் தனித்தன்மை கெடுமாறு தற்காலத் திரைப்பட மெட்டுகளையோ அல்லது திரைப் பாடல்களையோ தாம் நடத்திய நிகழ்ச்சிகளில் தலைகாட்டாவாறு காத்து வந்தது இவரது தனிச்சிறப்பாகும்.

புதிய முறையில் வில்லுப்பாட்டை இவர்வழி பற்றி அமைத்துப் பாடிவரும் தற்காலப் புலவர் சிலர், தம் பாட்டினில் பெருமளவுக்குத் திரைமெட்டுகளைப் பயன்படுத்தியும், திரைப் பாடல்களை அப்படியே சந்தர்ப்பத்திற் கேற்றவாறு புகுத்தியும் பாடி வருகின்றனர். வில்லுப்பாட்டுக் கலையின் தனித்தன்மை இதனால் மிகுதியும் பாதிக்கப்படும் நிலை தற்பொழுது உருவாகி வருவது வருந்துதற்குரியதாகவே உள்ளது.

(4) பக்கமேளம்: பழைய மரபு வழியே பாடப் பெறும் வில்லுப் பாட்டுகளில் முதன்மைக் கருவியாகிய மணிகள் பொருத்தப் பெற்ற வில்லுடன், உடுக்கு, குடம், தாளம், கட்டைஆகிய துணைக் கருவிகளே பயன்படுத்தப்படும். இந்தப் பக்க மேளங்களுடன் மேலும் சில தற்காலத்திற்கேற்ற இசைக் கருவிகளைச் சேர்த்துக் கொண்டு தம்முடைய நிகழ்ச்சிகளை நடத்தலானர் பிச்சைக்குட்டி. இவ்வாறு சேர்க்கப்பட்ட இசைக்கருவிகளுள் முக்கியமானவை ஆர்மோனியம், 'டோலக்' முதலியனவாகும். இவையே யன்றி அவ்வப்போது வசதிக் கேற்றவாறு 'புல்புல்தராங்' எனப்படும் தந்திக் கருவியும், 'மோர்சிங்' எனப்படும் கருவியும் சேர்த்துக் கொள்ளப்பட்டன. இவ்வாறு மேலும் சில கருவிகள் சேர்த்துக் கொண்டதற்கு ஆதாரமாகத் ''தந்தனைத்தோம் என்று சொல்லியே வில்லினிற்பாட'' எனத்துவங்கும் முதல் வணக்கப் பாடலை எடுத்துக் கூறுவர்பிச்சைக் குட்டி. இப்பாடலிலே குறிப்பிடப்படும் 'பம்பை' எனும் கருவிக்குப் பதிலாகவே 'டோலக்' பயன்படுத்துவதாகவும் கூறுவார். இவ்வாறு கூடுதலான கருவிகள் சேர்த்துக் கொள்ளப் படினும், முன்னர்க் கூறியவாறு, பிச்சைக்குட்டி வில்லுப்பாட்டிற்கே உரிய தனித் தன்மையான இசைமுறையினையே பின்பற்றி வந்தார்.

(5) கதைப்பொருள்: கோவில்களில் பாடப்பெறும் வில்லுப் பாட்டுக் கதைகள் அனைத்தும் ஆங்காங்கே அமைந்துள்ள தெய்வங்களின் வரலாறுகளை விளக்கும் கதைகளாகவே இருக்கும். பல

கதைகளில் மானிடராகப் பிறந்து வாழ்ந்து வீர முடிவு அடைந்து மக்களால் வணங்கத்தக்க தெய்வங்களாக நிலை கொண்டவர்களின் வரலாறுகள் இடம்பெறும்.இவற்றுள் ஐயன் கதை. சுடலைமாடன் கதை' இசக்கிகதை,முத்தாரம்மன் கதை,சங்கிலி பூதத்தான் கதை முத்துப்பட்டன் கதை, தடிவீரன் கதை, சின்னத்தம்பிக் கதை ஆகியவை குறிப்பிடத்தக்கனவாகும்.சிலவேளைகளில் இராமயண, மகாபாரதக் கதைப் பகுதிகளும் பாடுவர். பிச்சைக்குட்டி தெய்வக்கதைகள் சிலவற்றையும் பாடிவந்தார் என்றாலும் கோயில் அல்லாத பிற பொதுமேடைகள், இலக்கிய விழா மேடைகள் ஆகியவற்றிலும் பாடும் வாய்ப்பினை உண்டாக்கிக் கொண்டார். புதிய புதிய கதைகளைப் பொருளாகக் கொண்ட வில்லுப் பாட்டுகளை உருவாக்கி அவற்றைத் தமக்குரிய தனித்தன்மையில் பாடி வந்தார்.

கட்டபொம்மன், வ.உ.சி, பாரதி,காந்தியடிகள் போன்றோரின் வரலாறுகள் இவர் பாட்டினில் இடம்பெற்றன. இவர் பாடிய 'கண்ணகி கதை' இளங்கோவின்இலக்கியவழி அமைக்கப்பட்டது. 'சீதாக் கல்யாணம்', 'வாலிவதம்' ஆகிய இராமயணக்கதைகள் 'பிறை சூடிக்குப் பிரம்படி. என்னும் தலைப்பில் அமைந்த திருவிளையாடல் புராணத்தின் பிட்டுக்கு மண்சுமந்தகதை, சூடிக் கொடுத்த சுடர்க் கொடியான ஆண்டாள் கதை, கண்ணப்பன் கதை ஆகியவையும் பிறவும் இவருக்குப் பெரும்புகழ் தேடித் தந்தன. இவற்றுள் பெரும்பான்மையான கதைகள் இசைத்தட்டில் வெளியிடப்பட்டன. எளிய வடிவில் அமைந்த இலக்கியத் தொடர்பான கதைகள் வில்லுப்பாட்டிலே அமைவதான புதிய போக்கு இதன் பின் வெகுவாகப் பரவியது.

**'வில்லிசைவேந்தர்'**

மங்கிய நிலையில் நிலவி வந்த வில்லுப் பாட்டுக் கலையில் புதிய உத்திகளைப் புகுத்தி,அதன்தற்கால மறுமலர்ச்சிக்குப் பெரிதும் காரணமாகித் திகழ்ந்த பிச்சைக்குட்டி மக்களால் 'வில்லிசை வேந்தர்' எனப் புகழப் பட்டார்.

தமிழகத்தில் மட்டுமன்றி மலேயாநாடு போலும் வெளி நாடுகளிலும் சென்று வில்லிசையாகிய தமிழ்க்கலையின் தனிச் சிறப்பை நன்முறையில் எடுத்துக் காட்டுதற்குரிய நல்வாய்ப்பு களும் இவருக்குக் கிடைத்தன.

இக்கலை மேதையின் மறைவு வில்லுப்பாட்டுக் கலையின் முறையான வளர்ச்சியில் ஓர் தேக்கத்தையே ஏற்படுத்தியது என்று கூறலாம்,

**கலைவாணரின் அரும்பணி:**

வில்லுப் பாட்டுக் கலையின் தற்கால மறுமலர்ச்சிக்குப் பெருங் காரனமாணவர் பிச்சைக்குட்டி என்றால், அக்கலையின் புகழ் மணத்தை—தமிழகத்தின் தென்கோடி மாவட்டங்களில் மட்டுமே சிறந்திருந்த அதன் இசைமணத்தை—நாடு முழுவதும் பரவும் வகை செய்த பெரும்பெருமை காலஞ்சென்ற கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனையே சாரும்.

கலைவாணர் திரைப்பட உலகில் ஓர் சிரிப்பு நடிகர்தான். என்றாலும் சொந்தமாகச் சிந்திக்கும் ஆற்றலும், அச்சிந்தனைகளுக்குக் கலை வடிவம் தந்து சிறப்பாக வெளியிடும் ஆற்றலும் அவர் பால் மண்டிக் கிடந்தன. கலையுணர்வு இயல்பாகவே அமைந்திருந்த பிறவிக் கலைஞர் அவர். இதனால் எல்லாக்கலைகளையும் நன்கு கவைக்கும் திறனும் இவரிடம் உண்டு. சிறந்த இயக்குநரும் ஆனார். அனைத்திலும் மேலாகத் தமிழகத்தின் நாட்டுப்புறக் கலைகளிலே இவர் கொண்டிருந்த நாட்டம் பெரிதும் போற்றத் தக்கதாம்.

நாட்டுப்புறக் கலைகள் தற்கால நாகரிகத்திற்கு ஒவ்வாதவை எனப் புறக்கணிக்கப்பட்ட அந்தக் காலத்தில். அக்கலைகளுக்குக்குரிய தனிச்சிறப்புகளை உணர்ந்து அவற்றைப் பெருமைப்படுத்தியவர் கலைவாணர். அவர் நடித்த ஒவ்வொரு திரைப்படத்திலும் ஒவ்வொரு நாட்டுப்புறக்கலை இடம் பெறுமாறு செய்தார்.[1] வில்லுப் பாட்டுக்கலையின் மீதோ அவருக்குத் தனியானதோர், தணியாத தோர் ஆர்வம் இருந்தது. பிற கலைகளைப் போலவே வில்லுப்பாட்டையும் திரைப்படம் ஒன்றில் இடம்பெறுமாறு செய்தார்.[2] இதனால் நாட்டின் ஒவ்வொரு பகுதியில் மட்டுமே வழங்கி வந்து பிறபகுதி மக்களால் பெயரும் அறியப்படாத பல்வேறு பழந் தமிழ்க் கலைகளை, நாட்டுமக்கள் அனைவரும் கண்டுகளிக்கும் படியான வாய்ப்பு ஏற்பட்டது. ஓர்பகுதியில் மட்டும் ஒடுங்கிக் கிடந்த கலை பல்வேறு பகுதிகளுக்கும் பரவும் நிலையும் உருவாயிற்று.

வில்லுப்பாட்டுக் கலையின் மீது கலைவாணருக்குத் தனித்த தோர் ஆர்வம் ஏற்பட்டமைக்கு, அவர் குமரி மாவட்டத்தைச் சேர்ந்தவர் என்பதும் ஓர் காரணம் எனலாம். அன்றியும், சிறு

---

1. மாயாமச்சீந்திரா, திருநீலகண்டர், மனோன்மணி, நல்லதம்பி ஆகிய படங்களில் முறையே பொய்க்குதிரை, லாவணி; துந்தனப்பாட்டு, தெருக்கூத்து ஆகியவையும், அலிபாபா, மதுரைவீரன், சக்கரவர்த்தித் திருமகன் ஆகியபடங்களில் 'டேப்' இசையும் [தப்பட்டை] இடம் பெற்றன.

2. 'ஜோதிஇராமலிங்கசுவாமிகள்' எனும் படம்,

வயதிலேயே தம்முடன் விளையாடும் நண்பர்களைச் சேர்த்துக் கொண்டு குழு அமைத்துத் தாம் நாடகத்தில் கண்டுகளித்த 'இராமதாஸ்' போலும் கதைகளை வில்லுப்பாட்டாக்கிப் பாடி மகிழ்தல் இவர் வழக்கமாக இருந்ததென அறிகிறோம். இவ்வாறு இளமையிலேயே இக்கலையின் மீது இவருக்கு இருந்த ஆர்வமே பின்னாளிலும் அவர் வில்லுப்புலவராகி நிகழ்ச்சிகள் நடத்தும் நிலைக்கு இவரை ஆளாக்கி விட்டது எனலாம். கலைவாணரின் இந்த ஆர்வத்தைத் தூண்டிச் சுடர்விட்டு ஒளிருமாறு செய்தவர் பிச்சைக்குட்டியே எனவும் அறிகிறோம்.

சுதந்திரம் அடைந்த நிலையில், நாடெங்கிலும் காந்தியடிகள் போற்றித் துதிக்கப்பட்டார். பிச்சைக்குட்டியின் வில்லுப்பாட்டிலும் காந்திமகான் சரிதம் இடம் பெற்றது. இதனைக் கேட்டு மகிழும் வாய்ப்புக் கிடைத்தது கலைவாணருக்கு. இளமை ஆர்வம் பெருவடிவம் கொண்டது. சென்னையில் காந்தி மகான் கதையை வில்லுப்பாட்டிலே அமைத்துப் பாடவேண்டும் என்ற விருப்பம் அவர் நெஞ்சில் எழுந்தது. உடனடியாக நாஞ்சில் நாட்டிலிருந்து-(குமரி மாவட்ட) வில்லிசைக்கலைஞர்கள் வரவழைக்கப்பட்டனர். தோவாளை சுந்தரம் பிள்ளை என்னும் பழம்பெரும் வில்லிசைப் புலவரும் சென்னைவந்து கலைவாணருக்குக் குழு அமைப்பதில் உறு துணை புரிந்தார் என்பர்.[1]

கலைவாணரின் காந்திமகான் கதை வில்லுப்பாட்டு உருவாயிற்று. வானொலி வழியாகத் தமிழகமெங்கும் காந்தியடிகளின் புகழ் 'வில்'ஒலியில் பரவி எதிரொலித்தது. காந்தியடிகளின் கதையுடன் வில்லிசைக் கலையினையும் யாவரும் அறிந்து கொண்டனர்.

இந்நிலையில், காலஞ்சென்ற கொத்தமங்கலம் சுப்பு நடத்தி வந்த 'காந்திமகான் கதை' இசைநிகழ்ச்சி பற்றியும் குறிப்பிட வேண்டும். முழுவதும் நாட்டுப்பாடல் வடிவில் காந்தியடிகளின் வாழ்க்கையை எழுதி அதனை அவரே நாட்டுப்பாடல் இசையில் பாடினார். 1945—ஆம் ஆண்டில் எழுதப் பெற்ற காந்திமகான் கதை,[2] 1947—ஆம் ஆண்டு சுதந்திரத் திருநாளில் நூல்வடிவில் வெளியிடப்பட்டது. அன்றே அவர் இசைநிகழ்ச்சியும் நடத்தத் தொடங்கினார் எனவும் அறிகிறோம்.

---

1. சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் 32-ஆம் கருத்தரங்கு அன்று தலைமை தாங்கிய கவிஞர் S. D. சுந்தரம் தமது உரையில் தெரிவித்த கருத்து. (4-5-77)
2. 9-10-77 முதல் ஒவ்வொரு ஞாயிறும் நண்பகலில் கொத்தமங்கலம் சுப்புவின் பதிவு செய்யப் பெற்ற 'காந்திமகான் கதை' முழுவதும் பகுதி பகுதியாகச் சென்னை வானொலி ஒலிபரப்பியது, 'முதல் நாளில், 1945இல் இக்கதை எழுதியதாக அவரால் தெரிவிக்கப்பட்டது.

கொத்தமங்கலம் சுப்பு காந்திமகான் கதையை 'வில்லுப் பாட்டு என்ற பெயரில் நடத்தினர் என்றாலும் அந்நிகழ்ச்சி முழுமையான வில்லுப்பாட்டாக அமைந்திருக்கவில்லை. வில்லுப் பாட்டின் சிறப்புக் கருவிகளான உடுக்கு, குடம் முதலிய கருவி களைப் பயன்படுத்தாமல், ஒரு சிறிய வில்வடிவம் ஒன்றுமட்டும் வைத்துக்கொண்டு, அவ்வப்போது வில்நாணில் கட்டப்பட்டிருந்த சலங்கைகளைத் தட்டியவாறும், 'டோலக்' போலும் சில இசைக் கருவிகளின் துணையுடனும், நாட்டுப்பாடல் இசையில் அமைந்த தான ஓர் புதுவகைக் 'கதாகாலட்சேப' மாகவே அவர்தம் நிகழ்ச்சி அமைந்திருந்தது.[1] எனினும் நாட்டுப்பாடல் முறையில் கணக்கற்ற கவிதைகளைப் புனைந்த இவர், நாட்டுப்புற இசையில் அமைந்த ஓர் இசைநிகழ்ச்சியை அந்தக் காலத்தில் சென்னையில் நடத்தியதிறம் பாராட்டுதற்குரியதே ஆகும்.

கலைவாணர் வில்லுப்பாட்டுக்குரிய எல்லாக்கருவிகளும் அமையக் 'காந்திமகான்கதை' நிகழ்ச்சியினை நடத்தினர். காந்தி மகான் கதையைக் கலைவாணர் இந்தி, ஆங்கிலம்போலும் பிற மொழிகளிலும் கூட எடுத்துச் சொல்லும் முயற்சியில் ஈடுபட்டு அம்மொழிகளில் அமைந்த நிகழ்ச்சிகளும் நடத்தினர் என அறிகிறோம். இது அவர்தம் ஆர்வ மிகுதியினையும் ஆற்றல் மேம் பாட்டினையும் நமக்கு உணர்த்துகின்றது.

இன்றைய நிலையில் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் வில்லிசைக் கலைஞர்கள் காணப்படுகின்றனர். நாடு முழுவதும் வில்லுப்பாட்டுக்கலை ஓர் கருத்து விளக்கச் சாதனமாகவும் பயன் படுகிறது. நிகழ்ச்சிகள் கலைவாணரின் வழிபற்றியே நடத்தப்படு கின்றன. வில்லுப்பாட்டுக் கலையினை இவ்வாறு நாடறிந்த கலை யாக வளர்த்துத் தந்துள்ள கலைவாணரின் அரும்பணி என்றும் கலைஞர்களால் நன்றியோடு நினைவு கொள்ளத்தக்கதாகும்.

### இலக்கிய விழாக்களில் வில்லிசை

வில்லுப்பாட்டுக்கலை தமிழகம் அறிந்த பழங்கலையாக பரவிய நிலையில், நாடெங்கிலும் ஆங்காங்கே கலையார்வம் கொண்ட மக்களும், ஆசிரியர்களும், மாணவர்களும் வில்லிசை நிகழ்ச்சிகளை விருப்பத்துடன் நடத்தலாயினர். இலக்கிய விழா மேடைகளிலும் கல்வி நிறுவனங்களில் நிகழும் விழாக்களிலும் 'வில்லுப்பாட்டு' சிறப்பிடம் பெறுவதாயிற்று. இந்நிலையில் திருநெல்வேலி,

1. கொத்தமங்கலம் சுப்புவின் புதல்வர் கொத்தமங்கலம் விசு என்பார் தற் பொழுது, தந்தை பாடிய அதே வழியில் அதே வில்வடிவத்தை மட்டும் பயன்படுத்தி நிகழ்ச்சிகளை நடத்தி வருகிறார்.

தருமையருள்பெறு நெல்லை அருணகிரி இசைக்கழகத்தார் வில்லிசைக்குக் காட்டியுள்ள ஆதரவு என்றும் போற்றத் தக்கதாகும். தலைசிறந்த முறையில் தமிழ்ப்பணியும் சமயப் பணியும் ஆற்றிவந்த இக்கழகத்தார் 1947—ஆம் ஆண்டு முதல் ஒவ்வொரு ஆண்டும் "தமிழ்த் திருநாளை"ப் பெருவிழாவாகக் கொண்டாடி வந்தனர்.

இக்கழகத்தின் அமைச்சர் பொறுப்பில் அருந்தொண்டு ஆற்றி வந்த இராம. கனகசபாபதி என்பார் சிறந்த இசை வல்லுநரும் ஆவர். இவர்தம் கலையார்வத்தின் விளைவாகவே தமிழ்த் திருநாள் மேடையில் வில்லுப்பாட்டு இடம்பெறலாயிற்று. இசை மணி கா. சங்கரனார் போன்றோர் பெரிதும் துணை நின்றனர். கழகத்தின் விரிவுரைப் பொறுப்பாளராக இருந்த அ. க, நவநீத கிருட்டினன் என்பார் 'தமிழ் வளர்ந்த கதை' எனும் தலைப் பிலே வில்லுப்பாட்டை எழுதி அமைத்தார். (1951). அமைச்சர் இராம. கனகசபாபதி புலவராகவும் ஏனையோர் பிற கருவியாளர் களாகவும் பின்பாட்டுக்காரர்களாகவும் அமைய வில்லிசை நிகழ்ச் சிகள் நடத்தப் பெற்றன.

அடுத்தடுத்து 'வள்ளுவர் கதை', 'கண்ணகி கதை' 'பத்துப் பாட்டின்பம்', 'சிவஞானமுனிவர் வரலாறு', 'மெய்கண்டார் வரலாறு', 'திருஞானசம்பந்தர் வரலாறு', 'மாணிக்கவாசகர் வரலாறு', முதலியனவும் வில்லிசை வடிவம் பெற்றன. இவற்றுள் 'தமிழ் வளர்ந்த கதை', 'வள்ளுவர் கதை', 'கண்ணகி கதை', ஆகிய மூன்றுமே அச்சு வடிவில் சை.சி. நூற்பதிப்புக் கழகத் தாரால் (சென்னை) வெளியிடப் பெற்றன.[1] புலவர் ஐயம்பிள்ளை போன்ற கலைஞர் பலரும் கழகமேடையில் தம்நிகழ்ச்சிகளை நடத்தும் வாய்ப்பினைப் பெற்றனர்.

**கலைவளர்க்கும் கலைஞர்கள்**

கலைவாணர் காந்திமகான் கதை போன்று வேறு எதுவும் வில்லி சையில் பாடியதாகத் தெரியவில்லை. பின்னர் அவர் நிகழ்த்திய வில்லிசை நிகழ்ச்சிகள் யாவும் அரசியல் மேடைகளில் இடம் பெற்ற கொள்கை விளக்கப் பாட்டுகளாகவே அமைந்தன.[2] கலை வாணருடன் குழுவில் இருந்தோர் செல்லமுத்துப் பாண்டியன்,

1. இவ்வாறு வெளிவந்த கதைகள் யாவும் கற்றோர் புகழையும் பெற்றியை அடைந்ததாலோ என்னவோ உயர்ந்த இலக்கிய நடையிலேயே அமைவதாயின.

2. பெரியார், அண்ணா ஆகியோர் தனித்தனியே கூட்டிய மாநாடுகளில் புத்தர் வரலாறு கலைவாணரால் பாடப்பெற்றது என அறிகிறோம்.

தங்கப்பா, குலதெய்வம் இராஜகோபால், வேலுச்சாமி, இராமையா, மதுரைமுத்து ஆகியோர் என அறிகின்றோம்.

1957—இல் கலைவாணரின் மறைவுக்குப்பின், அதுவரை அவருடன் இருந்து பாடும்பேறு பெற்றவர்கள் அவர்வழி பின்பற்றித் தற்பொழுது வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். சுப்பு ஆறுமுகம், குலதெய்வம் இராஜகோபால், தங்கப்பா ஆகியோர் இவ்வகையில் குறிப்பிடத் தகுந்தோர் ஆவர். கலைவாணரின் புதல்வர் N.S.K.கோலப்பன் என்பாரும் தந்தைவழியில் காந்திமகான் கதையை வில்லுப்பாட்டாகப் பாடிவந்தார். இவர் பிற கருவிகளுடன் 'டேப்' எனும் 'தப்பட்டை' யினையும் பயன்படுத்திப் பாடிவந்தார். தற்பொழுது இவர் நிகழ்ச்சிகள் நடத்துவதில்லை என்றே தெரிகின்றது.

சுப்பு ஆறுமுகம் நல்ல கவிஞர். கலைவாணருடன் மிகவும் நெருங்கிப் பழகியவர். கலைவாணருக்குத் தேவைப்படும் பாடல்களை அவ்வப்போது எழுதிவந்தார். கலைவாணரின் வழிபற்றி இவர் பல்வேறு கதைகளைச் சிறப்புறப் பாடிவருகின்றார். 'காந்தி வந்தார்', 'ஐயப்பன் சரிதம்'. 'வள்ளித் திருமணம்', 'வள்ளுவர் கதை' போலும் கதைகள் குறிப்பிடத் தக்கவையாகும். 'மதுவிலக்கு', குடும்பக்கட்டுப்பாடு' போலும் பல்வேறு பிரச்சார நோக்கப் பாடல்களையும் அவ்வப்போது இவர் பாடி வருகிறார். 'காந்தி வந்தார் வில்லுப்பாட்டு அச்சாகி வெளிவந்துள்ளது. ஆர்மோனியம், டோலக் இவற்றோடு மொராக்கோஸ், கிளாரினெட் ஆகியவையும் பயன்படுத்துகிறார். சென்ற ஆண்டின் இறுதியில் 2-12-77 முதல் 5-12-77 முடிய சென்னையில் நடந்த உலகத் தாவர உணவினர் மாநாட்டில் இருநாட்களில் வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்திருந்தனர். 2-12-77 அன்று சுப்பு ஆறுமுகம் நடத்திய தாவர உணவுப் பிரச்சார வில்லுப்பாட்டு சிறப்பாக அமைந்திருந்தது. சென்னை இயலிசை நாடக மன்றம் இவருக்குக் 'கலைமாமணி' எனும் விருது வழங்கிச் சிறப்பித்துள்ளது.

குலதெய்வம் இராஜகோபால், 'ஐயப்பன் சரிதம்,' மீனாட்சி கல்யாணம், போலும் பாட்டுகளைச் கிறப்பாக நடத்தி வருகிறார். 'பம்பை' எனும்,கருவியையும் பயன்படுத்துகிறார். ஆர்மோனியமும் உண்டு. இவர்தம் நிகழ்ச்சிகள் அரசியல் மேடைகளிலும் பயன்பட்டன, 'காவல் தெய்வம்', 'நீ உள்ள வரை' ஆகிய திரைப்படங்களில் முறையே 'ஐயனார் கதை', 'அம்மன் கதை' ஆகியவற்றை

இவர் பாடியிருக்கிறார். விழாக்கள் பலவற்றில் இவர்தம் வில்லிசை இடம்பெறுகிறது.

திரைப்பட நடிகர் எஸ்.எஸ்.இராஜேந்திரன் வில்லுப் பாட்டுக் கலையில் ஆர்வம் கொண்டு சிலகாலமாக நிகழ்ச்சிகளை நடத்தி வந்தார், இவர் இக்கலையில் ஈடுபாடு கொள்ளக் காரணமாக இருந்தவரும் பிச்சைக்குட்டியே என அறிகிறோம்.ஓர் சமயம் (1964-இல் எனலாம்) நாகர்கோவிலில் நடந்த பொருட்காட்சி ஒன்றில் முந்திய நாளில் பிச்சைச்குட்டியின் வில்லிசையும் அடுத்த நாள், எஸ். எஸ். ஆரின் நாடகமும் ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தன வாம். முந்திய நாள் வில்லிசை குறித்து யாவரும் பாராட்டிச் சொல்லவே, தம் செலவிலே மீண்டும் மறுநாளிலும் பிச்சைக் குட்டி யின் வில்லிசைக்கு ஏற்பாடுசெய்து,அதனை நேரில் கண்டும் கேட்டும் மகிழ்ந்த இராஜேந்திரனுக்குத் தாமும் வில்லுப்பாட்டுப் பாட வேண்டும் எனும் வேட்கை பிறந்தது.

இதன் விளைவாகப் பிச்சைக்குட்டியைச் சுமார் ஒரு மாதகாலத் திற்குமேல் தம்முடன் இருக்கவைத்து அவரிடம்முறையான பயிற்சி பெற்றுப் பாடத்தொடங்கினார். பிச்சைக்குட்டியின் வழிபற்றியே பக்கமேலங்களுடன் 'கண்ணகி கதை'யினை வில்லுப் பாட்டாகப் பாடினார். இலங்கை வானொலியினர் விருப்பத்தின் பேரில் அங்கும் பின்னர் இங்கே தமிழகத்தில் சென்னை மற்றும் பல ஊர்களிலும் 'கண்ணகி கதை' பாடப்பெற்றது. அதன் பின்னர் அரசியல் மேடைகளில் பிரச்சாரநோக்கிலமைந்த வில்லிசை நிகழ்ச்சிகள் பல் வேறு இடங்களிலும் 1967—ஆம் ஆண்டுத் தேர்தலை ஒட்டி நடை பெற்றன என அறிகிறோம்.ஆனால்தொடர்ச்சியாக வில்லிசையை இவர் நிகழ்த்தாமல் விட்டுவிட்டார். நல்ல குரல் வளம், பாடும் ஆற்றல் இவை கொண்ட இவர் மீண்டும் இக்கலை நிகழ்ச்சியினைத் தொடர்ந்து நடத்த முற்படுவாராயின் நாட்டிற்கு நல்லதோர் வில்லிசைக் கலைஞர் கிடைக்கலாம்.

இங்கே குறிப்பிட்டவர்களேயன்றி இக்கலையின்பால் ஆர்வம் கொண்டோர், நிகழ்ச்சியினை நடத்துவோர் நாடெங்கிலும் பலர் உள்ளனர்.

### வில்லிசைக்கு நல்லாதரவு

தற்காலத்தில் வில்லுப்பாட்டுகலையின் வாழ்வுக்கும் வளர்ச் சிக்கும் தங்களின் நல்லாதரவினைத் தந்துவருவோரில் குறிப்பிடத் தக்கவர் காஞ்சிப் பெரியவர் சங்கராச்சாரிய சுவாமிகள் ஆவார். 1962-ஆம் ஆண்டிலே இளையாத்தங்குடி என்னும் ஊரில் இப்பெரி யவர் ஏற்பாடு செய்த 'சதஸ்' என்னும் கலைமாநாடு குறிப்பிடத்

தக்கது. ஆங்கே பல்வேறு கலைவல்லுநர்களையும் அழைத்துப் பெருமைப்படுத்தினர். அவரவர் கலை குறித்த ஆராய்ச்சிகளும் நடத்தப் பெற்றன. நாட்டுப்புறக் கலை வல்லுநர் பலரும் இம்மா நாட்டில் கலந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றனர். தொடர்ந்து ஆண்டுதோறும் நடைபெற்ற இந்த 'சதஸ்' களில் பிச்சைக்குட்டி யின் வில்லுப்பாட்டும் இடம் பெற்றது. தற்பொழுதும் வில்லிசைக் கலைஞர் சுப்பு ஆறுமுகம் போன்றோருக்குக் காஞ்சிப் பெரியவர் நல்லாதரவு நல்கி வருதலை அறிகிறோம்.

புலவர் பிச்சைக்குட்டி வாழ்ந்த காலத்தில் அவரது சீரிய கலைத் தொண்டினைப் பாராட்டித் திருவாவடுதுறை ஆதீனத்தார் அவ ரைத் தம் 'ஆஸ்தானப் புலவராக' நியமித்துப் பெருமைப் படுத்தினர்.

தருமையாதீனஅருள்பெறு நெல்லை அருணகிரி இசைக் கழகத் தார் வில்லிசைக்கு அளித்த நல்லாதரவு பற்றி முன்னர்க் குறிப்பிட் டுள்ளமை காணலாம்.

எட்டயபுரம் பாரதிவிழா நிகழ்ச்சிகளில் 'பாரதி முற்போக்கு வாலிபர் சங்கத்தார், ஆதரவில் ஆண்டுதோறும் பிச்சைக் குட்டியின் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி இடம்பெற்றுவந்தது.

அனைந்திந்திய வானொலி நிலையத்தார் வில்லுப்பாட்டுக்குத் தந்து வரும் நல்ஆதரவு போற்றுதற்குரியது. வில்லிசைக் கலை ஞர்கள் புலவர் ஐயம்பிள்ளை, செவல்குளம் தங்கையா, நெல்லை நாரயணதாஸ், மம்சாபுரம் பாலுதிராவிடன், மடத்தூர் அருணா சலம், மடத்தூர் செல்லையா, வீரப்பட்டி சண்முகம், கோவை முருகானந்த பாரதி, காஞ்சீபுரம் பஞ்சாட்சரம், முத்துகணேசன், சுப்பு ஆறுமுகம், குலதெய்வம் ராஜகோபால், தங்கப்பா இன்னும் இவர்கள் போலும் பலர் சென்னை, திருச்சி, நெல்லை, திருவனந்த புரம், பாண்டிச்சேரி நிலையங்களின் ஆதரவில் தங்கள் நிகழ்ச்சி களை நடத்தியுள்ளார்.

சென்னை, தொலைக்காட்சி நிலையத்தாரும் வில்லிசைக்கு உரிய ஆதரவு தந்துவருகின்றனர். இந்நிலையம், 8-11-'76 அன்று ஒளி பரப்பிய வில்லுப்பாட்டுக் கலை பற்றிய விளக்கக் காட்சி சிறந்த முறையில் அமைந்திருந்தது. தொடர்ந்து பல்வேறு வில்லிசைக் கலைஞர்களின் நிகழ்ச்சிகளும் சிறுவர் சிறுமியர் பங்குகொள்ளும் நிகழ்ச்சிகளும் அவ்வப்போது இடம் பெறுகின்றன.

தமிழக அரசின் சார்பில், 15-3-'78 முதல் 24-3-'78 வரை, தமிழ்நாடு இயலிசை நாடக மன்றம் சென்னையில் தொடர்ந்து

பத்து நாட்களாகப் பெரியதோர் 'கிராமியக் கலை விழா' நடத்திப் பல்வேறு துறைப்பட்ட கிராமியக் கலை வல்லுநர்களின் நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்து, அக்கலைஞர்கள் அனைவரையும் பெருமைப் படுத்தியது பெரிதும் பாராட்டுதற்குரியது. இவ்விழா விலே வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகளை இரண்டு நாட்கள் நடத்திச் சிறப்பித்தனர்.

வில்லுப்பாட்டுக் கலையின்பால் ஆர்வம் கொண்ட பல்வேறு பெருமக்களும், கல்லூரி ஆசிரியர்கள், பள்ளி ஆசிரியர்கள், மாணவர், மாணவியர் முதலானோரும் ஆங்காங்கே வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகளைப் பொதுமேடைகளிலும், கல்வி நிறுவனங்களின் விழாக்களிலும் நடத்தி வருதலும் போற்றுதற்குரியது. கேசவ ராமசாமித் தேவரின் 'வேள்பாரி', இரா. மதிவாணனின் 'எல்லைப் போர்' போன்ற வில்லுப்பாட்டுக்கள் அச்சிட்டு வெளியிடப் பட்டுள்ளன. இவ்வகையில் மேலும் பல பாட்டுகளும் அச்சில் வெளிவந்துள்ளன என அறிகிறோம்.

இவ்வாறெல்லாம் நாடு முழுவதும் வில்லுப் பாட்டுக் கலைக்கு நல்லாதரவு பெருகிவருதலைக் காண்கிறோம். அரசு சார்பிலும் தனிப்பட்டோர் சார்பிலும் நடைபெறும் பல்வேறு விழாக்களிலும் 'வில்லுப்பாட்டு' இடம் பெறுதல் மகிழ்ச்சிக்குரிய செய்தியே ஆகும்.

*இன்றைய நிலை*

புதிய உத்திகளுடன், புதிய கதைகளைப் பாடவும், காலத்துக் கேற்ற கருத்துகளைப் பரப்பவும், 'வில்லுப்பாட்டு' இன்றைய நிலையில் இனிமையும் எளிமையும் வாய்ந்ததோர் சாதானமாகப் பயன்படுகிறது. எனினும், தென் மாவட்டங்களில் இன்றும் ஊர்த் தெய்வங்களின் வழிபாட்டுகுரிய கொடை விழாக்களில் பழைய மரபுவழியிலான வில்லுப்பாட்டு விரும்பிக் கேட்கப்பட்டு வருவதனைக் காணலாம். பெண்கள் புலவராக இருந்து பாடுதல் தற்காலம் மிகவும் பெருகியுள்ளது எனலாம்.

தற்கால நாகரிகம், குறிப்பாகத் திரைப்படநாகரிகம் வில்லுப் பாட்டு நிகழ்ச்சிகளையும் பாதிக்காமல் இல்லை. வில்லிசை நிகழ்ச்சி களிலும் திரைப்படப் பாடல்களை மக்களின் விருப்பத்தை நிறை வேற்றும் நோக்குடன் இடையிடையே விடுபாட்டாகப் பாடும் நிலையும், அதுவே மெல்லிசை கலந்த வில்லிசை என்ற ஓர் புதிய போக்கினைத் தழுவும் நிலையும் சில இடங்களில் நேர்ந்துள்ளன. கலைஞர்கள் இத்தகையதோர் 'இரண்டுங் கெட்டான்' போக்கிற்கு

ஊக்கம் தராமல் வில்லுப் பாட்டின் தனித்தன்மையைக் காப்பதில் காலஞ்சென்ற கலைஞர் பிச்சைக் குட்டியின் வழிமுறைகளைப் பின் பற்றிக் கலையினைக் காத்து வளர்த்தலே நல்லதாம்.

ஆங்காங்கே வாழ்ந்துவரும் நல்ல திறமை வாய்ந்த கலைஞர் களிடம் அமைந்திருக்கும் ஆற்றல், அவர்களுடன் நின்றுபோகாத வாறு வழிவழியாக வருதற்குரிய வகையில் புதிய கலைஞர்கள் பயிற்சிபெறுமாறு ஊக்கம் தருதலும் வேண்டும். இதுவே கலையின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் துணைசெய்வதாகும். முன்னுள் முறை மைகள் கெடாதவாறு இந்நாள் புதுமைகளை ஏற்றி, வில்லுப் பாட்டினை நல்லதோர் கலையாக நாளும் வளர்த்திடப் பாடு படுதலும், திறம் வாய்ந்த கலைஞர்களைப் பேணிக் காத்து ஊக்க மளிப்பதிலும், இக்கலையின்பால் ஆர்வம் கொண்டோர் அனை வரின் கடமையாகும்.

ஆல்போலே தான் தழைத்து—நல்ல
அறுகதுபோல் வேரூன்றி
நாள்தோறும் வில்லிசையே—இங்கு
நலம் பெருகி வாழவேணும்
பூதலத்தின் தேசமெல்லாம்—இதன்
புகழ்பெருகி வாழவேணும்

# ஐயன் கதை

காப்பு

மெய்தவத்தில் நின்றரக்கன் விரல்தூண்ட வரம்வாங்கி
செய்யசிவனார் தனைவிரட்டத் திருமாலிடமே மகிழ்ந்துசெல்ல
தையல்வடிவாய் பெண்வேசம் கொண்டு சத்தியம் செய்து
வரமழித்த
ஐயன்கதை தன்னைப்பாட ஆனைமுகவன் காப்பாமே.

கதை

(கயிலையில் சிவனும் உமையும் கொலுவிருத்தல்)

தானாகிய பொன்னும் கயிலாசத்தில்
தக்கசிவனாரும் வீற்றிருந்தார்
ஆணிப்பொன் சிம்மாதனம் தனில்
அம்மை உமையாளும் தானிருந்தாள்
5 முப்பத்து முக்கோடி தேவர்களும் அங்கே
நாற்பத்து நாற்கோடி ரிசிகளுமே
கெம்புருடர் கிணம்புருடர் நல்ல
கின்னரி நாதர்களும்

---

• 'காப்பு' விருத்தமாக, ஆனைமுகன் வணக்கமாக, அமைந்துள்ளது. பாடப்போகும் கதையின் சுருக்கம் இவ்விருத்தத்திலேயே அமைதல் காணலாம்.

1-10. தெய்வத் தொடர்பான கதைகள் பெரும்பான்மையும் கயிலைக் காட்சியை முதலில் கூறியே தொடங்கும் மரபு உடையன.

1. தானாகிய - தானே தோன்றிய.

3. ஆணிப் பொன் - உயர்ந்த பொன், ஆணிமுத்து, கட்டாணிமுத்து இவை போல்வன காண்க.

6. ரிசி - ரிஷி.

7. கெம்புருடர் - கிம்புருடர், காந்தருவர்; கிணம்புருடர் - கணங்கள் எனலாம்.

இப்படியே கொலுவிருந்தார் — அந்த
10 ஏற்றதொரு கயிலையிலே.

(தேவரும் அசுரரும் பால்கடல் கடைதலும் மாயன் மோகினிக் கோலம் கொள்ளுதலும்)

இந்த விதமாக ஈசன் சமூகத்தில் முப்பத்து முக்கோடி தேவர்களும் முனிவர்களும் சிவபெருமானை வணங்கிநிற்கக் கூடிய சமயத்தில், ஒருநாள் தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து திருப்பால் கடல் ஒருதாழியாகவும் மயந்தர கிரியை மத்தாகவும் ஆதிசேடன் என்ற பாம்பை கயிறாகவும் கொண்டு அமுதம் கடைந்தார்கள். அதிலே கிடைத்த அமுதத்தை தேவர்கள் எங்களுக்கே என்றார்கள் அசுரர்கள் எங்களுக்கே என்றார்கள் ஆக யிருபேர்களும் சண்டையிட அதை அறிந்த மாயன் பெருமாள் ஒரு மோகினி வடிவம் கொண்டு என்னவிதமாக வாறார் ஆனால்.

(மோகினிக் கோலத்தின் சிறப்பு)

முன்னழகும் பின்னழகும் — நல்ல
முகத்தினுட திருவழகும்
முத்துநல்ல பதித்ததுபோல் — அவள்
முன்வரிசை பல்லழகாம்
15 குற்றமில்லா மூக்கதைத்தான் — நல்ல
குமிழமலர் ஒப்பிடலாம்
சித்துடுக்கு கடைந்ததுபோல் — அவள்
சேலைகட்டும் இடையழகாம்
இளவாழைத் தண்டதுபோல் — அவள்
20 இரண்டுநல்ல துடையழகாம்
கடைந்துநல்ல எடுத்ததுபோல் — நல்ல
கணுக்கால்கள் ரெண்டழகாம்

---

8. கின்னரி நாதர் - கின்னரர், (கந்தருவர்)

10-11. இடையே அமைந்துள்ளஉரை: மயந்தரகிரி - மந்தரமலை. வாறார் ஆனால் - வருகிறார் என்றால் 'வாறார்' என்பது எல்லா இடங்களிலும் வல்லினமே பெற்றுவருதல் கவனிக்கத்தக்கது. 'வாரார்' எனின் வரமாட்டார் என ஆகிவிடுதல் தவிர்க்கப்படுகிறது. 'என்றால்' என்பது 'ஆனால்' என்றே எல்லா இடங்களிலும் வழங்குதல் காணலாம்.

11-38. பெண்ணின் அழகை வருணிக்கும் இடங்களில் இத்தகைய அமைப்பினைப் பல கதைகளிலும் காணலாம்.

12. முகத்தினுட - முகத்தினுடைய.

17. சித்துடுக்கு - வில்லுப்பாட்டிலே பயன்படும் சிறிய அளவு உடுக்கு.

| | | |
|---|---|---|
| | எலுமிச்சங் கனியப்போலே | மோகினிக்கு |
| | இரண்டுநல்ல தனமழகாம் | |
| 25 | குன்னிமுத்துக் காஞலும் | அதில் |
| | கொஞ்சம்கூட கருப்பும்உண்டு | |
| | காலகண்ட நாதருக்கு | அவர் |
| | கண்டத்திலே கருப்புமுண்டு | (மோகினிக்கு) |
| | மயிரோநல்ல கருப்பொழிய | அவள் |
| 30 | மற்றும்ஒரு கருப்புமில்லை | |
| | புருவம்நல்ல கருப்பொழிய | அந்த |
| | பூவையவள் கருப்புமில்லை | |
| | தன்னழகு போதாதென்று | ஒரு |
| | தங்கமுத்து மாலையிட்டாள் | |
| 35 | வேணும்என்ற ஆபரணம் | அவள் |
| | விதவிதமாய் பூட்டுகிருள் | |
| | காப்புமிட்டாள் கொலுசுமிட்டாள் | அவள் |
| | கைக்குத்தங்க வளையவிட்டாள் | |

(அரக்கரை வஞ்சித்து மாயன் மறைதல்)

இந்தவிதமாக மாயன்பெருமான் ஒரு மோகினி வடிவம் கொண்டு அரக்கர்களுக்கும் தேவர்களுக்கும் மத்தியில் தோன்றி அமுதத்தைக் கையில் வாங்கி நான் பங்கிட்டுத் தருகிறேன் என்று அமுதத்தை தேவர்களுக்கு மட்டும் கொடுத்துவிட்டு அரக்கர் களுக்கு கொடுக்காமல் அமுத கலயத்தை கீழே போட்டு உடைத்து விட்டு மறைந்தார்.

(அரக்கர் சினம்கொண்டு தேவரைத் துன்புறுத்தல்)

| | | |
|---|---|---|
| | அப்போது அரக்கர்களும் | அது |
| 40 | ஆயன் என்று அறியாமல் | |
| | கண்ணன்என்றும், அறியாமல் | அவர் |
| | கடுங்கோவம் தானுங்கொண்டு | |
| | தேவர்செய்த சதிதான்என்று | அப்போ |
| | சினந்துஅவர் போர்தொடுத்தார் | |

---

20. துடை - தொடை 22. ரெண்டழகாம் - இரண்டழகாம்.
25. குன்னிமுத்துக்காஞலும் - குன்றிமுத்துக்காயினும்
35. வேணும் என்ற - வேண்டும் என்ற.
42. கடுங்கோவம் - கடுங்கோபம், பெருஞ்சினம்

45 அடிபொறுக்க மாட்டாமல் தேவர்
அபயசத்தம் போட்டழுதார்

(மாயன் ஏவிய சக்கரத்திற்குஅஞ்சி அரக்கர் பாதாளத்தில் பதுங்கியிருத்தல்)

அதை அறிந்த மாயன் பெருமான் தேவர்களை பாதுகாப் பாற்றும் பொருட்டு தன்னுடைய சக்குராயுதத்தை அரக்கர்களின் பேரில் ஏவினுர். அதைக் கண்ட அரக்கர்கள் சக்குராயுதற்திற்குப் பயந்து பாதாள உலகில் பதுங்கியிருந்தார்கள். அதில் பாதாள வல்லி என்ற அரக்கிப் பெண் அந்த சக்குராயுதத்தின் மகிமையால்

(பாதாளவல்லி எனும் அரக்கி கருவுறுதலும், பாலகனைப் பெறுதலும்]

அன்றுமுதல் குளிமறந்தாள் நல்ல
அரக்கியந்த பெண்கொடியாள்
ஓராவது மாதத்திலே அவள்
50 உடையவனே தஞ்சோமென்றுள்
இரண்டாவது மாஸ்த்தையிலே அந்த
எம்பெருமான் தஞ்சோமென்றுள்
மூன்றுவது மாஸ்த்தையிலே அவள்
முகவெளுப்பு கொண்டிடுவாள்
55 நான்காவது மாஸ்த்தையிலே அவள்
நல்மயக்கம் கொண்டிடுவாள்
ஐந்தாவது மாஸ்த்தையிலே அரக்கிக்கு
அரைவயிறு பூரணமாம்
ஆறுவது மாஸ்த்தையிலே அவள்
60 அங்கமெல்லாம் தங்கநிறம்
ஏழாவது மாஸ்த்தையிலே நல்ல
இடையதுவும் சிறுத்திடுமாம்

46. அபயசத்தம் - அபயக்குரல்.

46-47. இடைஉரை : சக்குராயுதம் - சக்கரம் ஆகிய ஆயுதம்.

47-68. கருவுற்ற பெண்ணின் நிலைமைகளை இவ்வாறு வருணித்தல் ஓர் பொதுவான மரபாக எல்லா விடங்களிலும் காணலாம். இதுபோலும் பகுதிகள் பெண்கள் விரும்பிக் கேட்பனவாம்.

47. குளிமறந்தாள் – மாதவிலக்கு நிற்கப்பெற்றுள்.

50. தஞ்சோம் - தஞ்சம் 53. மாஸ்த்தையிலே - மாதத்திலே.

58. பூரணமாம் - நிறைவுற்றதாம்,

எட்டாவது மாஸ்த்தையிலே வயிறு
திட்டுமுட்டு அடித்திடுமாம்
65 ஒன்பதாம் மாஸ்த்தையிலே அவள்
ஓலைபோலே சுழண்டிடுவாள்
பத்தான மாதத்திலே (அந்த
பாதாள வல்லியானவள்) ஒரு
பாலகனை பெற்றெடுத்தாள்

(பேறுகால நேரத்தில் நிகழ்ந்தவை)

இந்த விதமாக அந்தப் பாதாளவல்லி என்ற அரக்கிப் பெண்ணுள் மாதம் பத்து சரியாகினவுடன் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

(அந்த) பாலகன்வந்து பிறந்தபோது அவள்
70 பச்சைக்கிளிபோலே மயங்கிவிட்டாள்

அதை அறிந்த அரக்கிப் பெண்கள் ஓடோடிவந்து அந்தப் பாதாள வல்லியாள் மயக்கம் தீர என்னவெல்லாம் செய்தார்களானல்

தாங்கிநல்ல எடுப்பார்களாம் அப்போ
தண்ணீர்கொண்டு தொளிப்பார்களாம்
மயில்யிறகு விசிறிகொண்டு அந்த
மங்கையர்கள் வீசுவாராம்
75 ஆயாசம் தீரவென்று அப்போ
அன்புடனே தேற்றுவாராம்

இந்தவிதமாக அந்த அரக்கிப் பெண்கள் பாதாளவல்லி கொண்ட மயக்கத்தைப் போக்கி அவள் பெற்ற பாலகனை

கோப்பாடை தானும்நீக்கி நல்ல
குழந்தைதனை எடுத்தார்கள்
கொப்பிள்கொடி தானறுத்தார் எட்டு
80 குலவைகளும் இட்டாராம்

---

66. சுழண்டிடுவாள்-தளர்ந்து விடுவாள்.

69-84. பேறுகால நேரத்து நிகழ்ச்சிகள் சுவையோடு சொல்லப் பெறுதல்

72. தொளிப்பார்களாம்-தெளிப்பார்களாம்.

75. ஆயாசம்-அயர்வு,களைப்பு.

77. கோப்பாடை தானும் நீக்கி-நஞ்சுக் கொடிகளை அகற்றி 'கொப்பாடை' எனவும் வழங்கும்.

79. கொப்பூழ்க்கொடி அறுத்தல். 'கொப்பிளி அறுத்தல் எனும்பேச்சு வழக்கும் உண்டு.

ஆண்குழந்தை பிறந்ததென்று அப்போ
அடித்தாரே மணிக்குலவை.

இந்தவிதமாக அந்த அரக்கிப் பெண்கள் அந்தப் பாதாளவல்லி பெற்ற பாலனுக்கு மேலும் என்ன செய்தார்களானால்

சேனையது ஊட்டியல்லோ அப்போ
தெளியவைத்தார் பாலகனை
85 மாணிககப்பொன் தொட்டிலிலே அந்த
மைந்தனையும் தான்கிடத்தி
ஓராட்டித் தாலாட்டி அங்கே
உருக்கமுடன் வளத்துவாருர்

(அரக்கி, மைந்தனுக்குப் பெயர் வைத்தல்)

இந்தவிதமாக வளர்ந்துவரப்பட்ட குழந்தைக்கு அந்தப் பாதாளவல்லியானவள் என்ன விதமாகப் பெயர் வைத்தாளானால்

பெற்றெடுத்த பாலனுக்கு அவள்
90 பெயர்கொடுக்க வேணுமென்று
என்னபெயர் கொடுக்கவென்று அந்த
ஏந்திழையாள் பெண்கொடியாள்
(இவன்) வல்லபத்தில் சிறந்ததினுல் பாலனுக்கு
வல்லரக்கன்என்று பெயர்கொடுத்தாள்

(அரக்கி மைந்தன் வல்லரக்கன் என்று பெயர் பெற்று வளர்தல்)

அதாவது அந்தப் பாதாள வல்லி என்ற அரக்கிப் பெண்ணுள் தான் பெற்றெடுத்த பாலனுக்கு வல்லரக்கன் என்ற பெயர் கொடுத்து வளர்த்து வரக்கூடிய காலத்தில் அந்தப் பாலகனுகிய அவனுக்கு

---

80, குழந்தை பிறந்தவுடன் ஆண் ஆயின் எட்டுமுறை குரவை ஒலி முழக்குதலும், பெண் ஆயின் ஏழுமுறை குரவையிடுதலும் மரபு. வெட்டும் சிவனுக்கு எட்டு, ஏழைப் பெண்ணுக்கு ஏழு' என்பர். குலவை - குரவை. வாய் குவித்து நாக்கினை மணிநாபோல்அசைத்து மகளிர் எழுப்பும் மங்கல ஒலி. குரவையிடுதல் தற்காலம்; மிக அரிது.

83 சேனையது ஊட்டி-சேனை கொடுத்தல், குழந்தை பிறந்தவுடன் ஊட்டப் பெறும் முதல் நீருணவு.

87. பாராட்டித் தாலாட்டுப் பாடுதல்.

88. வளத்து - வளர்த்து.

90. வேணுமென்று - வேண்டுமென்று 93. வல்லபத்தில் - வல்லமையில், வலிமையில்.

95 ஒருவயதாம் இருவயதாம் நல்ல
உற்றமூன்று வயதாச்சி
மூன்றுநல்ல வயததிலே அரக்கனுக்கு
முடியிறக்கி காதுகுத்தி
நான்கு வயததிலே பாலன்
100 நடந்தோடித் திரிந்திடுவான்
ஐந்துவய தானவுடன் ஒரு
அண்ணுவியை வரவழைத்தார்

(வல்லரக்கன் கல்வி பயிலுதல்)

இந்தவிதமாக அந்தப் பாலனுக்கு ஐந்து வயது ஆனவுடன் அந்தப்பாதாளவல்லியாகிய அரக்கிப் பெண்ணாள் ஒரு அண்ணுவியைவரவழைத்து என்ன செய்கிறாள் ஆனால்

(ஆசானுக்குப் பெரும்பொருள் தருதல்)

அள்ளிஅள்ளிப் பொன்கொடுத்தாள் அந்த
ஆசானுக்கு தெச்சணையாய்
105 வாரிவாரிப் பொன்கொடுத்தாள் அந்த
வாத்தியார்க்குத் தெச்சணையாய்
நிறநாழி தெச்சணையும் அவள்
நிரம்பெறவே தான்கொடுத்தாள்

(ஆசான் பாடம் கற்பித்தல்)

இந்தவிதமாக அந்தப் பாதாளவல்லி என்ற அரக்கிப் பெண்ணாள் சுகமுகுத்தத்தில் ஒரு வாத்தியாரை வரவழைத்து அந்த வாத்தியாரும் வல்லரக்கனுக்கு என்ன விதமாகப் பாடம் சொல்லிக் கொடுக்கிறார் ஆனால்

(அ ஆ இ ஈ என்று படித்தல்)

(இன்னும்)ஆத்திச்சூடி கொன்றைவேந்தன் நல்ல
110 அன்னைபிதா எண்சுவடி

---

95-100. குழந்தைப் பருவத்தில் நிகழ்த்தும் முடியிறக்குதல், 'காது குத்துதல்' ஆகியன அரக்கனுக்கும் நடந்தனவாகக் கூறுதல். 96. வயதாச்சி—வயதாயிற்று 102. அண்ணுவி-கற்பிக்கும் ஆசிரியர்.

104. தெச்சணை - தட்சணைப்பணம். 107. நிறநாழி - நிறைநாழி. நாழி நிறைய நெல் வைத்து அளித்தல். 108. நிரம்பெறவே - நிரம்பவும். அதிக அளவில். 109. அரக்கனாயினும் சரி, அயோத்திஇராமன் ஆயினும் சரி ஆத்திச்சூடி முதல் இங்கே குறிப்பிட்டுள்ள தமிழ்நூல்களைக் கற்றுணர்ந்ததாகப் பாடிவிடுதல் புலவர்களின் வழக்கம்.

நல்வழியும் மூதுரையும் — நல்ல
நாலடியார் திருக்குறளும்
பன்னூல்கள் விளக்கமுறை — ஆன
பலகலையும் தான்படித்தான்

(வல்லரக்கன் பல்கலை வல்லவன் ஆதல்)

இந்தவிதமாக நான்குவேதம் ஆறு சாஸ்திரம் அறுபத்தி நான்கு கலைக்கியானம் தொண்ணுத்தாறு தத்துவம் இதிகாச புராணங்களை யெல்லாம் :கற்று உணர்ந்து வாழ்ந்து வரப்பட்ட வல்லரக்கனுக்கு வயது பதினாறு ஆனவுடன் அந்த அரக்கர்கள் எல்லோரும் சேர்ந்து பாதாள உலகத்தைப் பட்டம் கட்டவேண்டி வல்லரக்கனிடம் என்ன சொல்வார்களானால்

(வல்லரக்கனை ஆட்சிப் பொறுப்பு ஏற்கவேண்டுதல்

115 மணிமுடியை நீதரித்து — இந்த
மாநிலத்தை ஆளும் என்றார்
பொன்முடியை நீதரித்து — இந்த
பூமி அரசாளும் என்றார்
செங்கோலைக் கரம்கொடுத்து — நல்ல
120 தேசம் எல்லாம் ஆளும்என்றார்

இந்தவிதமாக பாதாளவல்லி பெற்றெடுத்த பாலகன் வல்லரக்கன் பாதாள உலகத்தை பட்டம் கட்டி என்னவிதமாக ஆண்டுவாறான் ஆனால்

(அரக்கனின் ஆட்சிச்சிறப்பு)

எதிரி ஒருவரும் இல்லைஎன்று — அந்த
எல்லைஅரசாண்டுவாறான்
தனக்கெதிரி இல்லைஎன்று — அங்கு
தானேயாண்டான் வல்லரக்கன்
125 அவனிஐம்பத்தாறு தேசம்எல்லாம் — கட்டி
ஆண்டுவாறான் வல்லரக்கன்

114-115. இடைஉரை : கலைக்கியானம் கலைஞானம், கலையறிவு; பிராணம் - புராணம். வேதம், சாஸ்திரம், கலை, தத்துவம், இதிகாசம் புராணம் ஆகியன பற்றிய குறிப்புகள் தரப்படுகின்றன.

115-120. ஒரே கருத்து இவ்வாறு அடுக்கிவரத் தொடுத்தல் வில்லுப் பாட்டின் பொதுவான மரபு, தனிச்சிறப்பு ஆகும்.

இந்தவிதமாக வல்லரக்கன் ஆண்டுவரப்பட்ட சீமையிலே என்ன நடக்குதானல்

(மழையின்மையால் பஞ்சம் நேருதல்)

பன்னிரெண்டு வருடமட்டும் அந்தப்
பாரில்மழை பெய்யலையே
நாட்டில்நல்ல மழையுமில்லை அங்கே
130 நஞ்சைபுஞ்சை விளையவில்லை
தேசம் நல்ல செழிக்கவில்லை நல்ல
சென்னல்கன்னல் விளையவில்லை

(அரக்கனுக்கு அடங்கிய மன்னர் கப்பம் கட்டாதிருத்தல்)

இவ்வாறு வல்லரக்கனின் பாதாள உலகத்தில் பன்னிரெண்டு வருடகாலம் மழை இல்லாததால் அவனி ஐம்பத்தாறு தேச மன்னர்களும் வல்லரக்கனுக்குக் கட்டவேண்டிய

பகுதிப்பணம் கட்டலையே நல்ல
பாக்கிவந்து சேரலையே
135 கப்பப்பணம் கட்டலையே அங்கே
கணக்கில் வந்து சேரலையே
வரிப்பணமும் கட்டலையே அரக்கனுக்கு
வரவில்வந்து சேரலையே

(கப்பம் வாங்கிவர அரக்கன் அமைச்சரை அனுப்புதல்)

இந்தவிதமாக அவனி ஐம்பத்தாறு தேசத்துமன்னர்களும் வல்லரக்கனுக்குக் கட்டவேண்டிய கப்பப்பணம் கட்டாததால் வல்லரக்கன் தன்னுடைய முதல் மந்திரியை அழைத்து வாரும் மந்திரியே நமக்கு அவனி ஐம்பத்தாறு தேசத்துமன்னரும் பகுதிப் பணம் கட்டாததால்

(நீர்) படைஎடுத்து தானும்சென்று அந்த
140 பாக்கிகளை வாங்கிவாரும்

---

126. ஆண்டு 'வாருன்' — ஆண்டு 'வருகிருன்'. இவ்வாறு வருதலைப் பிற இடங்களிலும் கொள்க. 130. நஞ்சை புஞ்சை - நன்செய், புன்செய். 132 செந்நெல்லும், கரும்பும் விளையவில்லை பஞ்சம் ஏற்படல் முதலானவை பன்னிரண்டு ஆண்டு அளவிலேயே குறிக்கப் பெறுதல் ஓர் மூறையாக அமைவது, பலவிடத்தும் காணலாம். 'பாண்டியநாடு பன்னீர் யாண்டு வற்கடம் சென்றது' எனல்.

133. பகுதிப்பணம் - கப்பம், திறைப்பணம். கட்டலேயே - கட்டவில்லையே 134. சேரலேயே - சேரவில்லையே. 133-138 இங்கும் பகுதி, கப்பம், வரி என்ற சொல் வேறுபாட்டுடன் ஒரே கருத்து அடுக்கி வருதல் காணலாம்.

கப்பப்பணம் கட்டாவிட்டால் அவரை
கைப்பிடியாய்க் கொண்டுவாரும்
என்றுஅந்த வல்லரக்கன் அப்போ
இட்டானே ஆணையதும்

(அமைச்சர் சிறைப்பிடித்துவந்த மன்னரை அரக்கன் துன்புறுத்தல்)

உடனே வல்லரக்கனுடைய மந்திரி படைகளுடன் சென்று பல தேசமன்னரிடமும் 'வாரீர் மன்னுதி மன்னர்களே நீங்கள் பன்னி ரெண்டு வருடம் பகுதிப்பணம் கட்டாததால் பணத்தை வாங்கி வரும்படி கட்டளையிட்டார் பணத்தைக் கொடுக்க மறுத்தவரைக் கைப்பிடியாய்ப் பிடித்துவரும்படி கட்டளையிட்டார் என்று சொல்ல அதுகேட்ட மன்னர்கள் மழையில்லாத 'காரணத்தைக் கூறிப் பகுதிப்பணம் கட்டமுடியாதென்று சொல்லவும் அரக்கனின் ஆணைப்படி மந்திரியானவன் அந்த மன்னர்களை எல்லாம் கைப் பிடியாய் கொண்டுவந்து வல்லரக்கன் முன்னே நிறுத்தவும் அவர்களைக் கண்டு கோபம் கொண்ட அரக்கன் அந்த அரசர்களை குனியவைத்து முதுகில் கல்லேற்றி பகுதி கேள்க்க அப்பொழுது அரசர்கள் கண்ணீர் விட்டு கதறி பதறி, கால்கள் நடுங்கி அரக்கனைப் பார்த்து ஏதுசொல்வார்களானால்

(மன்னர்களின் முறையீடு)

145 வாருமையா வல்லரக்கா இப்போ
கேளுமையா ஒருவசனம்
பன்னிரண்டு வருடகாலம் இந்த
பாரில்மழை பெய்யாது
பஞ்சத்தால் வாடலானோம் நாங்கள்
150 பகுதிகட்ட தவறலானோம்
பெண்டுடனே பிள்ளைகளும் இப்போ
பெரும்பசியால் வாடுகிறார்
கன்றுடனே மாடுகளும் உலகில்
கதறுதையா பசிப்பிணியால்

இப்படி பஞ்சம் ஏற்பட்டதென்று அயன்பிரம்மா விஷ்ணு ஆலயங்களுக்கு அர்ச்சனை செய்து அரனடி பணிவோமானாலும்

144-145. இடைஉரை : கேள்க்க - கேட்க. 150-154. மழை இல்லையேல் 'உண்ணின்று உடற்றும் பசி', 'பசும்புல் தலைகாண் பரிது' எனும் கருத்துகள் அமைந்துள்ளமை காணலாம்.

155 அரன்பூசை செய்வதற்கு நல்ல
அதலிமலர் வாடலாச்சே
சிவபூசை செய்வதற்கு இப்போ
செவ்வதலி கிடையாதே
அறுகுதும்பை கரிகிப் போச்சு நாங்கள்
160 ஆண்டதொரு தேசத்திலே

இப்படி பன்னிரெண்டு வருடம் பஞ்சம் ஏற்பட்டால் எப்படி பகுதி கட்டமுடியும் ஆகையால்

பாரக்கல்லை இறக்கிவிடும் நல்ல
பாதாளம் ஆளும் மன்னு
நாடுவேண்டாம் நகரம்வேண்டாம் இப்போ
நாங்களுயிர் பிழைத்தால் போதும்
165 கரம்பிடித்த செங்கோல் தாரோம் நாங்கள்
காலாள்படை சேனை தாரோம்
கணையாழி கழட்டித் தாரோம் நாங்கள்
கானகமே ஓடிப் போரோம்

(அரக்கன் மன்னர்களை வனத்திற்கு விரட்டிவிடுதல்)

இந்தவிதமாக அரசர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்ட உடனே அரக்கன் என்ன செய்தானானல் அரசர்கள் முதுகிலிருந்து கல்லை இறக்கி ஓடிப்போங்கள் என்று சொல்ல அப்போது அரசர்கள் எல்லாம்

ஓடுகிறார் கானகமே இந்த
170 உலகமதை ஆண்டமன்னர்
வாடியதோர் திருமுகமாய் அரசர்
வாரார்கள் வனம்தேடி
வெய்யிலும் பொடிச்சூடும் அரசர்
மேனிஎல்லாம் வாட அல்லோ
175 ஆரொருவர் இல்லாத நல்ல
அடந்தவனம் வந்துசேர்ந்து

155-160. "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"

156. அதலி - அரளிப்பூ. வாடலாச்சே - வாடலாயிற்று. 195. கரிகிப்போச்சு- கருகிப் போய் விட்டது. 161. பாரக்கல்லை - பெரிய கல்லை. 'பார' ;என்பது பெரிய என்னும் பொருளில் பலவிடத்தும் வருதல் காணலாம். (பாரவில்)

165. தாரோம் - தருகிறோம். போரோம் – போகிறோம்.

172. வாரார்கள் – வருகிறார்கள். பிற இடத்தும் இவ்வாறே கொள்க.

173. வெய்யில் - வெயில்.

எண்ணாத எண்ணமெல்லாம் மன்னர்
எண்ணுகிறார் சிந்தைதனில்

(மன்னர்கள் அரக்கனை எதிர்க்கத் திட்டமிடுதல்)

வாருங்கள் அரசர் மன்னர்களே நமக்கு காலாள் யானை குதிரை ஒட்டகைகளும் பலம் பொருந்திய வீராதி வீரர்களும் வேண்டிய ஆயுதங்களும் நம்மிடம் இருக்க ஓர் அரக்கனுக்குபயந்து நவரத்தினங்கள் பதித்த செங்கோலும் மாணிக்கங்களால் அலங் கரித்த சிம்மாதனமும் வைய்ர மிழைத்த கணையாழியும் கொடுத்து நாம் இந்த கானகம் தேடி வரலாமோ

அரசாண்ட மன்னர் நாம்தான் இந்த
180 அடந்தவனம் ஓடலாமோ
முகத்தில் மீசை வைக்கலாமா நாம்
முடிமன்னரென்று இருக்கலாமா
அரக்கனுடைய வலுமைதன்னை நாம்
அடக்கவேணும் படைஎடுத்து
185 படைஎடுத்து அரக்கனைத்தான் இந்த
பாதாளம்விட்டு விரட்டவேணும்

(மன்னர்கள் படைதிரட்டி வருதல்)

என்று அரசர்கள் எல்லோரும் ஒன்றுகூடி அவரவர்கள் தேசம் சேர்ந்து அவர்கள் இடமுள்ள படைகளை எல்லாம் ஒன்றுகூட்டி அரக்கனை தேடி என்னவிதமாக வாறார்கள் என்றால்

யானைகள் ஒருபுறமாம் நல்ல
ஆள்படை ஒருபுறமாம்
கட்டாரி ஈட்டிகளும் தங்கள்
190 கரம்பிடித்த மன்னர்களும்
சண்டை கொடிபிடித்து அங்கே
தவுல்முரசு தான்முழங்க
போர்முரசு தான்முழங்க அரசர்
போறார்கள் அரக்கனிடம்
195 சண்டை என்ற முரசுசத்தம் அப்போ
தானே கேட்டு வல்லரக்கன்

178-179. இடைஉரை : வைய்ர மிழைத்த - வைரம் இழைத்த.
183. வலுமை - வலிமை.

ஏறிட்டுப் பார்த்தானே அப்போ
எதிரிகளின் படையதைத்தான்

(படைப் பெருக்கம்கண்டு அரக்கன் அஞ்சுதல்)

அரசர்களின் படையானது என்னவிதமாக வாறதானல் விளக்கை விட்டில்பூச்சி சூழ்ந்தால் என்னவிதமாக இருக்குமோ அந்தவிதமாக இருக்கக்கண்ட அரக்கன் என்னசெய்தானுனல்

அரசர்படை தன்னைகண்டு அந்த
200 அரக்கனவன் ஏதுசெய்தான்
யாரொருவர் இல்லையிங்கே வரும்
அரசரோடு போர்புரிய
காலாள்படை சேனையல்ல இப்போ
கடியபோர் செய்வதற்கு
205 வல்லபரி கரிகளில்லை இங்கே
வணங்கி போர்செய்ய படையும்இல்லை
யாரும்துணையில்லை நமக்குத்தானே அந்த
ஆதிபரமசிவன் தனைத்தவர
ஈஸ்பரன்தனைதவர நமக்குத்தானே
210 எவரும் துணையில்லை பாதாளத்தில்

(பகைவெல்லவேண்டி அரக்கன் சிவனை நோக்கித் தவம் புரியச் செல்லுதல்)

என்று அரக்கனுனவன மனதிலே எண்ணி ஆதி சோதியாகிய அரனை நினைத்து தவம்செய்ய வேண்டும் என்று அரசர் படைகளுக்குத் தெரியாமல்

அடந்தவனம் தேடிவாறுன் ஆதி
அரனைநோக்கி தவங்கள் செய்ய
படந்தவனம் தேடிவாறுன் அந்த
பரமன்தனை நோக்கி தவங்கள்செய்ய
215 ஈநுணையா வனமதிலே அரக்கன்
ஈசன்தவம் செய்வோமென்று
காட்டானை சிங்கங்களும் அங்கு
கரடிபுலி கூட்டங்களும்

198-199. இடைஉரை : வாறதானுல் - வருகின்ற தென்றுல்.
201. யாரொருவர் - யாரேனும் ஒருவர்
208. தவர - தவிர.
213. படந்தவனம் - படர்ந்தவனம்.
215. ஈநுணையா - ஈ. நுழையாத.

நல்லரவம் வேங்கைகளும் வாழும்
220 நடுவனமும் தாண்டிவாறுன்
காகமது பறக்காத அந்த
கானகத்தில் வந்தல்லவோ

அரக்கன் யாரும் அறியாத வனத்தில் வந்து ஆதிபரஞ் சுடராகிய பரமசிவனை நோக்கி என்னவிதமாய்த் தவம்செய்யப் போறுனுல்

(அரக்கன் கடுந்தவத்தின் சிறப்பு)

அய்நூறடி சச்சவுக்கம் அரக்கன்
ஆழநல்ல குழிஎடுத்து
225 ஆழக்குழி மேலவேதான் ஒரு
ஆமைநல்ல பலகைபோட்டான்
ஆமைநல்ல பலகைமேலே நல்ல
ஆயிர முழம்கம்பம்நாட்டி
ஆயிர முழக் கம்பத்தின்மேல் நல்ல
230 அழகுசெப்புக் குடம் கவிழ்த்தி
ஏழுசெப்புக் குடத்தின்மேலே ஒரு
எலுமிச்சம் பழத்தைவைத்தான்
எலுமிச்சம் கனிமேலே அரக்கன்
கொலுமச்சம் கனியை வைத்தான்
235 கொலுமச்சம் கனிமேலே ஒரு
குண்டுமணி பருப்பைவைத்தான்
குண்டுமணி பருப்பின்மேலே நல்ல
குளிர்ந்த செவ்வெளனி ஒன்றுவைத்தான்
செவ்வெளனி மேலவேதான் ஒரு
240 செவ்வதலி மலரைவைத்தான்
செவ்வதலி மலர்மேலே அரக்கன்
சிறுகடுகு தன்னைவைத்தான்
சிறுகடுகு மேலவேதான் ஒரு
சிவந்த கொட்டைப்பாக்கு தன்னைவைத்தான்

---

211-222. வனம் தாண்டி வருதல் இவ்வாறே கூறப் பெறுதல் வில்லுப்பாட்டில் ஒரு பொதுமரபு.

226. ஆமை ஓட்டினுல் அமைந்த பலகை எனலாம் 230. கவிழ்த்தி.கவிழ்த்து

234. கொலுமச்சம் - கனிவகையுள் யாதெனத் தெரியவில்லை. பிற இடத்தில் எலுமச்சங்கனி என்றும் வழங்கும்.

238. செவ் வெளனி - செவ்விளநீர்.

245 கொட்டைப்பாக்கு மேலவேதான் — அரக்கன்
சூர்மையுள்ள ஊசி நாட்டி
ஊசிமுனைமேல் ஒருகாலும் — அவன்
உச்சந்தலை கீழே கால்மேலும்
கால்மேலும் தலைகீழும் — அவன்
250 கர்த்தனைநோக்கி தவங்கள்செய்தான்
அதிகதவம் செய்யுகிறான் — அங்கே
ஆதிசிவனார் தனைநினைத்து
பரமனை நோக்கிய தவங்கள் செய்தான் — அரக்கன்
பன்னிரெண்டு வருடமாக

இப்படியாக தவம்செய்யும்போது அரக்கன் ரோமங்கள் சடைகளாகவும் பகளம் போன்ற பல்கள் பாசிபடரவும் வீரதீர பராக்கிரமம் போன்ற உடலை காற்றால் மணல் மூடவும் அவன் பக்கத்தில் கறையான் புற்றுகள் வளந்து மலைபோல் உயரவும் அதன்மேல்

255 அடந்த நல்ல மரமுளைத்து — அங்கு
ஆனந்தப்பூச் சொரிந்திடுமாம்
மலர் சொரியும் மரத்தடியில் — தவம்
வல்லரக்கன் செய்யும்நாளில்
அரக்கன்செய்த தவமதுதான் — கயிலைக்கு
260 அக்கினியாய் போகுதய்யா
ஆணிப்பொன் சிம்மாதனம் — அப்போ
ஆடுதையா அக்கினியால்

இவ்விதமாக மாணிக்க சிம்மாதனமானது வல்லரக்கன் தவத்தால் சென்ற அக்கினிச் சுவாலையால் மெழுகு உருகி ஆடவும் ஆதிசத்தியானவள் திரேகம் அசைவு கொடுக்க

எட்டிநல்ல பிடித்தாளே — அப்போ
ஈஸ்பரனை பார்பதியாள்

---

251. செய்யுகிறான் - செய்கிறான்.

223-254. அரக்கனின் கடுந்தவமும் தவவலிமையும் இவ்வாறெல்லாம் விந்தையாக விளக்கம் பெறுகின்றன. தவமும் பன்னிரண்டு ஆண்டு எனக் குறிப்பிடுதல் காண்க.

254-255. இடை உரை : பகளம் - பவளம்.பவழம் வளந்து - வளர்ந்து.

262. அரக்கனின் தவவலிமையால் உமையும் ஈசனும் அமர்ந்துள்ள மாணிக்க அரியாசனம் ஆட்டம் கொடுக்கிறது.

262-263. இடை உரை : திரேகம் - தேகம், உடல்.

264. பார்பதியாள் - பார்வதியாள்.

265 என்கணவா மன்னவரே இன்று
ஏதுஇந்த அதிசயங்கள்
ஆடாத சிம்மாதனம் இப்போ
ஆடும் காரணம் ஏதுசொல்வீர்

என்று ஆதிசத்தியான பார்பதியாள் கேள்க்க பரமசிவன் ஏது சொல்வாரானல் யாரோ ஒரு மானிடன் என்னை நினைத்து பன்னிரெண்டு வருடம் தவம்செய்கிறன். அவன் செய்த தவத்தால் இந்த சிம்மாதனம் ஆடலானது. ஆகையால் அவனை அழைத்து வேண்டிய வரங்களை கொடுக்க வேண்டுமென்று சொல்லி ஈஸ்பரன் என்ன செய்தாரானல்

(அரக்கன் தவப்பெருமை அறிந்த சிவனர் அவனை அழைத்துவர நந்தியை அனுப்புதல்)

அழைத்தாரே நந்திபகவானை நல்ல
270 ஆதிகறைக்கண்ட ஈஸ்பரனும்
அப்போது நந்திதேவன் ஆதி
கறைக்கண்டன் முன்னேவந்தான்
வாரும்பிள்ளாய் நந்திதேவா ஒரு
வார்த்தையொன்று சொல்லக்கேளும்
275 ஆரோ ஒரு மானிடவன் இப்போ
அதிகதவம் செய்குறனே
அதிகதவம் செய்பவனை இப்போ
அழைத்துவர வேண்டுமென்றர்

இப்படியாக ஈஸ்பரன் சொன்ன வார்த்தையை கேட்ட நந்தி தேவன் ஆதி கறைக்கண்ட பகவானை பணிந்து கயிலாசத்தைவிட்டு என்ன விதமாக வாறர் ஆனல்

(நந்திதேவர் அரக்கனைத் தேடிவருதல்)

ஒற்ற குடும்பியும் பூணூலும் ஒரு
280 கோலப் பிரம்பேந்தி நந்திதேவர்
வாறரே கயிலைவிட்டு சிவனர்
வார்த்தைதனை கண்டறிய
ஊரு ஊராய் தானலைந்து நந்தி
ஒரு அதிசயமும் காணமல்

270. ஈஸ்பரன் -ஈஸ்வரன்.
276. செய்குறனே - செய்கிறனே.
279. ஒற்ற குடும்பி - ஒற்றைக் குடுமி.

285 அடர்ந்தவனம் தேடிவாறார் நல்ல
அழகுடைய நந்திதேவர்
வனமான வனமதிலே நந்தி
வாறாரே அப்பொழுது
காட்டானை வாழும்வனம் அங்கே
290 கரடிபுலி உறங்கும்வனம்
பச்சைமலை பகளமலை நல்ல
பளிங்கிமலை தனைக்கடந்தார்
பாசிநல்ல படந்தமலை ஒரு
பங்குனித்தேர் ஓடும்மலை
295 ஊசி நல்ல படந்தமலை நல்ல
உத்திராச்சம் காய்க்கும்மலை
மானிருந்து குதித்துஓடும் அங்கு
மயிலிருந்து விளையாடும்
குயில்கூடி கவிபாடும் நல்ல
300 குளிந்தவனம் வந்துசேர்ந்தார்

இப்பேர்ப்பட்ட வனங்கள் தோறும் அலைந்தும் ஆதி ஈஸ்பரன் சொன்ன அடையாளங்களை காணாது ஆருத்துயரங் கொண்டு அடுத்தவனம் பார்ப்போம் என்று நந்திதேவர் வாறநேரம் அவ் வனம் எப்பேர்ப்பட்ட வனமானால்

யாரு மொருவரும் அறியாதே அந்த
அடந்தநல்ல வனமதிலே
எறும்புமுதல் யானைஇல்லாத நல்ல
ஈநுழையாத கானகத்தில்
305 காகம் குரலிடா வனமதிலே அந்த
கர்த்தன் தூதனும் வந்துசேர்ந்தார்
செடிகள் தூக்கியே நுழைந்துவாறார் அந்த
சிவனார் தூதனும் நந்திதேவர்
கானகத்தில் அலைந்தல்லவோ நந்தி
310 கால்கள் எல்லாம் தான்வாடி
அலைந்தலைந்து மனது நொந்து ஒரு
ஆலமரத் தடியில் வாறார்.

(அரக்கன் சிவனை நினைந்து பாடுதல்)

இவ்விதமாக அலைந்த நந்திதேவன் மனம்நொந்து முகமது வாடி கால்கை தளர்ந்து உயர்ந்த ஆலமரத்தடியில் வரும்நேரம்

---

289-300. வனத்தின் வருணனை வரும் இடங்களில் எல்லாம் இப்பகுதியே பொதுவானதாகச் சொல்லப்படும் மரபினைக் காணலாம்.

அந்த ஆலமரத்தடியில் இருக்கும் கறையான் புற்றுக்குள் இருந்த அரக்கன் என்ன செய்தான் ஆனல் நாம் அந்த கயிலைநாதன் கங்காளன் காளைபரமேஸ்பரனை நினைத்து பன்னிரெண்டு வருடம் தவம் செய்து இன்றோடு சரியானதால் அந்த ஈஸ்பரனை காண வில்லையே என்று மனத்துயர் கொண்டு என்ன செய்தானுனல்

(வேறு) -2-

(1) அரகரா சிவசம்போ சங்கரா திருச்சடையில்
அறுகுதும்பை அணிந்த சேகரா
அரவம் அணிந்த நாதனே உந்தன்
அடியிணை காணப் பெருந்தவம் செய்தேன் (அர)

(2) ஆகுவாகனனை அளித்த ஈசனே அடியார்மனதை
அறிந்துவரம் கொடுக்கும் நாதனே
அனுதினம் உந்தன்பாதம் தனைத்தொழுது
அடந்தவனத்தில் இருந்தேன் தவசு (அர)

(3) நாரைதனக்கு முத்திகொடுத்தவா திருப்பால்கடலில்
நஞ்சிதன்னை வாரிக்குடித்தவா
என்னுளுமே தொழும் ஞானியர்க்குஉப
காரமான வேதமெய்ப் பொருள் (அர)

(4) அமரர்கள்தினம் பணியும் பாதனே அவனியில் என்னை
அரக்கர் குலத்தில் படைத்த நாதனே
அடியேன் செய்யும் தவமதைக்கண்டு
அருள்புரிந்திட மனமிரங்காதா (அர)

என்று அரக்கன் மனம்நொந்து ஈஸ்பரனை நினைத்து தியானிக்க அந்த சத்தத்தைகேட்டு நந்திதேவன், நான்குபுறமும் திரும்பிப் பார்க்க ஆரும் இல்லாததால் வாய்திறந்து என்ன சொல்வாரானல்

(பாடிய அரக்கனை நந்திதேவர் அழைத்தல்)

நஞ்சையுண்டோன் என்றசத்தம் அங்கு
நந்திதேவனும் கேட்டபோதே

---

பாடல் 2. இதுபோலும் பாடல்கள் இக்கதையின் இடையிடையே ஆறு இடங்களில் அமைகின்றன. இவை இசைவேறுபாடு உடையவை ஐயன் கதையைப் பாடிவந்த புலவர் அருணசலம் என்பாரால் இவை ஆக்கப்பெற்றுக் கதையின் சுவைக்காக ஆங்காங்கே சேர்க்கப்பெற்றுள்ளன என அறிகிரேம். காண்க : பாடல் 3. கண்ணி 5.

312. வரிக்குமேல் வரும் உரை: கங்காளன் - எலும்புகளை அணிந்துள்ள சிவன். (கங்காளம் - முழுவெலும்பு, எலும்புக்கூடு.)

பாடல் 2. கண்ணி 2. ஆகுவாகனன் - விநாயகன். கண்ணி 3. இறைவன் நாரைக்கும் முத்தி கொடுத்ததும், நஞ்சென்றும் பாராமல் வாரிக்குடித்ததும் நயமுடன் சுட்டப்பெறுகின்றன.

315 ஆரடவா புற்றுக்குள்ளே இப்போ
அரனை நோக்கியே வருந்துவது
புற்றுவிட்டு வெளியே வாடா பெருந்
தவம்செய்த மானிடனே
என்றுசொல்லும் வேளையிலே அப்போ
320 ஏதுசெய்தான் வல்லரக்கன்
ஆதிசிவன் வந்தாரென்று அப்போ
அவன்மனதில் எண்ணியல்லோ
கம்பம்விட்டு எழுந்தரித்தான் அந்த
கறையான்புற்று வெடித்திடவும்
325 ஓடிவாறான் அரக்கனுமே அந்த
உற்றபிள்ளை நந்தியிடம்
நந்திதேவன் முன்னேவந்து அப்போ
நலமுடனே ஏதுசெய்தான்

(அரக்கன் நந்திதேவரைச் சிவனார் என எண்ணி வழிபடத் துவங்குதல்)

ஆதிகறைக்கண்ட பகவானை பாதம் பணிய வேண்டும் என பூக்குடலை எடுத்து மலரெடுக்க எண்ணி நந்தவனம் தேடி அங்குள்ள மலர்களையும் மரங்களையும் கண்டு அரக்கன் என்ன சொல்வான் ஆனால்

(வேறு) -3-

(1) பாருலகில்தானே பார்த்ததில்லை நானே
பந்திபந்தியாக செந்தாமரைமீதில்
வண்டுகள் கூடியே சங்கீர்தம் பாடிட (பாருலகில்)
(2) மந்தாரை செண்பகம் மகிழ்ந்திடும் காட்சி
மணக்கும் மல்லிகை முல்லை இருவாச்சி (பாருலகில்)
(3) சிவந்தி மந்தாரை வனமதில்பாதி
சிறுகுடைமல்லி செந்தாமரைச்சாதி (பாருலகில்)
(4) அறுகுடன் தும்பை அதலிவில்வமும்
அழகுள்ள ரோஜா மணக்கும் வாசமும் (பாருலகில்)

---

315. ஆரடவா - ஆரடா,

323. எழுந்தரித்தான் - எழுந்தான். எழுந்தரி, எழுந்திரி, எந்திரி என்பன நெல்லைமாவட்டப் பேச்சு வழக்கு.

பாடல் 3. கண்ணி 1. சங்கீர்தம் - சங்கீதம் இவ்வாறு 'ர்' ஆசு இடையிட்டுச் சொல்லும் வழக்கம் வில்லுப்பாட்டுப் புலவரிடையே உண்டு. 'காக்க வேணும்' என்பதைக் கார்க்கவேணும்' என்பர். பிறவும் வந்தவழிக் காண்க. (வரி.452)

(5) பாரிசாதமலர் வாசம் பொருந்திய
பாலன் அருணுசலந் தமிழ்தன்னைப்போல் (பாருலகில்)

இப்படியாக அரக்கன் மனதில் சந்தோசம் கொண்டு ஆதிகறைக் கண்ட பகவானை பணிய சகலவிதமான மலர்களும் எடுத்துக் கொண்டு நந்திதேவனைப் பரமசிவன் என்று மனதில் எண்ணி அவசரமாக நந்தியின் பாதத்தில் மலர்களைச் சாத்தி வணங்க அப்போது நந்திதேவன் அரக்கனைப் பார்த்து ஏதுசொல்வாராஞல்

(நந்திதேவர் தன்னை அறிவித்து வந்த செய்தி தெரிவித்தல்)

ஆதிசிவன் நானுமல்ல இங்கு
330 அருந்தவம் செய்த மானிடனே
எந்தன்பாதம் பணிந்ததென்ன இப்போ
எனக்கறியச் சொல்லும் பிள்ளாய்
என்று நந்தி கேட்டபோது அப்போ
ஏதுசொல்வான் வல்லரக்கன்
335 பரமனைத்தான் காணவேணும் அவர்
பாதமதை பணியவேணும்
சிவனிடமே கூட்டிச்செல்ல உந்தன்
திருப்பாதம் தான்பணிந்தேன்

(நந்திதேவருடன் கயிலைசென்ற வல்லரக்கன் சிவனுரைக் காணுதல்)

இப்படிச் சொன்ன உடனே வாரும் மானிடனே அந்த ஆதி கறைக்கண்ட பகவானைப் பார்க்க வேணுமாஞல் என்பின்னே வாருமென்று சொல்லி நந்திதேவன் நடக்க அரக்கன் பின் துடர்ந்து நடக்கவும் இப்படியாக இரு பேரும் முன்னும் பின்னுமாகச் சிவனுர் வாழும் கயிலாசம் வந்து

கண்டானே வல்லரக்கன் எங்கள்
340 கரியமால் மைத்துனனை
உலையிலிட்ட மெழுகதுபோல் அரக்கன்
உரிகி வீழ்ந்தான் சிவன் பாதம்
தணலில் வீழ்ந்த புழுப்போலே அப்போ
தான்துடித்தான் சிவன்பாதத்தில்
345 பார்த்தானே பரமசிவன் ஆதி
பகவானும் ஏதுசொல்வார்

338-339. இடைஉரை : துடர்ந்து - தொடர்ந்து.
342. உரிகி-உருகி

ஏதடவா வல்லரக்கா நீதான்
என்பாதம் விழுந்ததென்ன
எதற்காக தவமிருந்தாய் அதை
350 எந்தனிடம் சொல்லும்பிள்ளாய்
கேட்டவரம் தாறேன் என்று சிவனுர்
கிருபைமுடி தனையசைத்தார்
ஆணுவம்சேர் அரக்கனுமே ஆதி
சிவனிடத்தில் ஏதுசொல்வான்

(அரக்கன் மூன்றுவகை வரம் கேட்டல்)

ஏ ஆதிகறைக்கண்ட பகவானே என்னை அவனி ஐம்பத்தாறு தேசத்தரசர்கள் கூடி அடித்து விரட்டியபடியால் உன் பாதார விந்தமே கெதி என்று பன்னிரெண்டு வருடம் தவம் செய்து உன் திருப்பாதம் கண்ட எனக்கு

355 எள்ளிலையும் சிறியவரம் ஆதி
ஈஸ்பரனே வேணுமையா
கடுகிலையும் சிறியவரம் எங்கள்
கறைக் கண்டனே வேணுமையா

(இவ்வாறுகேட்ட அரக்கனை நோக்கிச் சிவனுர் சொல்லுதல்)

ஏதடவா வல்லரக்கா நீ
360 என்னவார்த்தை சொல்லவந்தாய்

எள்ளிலும் கடுகிலும் சிறிய வரம் பெறுவதற்கு உயர்ந்த கம்பம் நாட்டி பன்னிரெண்டு வருடம் தவம் செய்வாருண்டோ உன் தவமகிமை அறிந்தேன் நீ கேட்கும் வரம்தாறேன். என்று சிவபெருமான் சொல்ல அதைக்கேட்ட அரக்கன் என்ன சொல்வானுனல்

(வேறு) -4-

(1) மூன்றுவரமே தான்தரவேண்டும் மூர்த்தி அரனே
மூன்றுவரமே தான்தர வேண்டும்

---

347. ஏதடவா-ஏதடா. (ஆரடவாபோல).

351. தாறேன்-தருகிறேன்.

354-355: இடைஉரை: கெதி-கதி.

355. எள்ளிலையும்-எள்ளிலேயும், எள்ளிலும். 357. கடுகிலையும் - கடுகிலும்
பாடல். 4. இதன் கண்ணிகள் உரையிடையிட்டு ஒவ்வொன்ருக அடுத்தடுக்கு வருகின்றன.

அவனி அம்பத்தாறுதேசம் ஆள்பவரைத் தானே
அடக்கியே ஓர்குடைக்குள் ஆளவேணும் நானே
(வரமேதர)

ஆதி கறைக்கண்ட பகவானே இனக்குவேண்டிய மூன்று வரங்களில் முதலாவது வரம் அவனி அம்பத்தாறு தேசத்தை ஆளவும் இரண்டாவது வரம் யென்னவென்ருல் அடியேன் கரத்தில் இருக்கும் மூன்றுவிரலெடுத்து சத்த சாகரத்தில் ஊன்றினேனுனல்

(2) சமுத்திரத்தில் மூன்றுவிரல் ஊன்றியதோர்வேளை
சங்கரா உன்னருளால் தான் நெரிப்பு மூள
(வரமேதான்

ஏ ஆதிகறைக்கண்ட பகவானே அடியார்க் கிரங்கும் ஆனந்த வள்ளலே மூன்ருவது வரமானது என்னவென்ருல் அடியேன் கரத்தில் இருக்கும் மூன்று விரலெடுத்து என் கழுத்தைச் சுற்றி யாருடைய சிரசிக்கி நேராக நீட்டுவேனே அப்பொழுது அவருடைய சிரசானது

(3) கரமெடுத்து மூன்றுவிரல் காட்டியதோர்வேளை
கறைக்கண்டா உன் அருளால் கண்டதுண்டம் வீழ
(வரமேதான்)

(சிவனுர் அரக்கனுக்கு வரம் தருதல்)

என்று அரக்கன் கேள்க்க அப்படி நீ கேட்ட வரம் மூன்றும் தந்தேன் என்று கிருபாகர கடவுளாகிய ஈஸ்பரன் சொல்ல அவ் வார்த்தையைக் கேட்ட அரக்கன் மனமகிழவும் அந்தப்புறத்தில் மறைவாய் நின்று கேட்டுக்கொண்டிருந்த நாரதன் துன்பமடையவும் அப்போது அரக்கன் என்ன என்ன செய்தானுனல்

(வரம் பெற்று மீளும் அரக்கனை நாரதர் காணுதல்)

ஏற்றிஇரு கரம்குவித்து — அரக்கன்
ஈசன்பாதம் நமஸ்கரித்தான்
முப்புரத்தை எரித்தோனை — அரக்கன்
மூன்றுதரம் சுற்றிவந்தான்
365 நமஸ்காரம் பலதும்செய்து — அப்போ
நடந்தானே கயிலைவிட்டு
கயிலைவிட்டு வாறநேரம் — அரக்கனை
கண்டாரே பிரம்மபுத்திரரும்

கண்ணி 1, அம்பத்தாறு—ஐம்பத்தாறு.
கண்ணி 1-2. இடை உரை : சத்தசாகரம்-சப்த சாகரம், ஏழுகடல்.
கண்ணி. 2. நெரிப்பு - நெருப்பு.
கண்ணி. 2:3 இடை உரை: சிரசிக்கி சிரசுக்கு.

அரக்கனைத்தான் கண்டபோது நாரதர்
370 அழகுவீணை மீட்டலுற்றார்
வீணைசத்தம் காதில்கேட்டு அந்த
வீரமுள்ள வல்லரக்கன்
ஏறிட்டுப் பார்த்தானே அப்போ
ஏற்றபிள்ளை நாரதனை
375 நாரதனைக் கண்டல்லவோ அரக்கன்
நமஸ்காரம் பலதும் செய்தான்

நமஸ்காரம் செய்துநின்ற அரக்கனைப் பார்த்து நாரதன் யேது கேட்டானானால்

ஏதுபிள்ளாய் வல்லரக்கா நீதான்
இங்குவந்த விசயமென்ன
பாதாளம் தன்னைவிட்டு அரக்கா
380 பாரகயிலை வந்ததென்ன
வந்ததொரு விசயமதை என்னிடம்
வாய்திறந்து சொல்லும்பிள்ளாய்

என்று பிரம்மபுத்திரன் கேள்க்க, அரக்கன் ஏது சொல்வான் ஆனால் வாருமய்யா திரிலோக சஞ்சாரியே நான் பாதாளத்தை மனுமுறை தவறாமல் ஆட்சிசெய்து வாழ்ந்துவரும் நாளில் அவனி அம்பத்தாறு தேசத்து அரசர்களும் என்பேரில் படையெடுத்தார். அவர்க்குப் பயந்து யாரும் துணையில்லாது ஆதி கடவுளை நினைத்து பன்னிரெண்டு வருடம் தவம்செய்து மூன்று வரங்கள் பெற்று ஈசனைப் பணிந்து என் இருப்பிடம் போறேனென்றான். அவ் வார்த்தையைக் கேட்டஉடன் நாரதரும்

(அரக்கன் தான்பெற்ற வரங்களை நாரதரிடம் கூறுதல்)

புன்சிரிப்பு கொண்டல்லவோ அப்போ
பேசுவாராம் வாய்திறந்து
385 என்னஎன்ன வரமதுதான் ஆதி
ஈஸ்பரனும் தந்தாரப்பா
வாங்கிய தோர் வரமதைத்தான் எனக்கு
வகைவகையாய் சொல்லவேணும்

380. பாரகயிலை-பெரியகயிலைமலை.

3823-83. இடைஉரை : திரிலோக சஞ்சாரி-மூன்று உலகமும் சென்றுவரும் தன்மையுள்ள நாரதன்.

என்று நாரதன் கேள்க்க அரக்கன் ஏது சொல்வானானால் கேளும் நாரதரே முதலாவது வரம் அவனி அய்ம்பத்தாறு தேசத்தை ஆளவும் இரண்டாவது வரம் என் கரத்தில் இருக்கிற மூன்று விரலெடுத்து சத்த சாகரத்தில் ஊன்றினால் உடன் தீப் பிடிக்கவும் மூன்றாவதுவரம் மூன்று விரலெடுத்து என்கழுத்தைச் சுற்றி யாருடைய சிரசிக்கி நேராக நீட்டுவேனோ அப்பொழுது அவர் சிரசானது கண்டதுண்டமாகவும் வரம் பெற்றேன் என்று அரக்கன் சொல்ல

(அரக்கனின் மூன்றாவது வரம் பலிக்காது என நாரதன் கூறுதல்)

வாரும்பிள்ளாய் வல்லரக்கா எந்தன்
390 வார்த்தை ஒன்று சொல்லக்கேளு
அவனிதன்னை ஆளுதற்கு ஆதி
அரனார்வரம் தந்திருப்பார்
சமுத்திரத்தில் நெருப்புபற்ற வரம்
சங்கரனும் தந்திருப்பார்
395 விரலைநீட்ட சிரசுடைய அந்த
விமலன்வரம் பலிக்காதப்பா

வாரும் வல்லரக்கா மூன்றுவரங்களில் இரண்டு வரம் உண்மை யானது மூன்றாவதுவரம் பலிக்காது என்ற விபரத்தை கேள். எறும்புமுதல் யானைவரைக்கும் பிரமன் பிண்டம் பிடிக்கவும் ஈசன் உயிர்கொடுக்கவும் கண்ணன் கண்திறக்கவும் அதன்பின் அரன் பிரம்மா விஷ்ணு மூன்றுபேர்களும் ஓர் மனதாய் இன்னார்க்கு இன்னபடி என்றும் தரணி ஆளவும் தரணிவிட்டு ஓடவும் அரச ராகவும் குடிகளாகவும் அரவத்தால் மாளவும் ஆனையால் மாளவும் அக்கினியில் மாளவும் நோயால் மாளவும் அன்னம் அருந்தும்போது ஆத்மா பிரியவும் இப்படிப்பட்ட விதிகளில் உன் விரல் நீட்ட மாளும் விதியும் உண்டு அல்லது நீ விரல்நீட்ட எதிரியின் சிரசைக் கண்டபோது உன் விரல் வெடிக்கவும் விதி யுண்டு அப்படியிருப்பதால் சகலவரமும் பலிக்கவேண்டுமானால் நான் சொல்வதைக்கேள்

(நாரதன் சொல்லை நம்பி அரக்கன் வரத்தைச் சோதிக்க மீண்டும் கயிலை வருதல்)

சகலசீவன் தனைப்படைத்த ஆதி
சங்கரனை சோதித்துப்பார்

396-397. இடை உரை : மும்மூர்த்திகளின் முத்தொழில் இங்கு வேறுபட்ட விதமாக உரைக்கப்படுகிறது. பின்னரும் இவ்வாறே வருதல் காணலாம். (வரி 635-640)

397. சகலசீவன்-சகலஜீவன்

அரன்சிரசு உடைந்ததானல் அப்போ
400 யாவர் சிரசும் உடையுமப்பா
என்றுசொல்ல நாரதனும் அப்போ
ஏதுசெய்தான் வல்லரக்கன்
ஆங்கார கோபங் கொண்டு அரக்கன்
ஆதிசிவனை தேடிவாருன்
405 கயிலேதேடி அரக்கன் செல்ல நாரதன்
கண்ணன் தன்னை தேடிவாருன்
ஆயர்பாடி நாடுதேடி அப்போ
அழகுபிள்ளை போகும்போது
கயிலாசம் தன்னைத் தேடி அந்த
410 கடிய அரக்கன் வாருனப்போ
மீசையது துடித்திடவும் அப்போ
மேனி எல்லாம் நடுங்கிடவும்
கடிய கோப மாகவேதான் அந்த
கயிலே வாசல் வந்து சேர்ந்தான்.

அரக்கன் கயிலாசம் வர, சிவனுர்கண்டு, வணங்கி நமஸ் கரித்துச் சென்ற அரக்கன் கோபத்தோடு வரும் காரணம் என்ன வென்று சிவனுர் பார்க்க அப்போது அரக்கன் என்ன செய்தானுல்

(அரக்கனின் எண்ணம் அறிந்த அரனுர் செயல்)

415 வலதுகையை தூக்கியல்லோ அந்த
வல்லரக்கன் ஏதுசெய்தான்
தன்னுடைய கழுத்துதன்னை அவன்
தானே சுற்றும் வேளையிலே
பார்த்தாரே பரமசிவன் ஆதி
420 பகவானும் ஏது செய்தார்
வாங்கும் மட்டும் பணிந்துநின்ருன் வரம்
வாங்கியதும் நிமுர்ந்து வாருன்
திட்டியதோர் மரமதிலே அரக்கன்
கூர்மை பார்க்க வந்துவிட்டான்

(சிவனுர் அரக்கனிடமிருந்து தப்பி ஓடுதல்)

ஆகையால் நாம் இங்கிருப்போமானுல் விரலை நீட்டிவிடுவான் என்று ஆதிசிவன் கால்கை பதறி மேனி எல்லாம் வேர்த்து பார்பதியையும் பாராமல் தேவகர்ளுக்கும் சொல்லாமல் அறியாது வரங்கொடுத்த சிவனுர் ஆதி கயிலாசம் விட்டு வெளியே ஓட

422. நிமுர்ந்து-நிமிர்ந்து

(வேறு) -5-

(1) வானவர்கள் ஓடினார் மறையவரும் ஓடினார்
மால்அயன் இந்திரனும் சந்திரனும் ஓடினார்

(2) தானவர்கள் ஓடினார் தவமுனிவர் ஓடினார்
சதுர்முக பிரம்மதேவன் கூடவிழுந்தோடினார்

(3) முப்பத்திமுக் கோடிதேவர் முனிவர்களும் ஓடினார்
சத்துரு சங்காரநாதன் சண்முகனும் ஓடினார்

(4) அம்பிகை தன்னைவிட்டு அய்ங்கரனும் ஓடினார்
ஆரும் துணையில்லாது தத்தளித்து வாடினார்

(5) தொந்திதனை தூக்கிடாது துள்ளிதுள்ளி ஓடினார்
துணையன்றி நடுவழியில் ஆலமரம் தேடினார்

இப்படியாக தேவர்களும் முனிவர்களும் ஓடுவதைக் கண்ட அரக்கன் என்ன செய்தானென்றால்

(அரக்கன் சிவனாரைத் தொடர்தல்)

| | | |
|---|---|---|
| 425 | ஓடினாலும் விடுவேனோ | இப்போ |
| | உன்வரத்தை சோதியாது | |
| | வண்டாகப் பறந்தாலும | ஈசன் |
| | வரம்சோதியாது விடுவதில்லை | |
| | ஆதிசிவனை விரட்டியல்லோ | அந்த |
| 430 | அரக்கனுமே ஓடிவாறான் | |
| | காடுசெடிகள் தான்கடந்து | ஈசன் |
| | கரிய மலைகள் தாண்டிவாறார். | |
| | அடந்தவனங்கள் சோலைவிட்டு | அரக்கன் |
| | ஆதிசிவனைத் தேடிவாறான் | |
| 435 | அரனும் அரக்கனும் ஓடுவதை | அப்போ |
| | அங்கம் பெரும் மத யானை கண்டு | |
| | பரமசிவன் ஓடும் பாதை கூடி | அங்கே |
| | பதறிசத்தமிட் டோடிடுமாம் | |
| | சிங்கம் புலிகரடி யாளி புல்மான் | அங்கே |
| 440 | சிறுத்தை வரிப்புலிகள் ஓடிடுமாம் | |
| | அன்னங்களும் தாராவும் | நல்ல |
| | அழகுள்ள மயில் காடைகளும் | |
| | புள்புள் சிட்டு வக்காவும் | அந்த |
| | சிவபெருமான் பின்னாலே ஓடிடுமாம் | |

---

பாடல் 5. இடத்திற்கு ஏற்றவாறு விரைவு இசையுடன் பாடத்தகுந்தவாறு அமைந்துள்ளது. கண்ணி, 4,5. ஆனைமுகன் ஆலமரம் அமர்ந்தார் எனவும், அதன் காரணமும் வேடிக்கையாகக் குறிக்கப்பெறுகின்றன. ஆலமரத்து நிழலில் தெய்வங்கள் நிலை கொள்ளும் பண்டைய வழக்கம் பற்றியே இங்கும் கூறப்படுகிறது எனலாம்.

இப்படி ஓடுவதைக்கண்ட அரக்கன் ஈஸ்பரனை விடுவதில்லை என்று கானகத்தில் ஓடுகிற சமயம் நாரதர் ஆயர்பாடி நாட்டில் என்ன செய்தார் ஆனால்

(நாரதன் ஆயர்கோனைக் காணுதல்)

445 பிரமபுத்திரன் நாரதனும் ஆதி
பெருமாளைத் தேடிவாறுர்
அச்சுதனே ஆயர்கோனே எங்கள்
பச்சநிற மேனியோனே
மச்சகூர்ம வாமருபா இந்த
450 வையகம் அளந்த பெருமாளே
தசஅவதாரம் கொண்டதேவா இப்போ
தற்கார்க்க வேணும் தேவர்களை
அன்றொருநாள் தேவர்களை நீர்
அபயஸ்தமது கொடுத்தீரே
455 தேவர்களும் முனிவர்களும் இப்போ
தேடுகிறார் உன்திருப்பாதம்
தேவர்விடும் கண்ணீரும் ஆதி
திருமாலே தீர்க்கவேணும்

என்று நாரதன் ஆயர்பாடி நாட்டில் புலம்பிக் கொண்டு வருவதை அறிந்த மாயன் என்ன செய்தார் ஆனால் தன் வலக்கரம் இருந்த புல்லாங்குழலை எடுத்து வாசிக்கவும் நாரதன் ஓடி பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து அகிலபுவனம் அளந்த ஆண்டவனே யாரோ ஓர் அரக்கன் தவம் செய்தானும் அன்னவனுக்கு பரமன் வரம் கொடுக்கவும் அந்த வரத்தால் தேவர்களும் சிவபெருமானும் யாவரும் கயிலாசம் விட்டுக் கானகம் ஓடியும் விடுவதில்லை என்று அரக்கன் பின்பற்றிச் சென்றான். தங்களுடைய தங்கை பார் பதியாள் ஒருதுணையும் இல்லாது வாடுகிறாள் என்று நாரதன் சொல்ல அப்போது மாயன் பெருமாள் ஏது சொல்வாரானால்

வாரும்பிள்ளாய் நாரதனே யிப்போ
460 வார்த்தை ஒன்று சொல்லக் கேளு
அரனார் வனம் போனால் என்ன அந்த
ஆதிகயிலை அழிந்தாலென்ன

436. அங்கம் பெரும் மதயானை-பருத்த அங்கங்களை உடைய யானை.
436-444. விலங்குவகை, பறவை வகை தொகுத்துரைக்கப்படுகின்றன.
443, புள் புள் சிட்டு-'புல்புல்' ஆகலாம்.
448. பச்சநிற-பச்சைநிற
452. தற்கார்க்க-தற்காக்க
454. அபயஸ்தம்-அபயம்

தேவர்கள்தான் போனால் என்ன — திரு
மூர்த்தியவர் மடிந்தாலென்ன
465 பாரகயிலை அழிந்தாலென்ன — அந்த
பரமசிவன் ஒழிந்தாலென்ன
நான்போறேன் மாடுமேய்க்க — இப்போ
நாரதரே போய்வாரும்

(மாயன் மாடுகன்று மேய்த்து வருதல்)

என்றுபெருமாள் சொன்ன வார்த்தையைக் கேட்ட நாரதன் ஒன்றும் சொல்லாமல் கயிலைதேடி நடக்கவும் மாயன் தன்னுடைய மாடுகளும் கன்றுகளும் அவுத்து கானகம் தேடி வரக்கூடிய நேரத்தில் அரக்கன் என்ன செய்தானானல்

(அரக்கன் பின்னும் சிவனாரைத் தொடர்ந்து விரட்டுதல்)

கானகத்திலே விரட்டுகிறான் — ஆதி
470 கரியமால் மைத்துனரை
அரைஉலைய தலையுலைய — அந்த
ஆதிசிவனார் ஓடுகிறார்
பார்த்தானே வல்லரக்கன் — அந்த
பாதகனும் என்ன சொல்வான்
ஈஸ்பரனைக் கொன்றேமானால் — நாம்
இருக்கலாமே கயிலாசத்தில்
பரமனைத்தான் கொன்றுவிட்டால் — அந்த
பார்பதியாள் நமக்குத்தானே
இந்திரனைக் கொன்றேமானால் — அந்த
480 இந்திராணி நமக்குத்தானே
சந்திரனைக் கொன்றேமானால் — அந்த
தாரையவள் நமக்குத்தானே
சதுர்முகனைக் கொன்றேமானால் — அந்த
சரஸ்பதியைக் கூடிடலாம்
485 சகலகல்வி கற்றுணர்ந்து — நாம்
தானேகயிலை வாழலாமே

இப்பேர்ப்பட்ட எண்ணங்கள் எண்ணி ஈஸ்பரனை விடாது விரட்டிச் செல்லும்போது அந்த கங்காதரக் கடவுள் என்ன செய்தாரானல்

469-468: இடைஉரை : அவுத்து - அவிழ்த்து.
471- அரை உலைய - அரை ஆடை உலைய.

(அரனூர் அரளிமலரின்மேல் தங்கி ஒளிந்து கொள்ளுதல்)

ஓடுகிறார் கானகமே சிவனார்
ஒருவர் துணை இல்லாது
ஈநுழையா யிடங்களெல்லாம் ஆதி
490 ஈஸ்பரனும் நுழைந்துவாரார்
கால்பதறி கைபதறி சிவனார்
நாவுளறி வாறநேரம்
ஆயர்பாடி நாடதிலே நல்ல
அழகுநந்த வனத்தைக் கண்டார்
495 நந்தவனம் தான்புகுந்து அப்போ
நல்லசிவன் ஏதுசெய்தார்
செவ்வதலி மலர்மேலே சிவனார்
சிவலிங்கம்போல் அமர்ந்திருந்தார்
அதலிமலர் மேலவேதான் சிவன்
500 அமர்ந்திருக்கும் நேரத்திலே

பார்த்தான் அரக்கன் நமக்குப்பயந்து நந்தவனத்துள் புகுந்தா ரென்று அவனும் நந்தவனத்துள் சென்று

தேடுகிறான் சிவனாரைத்தான் அந்த
செல்லப்பிள்ளை வல்லரக்கன்
மூடுமூடாய் தூக்கிப்பார்த்தான் திரு
மூர்த்தியைத்தான் காணாமல்
505 செடிசெடியாய் தூக்கிப்பார்த்தான் அந்த
சிவனார் தன்னை காணாமல்
இலைஇலையாய் தூக்கிப் பார்த்தான் ஆதி
ஈஸ்பரனைக் காணாமல்
நந்தவனம் தன்னைவிட்டு அரக்கன்
510 நலமுடனே வெளியேவந்தான்

(சிவனாரைக் காணாத அரக்கன் மாயனைச் சந்தித்து வினவுதல்)

அந்த அரக்கனாகப்பட்டவன் நந்தவனம் விட்டுவரும் நேரத்தில் மாயன் பெருமாள் மாடுகளும் கன்றுகளும் ஓட்டிக்கொண்டு நந்தவனத்தருகே வரக்கண்ட அரக்கன் ஏது கேட்டானானால்

ஆயர்குல முதித்தபிள்ளாய் இங்கு
ஆவினங்கள் மேய்க்கும்பாலா

503. மூடு - செடி, கொடி, மரங்களின் அடிப்பாகம்.

கன்றினங்கள் மேய்ப்போனே இங்கே
கர்த்தன் வரக் கண்டதுண்டா
515 பசுவினங்கள் மேய்ப்போனே ஆதி
பரமசிவன் வந்ததுண்டா
ஈஸ்பரனுர் இவ்வழியே தம்பி
ஏகிவரக் கண்டதுண்டா

இவ்விதமாகக் கேட்டவுடனே மாடுமேய்க்கும் மலர்க்கண்ணன் ஏதுசொல்வாராஞல் வாருமையா அரசபூபதியே ஆதிசிவனென்பவரை யாரும் காணமுடியாதென்றும் எங்கும் நிறைந்த பொருள் என்றும் என்குருநாதன் சொல்லியிருக்கிறுர் அதுவுமல்லாமல் பள்ளியில் படிக்கும்போது பாடம் படித்திருக்கிறேன்.

எங்கும் நிறைந்த பொருளெனவே நான்
520 ஏடுபார்த்துப் படித்திருக்கேன்
படைத்த சிவன் உண்டுஎன்று நான்
பள்ளிதன்னில் படித்ததுண்டு
காதாலே கேட்டதுண்டு சிவனைக்
கண்ணுலே பார்த்ததில்லை
525 கறைக்கண்டனை காணவேணும் நான்
கன்றுவிட்டு வாறேனய்யா
அரனுரை பார்ப்பதற்கு அரசே
அழகுபிள்ளை வாறேன்என்றுர்

இவ்விதமாகச் சொல்லிய மாயனை அறியாத அரக்கன் கோபம் கொள்ள அதை அறிந்த மாயன் வாருங்கள் மன்னவரே வெய்யிலில் நடந்து மேனிவாடியிருப்பதால் காராம் பசுக்கறந்து தருகிறேன் சாப்பிட்டுத் தாகம் தீர்க்கவேணும் என்று சொல்ல அரக்கன் என்ன தெரிவித்தாஞல்

(அரக்கன் மீண்டும் சிவனுரைத் தேடிச்செல்லுதல்)

சங்கரனைக் காணும்வரை நான்
530 தாகவிடை தீரமாட்டேன்
பரமசிவனை காணும்மட்டும் நான்
பசிதீர்ப்பது இல்லைதம்பி
என்றுசொல்லி வல்லரக்கன் அப்போ
ஏகலுற்றுன் கானகமே

520. படித்திருக்கேன் - படித்திருக்கிறேன்.
528 52). இடைஉரை : வெய்யில் - வெயில்.

535 கானகத்தில் அலைந்துவாருன் அரக்கன்
கர்த்தன் சிவனுரைத் தேடியல்லோ

(சிவனுர் மாயனை மனத்தில் எண்ணுதல்)

அரக்கன் வனமதில் அலையும்போது அந்த
ஆதிசிவனுர் ஏதுசெய்தார்
மாயன் ஆதி நாரணனை சிவனுர்
540 மனதிலே எண்ணலுற்ருர்
சிவனுர் நினைத்ததைத்தான் ஆதி
திருமாலும் தானறிந்து

(மாயன் அதனை அறிந்து குழல் ஊதுதல்)

அரக்கனுக்கு வரம்கொடுத்து அதலிமலர்மீது சிவன் ஒளிந்திருப்பதை அறிந்து தான்மேய்க்கும் மாடுகளைப் பார்த்து பசுக்களே கன்றுகளே நான் சொல்வதைக் கேளும் என்று தன் புல்லாங்குழலை எடுத்து வாசிக்கவும் அப்பொழுது

(வேறு) - 6 -

(1) கண்ணபிரான் புல்லாங்குழல் தன்னை ஊதவே
கறைக்கண்ட னிருக்கும் நந்தவனத்தில் வண்டுபாடவே
(2) அன்னமோடு மயிலினங்கள் ஒன்றுகூடி ஆட
ஆதிசிவனுர் அதலிமலர்மீது நின்ருட
(3) கன்றுடனே மாடுகள் எல்லாம் கால்தூக்கிஆட
கறைக்கண்ட பகவான் அதலிக் கம்பில் சேர்ந்து விளையாட
(4) அண்டபுவனம் ஈரேழுலகமும் ஒன்றுகூடி யாட
ஆதிசிவனுர் அதலிமலர்மேல் அங்கமுழுதும் வாட
(5) ஆடிப்பாடி கால்கள் ஓய்ந்து அங்கங்கு நின்றிடவே
அரனுர் அதலிமலர் தன்னைவிட்டு அப்போது இறங்கிடவே

சிவனுர் அதலிமலர் விட்டிறங்கியதை அறிந்த திருமால் ஏது செய்தாராஞல் தான் மேய்க்கும் மாடுகளைப் பார்த்து என்னவிதமாக சாடை சொல்வாராஞல் மாடுகளே கன்றுகளே மாயனின் வார்த்தையைக் கேளுங்கள்.

---

பாடல் 6.க்குப்பின் உரை. பிறர் மனத்தில் படுமாறு அவரைக் குறியாதது போல் குறித்துப் பேசுதல் 'சாடை சொல்லுதல்' எனப்படும். 'சாடை சன்னை' என்று வழங்குதல் உண்டு. (தொண்டையிலிருந்து எழுப்பும் கனைப்புக் குரலைச் 'சன்னை' என்பர்.,

(மாயன் தன் மாடுகளை நோக்கியவாறு 'சாடை' பேசுதல்)

| | | |
|---|---|---|
| | வானமழை பெய்ததினால் | பசுவே |
| | பூமியில்புல் அதிகமாச்சி | |
| 545 | அதிகபுல்லைக் கண்டபோது | நீங்கள் |
| | அவசரமாய் உண்ணவேண்டாம் | |
| | ஓர்நாளில் தின்றுவிட்டால் | பசுவே |
| | மறுநாளும் வேண்டாமோ | |
| | அதிக புல்லு இருக்குதென்று | பசுவே |
| 550 | அடுத்தவர்க்கு கொடுக்காதீர் | |
| | அடுத்தவர்க்கு கொடுத்துவிட்டு | பின்பு |
| | அலையாதீர் கானகத்தில் | |
| | கேட்டவர்க்கு தானம்வைத்து | நீங்கள் |
| | கேவலங்கள் அடையாதீர் | |
| 555 | மாயன்மேலே வருத்தங்கொண்டு | இந்த |
| | வனமதிலே ஓடாதீர் | |
| | பசியான வேளைதன்னில் | இந்த |
| | பாரளந்தோனை தேடாதீர் | |

(மாயன் பேச்சினைக்கேட்டு எதிரே வந்த சிவனாரிடம் கானகம் வந்த காரணம் கேட்டல்)

என்று மாயன் பெருமாள் வார்த்தை சொல்லிய நேரம், கண்ணனைக் கண்டுகொண்ட கறைக்கண்ட பகவானைப்பார்த்து என்ன வார்த்தை சொல்வாரானால்

| | | |
|---|---|---|
| | அத்தானே நமஸ்காரம் | என்று |
| 560 | ஆயனுமே ஏதுகேட்டார் | |
| | கானகத்தில் ஒண்டியாக | அத்தான் |
| | கால்நடையாய் வந்ததென்ன | |
| | ரிசப வாகனத்தை எங்கே | அத்தான் |
| | நெடியவனம் வந்ததென்ன | |
| 565 | திங்கள் கங்கை அறுகுதும்பை | அணிந்த |
| | திருச்சடைதான் உலைந்ததென்ன | |
| | வெண்ணீறு அணியும் நெத்தி | இப்போ |
| | வேர்வையது சிந்துவதேன் | |

---

544. அதிகமாச்சி - அதிகம் ஆயிற்று. 549. புல்லு - புல்,
554. கேவலங்கள் - இழிவுகள்.
561. ஒண்டியாக – தனியாக.
563. ரிசப வாகனம் - ரிஷப வாகனம், காளை.
567. நெத்தி - நெற்றி

கழுத்திலிட்ட உத்திராச்சம் ஏஅத்தான்
570 கழண்டு வீழ்ந்த விசயமென்ன
மார்பிலிட்ட பூணூலும் இன்று
மாறி வீழ்ந்த விசயமென்ன
மானேந்தும் சீர் கரங்கள் சிவனே
மாறுபட்டு இருப்பதென்ன
575 இடையணிந்த புலித்தோலெங்கே ஆதி
ஈஸ்பரனே சொல்லுமென்றார்
செந்தாமரைபோல் உற்றபாதம் இப்போ
சிதறி பதறி நடுங்குவதேன்

என்று மாயன் பெருமாள் கேள்க்க ஆதிசிவன் ஏது சொல் வாருனல் அகிலபுவனம் அளந்த அருமையுள்ள மைத்துனரே

(அரக்கனுக்கு வரம்அளித்ததனுல் விளைந்த துன்பம் கூறுதல்)

அரக்கனுல் மனதுநொந்தேன் இந்த
580 அதலிமலராலே மேனிநொந்தேன்
(உன்) சொல்லாலே நானடைந்த பெரும்
துன்பமது போதாதோ
அச்சுதனே மாயவனே நான்
அடைந்த துன்பம் தீர்க்கவேணும்
585 என்றுசிவன் சொன்னபோது அப்போ
ஏதுசொல்வார் மாயவனுர்
என்ன துன்பம் வந்துதய்யா ஆதி
ஈஸ்பரனே இப்பொழுது

அகிலபுவனம் படைத்த ஆதிபகவானுக்கு துன்பமானுல் உம்மால் படைக்கப்பட்ட எறும்புகடை எண்ணுயிரம் கோடி சீவராசிகளுக்கும் துன்பம்தானே அப்பேர்ப்பட்ட ஆபத்து வந்த காரணம் என்னவென்று மாயன் கேள்க்க சிவனுர் என்ன சொல் வாரானுல்

ஆரோஒரு அரக்கனவன் பாவி
590 அதிகதவம் செய்ததாலே
தவமகிமை நான்அறிந்து அவனுக்கு
தானேவரம் நான்கொடுத்தேன்

569. உத்திராச்சம் - உருத்திராட்ச மாலே,
570. கழண்டு—கழன்று. விசயமென்ன - விஷயமென்ன
587. வந்துதய்யா - வந்தது ஐயா

வாங்குமட்டும் வணங்கிநின்ருன் வரம்
வாங்கியதும் நிமுர்ந்து நின்ருன்
595 வளர்த்தகிடா (மார்பில்) பாய்ந்ததுபோல் இப்போ
மாறிவரம் சோதித்தானே

அந்த அரக்கன் வரம் வாங்கியதும் உடனே கயிலாசத்தில் இருந்த முப்பத்தி முக்கோடி தேவர்கள் நாற்பத்தி எண்ணுயிரம் ரிசிகள் கெருடர் கெம்புருடர் அச்சயக்கின்னர், கெருடகாந்துருவர் முதலாக என்னையும் விரட்டி விட்டான்

அரக்கனிடம் அகப்படாது எந்தன்
அச்சுதனைத் தேடிவந்தேன்

(மாயன் தன்ஞல் ஏதும் ஆகாது என்று கூறுதல்)

என்றுசொல்லும் வேளைதன்னில் அப்போ
600 ஏதுசொல்வார் மாயவஞர்
ஆடுமேய்க்கும் இடையனுலே சாமீ
ஆகுவது ஒன்றுமல்ல
மாடு மேய்க்கும் இடையன்என்னுல் உங்கள்
மனத்துயரம் தீருமோதான்
605 மாடுமேய்த்துச் சோறுஉண்ணும் இந்த
மாயனுலே ஆகாது
அகில மெல்லாம் படைத்தவர்நீர் இங்கே
ஆருக்கும் பெரியவர்நீர்
ஆக்கவல்லான் அழிக்கவல்லான் யார்க்கும்
610 அதிகவரம் கொடுக்கவல்லான்
மகாதேவனே நீர் கொடுத்தவரம் இந்த
மாயன் அழிக்கக் கூடுமோதான்
பெரியோர் நீர் கொடுத்தவரம் இந்த
சிறியேன் அழிக்க முடியுமோ தான்

அத்தானே பரமசிவம் சகல உயிர்களையும் படைத்து அவைகளுக்கு உயிர் கொடுத்து கல்லுக்குள் தேரைக்கும் கருவுள் பிள்ளைக்கும் எள்ளுக்குள் எண்ணெய்க்கும் இரையளக்கும்

---

595. வளர்த்தகிடா - வளர்த்த கடா.

596-597. இடைஉரை : கெருடர் - கீழத்திசைக் குரியோர். கருடதிசை - கீழ்த்திசை. அச்சயக் கின்னர் - என்றும் அழிவில்லாத கின்னரர். அச்சயம் - அழிவில்லாமை. கெருடகாந்துருவர்-கீழ்த்திசைக் கந்தருவர்,

602. ஆகுவது-ஆவது, இயலுவது

ஈஸ்பரனே என்று மாயன் சொல்ல பரமசிவம் ஏது சொல்வா ராஞல் என் அருமையுள்ள மைத்துனரே அயன் பிரம்மா விஷ்ணு மூன்றுபேரும் ஒன்று அதல்லாமல் நான்தான் பெரியவர் மற்றவர் சிறியவரென்று சொல்லவில்லே என்று அரஞர் சொல்ல திருமால் ஏது சொல்வாராஞல்

(முன்பொரு சமயம் சிவஞர் தன்னேப் பழித்ததை மாயன் கூறுதல்)

615 முன்னே ஒரு காலத்திலே — அத்தான்
முதல்வெள்ளிக் கிழமைதனில்
மதியநல்ல மதியத்திலே — அத்தான்
மத்தியான வேளேயிலே
சாப்பிட்டு இளப்பாறி — நீங்கள்
620 தாம்பூலம் போட்டல்லவோ
தங்கைபார்வதி தன்னேடு — அன்று
சதுரங்கம் ஆடலியோ

அவ்வாறு சோவிபரத்திச் சொக்கட்டான் ஆடும்போது என் தங்கை பார்பதி செயமடைய நீர்தோல்வி அடைந்தபடியால் வாடிபெண்ணே பகடையில் செயித்தோம் என்று கர்வம் கொள்ளாதே இப்பொழுது நாம் இருவரும் தில்லேநகர் சென்று திருநடனம் செய்வோம் அதில் ஆர் செய மடைவார் என்று பார்க்கவேணும் வா வென்று என் தங்கையும் தாங்களும் சென்று முப்பத்தி முக்கோடி தேவர் சூழ்ந்த சபையில்

திருநடனம் ஆடலியோ — ஆதி
சிவஞரும் பார்பதியும்
625 அந்தநல்ல வேளேயிலே — எந்தன்
அழகுபிள்ளே பார்பதியாள்
பாதிநல்ல நாட்டியத்தில் — ஆதி
பரமன் தோல்வி ஆகும் நேரம்

---

617. மதியம், மத்தியானம்—பகல்வேளே.

622. ஆடலியோ-ஆடவில்லேயா 'சதுரங்கம்' என்பது அடுத்துவரும் உரைப் பகுதியில் சொக்கட்டான் ஆட்டம் என விளக்கப்படுகிறது பகடை எனவும் குறிக்கப்படுகிறது,

622-623. இடைஉரை: சோவி சோழி. சோகி (பலகறை) 'சோகை' நோய் சோவை என வழங்குதல் போல் 'சோகி' சோவி என ஆகியுள்ளது. சொக்கட்டான்-பக்கத்திற்கு ஏழாக 49 கட்டங்களேக் கொண்ட சதுரமான கட்ட அமைப்பில் சோவிகளேத் தாயக் கணக்கிற்காகப் பயன்படுத்தியும், கட்டங்களில் தாயக்காய்களே வைத்து நகர்த்தியும் ஆடும் ஒருவகை ஆட்டம். தாயம் ஆடுதல் எனவும் கூறுவர்.

காதிலணிந்த குண்டலத்தை நீர்
630 கழட்டிக் கீழே விட்டீரல்லோ
விழுந்த நல்ல குண்டலத்தை சாமி
வேகமுடன் கால்விரலால்
கால்விரலால் தூக்கியல்லோ சிவனே
காதில் நீர் அணியலியோ

ஈஸ்பரனே கீழ விழுந்த குண்டலத்தை ஆட்டம் விடாமல் கால் பெருவிரலால் தூக்கிக் காதில் அணிய என் தங்கை கண்டு ஆடவர் சூழ்ந்த சபையில் உம்மைப்போல் கால்தூக்கிக் காதில் வைக்க மனமானது நாணி நிற்க ஏதடி பார்பதி அரன் பிரம்மா விஷ்ணு மூன்றுபேரிலும் யார் பெரியவர் என்று கேட்டீரல்லவா அப்பொழுது பார்பதியாள் ஏதுசொல்வாராஞல் சகல புவனமும் சகல உயிரும் தாங்களால் படைத்ததால் பெரியோர் என்று சொல்ல முடியாது. ஏனென்றால்

635 பிரமன்பிண்டம் பிடித்ததாலே சிவ
பெருமான் உயிர் கொடுத்தீரல்லோ
பிண்டமது பிடித்தவனை நீர்
பெரியோன் என்று சொல்லொண்ணுதோ

பிரம்ம தேவன் பிண்டம் பிடிக்க சிவனுர் உயிர் கொடுத்தீர் உணவளந்தீர் எத்தனை செய்தாலும் மாயன் பெருமாள் கண்திறந்தார் ஆகையால்

கண்கொடுத்த மாயவனே என் அண்ணன்
640 கரியமால்தான் பெரியவர்காண்
உலகளந்த எந்தன் அண்ணன் அந்த
உத்தமனே பெரியவர்தான்
என்றுசொன்ன வேளையிலே நீர்
எதுத்து வார்த்தை சொல்லலயா
645 கஞ்சிக்காக மாடுமேய்க்கும் உந்தன்
கண்ணன் பெரி தாவானேடி
மாடுமேய்த்து வயிர்வளக்கும் அந்த
மாயன்பெரி தாவானேடி

---

630. கழட்டி—கழற்றி. விட்டீரல்லோ—விட்டீர் அல்லவா,விட்டீர் அன்றோ. பின்வரும் தூக்கியல்லோ, (633). கொடுத்தீரல்லோ (636) இவையும் இவ்வாறே கொள்க. 634—635. இடை உரை. கீழ - கீழே.
635. பிண்டம் - உடல். கருப்பத்திலிருக்கும் பிண்டம்.
644. எதுத்து - எதிர்த்து
647. வயிர் வளக்கும் - வயிறு வளர்க்கும்.

கூழுக்காக மாடுமேய்க்கும் அந்த
650 கோபாலன் பெரியவனே
என்றுசொன்ன வார்த்தைதனை ஆதி
ஈஸ்பரனே மறந்தீரோ
மாடுமேய்க்கும் மடையனைத்தான் நீர்
மானங்கெட்டுத் தேடலாமோ
655 அறிவிழந்து தேடலாமோ பாவி
ஆடுமேய்க்கும் பெருமானை

வாருங்கள் அத்தானே நான் வைகுண்டத்தில் லச்சுமிசமேதரனாய் சர்ப்ப சயனத்தில் சுகமாக வாழும் நாளில் உம்மாலல்லவா

(மாயன் சிவனுரைப் பழித்துக் கூறுதல்)

நாடிழந்தேன் உம்மாலே சிவனே
நல்லசுகமிழந்தேன் உம்மாலே
வைகுண்ட மிழந்தேன் உம்மாலே இப்போ
660 மாடுமேய்த்தேன் உம்மாலே
மாடுமேய்த்து சோறுண்டது எங்கள்
மகாதேவா கேவலமோ
ஆடு மேய்த்து சோறுண்டது ஆதி
அரனரே கேவலமோ
665 ஆனாலும் உம்மைப்போலே எந்தன்
அத்தானே அலையவிலே
காவியது கட்டலையே எந்தன்
கையில்திருஓடு எடுக்கலியே
தெருத்தெருவாய் நான்அலைந்து மாயன்
670 திருஓடு ஏந்தலியே
ஊரில் பிச்சை வாங்கலியே என்
உடல்தன்னை வளக்கலியே
நாட்டில் பிச்சை எடுக்கலியே நான்
நல்லஉடல் வளக்கலியே
675 ஊரில்பிச்சை எடுத்தவர்கள் இப்போ
உதாரமாகப் பேசலாமோ

---

652. ஈஸ்பரனே - ஈஸ்வரனே.

655-657. இடைஉரை : லச்சுமி - லட்சுமி. சர்ப்பசயனம் - ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கை. (அனந்த சயனம்) 670. ஏந்தலியே - ஏந்தவில்லையே.

672. வளக்கலியே - வளர்க்கவில்லையே (இவ்வாறே அலையலியே, கட்டலியே, வாங்கலியே, எடுக்கலியே, என்று வருதலையும் கொள்க.) 676. உதாரமாக —துணிவாக

என்று மாயன் சொன்ன வார்த்தை கேட்டு பரமசிவன் ஏது சொல் வாராஞல் வாரும் என்மைத்துனரே நான்படைத்த நருள்களுக்கு படியளந்து அளந்த படியானது யாபேர்க்கும் கிடைத்திருக் கின்றதா வென்று சோதிப்பது உமக்கு கேவலமாக ஆனதல்லவா ஆஞல் உம்மைப்போல்

(சிவஞரும் மாயனை எதிர்மறுத்துப் பழித்தல்)

உறியில் வெண் ணெய் திருடலியே கட்டி
உரலில்அடி படவில்லையே
மாமியவள் கரத்தாலே நான்
680 மத்தாலடி வாங்கலியே
பால்திருடிக் குடிக்கலியே என்னை
பார்த்தோர்கள் அடிக்கலியே
திருடி வெண்ணெய் உண்டவாய்தான் இன்று
தீரமாகப் பேசலாமோ

(மாயன் அதனை மறுத்துரைத்தல்)

என்று சிவஞர் சொல்ல திருமால் ஏதுசொல்வார் ஆஞல் வாருங்கள் அத்தானே நான் பிறந்த குலத்திலும் எங்கள் வீட் டிலும் வெண்ணெய் திருடியது கேவலமா உம்மைப்போல்

685 ஆஞலும் உங்களைப்போல் அன்று
அடப்படைப்பேன் என்றுசொல்லி
உதிர்ந்தபிட்டு ஆசைகொண்டு நான்
உடப்படைக்க போகலியே
வாணிச்சி பிட்டுக்காக மாயன்
690 வையைக்கரை தேடலியே
மதுரைநகர் தன்னதிலே நான்
மண்சுமந்து அடிவாங்கலியே
பாண்டியன் கரத்தாலே நான்
படவில்லையே பிரம்படிதான்

676-677. இடைஉரை : நருள்களுக்கு - மக்கள் கூட்டத்திற்கு, மக்கள் பெருக் கத்தை 'நருள் பெருத்துப் போச்சு' எனக் குறிப்பிடுவர்.

677. திருடலியே - திருடவில்லையே.

681. குடிக்கலியே - குடிக்கவில்லையே.

682. அடிக்கலியே - அடிக்கவில்லையே.

686. அடப்படைப்பேன் - அடைப்பு அடைப்பேன். வையைக்கரையினை அடைத்தல். பிட்டுக்கு மண்சுமந்த கதை இங்கேகுறிக்கப்படுகிறது. (685-694).

688. உடப்படைக்க - உடைப்பு அடைக்க

694-695. இடைஉரை : துஸ்ட்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் - தீயோரை அழித்து நல்லோரைக் காத்தல். துஸ்ட்ட - துஷ்ட.

என்று கமலக்கண்ணன் சொல்ல கர்த்தாவாகிய பரமசிவம் ஏது சொல்வாராகுல் துஸ்ட்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்தது கேவலம் என்றீர் உம்மைப்போல்

(சிவனுர் மாயனே மறுத்துரைத்தல்)

695 கோபியரைக் கூடலியே நான்
கோலாட்ட மாடலியே
பெண்டுடனே கூடியல்லோ நான்
பேடிக்கோல மாகலியே

(மாயன் மேலும் சிவனுரைப் பழித்துக் கூறுதல்)

என்று சிவனுர் சொல்ல திருமால்கேட்டு எங்கள் தங்கைமாருடன் விளையாடியது கேவலமாக சொன்னீர் ஆனுல் உங்களைப்போல்

காரிக்கழுதையது ஓட்டலேயே தலையில்
700 கஞ்சிக்கலசமது தூக்கலியே
அழுக்கு மூட்டை தோளிலிட்டு மாயன்
அசைந்துவழி நடக்கலியே
வண்ணுத்தி பெண்ணுக்காக நான்
திருவண்ணுமலே போகலியே
705 தகப்பன்தான் உணர்ச்சியற்ருல் தன்
குழந்தைகளும் அப்படியா
முன்பிறந்த உந்தன்மகன் அந்த
முக்கண்ணன் யோக்கியவாஞே
தாயைப்போல் பெண்கேட்டு நடு
710 சந்திதனில் இருக்கலாமோ
இளேயமகன் சத்திவேலன் உங்கள்
எல்லோருக்கும் பெரியசாமி
குறத்திதனே மணமுடித்து வேலன்
குடித்தனமாய் அலேயலாமோ
715 உலகத்திலே பேசலாமோ அத்தான்
உங்ககதை தனேஎடுத்து

695. கூடலியே – கூடவில்லேயே. ஆடலியெ, ஆகலியே என்பதும் இவ்வாறே கொள்க.

708. முக்கண்ணன் – இங்கே விநாயகனேக் குறிக்கும்.

711. சத்திவேலன் - சக்திவேலன்.

716. உங்ககதை - உங்கள் கதை.

(மாயன் சிவனுரிடமிருந்து நழுவுதல் போல் பாவனை செய்தல்)

அத்தானே பரமசிவம் உங்கள் குலங்கோத்திரம் பேசுவதற்குள் ஆலமரத்தைப் பிடித்த சனியன் பிள்ளையாரையும் பிடிக்கும் என்பார் ஆகையால் உங்களை விரட்டிய அரக்கன் என்னையும் விரட்டுவதற்குள் போய்வாறேன் என்று சொல்ல அரனுர் ஏது சொல்வாரானுல்

(சிவனுர் மறுமொழி கூறுதல்)

வாருமையா மைத்துனரே — என்னை
வனத்தில் விட்டுச் சென்றீரானுல்
அரக்கனுல் உயிரிழப்பேன் — உம்
720 அருமைத் தங்கை மணமிழப்பாள்
மலர்மாலை தானிழப்பாள் — பார்பதி
மஞ்சள்குளி மறந்திடுவாள்
தாலிநல்ல சரடிழந்து — உம்மை
தானேதேடி வருவாளே

என்று இவ்விதமாக சிவனுர் சொல்லவே மாயன் என்ன கேட்டாரானுல் அந்த அரக்கனுக்கு எந்தவிதமான வரம் கொடுத்தீர் அதை தெரிவிக்கவேணுமென்று கேள்க்க சிவனுர் சொல்லுகிருர் அவனி அய்ம்பத்தாறு தேசம் ஆளும்படிக்கு ஓர் வரமும் இரண்டாவது வரம் அவன் கரத்தில் இருக்கும் மூன்று விரல் எடுத்து சமுத்திரத்தில் ஊன்றினுல் நெருப்பு பற்றவும் மூன்ருவது வரம் மூன்று விரலெடுத்து அவன் கழுத்தை சுற்றி யார் சிரசுக்கு நேராக நீட்டினுலும் கண்டதுண்டமாகும்படி அறியாது வரம் கொடுத்த ஆபத்து தீரவேணும் என்று சிவனுர் சொல்ல அது கேட்ட மாயன் ஏதுசொல்வாரானுல்

725 அத்தானே பரமசிவன் — நல்ல
ஆண்டவனே சொல்லக்கேளும்
வரங்களைத்தான் கொடுத்தல்லவோ — நீர்
வைகுண்டம் விட்டுக் கிளம்பிவிட்டீர்

---

722. மஞ்சள் குளி - மஞ்சள் பூசி நீராடுதல்.

723. தாலிச்சரடு - தாலிக்கொடி.

728-729. இடைஉரை : பத்து அவதாரத்துள் எட்டு இங்கே குறிக்கப்பெறுகின்றன. கூர்ம அவதாரம் (ஆமை வடிவம்) பாற்கடல் கடைந்த காலம் எடுத்தது. அயக்கிரீவனை அழிக்கவே மச்சாவதாரம் மதுகயிடவர் அழிவிற்காக என இங்கே குறிக்கப்படுகிறது.

(சிவனுரால் தானடைந்த பலதுன்பங்களை மாயன் கூறுதல்)

முன்னோர் காலத்தில் மதுகயிடவர்களுக்கு வரம்கொடுத்தீர் மச்சகூர்ம அவதாரமெடுத்து அழித்தேன். மறுபடியும் இரணியாச் சுதனுக்கு வரம் கொடுத்தீர் வராகவதாரம் கொண்டழித்தேன். மகாபலிக்கு வரம் கொடுத்தீர் வாமனரூபம் கொண்டழித்தேன். பெருந்தவம் செய்த இரணியனுக்கு அதிகவரம் கொடுத்தீர் நரசிம்மமாகி அழித்தேன் கார்த்தவீரிய அர்ச்சுனன் வரத்தை பரசுராமனுகி வென்றேன் சண்டாளனுகிய ராவணனுக்கு வரம் கொடுத்தீர் ராமனுக அவதரித்து நாடிழந்து காடிழந்து மனைவி யிழந்து மானமிழந்து அவனோடு சண்டைசெய்து செயமடைந்தேன் மேலும் கம்சனுக்கு வரம் கொடுத்தீர் கண்ணனுக அவதரித்தேன் மாமன் என்று பாராமல் மடியச் செய்தேன்

இத்தனைபேருடன் சண்டைசெய்து பட்ட
730 இம்சையது போதாமல்
கானில்மாடு மேய்த்துமல்லோ இந்த
கண்ணன் வயிர்வளக்கும்போது
எரியும் அக்கினிக்கி எண்ணெயது ஆதி
ஈஸ்பரனே விடவந்தீர் இப்போ
735 விரல்தன்னை நீட்டிடச்சிரசுடைய வரம்
வெண்ணீறணிந்தோனே கொடுக்கலாமா

(சிவனுர் கூறிய முறையிலேயே மாயனும் மறுப்புமொழி தருதல்)

அத்தானே பரமசிவம் நீர்கொடுத்த வரத்தை அழிக்க என்னுல் முடியாது ஆனுல் உமக்காகச் சென்றுல் என்னைக்கண்டவுடன் மூன்று விரலை நீட்டுவான் அப்பொழுது என் சிரசானது கண்டதுண்டமாகிவிடும் அதுசமயம் உமது தங்கை லச்சுமி

தாலிநல்ல சரடிழப்பாள் அவள்
தனித்தமஞ்சள் குளியிழப்பாள்
மாலைநல்ல மணமிழப்பாள் லச்சுமி
740 வைகுண்டம் தான்மறப்பாள்
கறைக்கண்டனைத் தேடியல்லோ அவள்
கயிலைதேடி வருவாளே

என்று மாயன் பெருமான் சொல்ல பரமசிவம் ஏதுசொல் வாரானுல் எத்தனையோ வரங்களை எத்தனையோ அவதாரங்களைக்

730. இம்சை - துன்பம்
733 அக்கினிக்கி - அக்கினிக்கு.

கொண்டு அழித்திருக்கின்றீர் அதுபோல் இந்த ஒரு வேளைக்கும் என்னைக் கார்க்கவேணும் என்று சிவனர் சொல்ல மாயன் என்ன தெரிவித்தார் ஆனல் அத்தானே நான் வயிர் வளக்க மாடுமேய்க் கிறவன் ஆகையால்

மாடுகன்றுகளை விட்டுச்சென்ருல் என்குல
மைந்தர்களும் வந்துபார்ப்பாராளுல்
745 கண்ணன் தன்னைக் காணேமென்று அவர்
கடியவார்த்தைகள் சொல்லிவிடுவார்
அசோதாதேவி அறிந்தாளாளுல் எனக்கு
அன்னமது கொடுக்க மாட்டாள்

(ஒருவாறு மனம் ஒப்பிய மாயன் அரக்கனை அழிக்க ஓர் வழிகூறுதல்)

ஆகையால் நான் ஓர்உபாயம் சொல்லுகிறேன் எப்படி ஆனல் தாங்கள் என்னைப் போல் கோலம்கொண்டு மாடுகளைப் பார்க்க வேண்டும். எவ்விதமானல் அரையில் கோவணமும் தலையில் உரு மாலும் கையில் தடிப்பிரம்புமாகவும் நெத்தியில் திருநாமமும் திரேகத்தில் ஆயிரத்தெட்டு நாமம்போட்டு ஆனினங்களை கார்க்க வேண்டுமென்று மாயன் சொல்ல

(மாடுகன்றுகளைக் கவனிக்கச் சிவனர் ஒப்புதல்)
ஆடு மேய்த்தாலும் குற்றமல்ல நான்
750 மாடு மேய்த்தாலும் குற்றமல்ல
நாமம் போட்டாலும் குற்றமல்ல நான்
அடைந்ததுன்பம் தீர்ந்தால் போதும்

என்று ஆதிகறைக்கண்ட பகவான் மாடு, ஆடு, கன்றுகளை ஒப்புக் கொள்ளவும் மாயன் பெருமாள் அரக்கன் வரத்தை அழித்து வாறேன் என்று சிவனிடம் விடைபெற்று வரும் சமயம் என்ன கோலமானரானல்

(மாயன் மோகினியின் வடிவம் கொள்ளுதல்)

(வேறு) -7-

(1) கொண்டல் வண்ணன் தன்னுடலை சொரூப மாறியே
கோசலையாள் வேசமாறிக் கோலம் கொள்வாராம்
அண்டர்முனி தேவரெல்லாம் ஆனந்தம் பாட
அச்சுதனர் இச்சைபெறப் பெண்பணிகளும்

747. அசோதா - யசோதா.
748-749. இடைஉரை : உருமால் - தலைப்பாகை.

(2) குருத்துமுட்ட உருக்குமணி பூடிகடுக்கன்
குத்திநெருக்கி யணிந்த தண்டட்டிகளும்
(3) எட்டிவிழுந்த சன்னதிலே மட்டிலாகவே
ஏகவடத்திற் கிசைந்த முத்துமாலையாம்
இட்டவளைசங்கு காப்பு வெள்ளிக் கடையம்
ரெத்தின பகளத்தோடு கோத்த கெச்சமாம்
(4) விட்டிலாவும் உள்கட்டு பொன்காரை சவடி
மிக்கதொரு கண்டமணி பெண்பணிகளும்
தித்திதித்தி என்னவே சிலம்பு புலம்ப
சேர மார்பிலும் தெரியப் பட்டையுமிட்டாள்
(5) உச்சிப்பூவும் முத்துனலே கோத்தமாலையாம்
உலாகிவிட்ட கதிரவனுர் ஒளிவதுபோலே
முத்திபெற்ற வானவர்கள் ரிசிகள் கண்டுமே
மோகம்கொண்டு தான்மயங்க ராகவன் வாரூர்

(மோகினிக் கோலம் கண்டு அரக்கன் மயங்குதல்)

எம் பெருமான் மாயமோகினிபோல் கோலம் கொண்டு கண்டவர் மயங்கும் தன்மையாக கானகத்தில் வர ஆதிசிவனைத் தேடிய அரக்கன் கண்டு இப்பேர்ப்பட்ட பெண்ணை எங்கும் கண்டதில்லை ஆனல் இவளை எந்த விதமும் சேரவேண்டுமென்று எண்ணி என்ன செய்தானுனல்

(அரக்கன் மோகினியை வழிமறித்து வார்த்தையாடுதல்)

துடந்தானே அவள்பிறகே வஞ்சி
தோகைஇவளாரோ போறதென்பான்
755 மங்கையிவள் கோலங்கண்டு இவள்
மாயஉருக் காணேன் என்பான்

---

பாடல். 7. கண்ணி. 1: சொரூபம்-வடிவம். 'கோசலையாள் வேச மாறி' என்றே பலரும் பாடுகின்றனர். கோசலையின் பெயர் வருதல் அவசியமில்லை. 'கோதையளாய்' என இருந்திருத்தல் கூடும் எனலாம்.

இப்பாடலில் பெண்களின் அக்கால அணிவகைகள் பலவும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். உருக்குமணி, பூடி, கடுக்கன், தண்டட்டி (2) ஆகியன காதணிவகைகள். தண்டட்டியுடன் நெருக்கி அணியும் குழைவகைகள் பாம்படம், முடிச்சு, சிலுவணி என்பன. வளை, சங்கு, காப்பு, கடையம் முதலியன கைகளில் அணிவன (3) உள்கட்டு, காரை, சவடி, கண்டமணி ஆகியன கழுத்து அணிகள். சிலம்பு-காலணி. பட்டை - மார்பின்மேல் அணிவது. (4) (கெச்சம் - கொச்சம் எனலாம். உள்கட்டு - ஒக்கிட்டு' எனச் சொல்வர்.)

உச்சிப்பூ முதலியன தலையில் அணிவன: (5) கண்ணி (5) உலாகிவிட்ட - உலாவிவிட்ட. ஒளிவதுபோலே -ஒளிவு அதுபோலே.

753. துடந்தானே - தொடர்ந்தானே.

குடந்தாங்கும் பாரதனம் ரெண்டும்
குத்தும் மதயானைக் கொம்போ என்பான்
கொம்பாய்ந்த பூங்குழலாள் வரி
760 கோலவிழி புருவம்ரெண்டும்
அம்போநல்ல சிலையோ என்பான் நடை
அன்னம்இடை மின்னலென்பான்

இந்தவிதமாக அரக்கனுனவன் அந்த மாயமோகினியிடம் கொண்ட மயக்கத்தால் பலதும் சொல்லி மேலும் என்ன சொல்வானுனல்

ஐயையோ பெண்ணரசே இந்த
ஆருமில்லா கானகத்தில்
765 கைவீசி தானடந்த ஒரு
காரணம் ஏதென்று சொல்வாய்

இந்தவிதமாக மாயமோகினியை வழிமறித்து வல்லரக்கனுனவன் கேள்க்க மோகினியாள் ஆத்திரம் கொண்டு ஏதுசொல்வாளானுல்

(மாயமோகினி சினம் கொண்டு மொழிதல்)

ஏண்டாமூடா நீபோடா இப்போ
என்னவார்த்தை சொன்னதடா
ஆண்பிள்ளாய் என்தாயார்வீடு நானும்
770 அகமுடையானோடு சண்டையிட்டு
நான்பிழைத்துப் போய்ச்சேர இப்போ
நடந்தேன்தனிவழி கானகத்தில்
அந்தவார்த்தை மங்கைசொல்ல அவளுக்கு
அகமுடையான் இல்லையென்றே
775 சிந்தைமிகக் குளிந்தவனும் அப்போ
செப்புவானும் மங்கையிடம்
எந்தன்மனை வந்தாயானுல் உனக்கு
எல்லாவித பவுசுமுண்டு
கச்சுபணம் காசுபொன்னும் முத்தும்
780 கண்டதெல்லாம் உன்வசந்தான்
இச்சையுடன் நாம்தழுவி நல்ல
ஏகாபுரி போவோமென்முன்

775. குளிந்தவனும் - குளிர்ந்தவனும்.
778. பவுசு- பெருமை.
779. கச்சு இங்கே ஆடைவகை அனைத்தும் குறிப்பதாகலாம்.

வல்லரக்கன் இந்தவிதமாக வார்த்தைகள் சொன்னபோது அந்த மோகினிப்பெண்ணுள் திரும்பிநின்று ஏதுசொல்வாளானுல்

கையுடமை கழத்தவந்த ஒரு
கள்ளனைப்போல் தோணுதடா
785 மெய்யுடைமை வேண்டுமானுல் கழற்றி
விட்டெறிவேன் கொண்டுபோடா
மடியைவந்து தொடுவாயானுல் மங்கை
மனம் பொறுக்க மாட்டேனடா
நாக்கைப் பிடுங்கிடுவேன் இந்த
790 நடுவழியில் மாண்டிடுவேன்

மாயமோகினியாள் இந்தவிதமாக மாண்டுவிடுவேன் என்று சொன்னதைக் கேட்ட அரக்கனுனவன் மனம்பதறி ஏது சொல் வானுனல்

(அரக்கன் தன் ஆற்றலும் ஆசையும் தெரிவித்தல்)

ஆரணங்கே எந்தனுட ஒரு
ஆணவத்தை சொல்லுகிறேன்
வில்லாலே புரமெரித்த அந்த
விமலரையும் விரட்டிவந்தேன்
795 தேசத்திலே முன்னிருந்தோர் யாரும்
சிவனைவிரட்டின பேருமுண்டோ
ஈஸ்பரனைக் கயிலைவிட்டு இப்போ
இசங்கன்செடிவரை விரட்டிவந்தேன்
எல்லோரையும் போலவேதான் நீயும்
800 எந்தனையும் எண்ணவேண்டாம்
நல்லஆன் கன்றதுபோல் பெண்ணே
நானுமுன்னை வைத்திருப்பேன்
கானகத்தில் உன்னைக்காண நானும்
கடுந்தவசு செய்தேனம்மா
805 தவசிருந்து சடைச்சதற்கு இப்போ
தந்ததம்மா தெய்வம்உன்னை

---

783. கழத்த-கழற்ற
791. எந்தனுட - எந்தனுடைய.
792. ஆணவத்தை - ஆற்றலை, வீரத்தை
798. இசங்கன் செடி - ஒருவகை முள் செடி: இசலை எனவும் வழங்கும் வேலிக்குப் பயன்படுவது சிறுமரமாக வளர்வது.
804. தவசு-தவம்
805. சடைச்சதற்கு-சடைத்ததற்கு, வருந்தியதற்கு.

என்னகேடு வந்தாலும் இனி
உன்னைவிட்டுப் போவதில்லை
மன்மதனின் பாணமதும் என்
810 மார்புருவிப் போகுதம்மா
சித்தரசன் விட்டகணை எந்தன்
சிறுமார்பு உருகுதம்மா
வாறேனென்று சம்மதித்தே ஒரு
வார்த்தையது சொல்வாயானால்
815 நானுமுயிர் தாங்கிடுவேன் என்மேல்
நங்கைமனம் இரங்கிடுவாய்
என்று சொல்லி வல்லரக்கன் அங்கு
ஏங்கியே புலம்பிநின்றான்

இப்படியாக மாயமோகினியின் காமநோய் கொண்டு கண்ட படிவாயாட அதை அறிந்த மாயன் ஏதுசொல்வாரானால்

(மாயமோகினி அரக்கனைச் சத்தியம் செய்துதரச் சொல்லுதல்)

பண்டொருநாள் பெண்டிருந்த ஒரு
820 பாவியவன் உன்னைப்போலே
கண்டநகை தாறேனென்று இந்தக்
கன்னிதன்னை மாலையிட்டான்
மாலையிட்ட நாள்முதலாய் நான்
வாழ்ந்ததல்ல அவனோடு
825 எத்தனைநாள் பொறுப்போமென்று இப்போ
என்தாய்வீடு வாறநேரம்
வனமதிலே வாறநேரம் என்னை
வழிமறித்த மன்னவனே

நான் உன்னோடு வரவேணுமானால் எனக்கு வஞ்சகம் செய்ய வில்லை என்பதாக சத்தியம் செய்து தரவேணுமென்று சொல்ல உடனே அரக்கன் என்னவிதமாகச் சத்தியம் செய்தானானால்

ஆதிசிவன் மேலாணை அந்த
830 அய்ங்கரன்மேல் ஆணைதந்தேன்
சத்திவேல் கரம்பிடித்த நல்ல
சண்முகன்மேல் ஆணைதந்தேன்

---

811. சித்தரசன்-மன்மதன்.

824. வாழ்ந்ததல்ல-வாழ்ந்ததில்லை.

829-834. சிவன், விநாயகன், சண்முகன், திருமால் ஆகியோர்மீது ஆணை யிடுகிறான் அரக்கன்.

உலகளந்தோன் மேலாணை இனி
உந்தனைநான் மறப்பதில்லை.

என்று அரக்கன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, வாருமையா இப்பொழுதுநீர் செய்த சத்தியங்கள் பெரிதல்ல. ஆனால் நான் சொல்லியபடி சத்தியம் செய்தால் நான்வருவேன் என்றுசொல்ல அரக்கன் என்ன விதமாகச் செய்ய வேணுமோ அவ்விதம் செய்கிறேன் என்று சொல்ல மாயன் என்ன தெரிவித்தாரானால்

835 கானகத்தில் வழிமறித்த எந்தன்
கண்ணிறைந்த மன்னவனே
(நான்) சொல்லுகிற கிரிகைகளை ஓர்
சொல்லதுவும் தவறாமல்
வல்லமையால் செய்துவந்தால் உனக்கு
840 மனையாளாய் நான்வருவேன்
என்றுசொல்லும் வேளையிலே பின்னும்
ஏதுகேட்டான் வல்லரக்கன்
என்னஎன்ன செய்யவேண்டும் என்று
ஏந்திழையே சொல்வாயென்றான்

வாருமையா உம்மோடு நான்கூடி வாழவேண்டுமானால் கங்கையில் தீர்த்தமாடி வரவேணும் அதெப்படியானால்

845 ஓடுகிற கங்கைதன்னில் நல்ல
உத்தமனே ஸ்நானம்செய்து
தீர்த்தமாடி பட்டுடுத்தி நல்ல
திருவெண்ணீறு கையிலெடுத்து
கங்கைநீர்விட்டுத் தான்குழைத்து இந்த
850 கண்மணிதன்னை மறக்கேன்என்று
உச்சிதனில் மூன்று குறிதான்வைத்து
நெத்தியதில் விபூதிதானணிந்து
உத்தமனே வருவீரானால் நாம்
உல்லாசமாய் வாழலாமே

(மோகினியின் வஞ்சம் அறியாத அரக்கன் நீராடிச் சத்தியம் செய்யப் புறப்படுதல்)

என்று மாயன் சொன்ன மர்மம் அறியாது காமநோய் அதிகரித்து என் அன்பிற்குரிய ஆரமுதே நான் கங்கைக்கரைபோய் தீர்த்த

834-835. இடைஉரை: செய்ய வேணுமோ-செய்யவேண்டுமோ.

837. கிரிகைகளை - செய்கைகளை

851. திருநீறு குழைத்துத் தலையில் குறியிடும்போது கையால் தலையைச் சுற்றியே குறியிடும் வழக்கம் உண்டு குறியிடுங்கால் அரக்கனும் தன்னைமறந்த நிலையில் அவ்வாறே செய்துவிடுதல் வேண்டும் என்று எண்ணி அவனை மூன்று முறை குறியிடச் சொன்னாள் மோகினி.

மாடி வருமளவும் இந்த இடத்தைவிட்டுப் போகாமலிருக்க வேணும் என்று தீர்த்தமாடவருகிற நேரம்

855 எட்டிஅடி வைப்பானும் அரக்கன்
ஏறிட்டுப் பார்ப்பானும்
பெண்ணே போகாதே என்பானும் பாவி
பின்னே திரும்பிப் பார்ப்பானும்
இப்படியாய் வல்லரக்கன் அப்போ
860 ஏகிவாறுன் கங்கைதேடி
வரும்விதியை அறியாது சண்டாள
வல்லரக்கன் வாறுனங்கே

இப்படியாக மோகினியை திரும்பிப்பார்த்து அவசரமாக கங்கைக்கரை வந்தான். ஆனல் அரக்கன் சமுத்திரத்தில் நெருப்புப்பற்ற வரம் பெற்றுனே அல்லாது கங்காநதிகளே பற்றிக் கேள்க்கவில்லே. யாருடைய சிரசிக்கி நேராக விரலே நீட்டினுலும் கண்டதுண்டமாக வரம் கேட்டதல்லாமல் தன்னே நீக்கி வரம் கேள்க்காத பாதகன்

(மோகினியின் வஞ்சத்தால் அரக்கன் முடிவு அடைதல்)

கங்கை தீர்த்தம் ஆடுகிறுன் அந்தக்
கட்டழகன் வல்லரக்கன்
865 முங்குவானும் முழுகுவானும் அந்த
மோகினியைப் பார்ப்பானும்
தீர்த்தமாடி மாத்துடுத்தி அரக்கன்
திருநீறு கையிலெடுத்தான்
கங்கைவிட்டு குழைத்தல்லவோ ஆதி
870 சங்கரனே மனதிலெண்ணி
உத்தமியை மறக்கேன்என்று அரக்கன்
உச்சிதனில் குறிகள் விட்டான்
கரத்தின்விரல் பட்டபோது சிரசு
கண்டதுண்ட மானதப்போ
875 அண்டமது வெடித்ததுபோல் அங்கே
அரக்கன்தலே உடைந்திடவும்

867. மாத்துடுத்தி -ஆடை உடுத்தி. மாத்து-மாற்று.

(மாயனின் மோகினிக் கோலம் கண்ட சிவனார் மயங்கிய நிலையில் அய்யனார் அவரித்தல்)

இந்தவிதமாக அரக்கன் சிரசானது வெடிக்கவும் மாயன் பெருமான் தன் கோலம்மாறி மீண்டும் சிவனிடம் வரவும் ஆதி கறைக்கண்ட பகவான் ஏது கேட்டார் ஆனால் என் அருமையுள்ள மைத்துனரே அந்த அரக்கனை என்ன விதமாக அழித்தீர் அதை எனக்குக் காட்டவேணும் என்று சிவனார் கேள்க்க திருமால் மறுபடியும் மாயமோகினி வடிவை எடுத்து நிற்கும் சமயம் ஆதி சிவனார் கண்டு

புருவத்தா லேசிமிட்டி மாயன்
பொண்வடிவம் கொண்டபோது
சருவத்தான் வல்லரக்கன்
880 தன்னைக் கொன்ற கோலம்கண்டு
மருவித்த விப்பவரை இவள்
மயக்கிடுவாள் தானென்று
குடம்போன்ற தனபாரத்தை அப்போ
கொன்றையணிந்தோனும் கண்டல்லவோ
885 என்பெருமான் அறியாமல்
இசங்கு விந்து நாதமதை
அறிக்கையுடன் திருக்கரத்தில்
ஆழிவண்ணன் ஏந்தலுற்றார்
பங்குனிசேர் உத்திரமாம் நல்ல
890 பதினெட்டாம் பெருக்கத்திலே
அருள்பெருகும் பவரணையில்
அய்யனவர் தான்பிறந்தார்
அய்யன் சொரி முத்தையனும்
அழகுபூலா ருடையோரும்
895 ஆயன் திருக்கரமதிலே
அய்யனார் தான்பிறந்தார்.

சுபம் சுபம் சுபம்

878. பொண்வடிவம் – பெண்வடிவம்.

879 சருவத்தான் - சரசம்செய்ய வந்தவனாகிய அரக்கன். சருவல் - சரசஞ் செய்தல். 885. இசங்கு-இயங்கு.

891. பவரணையில் பௌர்ணமி நாளில், முழுநிலா நாளில்

896. அய்யனாருடன் அவரது பரிவார தேவதைகள் பலரும்சேர்ந்தே பிறந்த தாகப் பாடுவர். சொரிமுத்து ஐயனோடு பூலாருடையோர் மட்டுமே இங்கே குறிக்கப் பெறுகின்றனர்.

# *இரணியன் சம்மாரம்

*காப்பு

கணபதியே கசமுகவான் எங்கள்
கர்ப்பகமே முன்னடவா
குணபதியே அறுமுகவா நல்ல
குமரகுரு தேசிகனே
5 கலைமகளே சரஸ்பதியே பாலன்
கருத்தில்நீவந்து குடியிருப்பாய்
அகிலபுவனம் அளந்தோனே எங்கள்
அச்சுதனே முன்னடவா
வைகுண்ட வாசகனே எந்தன்
10 மாயவனே போற்றி செய்தேன்

---

★ கதையின் தலைப்பு பேச்சுவழக்கிற்கு ஏற்பவே 'இரணியன் சம்மாரம்' எனக் கையெழுத்துப் படியில் காணப்படுவதால் அவ்வாறே இங்கும் கொள்ளப் பட்டது.

• இக்கதையின் 'காப்பு', விருத்தமாக அமையாது வில்லுப் பாட்டுக்குரிய, சந்த அமைப்பிலேயே காணப்படுகிறது. கணபதி, ஆறுமுகன், கலைமகள் திருமால் ஆகிய தெய்வங்கள் வணங்கப் பெறுகின்றனர்.

1. கசமுகவான் - கயமுகவான் (கஜமுகவான்), ஆனைமுகன்
2. கர்ப்பகமே - கற்பகமே. முன்னடவா - முன்னடவாய்
5. சரஸ்பதியே - சரஸ்வதியே

11-34. நாட்டுவளமும், நகரச்சிறப்பும் கூறப்பெறுகின்றன. ஐயன் கதை, சுடலை மாடன் கதை போலும் தெய்வத் தொடர்புடைய கதைகள் கயிலைக் காட்சி கூறியே துவங்குகின்றன. ஆயினும், தெய்வத் தொடர்புடைய இக்கதை வில்லுப்பாட்டுகளில் பொதுவான முறையில் வழங்கும் நாட்டுவளமும் கூறித் தொடங்குகிறது. திருமாலின் அவதாரக் கதையாகலின் கயிலைக் காட்சி விடப் பட்டது போலும்,

(நாட்டு வளம்)

நாடான நாடதிலே நல்ல
நலமுடைய தென்னாட்டில்
தென்னாடு தெச்சணத்தில் அங்கு
செழிப்போங்கி வாழும்நாடு
15 மாமரமும் சோலைகளும் அங்கே
வளர்ந்தோங்கிச் செழிக்கும்நாடு
வருக்கை பலாமரமும் நல்ல
வாசமுள்ள சோலைகளும்
புன்னை கமுகுடனே அங்கு
20 பூக்கும் நந்த வனமதுவும்
மல்லிகை முல்லை இருவாச்சி மருகு
மரிக்கொழுந்து பூக்கும் நாடு.

இப்படிப்பட்ட இடத்தில் மேலும் எவ்வாறு இருந்ததானல் மாந்தாரை பிச்சி இருவாச்சி ரோஜா பாரிசாத மலருடன் அழகிய தாமரை. அந்த, தாமரைமீது வண்டுகள் கூடி ரீங்காரம் பாடவும்

(அளகாபுரி பட்டணத்தை இரணியன் ஆளுதல்)

மானிருந்து குதுத்து ஓடும் நல்ல
மயிலிறகை விரித்து ஆடும்
25 அன்னமோடு மயிலினங்கள் அங்கே
ஆனந்தமாய் நடனமாடும்
தேன் பொழிந்து கதிர்விளையும் நல்ல
தென்னைபலா பூச்சொரியும்
கதிர் ஒரு முழமே காணும் அங்கே
30 கட்டு முக் கலமே காணும்
மாதம் மூன்று மழைதான் பெய்யும் அங்கே
வருசம் மூன்று பூவிளையும்
அளகாபுரி பட்டணத்தை அங்கே
யார்தான் ஆண்டுவந்தாரானல்

13. தெச்சணம் – தட்சணம். (தெற்கு)
22. மரிக்கொழுந்து - மருக்கொழுந்து
23. குதுத்து-குதித்து.
30. ஒரு கட்டுக் கதிரில் மூன்றுகலம் தானியம் விளையும்.
33. குபேரன் நகரின் பெயரான அளகாபுரி இரணியன் நகரின் பெயராகி வருகிறது.
34. ஆண்டு வந்தாரானல்- ஆண்டு வந்தார் என்றல், இதுபோலவே 'என்றல்' என்று இருக்க வேண்டிய இடங்களில் எல்லாம் 'ஆனல்' எனும் சொல்லே வழக்காகி வருகிறது.

அந்த அளகாபுரியை யார் ஆண்டுவந்தாரானால் இரணியனும் அவன் தம்பியாகிய இரணியாச்சுதனும் ஆண்டு வரும் நாளில் எப்படி ஆண்டு வந்தாரானால்

(ஆட்சியின் கொடுமை)

35 அதர்ம செங்கோல் தான்பிடித்து அவர்
அடக்கி ஆண்டு வாற நாளில்
தபமுனிகளை அடிக்கிறதும் அவர்
தானே அட்டகாசம் பண்ணுவதும்
யாகசாலைகள் அழிக்கிறதும் அங்கே
40 அதர்மம் செய்து வாழும் நாளில்

(முனிவர்கள் திருமாலிடம் முறையிடுதல்)

இப்படியாக அந்த இரணியாச்சுதன் செய்த கொடுமைகளை, தாங்கமுடியாமல் தபோதனர்கள் செபங்களைவிட்டு மனம் வருந்தி, திருப்பால் கடல் பக்கம் சென்று கண்ணீர் விட்டு கதறி மாயன் பெருமாளை தியானிக்க

அப்போது மாயவனார் அங்கு
அன்புடனே ஏது செய்தார்
பால்கடலில் உதித்தல்லவோ அந்த
பரந்தாமன் ஏதுகேட்டார்
45 வாருங்கள் முனிவர்களே நீங்கள்
மனம்வருந்தி வந்ததென்ன.

என்று மாயவன் கேள்க்க தபோதனர்கள் மாயன் திருவடி வணங்கி ஏது சொல்வாரானால் அகில புவனரச்சகா ஆபத் பாந்தவா அனுதரச்சகா ஆலிலையில் பள்ளிகொண்டவா தாமரைக் கண்ணா உன் பாதாரவிந்தம் பணியும் எங்களை அந்த சண்டாள இரணியாச்சுதன் செய்யும் இடுக்கம் தாங்க முடியாமல் தங்களைத் தேடி மனம் வாடி உன்பாதமே கெதி என நாடி வந்தோம். எங்களை ரச்சிக்க வேணும் என்று இருகரம் குவித்து நிற்க அதை அறிந்த மாயன் என்ன சொன்னார் ஆனால்

---

36. வாறநாளில்-வருகிற நாளில். இவ்வாறு 'வருகிற' என்பது 'வாற' என வருதலைப் பிற இடங்களிலும் காண்க.

46-47. இவ்வடிகளுக்கிடைப்பட்ட உரையில் : 'கேள்க்க'- கேட்க. இவ்வாறு எல்லா இடங்களிலும் இயல்பாகவே எழுதப்பெற்றுள்ளதால் அவ்வாறே குறிக்கப்பெற்றது. ரச்சகா-ரட்சகா. இடுக்கம்-துன்பம். கெதி-கதி.

48. தீர்த்துத் தாறேன்-தீர்த்துத் தருகிறேன். 'தாறேன்' என்பது போல் வரும் இடங்களில் எல்லாம் வல்லினம் (ற்) இடப்பெற்று வருதல் கருதத் தக்கது 'தாரேன்' என இடையினம் (ர்) வருமாயின் அதன் பொருள் 'தரமாட்டேன்' என்றாகிவிடும் நிலை தவிர்க்கப்படுதலைக் காணலாம்.

(மாயன் வராக அவதாரம் எடுத்து இரணியாச்சுதனை அழித்தல்)

அஞ்சாதீர் தேவர்களே உங்கள்
ஆபத்தைத் தீர்த்துத்தாறேன்
என்று சொல்லி மாயவனார் அப்போ
50 எடுத்தாரே கோலமது
வராக அவதாரம் கொண்டல்லவோ அந்த
மாயவனார் ஏது செய்தார்
எரணியாச்சுதன் தன்னையும்தான் அந்த
இருளும் முகில் வண்ணன் தானுங் கொன்றார்

(இரணியன் சினம் கொள்ளுதல்)

அந்த இரணியாச்சுதனை மாயன் வதை செய்ததை அறிந்து அவன் தமயனாகிய இரணியன் ஆங்கார கோபங்கொண்டு என்ன செய்தான் ஆனால்

(மாயன் பூசை செய்வோர்க்குக் கொடுமை புரிதல்)

55 அரக்கர் கூட்டத்தை அழைத்தல்லவோ அவன்
அன்புடனே ஏதுசொல்வான்
அரி என்று சொன்னோரை நீங்கள்
அடித்துக்கட்டி இழுத்து வாரும்
நாமமது போட்ட பேரை நீங்கள்
60 நமது சிறைதனில் அடைத்திடுங்கள்
மாயன் பூசை செய்தவர்க்கு நல்ல
மாட்டிறச்சி ஊட்டிடுங்கள்
நாராயணா வென்று சொன்ன பேரை
நாசப்படுத்துங்கள் நீங்கள் சென்று

வாருங்கள் அரக்கர்களே அரிஓம் நமோ நாராயணா வென்று சொல்பவரை அடித்துமிதித்து வதைத்தும் அல்லாமல் அவர் வைத்துப் பூசை செய்யும் லிங்கத்திற்கு எவ்விதம் அபிசேகம் செய்ய வேணுமானால் மதுவால் அபிசேகமும் மாம்சங்களால் மாலையும் போடும்படி சொல்லி மேலும் என்ன சொல்வான் ஆனால்

(இரணியன் பிரம்மனை நோக்கித் தவம் செய்யப் போதல்)

65 மந்திரியை வரவழைத்து அந்த
மன்னனுமே ஏது சொல்வான்

---

49. அப்போ-அப்பொழுது, அப்போது.

53. எரணியாச்சுதன்-இரணியாட்சன்.

62. மாட்டிறச்சி-மாட்டுஇறைச்சி.

64-65. இடைஉரை : 'லிங்கத்திற்கு' என்பது 'விக்கிரகத்திற்கு' என்ற பொருளிலேயே வருகிறது. இது சிவலிங்கத்தைக் குறிப்பதாகாது எனலாம். அபிசேகம்-அபிஷேகம், மாம்சம்-மாமிசம்

கணையாழி தனைக் கொடுத்து நல்ல
கட்டழகன் ஏதுசொல்வான்
வாரும் பிள்ளாய் மந்திரியே ஒரு
70 வார்த்தையது சொல்லக் கேளும்
ஆதி பிரம்மா தன்னை நோக்கி நான்
அருந்தவமோ செய்யப் போறேன்
அருந்தவம் செய்தல்லவோ நான்
அழியா வரம் வாங்கி வாறேன்

வாரும் பிள்ளாய் மந்திரியே நான் சென்று அருந்தவம் செய்து அழியாவரம் வாங்கி வருகிறேன் நான் வரும்வரை ராச்சிய பரிபாலனம் செய்வதோடு என் மனவியான கயாது கர்ப்பவதியாய் இருப்பதால் அவளையும் பாதுகார்க்க வேணும் என்று செங் கோலைக் கொடுத்துவிட்டு எங்கு வந்தான் ஆனுல்

(கருவுற்று இருந்த மனைவி கயாதுவிடம் விடை பெறுதல்)

75 மனவியானவள் இருக்குமிடம் அந்த
மன்னனவன் வந்தல்லவோ
வாடிபெண்ணே பெண்கொடியே எந்தன்
மங்கையரே வார்த்தைகேளு
நமது குலத்துக்கு விரோதியான அந்த
80 நாரணன் தன்னை வெல்லவேணும்
மாயன் பெருமாள் தன்னை வெல்ல நான்
வரம்வாங்கி வருமளவும்
அரண்மனை விட்டு அகலாதே எந்தன்
ஆரணங்கே பெண்கொடியே
85 என்று சொல்லும் வேளைதனில் அப்போ
ஏது செய்தாள் கயாதவள் தான்

அந்த இரணியன் சொல்ல, பார்த்தாள் பெண்கொடியாள் என்கணவா நாம் தேவர்களுக்குப் பகையாய் இருக்கிறோம் அது மல்லாமல் நான் கர்ப்பமாக யிருக்கும் நேரம் என்னைத் தனியே வைத்து, தாங்கள் போவது தகுமா என்று சொல்ல இரணியன் என்ன சொல்வானுனல்

72. செய்யப் போறேன்–செய்யப் போகிறேன். இவ்வாறே பிற இடத்தும் காண்க.

74. வாங்கி வாறேன்- வாங்கி வருகிறேன். ,, ,, ,,

74-75. இடைஉரை : ராச்சிய-ராஜ்ய. மனவி-மனைவி பாதுகார்க்க-பாது காக்க. இவ்வாறு 'ர்' ஆசிடையிட்டுச் சொல்லுதல் வில்லுப்பாட்டுப் புலவரிடையே ஓர் மரபாகவே உள்ளது.

வாடிபெண்ணே பெண்கொடியே எந்தன்
வார்த்தையது சொல்லக் கேளு
சேனே சயினியம் இருக்கும் போது நீ
90 சிந்தையது கலங்கலாமா
மந்திரிதான் இருக்கும்போது பெண்ணே
மனமதுநீ வருந்தலாமா
யானைசேனே இருக்கும்போது எந்தன்
ஆரணங்கே வருந்தலாமா

என்று இரணியன் கயாதுக்கு ஆறுதலான வார்த்தை சொல்லியதும் மல்லாமல் நம் பகையை முடிக்க வேண்டியது அவசியம் ஆனபடியால் நான் சென்று தவம் செய்து சாகாத வரம்பெற்று வந்து சேர்வேன் என்று சொல்லி மனவியிடம் விடைபெற்று என்ன செய்தான் ஆனல்

(இரணியன் வனம்சென்று தவம்புரிதல்)

95 நாடுநல்ல நகரம்விட்டு அப்போ
நடந்தானே இரணியனும்
ஊருநல்ல பதிகடந்து அந்த
உற்றபிள்ளை வாறநேரம்
அடந்தநல்ல வனமதிலே நல்ல
100 அழகுபிள்ளை வாறனப்போ
சிங்கமது உறங்கும்வனம் அங்கே
சிறுபுலிகள் வாழும்வனம்
காட்டானை சிங்கங்களும் நல்ல
கரடிபுலி கூட்டங்களும்
105 கொக்கிருந்து இறகுணர்த்தும் அந்த
குமுதமலை தன்னதிலே
உச்சிமலை மேலேயல்லோ நல்ல
உகந்ததவம் செய்ய எண்ணி

இரணியனவன் தபம் செய்ய வேணும் என்று மலை உச்சியில் எவ்வாறுக செய்தான் ஆனல்

ஆயிரமுழ கம்பம்நாட்டி அதில்
110 ஆமைநல்ல பலகைபோட்டு
ஏழுசெப்பு குடங்கவிழ்த்தி

89 சயினியம்-சைனியம், சேனை.

100. 'வாறு'னப்போ - 'வருகிறன்' அப்போது. பிறஇடத்தும் இவ்வாறே கொள்க. 111. கவிழ்த்தி-கவிழ்த்து.

ஏற்ற செவ்வெளனி தன்னைவைத்து
செவ்வெளனி மேலநல்ல
திரண்டகொட்டைப் பாக்குவைத்து
115 கொட்டைப் பாக்கின் மேலவேதான்
குண்டுமணி பருப்புவைத்து
குண்டுமணி பருப்பின்மேலே
குண்டூசி தனைநிறுத்தி

இப்படியாக, கம்பத்தின் மேல் வைத்த பொருள்கள்போதாது என்று மறுபடியும் என்ன செய்தான் ஆனால்

குண்டூசி மேலேநல்ல
120 குளிந்த இலுமச்சங்கனியை வைத்தான்
இலுமச்சங் கனிமேலே
ஒலுமிச்சங் கனியை வைத்தான்
ஒலுமிச்சங் கனிமேலே
உருக்கூசி தான்நிறுத்தி
125 உருக்கூசி மேலேவேதான்
உகந்ததவம் செய்யலுற்றான்.
ஊசிமுனை மேல் ஒருகாலும்
உச்சந்தலை கீழும் கால்மேலும்
கால்மேலும் தலைகீழும்
130 கடியதவம் செய்யலுற்றான்.

இப்படியாக அந்த இரணியன் அருந்தவம் செய்யும்போது அவன் மனதில் என்ன நினைத்தான் ஆனால் பூத்தாமரையில் உதித்த ச்துர்முக தேவா தாமரைச் செல்வா வென்று தியானம் செய்ய அப்போது

(இரணியன் தவவலிமையைப் பிரமன் அறிதல்)

அருந்தவ மகிமையது நல்ல
அக்கினியாய் ஏறுதங்கே
நான்முகன் தன்னைத்தேடி அப்போ
நலமுடனே வாறதையா
135 பெருந்தவ அக்கினிதான் அந்த
பிரம்மா அங்கத்தில் ஏறுதங்கே

112. செவ்வெளனி-செவ்விளநீர்.
120. குளிந்த - குளிர்ந்த. இலுமச்சங்கனி - எலுமிச்சங்கனி.
122. ஒலுமிச்சங்கனி - இக்கனி யாதெனத் தெரியவில்லை.
136. வலிமை பெற்ற தவத்திற்கு இவ்வாறு உரிய தெய்வத்திடம் உணர்த்தும் ஆற்றல் உண்டு. ஆபுத்திரன் அறவலிமையை இந்திரனின் பாண்டு கம்பள நடுக்கம் அறிவித்ததுபோல.

அந்த இரணியன் செய்த தவமானது சகலபுவனத்தையும் ஓர் அடியாய் அளந்த மகாவிஷ்ணுவின் உந்திக்கமலத்தில் அவதரித்த சதுர்முக பிரம்மா அறிந்து இரணியனுக்கு வரம் கொடுக்க எண்ணம் கொண்டு கம்பத்தடிதேடி

(பிரமன் இரணியனைக் காணவருதலும் நாரதன் இந்திரனைத்தேடிப் போதலும்)

வருந்தித்தவமது செய்வதைத்தான் அப்போ
வந்துபார்க்க வேணுமென்று
பிரம்மதேவர் புறப்படவே அந்த
140 பிரம்மபுத்திரன் ஏதுசெய்தார்
பிரம்மலோகம் தன்னைவிட்டு நல்ல
பிரம்ம புத்திர நாரதனும்
இந்திர லோகம் தேடிவந்து அந்த
இந்திரனைக் கண்டல்லவோ

அந்த நாரதனனவன் இந்திரனைக்கண்டு என்ன சொல்வான் ஆனால், வாருங்கள் தேவாதி தேவர் போற்றும் தேவேந்திரா, அந்த அளகாபுரி ஆளும் இரணியன் தன் தமயனைக் கொன்ற பழிக்கி பழிவாங்க அழியாவரம் வாங்கவேணும் என்று அருந்தவம்செய்யச் சென்றுவிட்டான் இதுதான் சமயம் நம் தேவர்களை மீட்ட என்று சொல்ல அதைக் கேட்டு இந்திரன் என்ன செய்தான் ஆனால்

(இரணியன் இல்லாத நேரம் இந்திரன் அளகாபுரி வருதல்)

145 பார்த்தானே தேவேந்திரன் அப்போ
பாவினையாய் ஏதுசெய்தான்
தேவர்சிறை தன்னை மீட்ட நல்ல
தேவேந்திரன் மனதிலெண்ணி
சேனை தளங்கள் புடைசூழ அந்த
150 தேவேந்திரன் புறப்பட்டானே
தேவலோகம் தான்கடந்து அந்த
தேவேந்திரன் வாறானப்போ
மலைகள் செடிகள் தாண்டியல்லோ அப்போ
வாறானே தேவேந்திரன்
155 காடுசெடி தான்கடந்து நல்ல
கரியமலை சோலைவிட்டு

144-145. இடைஉரை: பழிக்கி-பழிக்கு. வாங்கவேணும்-வாங்கவேண்டும். வேண்டும் என்பது 'வேணும்' எனவருதல் பிற இடத்தும் காண்க.

146. பாவினையாய் - நன்கு எண்ணி (பாவனை-எண்ணம்)

அந்த தேவேந்திரன் தேவலோகம் கடந்து காடுமலைவனம் வனுந்திரம் தாண்டி இரணியன் வாழும் அளகாபுரிவந்து என்ன செய்தார் ஆனுல்

(இந்திரன் அளகாபுரியில் அரக்கரைச் சிறைவைத்துத் தேவர்களை மீட்டுதலும், கயாதுவைச் சிறையெடுத்துச் செல்லுதலும்)

தேவர்சிறை மீட்டியல்லோ அப்போ
தேடிப் பிடித்தார்கள் அரக்கரைத்தான்
அரக்கர் கூட்டம் தனையடித்து அங்கு
160 அவர்களைச் சிறைதன்னில்வைத்து
இரணியன் மனைவியான அந்த
ஏற்ற கயாது மங்கையைத்தான்
சிறைப்பிடித்து ரதத்தில்வைத்து அப்போ
திரும்பலுற்ருன் தேவேந்திரன்
165 தேவலோகம் தன்னைத்தேடி நல்ல
தேவேந்திரன் வாறநேரம்

(கயாது இந்திரனிடம் முறையிடுதல்)

அந்த தேவேந்திரன் தேவலோகத்தைத் தேடி வரும்போது இரணியன் மனவி கயாது என்ன செய்தார் ஆனுல் ஆருத் துயரம் கொண்டு,

தேவர்களுக்கு அதிபதியே நல்ல
தேவேந்திர பூபதியே
மன்னனில்லா மனையதிலே சிறு
170 மங்கைசிறை பிடிக்கலாமா
புருசன் இல்லா அரண்மனையில் நீர்
பெண்ணைச்சிறை எடுக்கலாமா
ஆரும் இல்லா இடமதிலே என்னை
அன்னீதம் செய்யலாமா
175 தேவர்களுக்கு இதுமுறையா நல்ல
தெய்வேந்திர பூபதியே
ஆறுமாத கர்ப்பமல்லோ என்னை
அதரும்படி செய்யலாமா

156-157. இடைஉரை: வனுந்திரம்-வனுந்தரம். மக்கள் வழங்காத இடம்.
174. அன்னீதம் - அநியாயம்
178. அதரும்படி-அதிரும்படி. கருவுற்ற காலத்துச் சிறுஅதிர்ச்சியும் தீமை தரும் என்பர் ஆதலால் இவ்வாறு கூறினுள் எனலாம்.

என்று பெண்கொடியாள் எண்ணுது எண்ணி யேங்கி மனம் வாடி ஈசனே கயிலாசவாசனே என் நாதனல்லாத வேளையில் என்னை சிறைபிடித்து செல்லும் தருணம்

யாரொருவர் தஞ்சமல்ல என்னை
180 ஆதரிப்பார் ஒருவரல்ல
அரவின்வாயில் தேரைபோலே நான்
அகப்பட்டேனே என்னசெய்வேன்
யாருமற்ற பாவியானேன் இப்போ
ஆலையில் விட்ட கரும்பானேன்
185 என்றுசொல்லி பெண்கொடியாள் அங்கு
ஏங்கிமனம் வாடலுற்ருள்
முத்துப்போல் கண்ணீரை அவள்
முகமெல்லாம் சோரவிட்டாள்
பகளம்போல் கண்ணீரை அப்போ
190 பக்கமெல்லாம் சோரவிட்டாள்

(கயாதுவின் புலம்பலைக் கேட்டு நாரதன் வருதல்)

இப்படியாக அந்த மங்கை அழுதுபுலம்பும்போது அந்த சத்தம் கேட்டு நாரதர் ஓடிவந்து தெய்வேந்திரனிடம் ஏதுசொல்வாராளுல்

வாருமய்யா தெய்வேந்திரா ஒரு
வார்த்தையது சொல்லக்கேளும்
தேவர்களுக் கதிபதியே பெண்ணை
சிறையதுதான் எடுக்கலாமா
195 மன்னர் கள்க்கு முறையாமோ சிறு
மாதுதன்னை சிறைஎடுக்க
வேண்டாம் வேண்டாம் விட்டுவிடு
வேந்தனே தெய்வேந்திரா

(கயாதுவை விட்டுவிடச் சொன்ன நாரதனை இந்திரன் மறுத்தல்)

வாரும்பிள்ளாய் நாரதனே இந்த இரணியன் மனவி கர்ப்ப மாக இருக்கின்ருள். அவளை உயிருடன் விட்டால் அவள் வயிற்றில் பிறக்கும் பிள்ளை இரணியனுக்கு மேலாய் வரும். அப்போது

---

179. தஞ்சமல்ல-தஞ்சமில்லை. 180. ஒருவரல்ல-ஒருவரில்லை.
189. பகளம்-பவளம், பவழம். 190. சோரவிட்டாள்-வழியவிட்டாள்.
185-190. கண்ணீர் வடிக்கும் நிலை நேரும்போதெல்லாம் இவ்வாறு வருணித்தல் வில்லுப்பாட்டில் ஓர் பொதுமரபு.
191. தெய்வேந்திரன். -தேவேந்திரன்

நாம் அதிக கஷ்டப்பட நேரிடும்என்று தெய்வேந்திரன் சொல்ல நாரதன் கேட்டு

(நாரதன், கயாது மைந்தனுலேயே தேவர் கவலைதீரும் என்று கூறுதல்)

புன்சிரிப்பு கொண்டல்லவோ அப்போ
200 பேசுவாராம் வாய்திறந்து
வாரும்பிள்ளாய் தேவேந்திரா ஒரு
வார்த்தையது சொல்லக்கேளும்
கயாது மங்கை கர்ப்பத்திலே நல்ல
கண்மணிதான் பிறந்திடுவான்
205 சிறுவன் வந்து பிறந்தபோது நமது
தேவர்துன்பம் நீங்கிவிடும்
ஆகையினுல் பெண்கொடியை எந்தன்
ஆசிர்மத்தில் விட்டுவிடு

(கயாது நாரதன் ஆசிரமம் சேர்தல்)

என்று நாரதன் கேள்க்க அதை அறிந்த தெய்வேந்திரன் நாரதன் ஆசிர்மத்தில் இரணியன் மனைவியைவிட்டு தெய்வலோகம் போகவும் நாரதன் அந்த பெண்கொடிக்கு ஆசையாகிய கதைகளும் கவிகளும் அதின் பொருள்களும் சொல்லி அவள் மன வருத்தம் தீர்த்து சந்தோசமாய் இருக்கும் நாளில்

(கருவில் உள்ள பாலனுக்கு நாரதன் நாராயணமந்திரம் உபதேசித்தல்)

மாமுனிவன் கதைகேட்டு அந்த
210 மங்கைநித்திரை செய்தபோது
அயந்து நித்திரை செய்யும்போது நல்ல
அழகுபிள்ளை நாரதன்தான்
கர்ப்பத்தில் இருக்கும்பாலனுக்கு ஆதி
கரியமால் மந்திரம் சொல்லுவாராம்
215 கண்ணன் மந்திரம் சொல்லுவாராம் நல்ல
கருவில் இருக்கும் பாலனுக்கு
மாயன் மந்திரம் கேட்டபோது அந்த
மைந்தனுமே ஏதுசொல்வான்
நாராயணவென்ற நாமமதை குழந்தை
220 நாளும் துதித்துசொல்லுவானும்

---

208. ஆசிர்மத்தில் - ஆசிரமத்தில்.
211. அயந்து - அயர்ந்து

(சுயாது பாலகனைப் பெறுதல்)

இவ்விதமாக தாயார்க்கு பலவித கவிகளும் தனயனுக்கு திருமால் விஞ்சையும் கற்றுக் கொடுத்து வாறநாளில் அந்த மங்கைக்கு பத்துமாதம் சென்று பாலகனைபெற்றாள் அப்பொழுது தேவகன்னியர்கள் கூடி குலவையிட்டு இரணியன் மனவிக்கு துணை யிருக்கவும்

இப்படியே இருக்கும்போது அந்த
இன்பமுள்ள பாலகன்தான்
திருமாலின் பாதமதை அவன்
தினமுந்துதி செய்துவாறான்
225 நாரதனால் திருமால்பாதம் எந்த
நாளும்துதி செய்துவாறான்

(பாலகனுக்குப் பிரகலாதன் எனப்பெயர்வைத்தல்)

இப்படியாக அந்த பாலகனுக்கு நாரதன் மாயன் மந்திரம் செபித்து நாள்பார்த்து பாலனுக்கு என்ன பெயரிட்டாராஞல் பிரக்லாதன் என்று பெயர்கொடுத்து வளந்து வரும் நாளில் அருந் தவம் செய்த இரணியனுக்கு வரம்கொடுக்க வேணும் என்று

(நான்முகன் இரணியனுக்கு வரம்தர வருதல்)

பிரம்மலோகம் தன்னைவிட்டு அப்போ
பெருந்தவத்தை தேடிவாறான்
இரணியனின் தவத்தைதேடி நல்ல
230 ஈசன்தானும் வாறநேரம்
படந்தமலை தனைக்கடந்து அந்த
பகவானும் வாறநேரம்
உயர்ந்த மலை தான்கடந்து அங்கே
ஓடும் கங்கை நதிகடந்து
235 குண்டுமலை குமுதமலை நல்ல
குடகுமலை தான்கடந்து
குமுதமலை தன்னதிலே அந்த
கோபாலன் மைந்தனும் வந்தல்லவோ

226-227. இடைஉரை: 'பிரகலாதன்' எனும் பெயர் பிரகலாதன், பிரகுலாதன், பிரக்குலாதன் என்றெல்லாம் பலவாருகக் குறிக்கப் பெறுகிறது. வளந்து வளர்ந்து.

231. படந்தமலை - படர்ந்தமலை.

238. திருமாலின் உந்திக் கமலத்தில் உதித்தவன் பிரமன் ஆதலின் அது கொண்டு 'கோபாலன் மைந்தன்' எனக் கொள்ளப்பட்டது எனலாம்.

அந்த பிரம்மதேவன் இரணியன் தவம்செய்த இடத்தில்வந்து ஏதுபிள்ளாய் இரணியனே என்னை நினைத்து தவம்செய்த விசயம் என்னவென்று கேள்க்க இரணியன் ஏது சொல்வானுனல்

நான்முகன் தன்னைகாண இப்போ
240 நானே தவம் செய்தேன் என்ருன்
சதுர்முகனை நோக்கியல்லோ நான்
தானேதவம் செய்தேனையா
வரமது வாங்குதற்கு நான்
வருந்தி தவம் செய்தேன்என்ருன்
245 என்றுசொன்ன வார்த்தைகேட்டு அப்போ
ஏதுசொல்வார் பிரம்மதேவர்

வாரும்பிள்ளாய் இரணியனே உன்னுடைய தவமகிமை அறிந்து உனக்கு வரம் கொடுக்க எண்ணிவந்தேன் ஆனுல் உனக்கு என்னவரம் வேண்டும் விபரமாய்கேள்க்க வேணும் என்று பிரம்மா சொல்ல அதை கேட்ட இரணியன் ஏதுசொல்வான் ஆனுல் இனக்கு வேண்டிய வரமானது என்னவென்ருல்

(இரணியன் கேட்டவரம்)

(வேறு)

* மண்ணிலும் விண்ணிலும் ஆகாயம் தன்னிலும்
மலைகடல் மரங்களாலும்
மாசற்ற பஞ்சபூதங்களென்னும் தெய்வேந்திர
வர்க்க திசை பாலராலும்
எண்ணரிய சீவகோடி நடப்பன பறப்பன
ஊர்வனவெனும் சீவனுலும்
இரவிலும் பகலிலும் எதிரிகள் என்பொருந்தும்
எறியும் போர் கரிவியாலும்

238-239. இடை உரை: விசயம்-விஷயம்.
239-244. இவ்வாறு அடுக்கிவரத் தொடுத்தல் வில்லுப்பாட்டு மரபே.
* விருத்தம்

இரணியன் பெற்ற சாகாவரத்தின் திறத்தைக் கம்பர் 5 கவிகளால் விளக்கு வார். அவை அனைத்தும் தொகுத்துக் தருகிறது இப்பாடல். (கம்பன்-யுதத காண்டம். இரணியன் வதைப்படலம் பாடல் 14-18). இம்பாடலின் மூன்ரும் அடியின் முற்பகுதியை 'எழுத்துப் படியில்' எவ்வாருே மீண்டும் எழுதிவிட்ட நிலையில் அந்த அடியின் பிற்பகுதி கிடைக்க இயலாமல் போயிற்று. இறுதி அடி யில் வரும் 'கார்த்த' என்பது காத்த எனும் சொல். காக்க எனும் சொல் கார்க்க என முன்னர் வருதல் போல,

பெண்ணிலும் ஆணிலும் பேடியுடன்மற்ற
பெருமூப்பு விளிப்பினுலும்

... ... ...

... ... ...

புண்ணியபாவம் உண்டிநித்திரையிலும்
சாகாத வரமேவேணும்
பூத்தாமரைக் கமலம் கார்த்த பரப்பிரம்மா
பூரண தேவ தேவா.

என்று அந்த இரணியன் சதுர்முகனை நோக்கி இருகரம் குவித்து தேவரீர் எனக்குத் தரவேண்டிய வரமானது பூமியிலும் ஆகாயத்திலும் — வீட்டிலும் — வெளியிலும் — நடக்கும் மிருகத்தாலும் – ஊர்ந்துசெல்லும் சீவனுலும்—பெண்ணுலும்—ஆணுலும் —தேவராலும் முனிவராலும்—பகலிலும்—இரவிலும் சாகாவரம் வேணும் என்று கேள்க்க அதைக்கேட்டு பிரம்மதேவன் ஏதுசொல் வாறுனல்

(பிரமன், இரணியன் விரும்பியவாறே வரம் தருதல்)

கேட்டநல்ல வரமதுதான் — உனக்கு
கிருபைகூர்ந்து தந்தேன் என்ருர்
என்றுசொன்ன வேளையதில் — அப்போ
250 ஏதுசெய்தான் இரணியனும்
சூரியனைக்கண்ட பனியதுபோல் — அவன்
துன்பம்நீங்கி ஓடிவந்து
சதுர்முகன் பாதமதை — அப்போ
தானேவணங்கி நமஸ்கரித்தான்
255 நமஸ்கரித்த இரணியனை — பிரம்மா
நலமுடன் ஆசீர்வதிக்கலுற்ருர்
முக்காலும் வலமும் சுற்றி — அவன்
மூவிருகால் தெண்டனிட்டு

---

247-248. இரணியன் கேட்டவரத்தைப் பிரமன் தருவதான இந்நிகழ்ச்சி இவ்வாறு 'கம்பனில்' விரித்துரைக்கப்படவில்லை எனினும் இதனைத் தொடக்கத்திலேயே பின்வருமாறு குறிப்பிட்டுவிடுகிருன் கம்பன்.

''வேதங்கண்ணிய பொருளெலாம் விரிஞ்சனே யீந்தாள்
போதங்கண்ணிய வரமெலாம் தரக்கொண்டு போந்தான்''
(இரணியன் வதைப்படலம். பாடல்: 1. வரி 1, 2)

257-258. மும்முறை வலம் வருதலும், ஆறுமுறை வீழ்ந்து வணங்குதலும் குறிக்கப்பெறுகின்றன.

(அளகாபுரி வந்த இரணியன் அரக்கர் சிறை இருப்பது அறிதல்)

அந்த இரணியனனவன் வரம்கொடுத்த பிரம்மாவை அடி பணிந்து அவரிடம் விடைபெற்று தனது அரண்மனை தேடிச்செல்ல மலைகளும் வனங்களும் தாண்டி தான்வாழும் அளகாபுரிவந்து அரண்மனை போகும்போது எவ்விதம் இருந்ததானல்

அசுரர்சிறை தானிருக்க அதை
260 அறிந்தானே இரணியனும்
வாருங்கள் அரக்கர்களே உங்களை
வைத்தவன்யார் சிறைதனிலே
சிறையில் வைத்த பாதகனை இப்போ
சித்திரவதை செய்திடுவேன்
265 சொல்லுங்கள் இப்போது என்று
துடிக்குகிறன் கோபமீறி
பல்லை நறநற வெனக்கடித்து நீங்கள்
பதறுதீர் சொல்லுமென்றன்

(மனைவி கயாதுவையும் இந்திரன் சிறை எடுத்துச் சென்றது அறிதல்)

அவ்வார்த்தை கேட்டு அசுரர்கள் ஏதுசொல்வார் ஆனல் அய்யா ராசாதிராசனே தெய்வலோகம் ஆளும் இந்திரன்வந்து தேவர் சிறைமீட்டி எங்களை சிறையில்வைத்ததுமல்லாமல் தங்களுடைய தேவியையும் சிறைபிடித்து சென்றுவிட்டான் என்று சொல்ல அதை கேட்ட இரணியன் கோபமீறி என்ன செய்தான் ஆனல்

(இரணியன் பெருஞ்சினம்கொண்டு தேவர் உலகமீது படை எடுத்தல்)

ஆரடவா அறிக்கைக்காரா
270 அவசரமாய் ஓடிவாடா
என்றுசொல்லும் வேளைதனில்
ஏதுசெய்தான் அறிக்கைக்காரன்
அரசமன்னன் இடமதிலே
அன்புடனே வந்தபோது

266. துடிக்குகிறன்-துடிக்கிறன். இவ்வாறே 'இருக்குகிறன்' 'வருகுகிறன்', 'போகுகிறன்' என்றெல்லாம் வருதல் உண்டு.

269. ஆரடவா-ஆரடா.

வாரும்பிள்ளாய் அறிக்கைக்காரா நமது பறைசாற்றியிடம் சொல்லி நம் நகரில் உள்ள வீராதி வீரர் சூராதி சூரர் வில்பிடிக்கும் மன்னர் வாள் சண்டைக்காரர் மல்யுத்தகாரர் மற்றும் பலம் பொருந்திய வீரர்களை அதிசீக்கிரம் அரண்மனைக்கு வரும்படி பறைசாற்ற வேணும் என்றுசொல்ல அப்படியே நல்லதென்று அரசனை பணிந்து அரண்மனைவிட்டு சென்று என்னவிதமாக பறையடித்தான் ஆனல்

275 அளகாபுரி வாழுகின்ற நல்ல
ஆணுவமுள்ள அரக்கரெல்லாம்
மல்யுத்தம் உடையவரும் நல்ல
வாள் சண்டை காரர்களும்
வில் பிடிக்கும் மன்னர்களும் நல்ல
280 வேல் பிடிக்கும் வீரர்களும்
வீராதி வீரர் எல்லாம் அரசனிடம்
விரைவில் வந்து சேரணுமாம்
என்றுசொல்லி பறையடித்தான் அந்த
ஏற்றபிள்ளை அந்நேரம்

இப்படியாக, பறையடித்த சத்தம்கேட்டு அங்குள்ள வீராதி வீரர் சூராதி சூரர் அவர் அவர்களுக்கு வேண்டிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு இரணியன் அரண்மனை முன்வர அப்போது இரணியனும் ஆயுதபாணிகள் அணிந்து வீரர்களை அழைத்துக் கொண்டு தெய்வலோகம் தேடிப் புறப்பட்டான்.

285 வாருனே இரணியன்தான் தேவர்
வாழும்தெய்வ லோகம்தேடி
மீசையது துடித்திடுமாம் அவன்
மேனியது நடுங்கிடுமாம்
செந்தாமரை போல் உற்ற முகம்
290 செந்தணல்போல் எரிந்திடுமாம்
கண்ணில் நெருப்புப் பொறிபறக்க அங்கே
கடியகோபம் கொண்டுவாருன்
ஊருநல்ல பதிகடந்து நல்ல
உற்றபிள்ளை வாறநேரம்
295 நாடுநல்ல நகரம்விட்டு அவன்
நடுவனமே தேடிவாருன்

---

276. ஆணுவமுள்ள-ஆணவமுள்ள, ஆண்மையுள்ள, வீரமுள்ள.
282. சேரணுமாம்-சேரவேண்டுமாம்.
296-297. இடைஉரை: பலவகைத் தடிகள் கூறப்பெறுகின்றன.

அந்த இரணியனுனவன் தெய்வலோகம் தேடி ஆங்கார கோபத்துடன் வரும் நேரம் அன்னவனுடைய சேனைகள் எவ்வாருக வாறதானுல் யானை குதிரை ஒட்டகையின்மேல் வாள் பிடித்த மன்னரும் வில்பிடித்த அரக்கரும் ஈட்டிபிடித்த சூரனும் குறுந்தடி குண்டாந்தடி சுக்குமாந்தடி கரத்தில் பிடித்து

காடுசெடி தாண்டியல்லோ அவர்
கடுநடையாய் வாருரங்கே
அடந்தவனம் தான்தாண்டி அப்போ
300 அரக்கர்படை வாறதய்யா
சில்லென்று பூத்தவனம் நல்ல
சிறுவனமும் தாண்டியல்லோ
சந்தனச் சோலைகளும் அவர்
தான்கடந்து வாருரங்கே
305 மயிலுடனே குயில்கள்வாழும் நல்ல
மாஞ்சோலை தான்கடந்து
அன்னமது விளையாடும் அந்த
அடந்தவனம் கடந்துவாருர்

(இரணியன் படைவருதலை அறிந்த நாரதன் எதிர்வருதல்)

இப்படிப்பட்ட வனங்களெல்லாம் கடந்து அரக்கர்கள் படை வாறநேரம் அவர்கள் வரும் ஆடாம்பிர சத்தமானது கோடையிடி போல் முழங்கவும் அந்த சத்தம்கேட்டு நாரதன் இரணியன்படை என்று அறிந்து விரைவுடன் புறப்பட்டு எதிர்வந்து இரணியனைக் கண்டு

வாரும்பிள்ளாய் இரணியனே நீ
310 வருவதென்ன வனமதிலே
செந்தாமரை போன்றமுகம் இப்போ
செந்தணலால் கருகுவதேன்
கண்ணில்புகை தானெழும்ப நீர்
கடியகோபம் கொள்வதென்ன
315 மீசையது தான்துடிக்க உந்தன்
மேனியது நடுங்குவதேன்

299–308. 'வனம்' இவ்வாறே எல்லா இடத்தும் வருணிக்கப்படுதல் ஓர் பொதுமரபு.

308-309. இடைஉரை : ஆடாம்பிர-ஆடம்பர, ஆரவார.

(இந்திரன் அளகாபுரியில் புரிந்த கொடுமைகளை இரணியன் நாரதனிடம் கூறுதல்)

என்று நாரதன் கேள்க்க அவ்வார்த்தை கேட்ட இரணியன் ஏது சொல்வானானால் தெய்வலோகம் வாழும் இந்திரன் என் இருப்பிடம் வந்து நான் சிறையில் வைத்த தேவர்களை சிறைமீட்டியதும் அல்லாமல் என் மனவியையும் சிறைஎடுத்துச் சென்றானும் ஆகையால் அவன் வல்லமை என்னவென்று அறியவேணும் என்று போகிறேன் என்றுசொல்ல அதைக்கேட்ட நாரதன் ஏது சொல்வானானால்

கோபமதை தானடக்கும் நல்ல
குணமுடைய இரணியனே
இந்திரலோகம் வாழுகின்ற அந்த
320 இந்திரனும் வந்தல்லவோ
தேவர்தனை சிறைமீட்டி அவன்
சென்றாலும் குற்றமல்ல
அரக்கர்களை சிறையில்வைத்து பெரும்
அநியாயம் செய்யலாமா
325 பெண்ணைச்சிறை எடுக்கலாமா அந்த
பேடியான இந்திரனும்
தாரையால் சந்திரன்பட்ட பெரும்
சங்கடங்கள் அறியாமல்

(கயாது தன்னிடம் இருப்பதும் பாலகன் பிறந்ததும் நாரதன் தெரிவித்தல்)

வாரும் இரணியனே பின்வரும் விதியறியாமல் உன் தர்ம பத்தினியாகிய கயாதை தூக்கிவரும்போது நான்கண்டு தடுத்து என் ஆசிர்மத்தில் அமரவைத்து இருக்கிறேன் இப்போது கயாது பத்துமாதம் சென்று பாலகனைப் பெற்றெடுத்தாள் அந்த பாலகனுக்கும் கயாதுக்கும் தேவகன்னிகளை ஏவல் செய்யவைத்து பாது காத்தேன் என்று நாரதன் சொல்ல, அதைக்கேட்ட இரணியன் நாரதனை நமஸ்கரித்து அன்னவர் ஆசிர்மம் வந்து

(இரணியன் மனைவியையும், மைந்தனையும் காணுதல்)

கண்டானே இரணியனும் தன்
530 கண்மணியுடன் மனவியையும்
ஆனந்தம் கொண்டல்லவோ அந்த
அழகுபிள்ளை ஏதுசொல்வான்

327-328. தேவகுருவாகிய பிருகஸ்பதியின் மனைவி தாரை. இவளைச் சந்திரன் கவர்ந்து கொண்டானாக, அதனால் ஏற்பட்ட துன்பங்கள் இங்கே குறிக்கப் பெறுகின்றன.

நாரதனே தான்பார்த்து அப்போ
நலமுடனே ஏதுசொல்வான்
335 மைந்தனையும் மங்கையுடன் என்
மனைக்குஅனுப்ப வேண்டுமென்முன்

வாருமய்யா நாரதனே கயாதையும் பாலகனையும்ஆசீர்வதித்து என் அரண்மனைக்கு அனுப்பவேண்டும் என்றுசொல்ல அப்போது நாரதன் இரணியன் மனவியையும் பிரகலாதனையும் ஆசீர்வதித்து அனுப்ப அப்போது இரணியன் என்ன செய்தான் ஆனல்

அப்போது இரணியனும் அந்த
அழகுபிள்ளை ஏதுசெய்தான்
அய்நூறு அரக்கரைத்தான் அப்போ
340 அழைத்தானே இரணியனும்
மனவியுடன் மகன்தன்னையும் நமது
மனைக்கழைத்து போங்களென்று
பாலகனைத் தான்தூக்கி அவன்
பாசம் கொண்டு முத்தமிட்டு
345 கலிதீர்க்க வந்த எந்தன் நல்ல
கண்மணியே என்று சொல்லி
வாய்குளிர முத்தமிட்டு அந்த
மங்கையவள் கையில் கொடுத்து

(மனைவி, மைந்தனை அளகாபுரி அனுப்பிவிட்டு இரணியன் தேவருலகம் செல்லுதல்)

வாடி பெண்ணே கயாது பாலகனுடன் நமது அரண்மனைக்கு செல்லுங்கள் நான் தேவலோகம் சென்று சிறைக்கு சிறை பிடித்து வருகிறேன் என்று இரணியன் சொல்ல அப்போது பெண் கொடியாள் ஏது சொல்வாள் ஆனல்

என்கணவா மன்னவரே இப்போ
350 என்னைவிட்டு போகலாமா
பொல்லாத தெய்வேந்திரன் நீர்
போகவேண்டாம் தேவலோகம்
என்றுசொன்ன வேளைதன்னில் அப்போ
ஏதுசொல்வான் இரணியன்தான்
355 வாடிபெண்ணே கண்மணியே ஒரு
வார்த்தையது சொல்லக்கேளு
ஈரேழு உலகும் சேர்ந்தாலும் இப்போ
என்னை வெல்ல முடியாதடி

வாடி பெண் கொடியே உன்கணவன் சாகாவரம் பெற்று சகல தேவர்களையும் அடக்கி ஒடிக்கி நசிக்கி ஆளும் வல்லமை பெற்று வந்திருக்கிறேன் நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சாது அரண்மனை செல் லுங்கள் நான் சென்று தேவர் முதல் தேவேந்திரனையும் இழுத்து வருகிறேன் என்று சொல்லி இரணியன் நடக்க அப்போது பெண் கொடியாளும் பிள்ளையும் எங்கு வாருர் ஆனுல்

அளகாபுரி தன்னைத் தேடி அவர்
360 அன்புடனே வந்தல்லவோ
அரண்மனை தன்னில் வந்து அப்போ
அமர்ந்திருக்கும் வேளை தனில்
பார்த்தாளே கயாது மங்கை அந்த
பாலனுக்கு ஏதுசெய்தாள்
365 தங்கத்தாலே தொட்டிலதும் நல்ல
தனிமாணிக்க தோரணமாம்
பொன்னுலே பதுமைகளும் அவள்
பிரியமுடன் செய்தல்லவோ
மைந்தன்தான் விளையாட நல்ல
370 மாணிக்கத்தேர் உண்டுபண்ணி

(இரணியன் படைகண்டு தேவர்கள் சிதறி ஓடுதல்)

இப்படியாக அந்த பாலகனுக்கு செய்து அன்புடன் வளக்கும் நாளில் அரசன் மனவி அரண்மனை வந்ததை அறிந்த அடுத்த வீட்டு மங்கைகள் பாலகனைப் பார்க்கவேணும் என்று காணிக்கை கர்ப்பத் துடன் வந்து பாலகனை எடுத்து முத்தமிட்டு நெத்தியில் பொட்டு இட்டு ஆலாந்தி எடுத்துச் செல்ல அவர்களுக்கு இரணியன் மனவி தாம் பூலம் கொடுக்கவும் இப்படி இருக்கும் போது

இரணியனும் படையுடனே அப்போ
ஏகிவாருன் தெய்வலோகம்
அசுரபடை வாறதுதான் அங்கே
அலறுதய்யா தெய்வலோகம்
375 பார்த்தார்கள் தேவரெல்லாம் நல்ல
படுபாவி வாறதைத்தான்

358-359 : இடை உரை : ஓடிக்கி-ஒடுக்கி. நசிக்கி-நசுக்கி

370-371 : இடை உரை :பிறந்த குழந்தையை அயலவர் காண வருகையில் காணிக்கை (அன்பளிப்பு, மொய்) தரும் வழக்கமும் 'ஆலாத்தி' எடுத்துக் கண் ணேறு கழிக்கும் வழக்கமும் வந்தவர்க்குத் தாம்பூலம் வழங்குதலும் இங்கு குறிக்கப் பெறுகின்றன. ஆலாத்தி-ஆரதி, ஆரத்தி. பேச்சு வழக்கில் 'ஆலாத்தி' எனவும் வழங்கும்.

கண்டவுடன் தேவரெல்லாம் அங்கே
கால்பதறி ஓடிவாருர்

இரணியன் வாறதை அறிந்து தேவர்கள் கால்பதறி கைபதறி நாவுளறி இந்திரன் முன்சென்று இரணியன் வருவதை சொல்லி வாய்மூடு முன் இரணியனும் அவன் படைகளும் கொலு மண்டபம் வந்து என்ன செய்தார் ஆனுல்

(தேவருலகில் இரணியனின் கொடுஞ் செயல்கள்)

தேவர்களை தான்பிடித்து அவர்
380 சேர்த்து சேர்த்து கட்டலுற்ருர்
நடனமாடும் மாதர் தன்னை அவர்
நலமுடனே விரட்டிவிட்டார்
இந்திரனும் தன் கொலுவில் அப்போ
இருக்கும் நல்ல வேளையதில்
385 எட்டிநல்ல பிடித்தல்லவோ அவனை
இழுக்கலுற்ருன் இரணியனும்
பூமிதன்னில் போட்டிழுக்க நல்ல
பூமாதேவி மனம்வருந்தி
அழிவுவரும் காலமதில் இங்கே
398 யாபேரையும் மதியாரென்ருள்
அடித்துத் தள்ளி இந்திரன் விழ அப்போ
ஆதிசேடன் மனம் கலங்க
கேடுவரும் காலத்திலே இங்கே
கேள்ப்பவர்கள் ஆருமல்ல

(இந்திரன் முதல் தேவர்களை இழுத்துவந்து அளகாபுரி சேர்ந்து அனைவருக்கும் தண்டனை அளித்தல்)

அந்த இரணியன் இந்திரன் முதல் தேவர்களையும் செய்த இம்சை தாங்க முடியாமல் பூமாதேவியும் ஆதிசேடனும் மனம் வருந்தி என்ன செய்வோம் என்று இருக்கும் போது இரணியன் தேவர்களையும் முனிவர்களையும் இந்திரனையும் கட்டி இழுத்துக் கொண்டு தேவலோகம் விட்டு தான் வாழும் அளகாபுரி தேடி என்ன விதமாக வாருன் ஆனுல்

395 செயம் செயம் என்றல்லவோ நல்ல
செயபேரிகை தான் முழங்க
ஆடல்பாடல் கெவுர்தையுடன் அங்கே
அழகுபிள்ளை வாருனப்போ

394. கேள்ப்பவர்கள்-கேட்பவர்கள். ஆருமல்ல-ஆருமில்லை.
397. கெவுர்தை-கர்வம், கருவம், செருக்கு.

தேவர்சிறை பிடித்தல்லவோ — அவன்
400 தீரமுடன் வாருனங்கே
இந்திரனை விலங்கிலிட்டு — அப்போ
இழுத்துவாருன் இரணியனும்
அரண்மனையில் வந்தல்லவோ — அவர்
அன்புடனே சேர்ந்தல்லவோ

அந்த இரணியன் அரண்மனையில் வந்துசேர்ந்து தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் என்னவேலை கொடுத்தான் என்ருல்

405 வாய்வுதேவன் நிலம்பெருக்க — நல்ல
வர்ணன்சாணம் தான்தெளிக்க
அக்கினி பகவான்தான் — அங்கே
அடுப்பூதி சமைத்திடவும்
நந்தவனம் தன்னதற்கு — அங்கே
410 நல்லநீர்தான் வார்ப்பதற்கு
இந்திரனும் வானவரும் — நல்ல
இன்பமுள்ள தேவர்களும்

இப்படியாக, தேவேந்திரன்முதல் யாபேர்க்கும் தண்டனையாகிய வேலை கொடுத்ததுமல்லாமல் மேலும் என்ன செய்வானுனல்

(தேவர்கள் பெருந்துயர் அடைதல்)

அரக்கர்களைத் தான்அழைத்து — அவன்
அன்புடனே ஏதுசொல்வான்
415 ரதசாலை திறக்கச்சொல்வான் — நல்ல
தேவர்களை வரவழைப்பான்
புரவிகள்க்குப் பதிலாக — தேவரை
பூட்டுவானும் ரதமதிலே
ரதத்தின்மேல்தான் ஏறி — அவன்
420 நடத்துவானும் ரதமதைத்தான்
தேவர்ரதம் தானிழுக்க — பாவி
திட்டியவன் அடிக்கிறதும்
அடித்தஅடி பொறுக்காமல் — அரி
என்றுசொன்ன தேவரைத்தான்

---

405. வாய்வுதேவன்-வாயுதேவன். 406. வர்ணன் - வருணதேவன். அவரவர்களுக்குப் பொருத்தமான பணி ஏவுதல் காணலாம்.

417. புரவிகள்க்கு-புரவிகளுக்கு.

பார்த்தான் இரணியன் ரதத்தைவிட்டுக் கீழே இறங்கி அரி என்ற நாமம் சொன்னவன் யார் என்று சவுக்கால் அடிக்க அப் போது ஒருவர் நான்தான் என்று சொல்ல உடனே அவனை கட்ட விழ்த்து என்ன செய்தான் ஆனல்

425 ஆரடவா ராச்சதனே இவனை
அழைத்துச்சென்று இப்பொழுது
அரிஎன்று சொன்ன வாயில் நல்ல
ஆட்டிறச்சி ஊட்டிடுங்கள்
மதுமாம்சம் கொடுத்திடுங்கள் அந்த
430 மாயன் நாமம் சொன்னபேர்க்கு

(அளகாபுரியில் கல்வி தொடங்கும் முறை)

இப்படியாக, தேவர்களை இடுக்கம் செய்து வாறநாளில் தேவர்கள் கண்ணீர் திருப்பால் கடல்நிறைய அதை அறிந்தமாயன் வரும்காலம் எதிர்பார்க்க அதை அறியாத இரணியன் தனது அளகாபுரியில் உள்ள பள்ளிக்கூடத்தில் எவ்விதம் பாடம் சொல் லிக் கொடுக்கும்படி திட்டம் செய்தான் என்றால் இரணியா நமோ வென்று சொல்லவேணும் என்று சொல்ல அப்படியே நடந்து வரும் நாளில்

(பிரகலாதனுக்குக் கல்விகற்பிக்க ஏற்பாடுசெய்தல்)

இப்படியாக இருக்கும்போது அந்த
இன்பமுள்ள பிரகுலாதனுக்கு
ஐந்துநல்ல வயதாச்சே நல்ல
அழகுடைய பாலனுக்கு
435 பார்த்தானே இரணியன்தான் அந்த
பாலகனைப் படிக்கவைக்க
ஈழப்பனை ஓலைதன்னை அப்போ
எடுத்துமகன் கையில்கொடுத்தான்
மகன்தன்னை அழைத்தல்லவோ அந்த
440 மன்னனுமே தானடந்தான்
பள்ளிக்கூடம் தன்னில்வந்து அப்போ
படியேறி உள்புகுந்தான்

425. ராச்சதன்-ராட்சசன்.

437. ஈழப்பனை-கள் இறக்கப் பயன்படும் ஆண்பனை. (ஈழம்—கள்) இது 'அலவரைப்பனை' எனவும் வழங்கும்.

440. இரணியன்தானே மைந்தனை அழைத்துவந்து பள்ளியில் சேர்ப்பதாகக் கூறுதல்.

அந்த இரணியனுகப்பட்டவன் பள்ளிக்கூடத்தில் புகுந்து படித்துக் கொடுக்கும் குருபரனை அழைத்து என்மகன் பிரகலாத னுக்கு கல்விபுகட்டவேணும் என்று சொல்ல அப்படியே நல்ல தென்று குருவானவர் என்னசெய்தார் ஆனல்

(குருவானவர் இரணியா நமோ எனக் கூறிப் பாடம் தொடங்குதல்)

ஈழப்பனை ஓலைதன்னை — அவர்
இருபிளவாய் தான்வகுந்து
445 கொண்டைஏடு தானும்சேர்த்து — நல்ல
குண்டெழுத்தாணி தானெடுத்து
இரணியா நமோவென்று — அவர்
இன்பமுடன் தானெழுதி
பாலகனை அருகழைத்து — அப்போ
450 பாங்குடனே ஏதுசொல்வார்
இரண்யாநமோ என்றல்லவோ — அவர்
இன்பமுடன் சொன்னபோது

(பிரகலாதன் அதனை மறுத்து அரிஓம் நமோ எனல்)

பார்த்தான் பிரகலாதன் இரணியா நமோ என்ற சத்தம் கேள்க்கவும் இருகாதும் தன்கரத்தால் மூடிக்கொண்டு அரிஓம் நமோ என்று திருவாய் மலர்ந்தருள அதைக்கேட்டு குருவானவர் வாரும்பிள்ளாய் பிரகலாதா அரிஓம் என்ற சொல்லை உன்தந்தை அறிந்தால் ஆக்கினை செய்வார் ஆகையால்

(குருவின் அறிவுரை)

இரண்யாஎன்ற சொல்தனக்கு — நீ
எதிர்வார்த்தை சொல்லாதே
455 தந்தை நாமம் தான்தவர — இந்த
தாரணியில் ஒன்றுமல்ல
எல்லோர்க்கும் தெய்வமாக — அவர்
இருக்குகிறார் வரங்கள்பெற்று
இரணியா நமோ வென்று சொல்லி — இங்கே
460 எல்லோரும் வாழ்ந்துவாரூர்
பகையாளி நாமம்மதை — சிறு
பாலகனே சொல்லாதே

---

445. கொண்டை ஏடு–சுவடியின் மேலாக அமையும் முதல் ஏடு.

452 453. இடைஉரை : பிரகலாதன் அரிநாமம் சொல்லுதல் 'திருவாய் மலர்ந்தருள' எனச் சிறப்பிக்கப்படுகிறது. ஆக்கினை-தண்டனை.

455. தான்தவர - தான்தவிர. 456. ஒன்றுமல்ல–ஒன்றுமில்லை.

என்று குருபரன் சொல்ல அந்த வார்த்தைகேட்ட பிரகலாதன் என்ன சொல்வான் ஆனுல் என் தந்தையை தெய்வமாக வணங்கும்படி சொல்வது தகுமா. சகல புவன ரச்சகனை வைகுண்ட வாசகன் என் இருதயத்தில் இருக்க மற்ற எந்த தெய்வமும் என் நாவில் உதிக்காது. அரிஓம் என்ற வாக்கியத்துக்கு வேறொன்றும் நிகரில்லை என்று சொன்ஞன்.

அந்தநல்ல வார்த்தைகேட்டு அப்போ
அழகுபிள்ளை குருபரன்தான்
465 வாடாபாலா பிரகலாதா என்
வார்த்தையது சொல்லக்கேளு
தந்தைசொல்மிக்க மந்திரமுண்டோ நீ
தானும் மறுத்துப் பேசலாமா
இரணியா நமோவென்று சொல்வாயானுல் நீ
470 ஈரேழுலகம் ஆண்டிடலாம்
பகையாளி பேரைச்சொல்லி நீதான்
படித்திடவும் முடியாதப்பா

வாரும் பிள்ளாய் பாலகனே உன் தந்தை அருந்தவம் செய்து சாகாத வரம் பெற்று ஆயிரத்தெட்டு அண்டமும் எரநூத்தி இருபத்தி நான்ங்கு புவனமும் சத்த காகரம் ஈரேழு பதிஞலு உலகமும் எறும்பு முதல் யானை வரைக்கும் அதிபதி என்பதை நீ அறியாமல் பேசுகிருய். இன்று முதல் நம் குலத்திற்கு விரோதியான அந்த மாயனை உன்மனதில் நினையாது உன் தந்தையாகிய இரணியா நமோவென்ற நாமத்தைச் சொல் என்று குருபரன் சொல்ல, பார்த்தான் பிரகலாதன், வாரும் குருபரனே

(பிரகலாதன் மாயோன் பெயரன்றி மற்ருேர் பெயர் உரைப்பதில்லை என மறுத்தல்)

பரந்தாமன் தன்னையன்றி பாரில்
வரந்தான்தரும் தெய்வமுண்டோ
475 மாயனவர் திருஉள்ளம்போல் எங்கும்
மற்றவர்கள் உண்டோசொல்லும்
ஆகையினுல் என்குருவே சிறு
அடியேன் சொல்லும்வார்த்தைகேளும்
அரிஎன்ற வாக்கியத்தை அடியேன்
480 அழித்துச் சொல்லப் போறதல்ல

472-473. இடைஉரை : எரநூத்தி இருபத்தி நான்ங்கு - இருநூற்று இருபத்து நான்கு, சத்த-சப்த (ஏழு) அண்டங்கள் 1008; புவனங்கள் 224; கடல்கள் 7; உலகம் 14; எனும் குறிப்புகள் காணலாம்.

வாரும் குருபரனே நான் சொல்லும் அரியாகப்பட்டவர் நீல மேக சாமளரூபன் சங்குசக்கர கோதண்ட முடையவர் துஸ்ட நிர்க்கரக சிஸ்ட பரிபாலனன் சகல புவன ரச்சகன் அகிலமெல்லாம் ஓரடியாய் அளந்தவன் எங்கும் நிறைந்தவன் என் இருதயத்தை கொள்ளை கொண்டிருக்கும்போது மற்ற தெய்வங்களை வணங்கேன் என்று பிரகலாதன் சொல்ல அதைக் கேட்டு குருபரன் என்ன சொல்வார். ஆனால்

(குருவானவர் மேலும் அறிவுரை கூறுதல்)

பகையாளி நாமமதை சிறு
பாலகாநீ சொல்வதாலே
உந்தன் தந்தை காதில்கேட்டால் நல்ல
உத்தமனும் கோபம் கொள்வார்
485 அரிஎன்ற சொல்லை நீதான் இப்போ
அப்புறமே தள்ளிவிடு
இரணியா நமோவென்று நீயும்
இன்பமுடன் சொல்வாயென்றார்

(அந்நேரம் இரணியன் வரவும் குரு பாலகனின் செய்தியை அறிவித்தல்)

வாரும் பிள்ளாய் பிரகலாதா உன் தந்தை திருநாமத்தைச் சொல் என்று சொல்ல அந்த பாலகன் அரிஓம் நமோவென்று சொல்லும் நேரம் இரணியன் பள்ளியில் வந்து பாலகனைப்பார்க்க வரவும் கண்டார் குருவானவர் அரசனை நமஸ்கரித்து தங்களுடைய புத்திரன் தங்கள் திருநாமம் ஒருபோதும் சொல்ல முடியாதென்று அரி என்ற நாமம் அனுதினமும் சொல்லிவருகிறான் என்றுசொல்ல அதைக்கேட்ட இரணியன் பாலகனை அழைத்து

(இரணியன், மைந்தனுக்கு அறிவுரை கூறுதல்)

வாரும்பிள்ளாய் பாலகனே எந்தன்
490 வார்த்தை ஒன்று சொல்லக்கேளு
நமதுகுலமதற்கு பகைவனல்லோ அந்த
நாசகால கோபாலன்
பகைவன்திரு நாமம்தன்னையுந்தான் என்
பாலகனே சொல்லலாமா

480-481. இடைஉரை : துஸ்ட நிர்க்கரக சிஸ்ட பரிபாலனன் -துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனன். தீயோரை அழித்து நல்லோரைக் காத்தல்.

495 அரிஎன்று சொல்லாதே — எந்தன்
அருமையுள்ள பாலகனே
இரணியா நமோவென்று — உன்
இருதயத்தில் துதித்திடுவாய்

என்று இரணியன் சொல்ல அந்தவார்த்தைகேட்டு பாலகன் என்ன சொல்வான் ஆனால்

(மைந்தனின் மறுப்புரை)

மாயன்துதி செய்தவாயால் — நான்
500 மற்றதுதி செய்வேனோ
பெருமாள் நாமம் சொன்னவாயால் — நான்
பெற்றோர் நாமம் சொல்லுவேனோ
திருமால் பாதம் பணிந்த கரம் — ஒரு
திருடர்பாதம் பணியுமோதான்
505 தாயுமவர் தகப்பனவர் — எந்தன்
சர்க்குருவும் மாயனல்லோ
பொன்னுமவர் பொருளுமவர் — நல்ல
பேரானந்த தெய்வமவர்
மாயன்பாதம் தனைதவர — நான்
510 மற்றோரை பணிவதில்லை

என்று அந்த பாலகன் சொல்ல அதைகேட்ட இரணியன் ஆங்கார கோபம்கொண்டு பாலகனை அதட்டி இரணியாநமோ வென்று சொல்ல அதைக்கேட்ட பிரகலாதன் அரி என்ற வார்த்தை மீறி ஆரையும் துதியேன் என்றுசொல்ல, பார்த்தான் இரணியன்

(இரணியன் சினம்கொண்டு கூறுதலும் மைந்தன் மீண்டும் மறுத்தலும்)

ஏதடவா சிறுபயலே — நீதான்
எந்தன் நாமம் சொல்லாவிட்டால்
சித்திரவதை செய்வேனென்று — அந்த
தீரனுமே சொல்லும்போது
515 பார்த்தானே பாலகன்தான் — நல்ல
பாதகனின் திருமுகத்தை
ஆலையில் என்னை போட்டாலும் — அந்த
அரிநாமம் நான்மறவேன்

---

502. 'பெற்றோர்' இவ்வாறு இயல்பாக எழுத்துப்படியில் அமைந்துள்ளது,
510. 'மற்றோரை' என்பதும் அவ்வாறே,

செக்கில் போட்டு ஆட்டினுலும் என்
520 திருமாலே நான்மறவேன்

(இரணியன் மைந்தனே மலையுச்சியினின்றும் உருட்டிவிடக் கட்டளை இடுதல்)

என்று பிரக்குலாதன் சொன்ன வார்த்தைகளை கேட்டு கோபம் கொண்டு அழைத்தான் குலையாளிகளை. அழைத்து இச் சணமே கொண்டு உயர்ந்த மலை உச்சியில் இருந்து உருட்டிக் கொன்று விடுங்கள் என்று சொல்ல உடனே குலையாளிகள் பாலகனை அழைத்து, மலையடி தேடி வாற நேரம் குலையாளிகள் என்ன சொல்வார் ஆனுல்

வாருமய்யா இளவரசே எங்கள்
வார்த்தையது சொல்லக்கேளும்
தந்தை நாமமதை சொல்லியல்லோ இந்த
தாரணியில் வாழலாமே
525. தாய்தந்தை குரு தெய்வம் என்பதைத்
தானும் நீதான் அறியாமல்
பகையாளி பேரைச் சொல்லி நீதான்
பரதவித்து மாளலாமா
இரணியா நமோவென்று சொன்னுல் நீ
530. ஈரேழுலகம் ஆளலாமே
செங்கோல் பிடிக்கலாமே இந்த
தேசமதை ஆளலாமே.

என்று குலையாளிகள் சொல்ல அதை அறிந்த பிரக்குலாதன் என்ன சொல்வான் ஆனுல் தாயேது தந்தை ஏது தமையன் ஏது உறவுமுறையோ ரேது சகலமும் அந்த அரி ஓம் என்பதுக்குள் அடக்கம் ஆதலால் ஆறிலும் சாவுதான் நூறிலும் சாவுதான் என் தந்தை சொல்படி என்னை தள்ளுங்கள் என்று சொல்ல பார்த்தார் குலையாளிகள்

உயர்ந்தநல்ல மலையதிலே அங்கே
உச்சியதில் கொண்டுசென்று
535 நாலுபேர்கள் தான் தூக்கி பாலனே
நலமுடனே வீசலுற்ருர்

---

520-521. இடை உரை: குலையாளிகளை-கொலையாளிகளை. இச்சணமே-இக்கணமே.

528. பரதவித்து - பரிதவித்து.

வீசியவர் எறியும்போது பாலன்
விமலன் தன்னை தான்துதித்தான்
வைகுண்ட வாசகனை அவன்
450 மனதினிலே துதித்திடவும்
ஆயன்நல்ல பெருமாளும் மலை
அடிவாரத்தில் வந்தல்லவோ

(மாயன் அருளால் பிரகலாதன் உயிர்பிழைத்தல்)

அந்த குலையாளிகள் வீசிய பாலகன் மாயன் பெருமாளை நினைக்கவும், திருமால் என்ன செய்தார் ஆனால் மலைஅடிவாரத்தில் வந்து பாலகன் கீழேவிழாமல் தன் கரத்தால் பிடித்து பூமியில் வைத்து விட்டு மறையவும் மலையில் நின்ற குலையாளிகள் இறங்கிப் பார்க்கும்போது

கண்டாரே பாலகனை அந்த
கட்டழகர் குலையாளிகள்
545 ஏதடவா அண்ணமாரே நாம்
எறிந்தோம் இந்தபாலகனை
உருட்டிவிட்ட பாலகன்தான் இப்போ
உயிருடனே இருப்பதென்னே
கண்ணன்பாதம் நம்பினோரை அவர்
550 கைவிடமாட்டார் என்று எண்ணி
சிறுவனோடு அவர்கள் கூடி மாயன்
திருநாமம் பாடலுற்றார்
அரிஎன்ற நாமம்பாடி நல்ல
அரண்மனைக்கு வந்துசேர்ந்தார்

(கொலையாளிகள் இரணியனிடம் செய்தி அறிவித்தல்)

இப்படியாக திருநாமம் சொல்லி அரண்மனை வந்து அரசனைக் கண்டு அய்யாவே பூபதியே நாங்கள் உமது பாலகனை மலை உச்சியில் இருந்துதள்ள அந்த பாலகன் மலையடிவாரத்தில் சந்தோசமாய் இருந்து அரி என்ற நாமம் பாடிக்கொண்டு இருந்தான் ஆகையால் அவனை எங்களால் கொல்ல முடியாது என்று சொல்ல பார்த்தான் இரணியன் என்ன செய்தான் ஆனால்

(மைந்தனைத் தன்வசப்படுத்த இரணியன் மீண்டும் முயலுதல்)

555 பார்த்தானே இரணியனும் அந்த
பாலகனின் திருமுகத்தை

545. அண்ணமாரே - அண்ணன்மாரே.

வாடாஅப்பா என்மகனே எந்தன்
வம்சமதில் மாணிக்கமே
பிள்ளைக்கலி தீர்க்கவந்த எங்கள்
560 பிரியமுள்ள தெள்ளமுதே
கண்ணே நவமணியே நல்ல
கருத்துடைய பாலகனே
பகையாளி நாமமதை எந்தன்
பாலகனே சொல்லாமல்
565 தந்தையுட நாமமதை நீதான்
தானேசொல்வாய் உந்தன்வாயால்

என் அருந்தவப்புதல்வனே என் ஆருயிர் செல்வனே உன்னுடைய பவழம்போல் வாய்திறந்து உன்மதுரமான வார்த்தையால் இரணியா நமோவென்று சொல்வாயானல் என் இருதயம் மகிழும் என்று இரணியன் சொல்ல பிரக்லாதன் ஏதுசொல்வான் ஆனல்

(மைந்தன் மீண்டும் மறுத்தல்)

தாயுமேது தந்தையேது நல்ல
தனயன்சுற்றத் தாருமேது
மாயன் எந்தன் உள்ளமதில் ஒரு
570 மறைபொருளாய் தானிருக்க
அரிஎன்ற சொல் தவறி நான்
அடுத்தவாக்கியம் சொல்லுவேனே
என்றுசொன்ன வேளையதில் அங்கு
ஏதுசெய்தான் இரணியன்தான்
575 அரிஎன்ற வார்த்தைசொல்லி நீயும்
அழியாதே பாலகனே
தந்தைவாக்கியம் சொல்லாவிட்டால் உன்னை
தானேவதை செய்யச்சொல்வேன்

என்று இரணியன் சொல்ல, பாலகன் என்னசொல்வான் ஆனல்

கழுவதிலே ஏற்றினலும் அந்த
580 கண்ணன்துதி நான்மறவேன்
சித்திரவதை செய்தாலும் ஆதி
திருமாலை நான்மறவேன்
கண்டதுண்ட மாக்கினலும் அந்த
கண்ணன்பாதம் மறப்பதில்லை

558. வம்சம் - வமிசம், குலமரபு. இதுவே வேறுசிலபாட்டுகளில் 'வங்கிஷம்' எனவும் வழங்கும்.

585 என்று அந்த பாலகன்தான் அங்கே
எடுத்துரைத்த வேளையதில்

(சினம் பொங்கிய இரணியன் யானையைக் கொண்டு
மைந்தனைக் கொல்லும்படி ஆணையிடுதல்)

அடே துரோகி என் பகைவனைப் பணியும் உன்னை இப்பொழுதே வதை செய்கிறேன் பார் என்று ஆரடா அரக்கா நமது யானைப்பாகனை அழைத்துவா வென்று சொல்ல உடனே யானைப் பாகனை அழைத்துவரவும் பார்த்தான் இரணியன் வாடா மாவுத்தனே இதோ நிற்கும் சண்டாளனை நமது அய்யாயிரம் யானைக்கு அதிகாரியாகிய அயிராவதத்தால் கொன்றுவிடு என்றுசொல்ல மாவுத்தன் பாலகனை அழைத்துச் செல்வதை அறிந்த கயாது என்ன செய்தாள் ஆனல்

(அன்னை கயாது இரணியனிடம் அழுதுபுலம்புதல்)

என்கணவா மன்னவரே நீங்கள்
இந்தமோசம் செய்யலாமா
அருந்தவப் பாலகனை இப்போ
590 யானைக்கிரை ஆக்கலாமா
பத்துமாதம் தான்சுமந்த இந்த
பாவிமனம் பதருதோ
வேண்டாமய்யா என்கணவா இப்போ
விட்டுவிடும் பாலகனை

என்று கயாது ஏங்கி அழுதுசொல்லஅதைக்கேட்ட இரணியன் என்னசொல்வான் ஆனல் நம் குலத்துக்கு விரோதியான அந்த மாயன் திருநாமம் சொல்லியவனை இவ்வுலகில் உயிருடன்வைப்பதா போடி என்று அவளை அடித்து தள்ள அந்த பெண்கொடியாள் ஓடி பாலனைத் தேடிவரும்போது யானைசாலையில் வந்துகண்டு மகனை மார்புடன் அணைத்து ஏது சொல்வாள் ஆனல்

(கயாது மைந்தனை அன்பால் வேண்டுதல்)

595 என்மகனே கண்மணியே நீ
எந்தன்வார்த்தை சொல்லக்கேளு
தாய்தந்தை பெயர்தான்சொல்ல இந்த
தாரணியில் பாலருண்டு

579-586. ஒரே கருத்து பலமுறை அடுக்கிவந்து அழுத்தம் பெறுதல் இப்பகுதியுள்ளும் காணலாம்,

அழியாத வரங்கள் பெற்று உலகில்
600 ஆளுகிறார் உந்தன் தந்தை
தேவர்க்கு அதிபதியை இப்போ
சிறையில்வைத்து ஆளுகிறார்
முப்பத்திமுக்கோடி தேவர்களும் தந்தை
முன்வந்து பணிந்திருக்க
605 தந்தைநாமம் சொல்லாமல் நீதான்
தானேவேறு சொல்லலாமா
பகைவன்பேர் சொல்லாதே எந்தன்
பாலகனே கண்மணியே

(பிரகலாதன் தாயின் அறிவுரையை மறுத்தல்)

என்று மாதாவானவள் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட பிரக்குலாதன் தாயைப்பார்த்து என்தாயே மாதாவே தந்தை அழியாத வரம் பெற்றார் என்றால் அரி என்பதை மறந்து அவர் நாமம் துதிப்பது தருமமா ஆளும் அயன் பிரம்மா விஷ்ணு மூன்று பேர்களும் ஒரே அங்கமல்லவா அவரிடம் வரம்பெற்று அவர் திரு நாமம் மறக்கலாமா. அதுவுமல்லாமல் அழியாதவரம் தந்தைக்குத் தானே அல்லது உனக்குண்டா நீ பெற்ற பாலனுக்குண்டா இல்லையே அழியாத வரத்தால் அவரடி மறந்தால் நாம் அழிவது உண்மைதானே ஆகையால்

(அன்னை கயாது அரற்றி அழுதல்)

மாயவன் தனைத்தவர நான்
610 மறுவார்த்தை சொல்லுவேனோ
என்றுபாலன் சொன்னபோது அப்போ
ஏதுசொல்வாள் பெண்கொடியாள்
மைந்தா உன்னை நான்வளர்த்து நான்
மதயானைக்கோ இரையிடுவேன்
615 கண்ணாக உனைவளர்த்து இந்த
காட்டானைக்கோ தாரைவார்ப்பேன்

(பிரகலாதன், பெற்றவளைத் தேற்றுதல்)

என்று அந்தமாதாவானவள் அழுதுபுலம்ப பார்த்தான் பாலகன் என்னைபெற்ற மாதாவே நீ மனம்நோக வேண்டாம் அகிலபுவனம் அளந்த அச்சுதன் ஆபத்பாந்தவன் அனாதரச்சகன் ஆலிலைமேல் பள்ளிகொண்டவன் வலக்கரத்தில் சக்கரம் கொண்ட வன் நீலமேக சாமளரூபன் என் உள்ளம் இருக்க நீ வருந்தவேண் டாம்.

என்தாயே மாதாவே நீதான்
எதற்குமனம் வருந்துவது
ஒன்றுக்கும் நீ அஞ்சாதே எந்தன்
620 உத்தமியே மாதாவே
அய்யாயிரம் யானைகளும் அந்த
அயிராவதமும் வந்தாலென்ன
மதம்பொழிந்து வந்தாலும் எந்தன்
மாதாவே அஞ்சாதே

என்தாயே இந்த ஆயிரம் யானையும் மதம் மீறிவந்தாலும் செந்தாமரைக் கண்ணன் திருக்கரத்தில் சங்கு சக்கரம் கோதண்டமுடைய ஆனந்தரூபனை அனுதினமும் பணியும் பாலகனை என்ன செய்ய முடியும்

(மாயன் திருவருளால் மைந்தன் பிழைத்திடுதல்)

625 சக்கரம் பிடித்தவனை நன்கு
தானேதினம் பணிவோனை
கானகத்து யானையது உந்தன்
கண்மணியை கொல்லுமோதான்
என்றுசொல்லி பாலகனும் அப்போ
630 ஏகலுற்றான் யானையிடம்
பாலன்தன்னை கண்டபோது நல்ல
பட்டத்து யானைமுதல்
அய்யாயிரம் யானைகளும் அப்போ
அவனடியைப் பணிந்திடுமாம்
635 பார்த்தானே மாவுத்தனும் சிறு
பாலகனின் திருமுகத்தை
அரிஎன்ற நாமமதை அந்த
ஆனைப்பாகன் சொல்லியல்லோ
பாலகனும் மாவுத்தனும் அப்போ
640 பாரளந்தோன் நாமம் சொல்லிவாரார்

(பாகர் இரணியனிடம் செய்தி அறிவித்தல்)

அப்போது யானைமாவுத்தன் பாலகனை அழைத்து இரணியன் முன்விட்டு ராசாதிராசனே இந்த பாலகனைக் கொல்ல நமது அய்யாயிரம் யானையாலும் முடியாது அரிஎன்றால் ஆனைகள்

624 - 625: இடை உரை: கண்ணன், திருமால், இராமன் ஆகிய அவதாரங்கள் ஒருங்கே கூறப் பெறுகின்றன.

அங்கம் நடுங்குகின்றன. ஆகையால் இவனைக்கொல்ல என்றால் முடியாது என்று சொல்ல இரணியன் கோபமீறி

(இரணியன் பாலகனை நெருப்பிலிட்டு நீற்றுங்கள் என ஆணையிடுதல்)

யாரடா சேவுகனே இங்கே
அவசரமாய் ஓடிவாடா
ஆயிரம் மரங்கள் வெட்டி கட்டை
அத்தனையும் தான்அடிக்கி
645 இந்தபாதகனை மேலேவைத்து நீங்கள்
ஏகமதாய் நெருப்பிடுங்கள்
தந்தைவாக்சியம் மறந்தவனை இப்போ
சாம்பலாய் நீத்திடுங்கள்

என்று இரணியன் சொல்ல அவ்வார்த்தை கேட்ட காவலர் மரம்வெட்டி அடிக்கி, பாலகனை அழைத்துச் சென்று என்ன சொல்வாரானால்

(காவலர் பிரகலாதனுக்கு அறிவுரை கூறுதல்)

வாருமய்யா இளவரசே ஒரு
650 வார்த்தையது சொல்லக்கேளும்
தந்தை நாமம் தன்னைச்சொல்லி இந்த
தாரணியை ஆளலாமே
பகைவன் நாமம் தன்னைச்சொல்லி இப்போ
பரதவித்து மாளலாமோ

வாரும்பிள்ளாய் இளவரசனே உன்தந்தை திருநாமம் சொல்லி அவனி ஐம்பத்தாறு தேசம் ஆளாமல் நமது குல துரோகியானவன் நாமம் சொல்லாதே என்று சொல்ல அப்போது அந்த பாலகன் ஏது சொல்வான் ஆனால்

(பிரகலாதன் முன்போலவே மறுத்துவிடுதல்)

655 வாருங்கள் காவலரே எந்தன்
வார்த்தையது சொல்லக் கேளும்
ஆக்கவல்லான் அழிக்கவல்லான் நமக்கு
அதிகவரம் கொடுக்கவல்லான்
நாராயணன் நாமம்விட்டு இந்த
660 நரன்பாதம் பணிவேனோ

---

641. சேவுகன் - சேவகன்
644. அடிக்கி - அடுக்கி
648. நீத்திடுங்கள் — நீற்றிவிடுங்கள்

வாருங்கள் காவலர்களே நீங்கள் இனக்கு புத்திசொல்ல வேண்டாம் உங்கள் ஆக்கினையை முடியுங்கள் என்று பிரகுலாதன் சொல்ல உடனே பாலகனைத் தூக்கி கட்டைமேல் வைத்து நெருப்பு மூட்டவும் அந்த அக்கினி என்ன விதமாய் எரியுதானால்

(மாயன் அருளால் நெருப்பும் குளிரவே மைந்தன் தீங்கின்றித் தப்பித்தல்)

எரியுதய்யா கட்டையது — அந்த
ஏமலோகம் புகைபடவே
எரியும்நல்ல அக்கினியில் — அங்கே
இருந்தபாலன் ஏதுசொல்வான்
665 மாயன்நல்ல பெருமாளை — அவன்
மனமதிலே துதித்திடவும்
ஆலிலையில் உதித்தமாயன் — நல்ல
அக்கினியை குளிரச்செய்தார்
எரிந்தநல்ல கட்டையது — அப்போ
670 ஏகமதாய் சாம்பலாச்சே
அக்கினியில் நடனமிட்டான் — நல்ல
அழகுடைய பாலகன்தான்

(காவலர்கள் இரணியனிடம் செய்தி தெரிவித்தல்)

அந்த ஐநூறு மரவிறகுகளும் எரிந்து சாம்பலாக அந்த பாலகன் என்ன செய்தான் ஆனால் அரிஓம் நமோ நாராயணா வென்று அனல் விட்டுவர அதை கண்டபேர்கள் எல்லாம் அரிஓம் என்று சொல்லி இரணியனிடம் வந்து அய்யாவே இந்த பாலகனைக் கொல்ல எங்களால் முடியாதென்று சொல்லிவிட்டார்.

(இரணியனும் கயாதுவும் மைந்தனுக்கு மேலும் அறிவுரை கூறவும் அதை அவன் உறுதியுடன் மறுத்தலும்)

அப்போது இரணியனும் — நல்ல
அழகுடைய பெண்கொடியும்
675 பாலகனை தான் அழைத்து — அப்போ
பாவினையாய் ஏதுசொல்வார்
கட்டிநல்ல கரும்பே எந்தன் — இரு
கண்ணிறைந்த ரத்தினமே

660-661: இடை உரை: இனக்கு-எனக்கு

தாரணியோர் தான்மகிழ — உந்தன்
680 தந்தை நாமம் சொல்வாயடா
என்று சொல்லும் வேளையதில் — அப்போ
ஏது சொல்வான் பாலகனும்
தந்தை நாமம் சொல்ல வேண்டாம் — இந்த
தரணிதனை யாளவேண்டாம்
685 பெற்றோர் நாமம் சொல்ல வேண்டாம் — இந்த
பூமியதில் வாழ வேண்டாம்
மாயன்திரு நாமம் சொல்லி — நான்
மாண்டாலும் மோச்சமுண்டு

(கோபம்மீறிய இரணியன் மகனைக் கொதிக்கும் நெய்யில் இடக் கட்டளையிடுதல்)

இப்படி சொல்லிய வார்த்தை கேட்டஇரணியனுக்கு ஆங்கார கோபமாகி வாருங்கள் அரக்கர்களே இந்த பாவியை கொண்டு ஆயிரம் கலம் நெய்யைக் கொதிக்க வைத்து அதில் இவனை தூக்கிப் போட்டு வேகவைத்து ஊருக்கு அப்புறமுள்ள உயந்த விருச்சத்தில் கட்டி காக்கை கழுகுக்கு இரை இடுங்கள் என்று சொல்ல அரக்கர் பாலனை அழைத்துச் செல்லும் போது.

(தாய் மீண்டு வந்து மகனை மனம் திரும்புமாறு கூறுதல்)

ஓடிவந்தாள் பெண்கொடியாள் — அந்த
690 உற்றபிள்ளை தன்னைக்கண்டு
என் மகனே கண்மணியே — இங்கே
எந்தன்கலி தீர்த்தவனே
பத்துமாதம் தான் சுமந்த — இந்த
பாவிமனம் பதறுதடா
695 தந்தை நாமம் சொல்லாவிட்டால் — நான்
சாவேனே உன்னோடு
உந்தனுக்கு முன்னாலே — இந்த
உத்தமியும் மடிந்திடுவேன்
அருமை மகன் உன்னை விட்டு — பாவி
700 ஆளணுமோ அரண்மனையில்
மைந்தனே உனை மறந்து — இந்த
வையகத்தில் இருக்கணுமோ

---

688. மோச்சமுண்டு-மோட்சம் உண்டு
688.-689. இடை உரை விருச்சத்தில்-விருட்சத்தில் (மரத்தில்)
700 ஆளணுமோ-ஆளவேண்டுமோ
702. இருக்கணுமோ-இருக்கவேண்டுமோ

(மாயன் அருள் இருக்க மயங்க வேண்டாம் என
மைந்தன் உறுதி கூறுதல்)

என்று அந்த கயாது கண்ணீர்விட்டு கதறி பதறி பூமியில் வீழ்ந்து மூர்ச்சையாக பார்த்தான் பாலன் அரிகரி வைகுண்டவாசகா ஏழைகள் சகாயா இது உன் திருவருளா வென்று தாயே நீ ஒன்றுக்கும் வருந்தவேண்டாம் அச்சுதன் அமரர் சகாயன் ஆபத்தில் காக்கும் பரந்தாமன் என் இருதயம் இருக்க எதற்காக வருந்த வேண்டும் கலங்காதே என்று காய்ந்து கொதிக்கும் நெய் பக்கம் போய் என்ன செய்தான் ஆனல்.

(கொதிக்கும் நெய்யும் கோபாலன் அருளால்குளிர்ச்சி அடைதல்)

அகிலமெல்லாம் அளந்தோனே எங்கள்
அச்சுதனே பெருமாளே
705 பால்கடலில் உதித்தோனே சிறு
பாலகனை கார்க்கவேணும்
பச்சைநிற மேனியோனே எங்கள்
பரந்தாமா சரணம் என்று
அரிநாமம் பாடிடவும் அதை
710 அறிந்த நல்ல காவலர்தான்
குழந்தை தன்னை தூக்கியவர் நெய்
கொப்பரையில் போடலுற்ருர்
பாலகனை போடும் போது ஆதி
பரந்தாமன் ஏதுசெய்தார்
715 கொதித்ததொரு நெய்யதைத்தான் நந்த
கோபாலன் குளிரவைத்தார்
பார்த்தானே பாலகன்தான் நல்ல
பகவான் திரு நாமம் சொல்லி
முங்குவானும் முழுகுவானும் திரு
720 மூர்த்தி நாமம் பாடுவானும்
அரிஓம் நமோ என்று சொல்லி அந்த
அழகு பிள்ளை வெளியே வந்தான்

(பாலகனுடன் சேர்ந்து அனைவரும் அரிநாமம் பாடுதல்)

இப்படியாக வந்ததை அறிந்த சகலரும் அரிஓம் நமோ நாராயணவென்று கூச்சலிட அந்த சத்தம் அறிந்த இரணியன் கோபம் கொண்டு இருக்க, பாலனேடு யாவரும் கூடி பகவத் கீதம் பாடி எப்படி வாருர் ஆனல்

(வேறு)

அரிஓம் நமோவென்று பாடிடுவோமே
அவர் திருநாமம் தன்னைச் சொல்லி மனமகிழ்வோமே (அரி)

அரனும் அயனும் அரி இல்லாத உலகமும் ஏது
அழியாத வரம் தந்தைக்குத்தான் வந்ததும் ஏது (அரி)

எங்கும் நிறைந்தமாயன் வந்தருள் செய்வார்
ஏது வந்தாலும் வரம் தந்தருள் செய்வார்
பங்கமில்லா நீலமேக சாமள ரூபன்
பாதமதை பணிந்து பாடிடுவோமே (அரி)

(செய்தியறிந்து சீறியெழுந்த இரணியன் ஆயிரம் பாம்புகளால் தீண்டும்படி செய்யுங்கள் என ஆணையிடுதல்)

இப்படியாக பிரக்குலாதனும் காவலர்களும் அரிபசனை பாடியதை அறிந்த இரணியன் கோபம் கொண்டு எல்லோரையும் அடித்து விரட்டி விட்டு பாலகனை என்ன செய்தான் ஆனால் ஆரடா சேவகா நம் ஊரில் உள்ள பாம்பாட்டிகளை அவரிடம் உள்ள நாகங்களைக் கொண்டு வரும்படியாகச் செய்யென்று சொல்ல அப்படியே சேவுகன் ஓடி பாம்பாட்டிகளை அழைக்க பாம்பாட்டிகள் என்ன விதமாய் வாறார் ஆனால்.

ஆயிரம் பாம்பாட்டி அந்த
அரசனைத்தேடி வாறபோது
725 அவர் அவர்கள் பாம்புகளை அப்போ
அன்புடனே கொண்டுவந்து
அரண்மனை வாசலிலே அவர்
அன்புடனே வந்தல்லவோ
அரசனை அடிபணிந்து அங்கே
730 ஆசாரமாய் நின்றபோது
பார்த்தானே இரணியன்தான் நல்ல
பாம்பாட்டி சித்தரைத்தான்
வாருங்கள் சித்தர்களே ஒரு
வார்த்தையது சொல்லக்கேளும்
735 தந்தைநாமம் சொல்லாத இந்த
தனையனைத்தான் இப்பொழுது
ஆயிரம் நாகத்தாலும் நீங்கள்
அவனுயிரை வாங்கிடுங்கள்

இப்படியாக இரணியன் சொல்ல அவ்வார்த்தை கேட்ட பாம்பாட்டிகள் பாலகனை அழைத்து நடுவேவிட்டு ஆயிரம் கூடைகளையும் சுற்றிவைத்து பாம்புகளை திறக்கப் போகும் சமயம் கயாது ஓடிவந்து என்னசெய்தாள் ஆனால்

(கயாது மீண்டும் வந்து மகனை வேண்டுதல்)

என்மகனே கண்மணியே — எந்தன்
740 இன்பமுள்ள பாலகனே
தாயாரை தனியேவிட்டு — நீதான்
சர்ப்பத்தாலே மாளணுமோ
மாதாவை தனியேவிட்டு — மகனே
மாளவிதி வந்ததடா
745 தந்தைதிரு நாமம் சொல்லி — மகனே
தரணியதை ஆளாமல்
விரோதியவன் பேரைச்சொல்லி — நீ
விசம்தீண்டி மாளணுமோ

என்று அந்த பெண்கொடியாள் சொல்லி ஏங்கிநிற்கும் வேளையில் பார்த்தார் பாம்பாட்டிகள் ஒன்றுபோல் பாம்பாட்டிகள் ஒன்று போல் பாம்புக் கூடைதிறந்து மகுடி ஊத நாகங்கள் எல்லாம் படம் தூக்கி ஆடுவதைக் கண்ட பெண் கொடியாள் என்ன செய்தாள் ஆனால்

(நாகங்கள்கண்டு நடுங்கிப் புலம்பிய தாயைப் பாலகன் மீண்டும் மறுத்தல்)

ஆடிய நாகமதை கண்டபோது — அவள்
750 அங்கமெல்லாம் தான்நடுங்கி
என்மகனே கண்மணியே — நீதான்
என்வார்த்தை சொல்லக்கேளு
நாகமதைக் கண்டபோது — இப்போ
நடுங்குதடா எந்தன் உடல்
755 தந்தைதிரு நாமமதை — நீதான்
தானுரைப்பாய் உந்தன்வாயால்

என் மகனே உன்தந்தை நாமம் சொல்லி தாரணியில் சுகமாக வாழலாம். ஒரு முறை சொல் என்று பெற்றதாய் கேள்க்க பிரகுலாதன் ஏதுசொல்வான் ஆனால்

---

742. மாளணுமோ-மாளவேண்டுமோ.
748. விசம்-விஷம்.

என்தாயே மாதாவே உனக்கு
என்னமதி வந்ததம்மா
பாம்புகண்டு நான்பயந்து தந்தை
7(0 பாதமதை பணிவேனே
அரவத்திற்கு நான்பயந்து நான்
அவர்நாமம் சொல்லுவேனே
மாயன்திரு நாமம்விட்டு பாலன்
மற்றநாமம் சொல்லுவேனே

என்தாயே மாதாவே அந்த கோபாலன் முன்னோர் சமயம் திருப்பால் கடலில் அனந்தன் என்னும் ஐந்துதலை நாகத்தின்மேல் ஆலிங்கனம் செய்தவர் என் அங்கத்தைக் கொள்ளை கொண்டிருக் கும்போது ஆயிரம் நாகமும் என்ன செய்யக்கூடும் என்று சொல்லி மறுபடியும் என்ன சொல்வான் ஆனால்

(பரந்தாமன் அருளால் பாம்புகள்யாவும் படம்மடக்கிப்
பாலகனைப் பணிதல்)

765 அனந்தன்மேல் சயனம்செய்யும் எங்கள்
ஆண்டவனை துதிப்போர்க்கு
ஆயிரம் நாகங்களும் இந்த
அடியேனைக்கொல்ல முடியுமோதான்
அரிஓம் என்ற நாமமது உலகில்
770 ஆரையும் கைவிட்டிடாது
ஆடியதோர் நாகமெல்லாம் எந்தன்
அரியுடைய படுக்கையல்லோ
அஞ்சாதே மாதாவே என்று
அன்புடனே ஏதுசெய்தான்
775 பாம்பின்பக்கம் செல்லுவானும் நல்ல
பாலகனும் அப்போது
பாலகனை கண்டபோது அந்த
பாம்புகளும் அப்பொழுது
சீறியதோர் படம்மடக்கி நல்ல
780 சிறியோன் பாதம் பணிந்திடுமாம்

(இதனை அறிந்த இரணியன் கயாதுவின் கையால்
பாலகனுக்கு நஞ்சு அளிக்கச் சொல்லுதல்)

அந்த ஆயிரம் பாம்புகளும் அரி என்ற வார்த்தைகேட்டு அகற்றி ஆடிய படத்தைக் கீழேபோட்டு, பாலன் அடிபணியவும் பார்த்தார் பாம்பு பிடாரர் இவனைக் கொல்ல எங்களால் முடி

772. படுக்கையல்லோ - படுக்கை அல்லவா.

யாது அரிகரி வைகுண்ட வாசகாவென்று இரணியன் முன்சொல்ல இரணியன் கோபம்மீறி அவர்களை அடித்துவிரட்டிவிட்டு உடன் விஷம் கொண்டு வரச்சொல்லி அந்த விஷத்தை பாலனைப் பெற்ற தாயார் கரத்தில் கொடுத்து என்ன சொல்வான் ஆனால்

வாடிபெண்ணே பெண்கொடியே — எந்தன்
மங்கையரே வார்த்தைகேளு
மாதம்பத்து தான்சுமந்து — நல்ல
மைந்தன் தன்னை பெற்றவளே
785 தந்தை வார்த்தை கேளாத — சிறு
தனயனைத்தான் பெற்றவளே
பால்கொடுத்த கரமதாலே — நல்ல
பாலகனுக்கு விஷம்கொடுப்பாய்
அன்னமது கொடுத்தவாயில் — இப்போ
790 அள்ளிவிஷம் ஊட்டிடுவாய்
என்றுசொல்லி இரணியன்தான் — அப்போ
ஏகலுற்றான் கொலுவதற்கு

(கலங்கித் தவித்த கயாது மைந்தனை மீண்டும் வேண்டுதல்)

பார்த்தாள் கயாது பாலகன் அருகேவந்து என் ஆருயிர் செல்வமே அன்பே உன்னை பத்துமாதமும் திங்களும் சுமந்து தீராத் துயர் கொண்டு பெற்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து இப்போது தந்தை நாமம் சொல்லாத தால் எத்தனையோ ஆக்கினை செய்தும் மேலும் என்கரத்தால் உன் வாயில் விஷம் ஊட்ட பாவிமனம் சகிக்குமா பாலகா தந்தை திரு நாமம் சொல் என்று சொல்ல பிரகுலாதன் என்ன சொல்வான் ஆனால்

(மாயன் அருளிருக்க மனம்கலங்காது தனக்கு நஞ்சு அளிக்குமாறு பாலகன் தாயை வேண்டுதல்)

என்தாயே மாதாவே — இப்போ
என்வார்த்தை சொல்லக்கேளு
795 எத்தனை இம்சையெல்லாம் — தந்தை
எந்தனையும் செய்துபார்த்தார்
அத்தன் திருவருளால் — எனக்கு
அத்தனையும் விலகலாச்சி

---

780-781. இடைஉரை : அகற்றி ஆடிய - விரித்து ஆடிய.

786-788. பெற்றவளைக் கொண்டே நஞ்சு ஊட்டிக் கொல்லுமாறு இரணியன் கூறுவதாகக் காட்டுதல் அவலத்தை மிகுவிப்பதாகும்.

இப்போது உன்கரத்தால் தந்தை
800 இனக்கு விஷம்கொடுக்கச்சொன்னுர்

ஆகையால் நீ மனம்வருந்தாது எனக்குக் கொடு. அந்த பரந்தாமன் நம்மை ரச்சிப்பார் என்று சொல்லி மேலும் என்ன சொல்லுகிறுன் ஆனுல்

ஆலகால விசமதைத்தான் ஈசன்
அள்ளிஅன்று உண்ணலியோ
அரவமது சயனங்கொண்ட ஆதி
திருமாலே பணிந்தோர்க்கு
805 கரமதிலே இருக்கும்விஷம் எந்தன்
கண்ணனின் திருவருளால்
மாயவன் திருவருளால் தாயே
மாருதா கொங்கைப்பாலாய்

(நாராயணன் அருளால் நஞ்சும் பாலாக மாறிடப் பாலன் பிழைத்ததை அறிந்த இரணியன் கூறுதல்)

என்று பாலகன் சொல்ல அந்த விஷமானது பாலாக மாறவும் மாதாவானவள் அரிஓம் என்று திருநாமம் சொல்லி பாலன்வாயில் ஊட்ட பாலகன் அன்புடன் அருந்தி தாயும் மகனுமாக கொலு மண்டபம் வாறபோது பார்த்தான் இரணியன் இந்த சண்டாளன் விஷத்திலும் மாளவில்லே என்று என்ன செய்தான் ஆனுல்

வாடாவாடா சிறுபயலே ஒரு
810 வார்த்தையது சொல்லக்கேளு
என்குலத்தின் பகைவனவன் பாவி
எந்தனுக்குத் தான்பயந்து
வீடுவாசல் தன்னேவிட்டு தெரு
வீதிகளில் அலேயுகிறுன்
815 காடுசெடி வாசம்செய்யும் அந்த
கண்ணன் பாதம் பணியலாமா

என்று இரணியன் சொல்ல பிரகுலாதன் ஏதுசொல்வாஞனல் வாருமய்யா தந்தையே நாம் வாழும் இந்த

788. விலகலாச்சி - விலகலாயிற்று.
802. உண்ணலியோ - உண்ணவில்லேயா.
814. அலேயுகிறுன்-அலேகிறுன். ஓசை நிரப்ப இவ்வாறு வருகிறது.

(மாயவன், எங்கும் எதிலும் உள்ளான் என
மைந்தன் கூறுதல்)

அரண்மனையும் ஆஸ்திகளும் அவர்
அறியாது நமக்கு இல்லை
மனுநீதி தவருச்செங்கோல் அந்த
820 மாயவன் தன் பொருளல்லவோ
வயிர நல்ல சிம்மாதனம் ஆதி
வைகுண்ட வாசகனின் பொருளல்லவோ
காட்டில் அவர் அலையவில்லை இந்த
வீட்டில் அவர் தானிருக்கார்
825 என்றுசொன்ன வேளையதில் அங்கே
ஏதுசெய்தான் இரணியனும்
வாடா அப்பா பாலகனே ஒரு
வார்த்தையது சொல்லக்கேளு
ஈசன்என்று ஓதுகின்ற அந்த
830 நாசகாலன் எங்கிருக்கான்
என்றுகேள்க்கும் வேளையதில் அப்போ
ஏதுசொல்வான் பாலகன்தான்
எங்குமே நிறைந்திருப்பார் அவர்
இல்லாத இடமும்இல்லை
835 கல்லிலும் தானிருப்பார் நம்
கருத்திலும் தானிருப்பார்
சொல்லிலும் தானிருப்பார் அதன்
பொருளிலும் தானிருப்பார்

(தூணைக் காட்டி அதில் உள்ளாரு என இரணியன்
கேட்க 'ஆம்' என மகன் உரைக்கவும், வாளால் தூணை
ஓங்கி இரணியன் வெட்டிய நிலையில் மாயன் நரசிங்கமாய்
வெளிப்படுதல்)

என்று பிரகுலாதன் சொல்ல இரணியன் ஓர் தூணைக்காட்டி இதில் இருப்பாரு என்று கேள்க்க ஆம் இருப்பார் என்று பாலன் சொல்ல அந்த பாதகன் தன் கரத்தில் இருந்த வாளால் ஓங்கி வெட்ட அந்த தூண் வெடித்து அதில் மாயன் என்ன வடிவமாக வந்தார் ஆனல்

---

838-839. இடைஉரை - இரணியன் தூணைக் கையால் அறைந்ததாகவே கம்பர் காட்டுவார். ''இசை திறந் துயர்ந்த கையால் எற்றினன்'' (இரணியன் வதைப் படலம். பாடல் 127. வரி. 3.) இங்கே தன்கைவாளால் வெட்டுதல் சிறப்புாகவே அமைந்துள்ளது எனலாம்.

நரசிம்ம கோலமாக நந்த
840 கோபாலன் வடிவமானுர்
எட்டிநல்ல தான்பிடித்தார் அந்த
இரணியனை திருமாலும்

இரணியனை பிடித்த நேரம் எப்பேர்ப்பட்ட நேரமானுல் கதிரோன் மறைந்தும் மறையாமலும் இருக்கும் நேரத்தில் பிடித்து வாசல்படியில் கொண்டு

தன்துடைமேல் வைத்தல்லவோ மாயன்
தானேவதைத்தார் இரணியனை

(நரசிங்கம் இரணியனை வதைத்து பிரகலாதனுக்கு முடிசூட்டிவைத்தல்)

845 இரணிய சம்மாரம் தனைமுடித்து ஆதி
ஈஸ்பரனும் ஏதுசெய்தார்
பாலன் பிரகுலாதன்தன்னை மாயன்
பக்கமதில் தானழைத்து
அளகாபுரி பட்டணத்தை பாலன்
850 ஆளப்பட்டம் கட்டிவைத்தார்
மாயன்பெருமாள் திருக்கரத்தால் நல்ல
மகுடமுடி சூட்டிவைத்தார்
பாலன்தன்னை ஆசீர்வதித்து மாயன்
பக்தர்துன்பங்கள் தீர்த்துவைத்தார்
855 தேவேந்திரன் தேவர்முதல் தங்கள்
தேவலோகம் தான்நடந்தார்
மாயன்நல்ல பெருமாள்தான் அப்போ
வைகுண்டம் தானேசேர்ந்தார்
பாலகனும் மாதாவும் நல்ல
860 பாருலகம் வாழுகின்றுர்
மனுமுறை தவருமல் சிறு
மைந்தனுமே ஆண்டுவாருன்
செங்கோலது தவருமல் நல்ல
தேசமதை ஆண்டுவாருன்
865 மாயவனுர் திருவருளால் அங்கு
வாழ்ந்துவாருர் பிரகுலாதன்
ஆலுபோலே தான்தழைத்து நல்ல
அறுகுபோலே வேரூன்றி
மூங்கில்போல் அன்னசுற்றம் அவர்
870 முசியாமல் வாழ்ந்துவாருர்.

சுபம் சுபம் சுபம்

இரணியன் சம்மாரம் முற்றியது.

---

843: துடை - தொடை.

867. வில்லுப்பாட்டு இறுதி வாழ்த்து பல பாட்டுகளிலும் காணும் பொதுவான மரபினை ஒட்டியே இங்கு அமைந்துள்ளது.

# சீதா கல்யாணம்

### காப்பு

நாடிய பொருள்கை கூடும்
ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வலியதாகும்
வேரியன் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை
நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையில் ராமன்
தோள்வலி கூறு வோர்க்கே (1)

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமு மின்றித் தீருமே
இம்மையே இராமா வென்ற இரண்டெழுத்தினுல் (2)

---

காப்பு விருத்தம் (1). இக் காப்பு விருத்தம் கம்பராமாயணம் தற்சிறப்புப் பாயிரத்தில் இறுதியாகக் காணப்படுவது. 'வீடியல் வலியதாகும்' என்பது வீடியல் வழியதாக்கும் எனவும், 'வேரியன் கமலை' என்பது வேரியங்கமலை எனவும் 'சிலையில் ராமன்' என்பது சிலையிராமன் எனவும் இருக்தல் வேண்டும்.

விருத்தம் (2) இவ்விருத்தம் கம்பராமாயணம் 'பாராயணம் செய்வோர்அது சந்திக்கும் 'காப்பு முதலியனவாகக் காணப்படும் பாடல்களுள் ஒன்று. கடைசி அடி 'இம்மையே ராமவென் றிரண்டெழுத்திருல்' எனவரும்.

இப்பாடல்கள் காப்புவிருத்தங்களாகக் காணப்படினும் இவ்வில்லுப்பாட்டின் கதைப்போக்கு கம்பராமாயணம்–பாலகாண்ட நிகழ்ச்சிகளை அவ்வாறே பின்பற்றுவதாக இல்லை. ஆங்காங்கே பல்வேறு மாறுதல்களைப் பெற்றுள்ள தன்மையினைக் கதைநெடுகிலும் காணலாம். எனினும், கம்பராமயணத்தை அறிந்த ஒரு புலவராலேயே இவை புகுத்தப்பெற்றிருக்கலாம். இதற்குமுன் வேறுவகையான காப்புவிருத்தம் இருந்திருத்தலும் கூடும்.

### கதை

(நாடு, நகர் வளங்கள் கூறி மன்னன் தசரதனின்
ஆட்சி மேன்மை கூறுதல்)

நாடான நாடதிலே — என்றும்
நலம்பொருந்தும் தேசமது
மாதமூன்று மழைபொழியும் — அங்கு
வருடமூன்று பூவிளையும்
5 அறுதாள் அறுத்துவர — அங்கு
மறுதாள் பயிராகும்
அறுதாளின் கீழாக — நல்ல
ஐங்கலத்தேன் கூடுகட்டும்
மாடுகட்டிப் போரடித்தால் — அங்கு
10 மாளாது செந்நெலென்று
ஆனைகட்டிப் போரடிக்கும் — நல்ல
அழகான அய்யோத்திதான்

அதாவது இந்த பரத கண்டத்தில் முத்தியளிக்கக் கூடிய ஏழு சேத்திரங்கள் உண்டு. அவைகளில் காசி காஞ்சி அவந்தி அய்யோத்தி மாயா மதுரா துவாரகா இவைகளில் ஒன்றாகிய அய்யோத்திமா நகரமே கோசலை நாட்டுக்கு பிரதானமான பட்டணமாகி மனுசக்கரவர்த்தியால் சரயூநதிக்கரையில் பன்னிரெண்டு யோசனை நீளமும் மூன்றுயோசனை அகலமும் உள்ள அய்யோத்தியாபுரி பட்டணத்தை யார் ஆண்டுவாரார் ஆனால்

சூரிய குலத்துதித்த — நல்ல
துரிதமுள்ள மன்னவர்தான்
15 அதிரதன் பெற்றெடுத்த — அந்த
தசரத மன்னனவர்

---

1-12. வில்லுப்பாட்டுக்குரிய பொதுவான முறைப்படியே நாட்டுவளம், நகர்வளம் கூறப்பெறுகின்றன.

5-6. விளைந்த கதிர் அறுவடை ஆன உடனேயே மறுபோகம் பயிராகிவிடுகிறது.

8. ஐந்து கலம் அளவு தேனைக்கொண்ட பெரிய தேன்கூடுகள்.

9. போரடித்தல்-மாடுகளைக் கழுத்தொடு பிணைத்துக்கட்டி, வளையவந்து நெல்கதிர்களை மிதிக்கச்செய்து நெல்மணிகளைப் பிரித்தெடுத்தல். இது 'புணையலடித்தல்', 'தாப்பு ஓட்டுதல்' எனவும் வழங்கும்.

10. கதிர் விளைச்சல் மிகுதியால் மாடுகளுக்குப்பதிலாக யானைகளைக்கொண்டு போரடிக்கப் படுகிறதாம். மாளாது-தீராது. 12. அய்யோத்தி - அயோத்தி.

12-13. இடைஉரை : ஏழுசேத்திரங்கள்—எழுபுரம், சத்தபுரி

15. தசரதனின் தந்தை அஜமகாராஜன் இங்கே அதிரதன் என்று குறிக்கப்படுகிறார்.

அய்யோத்தியா பட்டணத்தை நன்கு
ஆண்டுவாருர் தசரதரும்

இந்தவிதமாக அய்யோத்தியாபுரி பட்டணத்தை ஆண்டு வருகின்ற தசரத மன்னனுனவர் பரசூரன் சபர்தத்திற்குப் பயந்து அறுபதிணுயிரம் வருஷம் அறுபதிணுயிரம் பெண்களைத் திருமணம் செய்து மேலும் வதிர்ஷ்டர் சொன்ன பிரகாரம் கோசலை கைகேசி சுமத்திரை என்ற மூன்று பெண்களை திருமணம் செய்து நாட்டை என்ன விதமாக ஆண்டுவாருர் ஆனுல்

ஆறிலொரு கடமைவாங்கி நல்ல
20 அரசாட்சி மணியும்கட்டி
ஆலயங்கள் அத்தனையும் அப்போ
ஆறுகால பூசைசெய்தார்
சத்திரங்கள் சாவடிகள் பல
தருமமடம் கட்டிவைத்தார்

இந்தவிதமாக தசரத மன்னனுனவர் நீதிநெறி தவருமல் அரசர்க்குரிய ஆறுவகைப் பேறும்பெற்று தானதருமங்கள் செய்து நாட்டை ஆண்டுவருகின்ற காலத்தில் அவருக்கு

(மன்னன் மகவில்லாமையால் வருந்துதல்)

25 சொத்தாலே குறைவுமில்லை ஒரு
சுகத்தாலே தாழ்வுமில்லை
ஆனைகளாம் சேனைகளாம் நல்ல
அரண்மனையாம் கோட்டைகளாம்
ஏழுசுற்று மாளிகையாம் அதில்
30 இலங்குமணி மண்டபமாம்

இவ்விதமாக செல்வச்சிறப்புடன் ஆண்டுவருகின்ற தசரத மன்னனுக்கு என்ன குறைபாடு என்ருல்

அப்பா அம்மா என்பதற்கு ஒரு
அருமைபிள்ளை கிடையாது

---

18-19 இடைஉரை : பரசூரன் சபர்தம்-பரசுராமன் சபதம். வதிர்ஷ்டர்-வசிட்டர் கைகேசி-கைகேயி. சுமத்திரை-சுமித்திரை.

19. கடமை-வரி 20. அரசாட்சிமணி-ஆராய்ச்சிமணி இவ்வாறு குறிக்கப் பெறுதலும் பொருத்தமே.

24-25 இடைஉரை: அரசர்க்குரிய பேறுகள். படை, குடி, கூழ், அமைச்சு நட்பு, அரண் என்பன ஆகலாம்.

பிள்ளையில்லா கவலையது அப்போ
பெருங்கவலை யாகிடுமாம்
35 மதளையில்லா கவலையது அவர்க்கு
மனக்கவலை யாகிடுமாம்.

இந்தவிதமாகப் பிள்ளையில்லா கவலையினால் மன்னனும் மனைவிமார்களும் பெருங்கவலை கொண்டு இருந்தார்கள். அப்போது தசரத மன்னனானவர் தன் குலகுருவாகிய வதிர்ஷ்டரிடம் வந்து என்னவிதமாகச் சொல்கிறார் ஆனால் சுவாமி, இவ்வுலகத்தில்

(வேறு)-(3)

பிள்ளையில் லாதவர்க்குப் பெருமையோ இவ்வுலகில்
பெருமானே என்ன செய்குவேன் (பிள்ளை)
வள்ளலே சென்மம் மலடென்றிருக்கலாமோ
வசைகொண்டேன் தசரதன் மாபுவிமேலே
கள்ளியானது சுற்றிக் காடெல்லாம் படந்தென்ன
காயுண்டோ கனியுண்டோ தானதைப் போலவே
(பிள்ளை)

அறுபதினாயிர வருடமட்டும் புவியை
ஆண்டும் பலனென்ன அருந்தவ முனியே
பெருமையாய் இனியாளப் பிள்ளையும் இல்லையே
பெருமானே என்ன செய்குவேன் நானே (பிள்ளை)

சுவாமி தாங்கள் சொன்னபிரகாரம் கோசலை கைகேசி சுமத்திரை என்ற மூன்று பெண்களையும் திருமணம் செய்து ஈராறு பன்னிரண்டு வருடமாகியும் பிள்ளை கிடையாது ஆகையால் சுவாமி இவ்வுலகத்தில் எனக்கு

பிள்ளைகளும் பிறப்பார்களா எந்தன்
பெயருசொல்ல வருவார்களா
மணிமுடியைத் தரிப்பதற்கு எனக்கு
40 மைந்தர்வந்து பிறப்பார்களா
என்றுசொல்லி தசரதரும் அப்போ
எடுத்துரைத்தார் வதிர்ஷ்டரிடம்

---

33-36. ஒரே கருத்து அடுக்கில் வருதல். 35. மதளை-மதலை. (மகன்)

பாடல்-3. இத்தகைய பாடல்கள் இக்கதையுள் இடையிடையே காணலாம் செய்குவேன்-செய்வேன். படந்தென்ன-படர்ந்தென்ன.

38. பெயரு-பெயர்.

42-43. இடைஉரை: இலக்குமி 'யோகமாய்கை' என்ற பெயரில் குறிக்கப் பெறுகிறாள்.

(வசிட்டர் பின்நிகழ்வன அறிந்து கூறி யாகம் செய்யுமாறு கூறுதல்)

இந்தவிதமாக தசரதன் வதிர்ஷ்டரிடம் சொன்ன மாத்திரத்தில் உடனே வதிர்ஷ்டர் ஞானத்தால் ஆராய்ந்து பார்க்கும்போது இராவணனை சங்காரம் செய்ய திருமால் இராமனுகவும் சங்கு சக்கரம் பரதன் சத்துருக்கனுகவும் ஆதிசேடன் லட்சுமணராகவும் யோகமாய்கை சீதாவாகவும் சூரியன் சுக்ரீவனுகவும் இந்திரன் வாலியாகவும் மற்றும் தேவர்கள் வானரப்படைகளாகவும் பிறக்கப் போகிருர்கள் என்ற தேவரகசியத்தை அறிந்த வதிர்ஷ்டர் என்னவிதமாகச் சொல்லுகிருராஞல்

வாராயப்பா தசரதனே இப்போ
வார்த்தையொன்று சொல்லக்கேளு
45 (நீ) பிள்ளையில்லை என்று எண்ணி நீ
பெருங்கவலை கொள்ளவேண்டாம்
மைந்தரில்லை என்றுஎண்ணி நீ
மனங்கலங்க வேண்டாமப்பா

வாராய் தசரதா உனக்கு மைந்தர்கள் பிறக்கமாட்டார்கள் என்ற கவலை வேண்டாம். ஆனல் நீ முன் செனமத்தில் செய்த பாவதோசத்தினல்தான் இதுவரை உனக்குப் பிள்ளைகள் கிடையாது. ஆகையினல் அந்த பாவதோசம் நீங்குவதற்கு உன் நாடாகிய அய்யோத்தியில்

புத்திரகாமேஷ்டி யாகம்ஒன்று இப்போ
50 புனிதமாக நடத்தவேணும்
கலைக்கோட்டு மாமுனியை இங்கு
கனமுடனே அழைத்துவந்து
(ஒரு) யாகமது செய்யவேணும் எந்தன்
ஏற்றபுகழ் தசரதனே.

வாராய் தசரதா அந்தக் கலைக்கோட்டு மகாமுனிவரை அழைத்துவந்து உன் யாகத்தைச் செய்துமுடித்தால் உனக்குப்பின் உன்

---

48-49. இடைஉரை : முன்செனமம்- முன்ஜென்மம். பாவதோசம்-பாவ தோஷம்.

51. கலைக்கோட்டு மாமுனி—இருசிய சிருங்கமுனிவர். கலைமானிடமாகப் பிறந்து, முகத்தில் ஒற்றைக் கலைமான் கொம்பை உடையவராக இம்முனிவர் இருந்ததால் இவ்வாறு பெயர்பெற்ருர்.

55 மணிமுடியைத் தரிப்பதற்கு நல்ல
மைந்தர்வந்து பிறந்திடுவார்
பொன்முடியைத் தரிப்பதற்கு உனக்குப்
புத்திரரும் பிறந்திடுவார்
செங்கோலை கைபிடிக்க நல்ல
60 செல்வபாலர் வந்து பிறந்திடுவார்

(யாகம் நடைபெறுதல்)

என்று வதிர்ஷ்டர் சொன்னபோது தசரதர் விடைகளை வாங்கிக் கொண்டு உரோமாபுர நாட்டிலே போய் கலைக்கோட்டு மகாமுனி வரை அழைத்து வந்து வதிர்ஷ்டவேதியர்கள் புடைசூழ யாகத்தைச் செய்தார். அப்போது அந்த யாகத்திலிருந்து ஒரு பெரிய பூதம் வந்து தோன்றியது அந்த பூதமானது கையில் ஒரு பொற்கிண்ணம் கொண்டு வந்து கலைக்கோட்டு மகாமுனிவரிடம் கொடுத்து மறைந்துவிட்டது. கலைக்கோட்டு மகாமுனிவர் அக்கிண்ணத்தை வதிர்ஷ்டரிடம் கொடுத்தார் வதிர்ஷ்டர் தசரதரிடம் கொடுத்து இதிலுள்ள பாயாசத்தை உன் மனைவிமார் மூன்று பேருக்கும் கொடுத்துவிடு என்று சொல்லிவிட்டு வதிர்ஷ்டரும் சென்றுவிட்டார். அப்போது தசரதர் மூன்று மனைவிமார்களையும் அழைத்து என்ன விதமாகக் கொடுக்கிறுராஞல்.

(வேறு)-(4)

தெய்வப்பிரசாதம் பெறுவாய் கோசலைமானே
தெய்வப் பிரசாதம் பெறுவாய் (தெய்)
வையகம் மிகுந்திடும் வருந்தும் புத்திரபாக்கியம்
அய்யமில்லாதடைகுவாய் அருமைக் கண்ணே (தெய்)
காதல்மிகுந்திடும் கைகேசி மாமயிலே
கனகப் பிரசாதம் பெறுவாய் கவலை தீர்வாய் (தெய்)
சுந்தரமாமயிலே தோகை சுமத்திரையே
சுகிர்த பிரசாதம் பெறுவாய் சுகம்பெறுவாய் (தெய்)

இந்த விதமாக தசரதர் மூன்று மனைவிமார்களுக்கும் தெய்வ பிரசாதக் கட்டியைக் கொடுத்து சந்தோசமாய் வாழ்ந்து வரும் காலத்தில் மூன்று பெண்களும் ஆண்டவன் அருளால்

55-60. ஒரே கருத்து அடுக்கி வருதல். இவ்வாறே பிற இடங்களிலும் வருதல் காண்க.

60-61. இடைஉரை : உரோமபுர நாட்டிலே-உரோமபாத நகரம். உரோமபாதமன்னனின் நகரம்.

பாடல் (வரி 8) சுகிர்தம்- அறம், நன்மை, நெய், தவஞ்செல்தல் என்றெல்லாம் பொருள்படும்.

(மன்னன் மனைவியர் மூவரும் குழந்தைப்பேறு அடைதல்)

அன்றுமுதல் குளிமறந்து அந்த
ஆயிழைமார் கெர்ப்பமுற்ருர்
ஊரறிய ஒருமாதம் அங்கே
உற்றமங்கை மூன்றுபேரும்
65 ரெண்டாவது மாஸ்த்தையிலே அவர்
ஈஸ்பரனே தஞ்சோமென்ருர்
மூன்ருவது மாதத்திலே அந்த
முக்கண்ணன் விரதமிட்டார்
நான்காவது மாதத்திலே அவர்
70 நான்முகனே பூசைசெய்தார்
ஐந்தாவது மாதத்திலே அவர்
அரைவயிறு கெர்ப்பமுற்ருர்
ஆருவது மாதத்தில் அவர்
அரனுரை பூசைசெய்தார்
75 ஏழாவது மாதத்திலே அங்கு
எம்பெருமான் தஞ்சோமென்ருர்
எட்டாவது மாஸ்த்தையிலே நல்ல
அஷ்டலெட்சுமி நோன்பிருந்தார்
ஒன்பதாவது மாதத்திலே அவர்
80 உமையவளே பூசைசெய்தார்
பத்தாவது மாதத்திலே அந்த
பட்டத்து தேவிமார்கள்
பகவானுட அருளாலே நான்கு
பாலகரைப் பெற்றெடுத்தார்
85 (அந்த) பாலர்களும் பிறந்தபோது நல்ல
பாவையர்கள் குலவைபாட
மைந்தர்களும் பிறந்தபோது அங்கே
மணிக்குலவை பாடுகிருர்
சரஸ்வதியார் அங்குவந்து நல்ல
90 சங்கீதங்கள் பாடுகிருர்

---

61-84 அரசியர் கருவுற்றதை வில்லுப்பாட்டு மரபின்படியே பாடினலும் அந்த அந்த மாதங்களில் விரதம், பூசை, நோன்பு மேற்கொண்டமை குறிக்கப் பெறும் மாறுதலான நிலையினைக் காணலாம்.

61. குளிமறந்து-மாதவிலக்கின் பின் நீராடுதல் என்பதினின்றும் நீங்கினர்.

62. கெர்ப்ப முற்ருர்-கருப்பமுற்ருர்.

65. மாஸ்த்தையிலே. 66. தஞ்சோம்-தஞ்சம்

83. பகவானுட-பகவானுடைய

86. குலவை-குரவை விளக்கம் முன்பு தரப்பட்டது காண்க. பக். 108

தெய்வக்கன்னி பெண்கள் எல்லாம் அங்கு
தேடிவந்து குலவைபோட்டார்

இந்தவிதமாக மூன்று பெண்களும் நான்குபாலர்களைப் பெற்று நாளொருமேனியும் பொழுது ஒரு வண்ணமுமாக வளர்த்து வரும் நாளில்.

(பிள்ளைகள் நால்வருக்கும் பெயர் சூட்டுதல்)

பத்தாவது நாளையிலே அவர்
பெற்ற சிறு பாலகர்க்கே
95 பெயர் கொடுக்க வேணுமென்று அப்போ
பெருமையாக தசரதரும்
வதிர்ஷ்டரையும் தானழைத்து நல்ல
வகையுடனே பெயர்கொடுத்தார்

அதாவது வதிர்ஷ்டர் வந்து முதன் முதலாக கோசலை வயிற்றில் பிறந்த பாலகனுக்கு என்ன விதமாகப் பெயர் கொடுக்கிறார் ஆனால்

சித்திரை மாதத்திலே
100 சேர்ந்தபுனர்பூச நட்சத்திரம்
கர்க்கடக லக்கணத்தில்
காணும் குருச்சேந்திர யோகத்திலே
அய்ந்துகிரகம் உச்சத்திலே
அருமையாகப் பிறந்த பாலன்
105 என்று எண்ணி வதிர்ஷ்டருமே
என்னவிதமாகப் பெயர்கொடுத்தார்

அதாவது கோசலை வயிற்றில் பிறந்த பாலகனுக்கு முனிவர் எப்படி பெயர் கொடுக்கிறார் ஆனால்.

(வேறு)-(5)

கராமலைக் கைக்கருவி எய்த்தே
அராவணையில் துயில்வோம் என அன்னாள்

---

101 கர்க்கடக லக்கணம்—கடக லக்கினம், கர்க்கடக, இராசி. இலக்கினம் இராசி உதயம் (தன்முழுத்தம்.)

102 குருசேந்திர யோகம்-குருசந்திரயோகம் என்பது.

104 இராமன் பிறந்த வேளையைக் குறிக்கும் கம்பர், 'நால்வர் உச்சரே' என்பர் ஆனால் வால்மீகி ஐந்து கிரகம் உச்சம் என்று குறிப்பது போலவே இங்கும் சொல்லப்படுவது குறிப்பிடத்தக்கது.

பாடல்-5 கம்பன் பாட்டு சில மாறுதல்களுடன் எடுத்தாளப்படுகிறது.

விராவி அளித்தருள் மெய்ப் பொருளுக்கன்றே
இராமா வெனப் பெயர் ஈந்தனரே*

இந்த விதமாக கோசலை மகனுக்கு ராமனென்றும் கைகேசி மகனுக்கு பரதனென்றும் சுமத்திரையாள் பெற்ற மகன் முதல் பிறந்த பாலகனுக்கு லெக்ஷ்மணன் என்றும் இரண்டாவது பிறந்த பாலகனுக்கு சத்துருக்கன் என்றும் பெயர் கொடுத்தார் பாலகர்களும் வளர்ந்து ஐந்துவயது பிராயம் ஆனவுடன்

(இராமன் முதலானோர் பலகலைகளும் பயிலுதல்)

ஐந்து நல்ல வயததிலே ஒரு
அண்ணாவியிடம் படிக்கவைத்தார்
வாத்தியாரை வரவழைத்து அப்போ
110 வாரிப்பொன்னை தான்கொடுத்து
நான்கு நல்ல பாலரையும் அவர்
நலமுடனே படிக்கவைத்தார்

இந்த விதமாக நான்கு பாலர்களும் அண்ணாவியிடம் என்ன விதமாக படித்து வருகிறார் என்றால்.

ஆதிநூல் அரிச்சுவடி முதல்
ஆனநன்னூல் இலக்கணங்கள்
115 நாலடியார் திருக்குறளும் அவர்
நலமுடனே தான்படித்தார்
ஆனைஏற்றம் குதிரையேற்றம் நல்ல
அழகுமுறை சிலம்புத் தொழில்
கூடுவிட்டுக் கூடுபாயும் பல
120 குயலவித்தை தான்படித்தார்
சண்டைசெய்ய தேர்நடத்த மற்றும்
சங்கீதங்கள் தான்படித்தார்
(இப்படி) வேணுமென்ற கல்வி எல்லாம் அவர்
விதவிதமாய் தான்படித்தார்

இந்த விதமாக நான்கு பாலர்களும் நான்கு வேதம் ஆறு சாஸ்திரம் பதினெண்புராணம் இருபத்தெட்டு ஆகமம் முப்பத்

---

* கராமலையத் நளர் கைக்கரியெய்த்தே
அராவணை யில்துயில் வோயென வந்நாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
இராம னெனப் பெயரீந்தன னன்றே.

108 அண்ணாவி-ஆசிரியர்.

115. விளக்கம் காண்க பக்: 109-110. வரி 109-114.

120. குயலவித்தை-தேர்ந்த வித்தைகள். குயலன்-தேர்ந்தவன்

திரண்டு தருமம் அறுபத்தி நான்கு கலைக்கியானம் தொண்ணுத் பால தாறுதத்துவம் மனுவியாக்கியானம் இதிகாசபுராணமென்று சொல்லக்கூடிய சகலகலைகளையும் கற்றுணர்ந்தார்கள் அப்பொழுது கர்சளுக்கும் வயது பன்னிரண்டு ஆகிவிட்டது.

(கூனிக்குஇராமன் இழைத்த தீமையும் அவள் தந்த சாபமொழியும்)

125 இந்தவிதம் தானிருக்க — அப்போ
ஏதுசெய்தார் ஸ்ரீராமன்
தம்பியான லெக்ஷ்மணனை — அங்கு
தானே ராமன் கூட்டிக்கொண்டு
(ஒரு) சுண்டுவில்லை கைலெடுத்து — வெகு
130 துரிதமாக இரண்டுபேரும்
சிட்டுத் தெறித்து விளையாட — அவர்
தெருவதிலே வழிவாறுர்

இந்தவிதமாக இராமன் லெக்ஷ்மணன் இரு பேரும் சிட்டு தெறிக்கும் வில்லைக் கைலெடுத்து தெருவீதியாக வரும்போது அவர்களுக்கு எதிராக யார் வருகிறுள் என்றுல் கைகேசி வீட்டில் வேலைசெய்யும் மந்தாரை என்ற கூன் கிழவியானவள்.

என்னஎன்ன விதமாக — அங்கு
ஏகிவாறுள் மந்தாரை
135 இருபத்தோரு கூனும்கூனி — அவள்
இருபத்தோரு குட்டும்வைத்து
ராமனுக்கு எதிராக — அங்கு
நலமுடனே ஏகிவாறுள்
கண்டாரே ஸ்ரீராமர் — அப்போ
140 கண்ணடங்கா கோபம்கொண்டார்

வாராய் தம்பி லெக்ஷ்மணு நமது அய்யோத்தியாபுரி பட்டணத்தில் இதுநாள்வரை இப்படிப்பட்ட அபயக்குற்றம்

---

124-125 இடைஉரை : கல்வி வகைகள் இவ்வாறே அடுக்கிக் கூறுதல் பல இடங்களிலும் காணலாம்.

129 சுண்டுவில்-கல் முதலியன செலுத்தும் சிறுவில். சுண்டு-சிறிய (சுண்டெலி, சுண்டுவிரல்)

131 சிட்டுத் தெறிந்து-சிட்டுக்குருவியை அடித்து

132-133 இடைஉரை: மந்தாரை—மந்தரை

135. மந்தரையின் கூன் உயர்வுபடுத்திக் கூறப்படுகிறது.

140-141. இடைஉரை: உடல் உறுப்புக் குறைபாடு ‘அபயக் குற்றம்’ எனப்படுகிறது. (அவயவக் குற்றம்)

உள்ளவர்களைக் கண்டதே கிடையாது. ஆகையினால் தம்பி லெக்ஷ்மணா

(அடே) கொண்டுவாடா சுண்டுவில்லை இப்போ
கொல்லவேணும் கூனியைத்தான்
என்றுசொல்லி எம்பெருமான் அப்போ
எடுத்தாரே சுண்டுவில்லை
145 சுண்டுவில்லை கையிலெடுத்து ராமர்
துரிதமாகக் கணைதொடுத்தார்
குண்டுகணை பட்டபோது அவள்
கூனதுதான் நிமிர்ந்திடுமாம்

இந்தவிதமாக ராமன் வில்வளைத்து கணைதொடுத்தபோது அந்தக் கணையானது கூன்முதுகிலே பட்டபோது இருபத்தொரு குடமும் உடைந்து இருபத்தொரு கூனும் ஒரே கூனாக நிமிர்ந்திடுமாம்

கூனதுதான் நிமிர்ந்தவுடன் அவள்
150 கொடுத்தாளே சாபமது
(ஏ)சிட்டிதலையா ஸ்ரீராமா நீ
செய்யலாமா இந்தவேலை
(என்) கூனதுவும் நிமிர்ந்திடவே நீ
கொடுமுடிகள் செய்யலாமா
155 (இதோ) கொடுக்கிறேன்பார் சாபமது என்று
கொடுத்தாளே கூன்கிழவி

இந்தவிதமாக மந்தாரை என்ற கூன்கிழவியானவள் கூன் நிமிர்ந்தவுடன் வேதனை பொறுக்கமுடியாமல் இராமனுக்கு என்ன விதமாக சாபமிட்டாளென்றால்

வாராயப்பா ஸ்ரீராமா இப்போ
வார்த்தை ஒன்று சொல்லக்கேளாய்
(என்) கூனைநீயும் நிமிர்த்ததினால் நீ
160 கொடுவனமே சென்றிடுவாய்
பதினாங்கு வருடமட்டும் நீ
பாரவனம் சென்றிடுவாய்

148. கூனியின் கூன் நிமிர்ந்ததாகக் கூறப்படுகிறது. ஆழ்வார்கள் அருளிய 'கூனகம் புகத்தெறித்த கொற்றவில்லி, 'கூனே சிதைய வுண்டைவின் னிறத்திற் றெறித்தாய்' எனும் தொடர்கள் இங்கே ஒப்புநோக்கத் தக்கன.

154. கொடுமுடிகள்-கொடுமைகள்.

161. பதினாங்கு-பதினான்கு.

ஈரேழு வருடமட்டும் நீயும்
ஏகவேணும் வனமதற்கு
165 (அந்த) பரதனுமே நாடாள்வான் நீ
பாரவனம் போகவேணும்

என்று மந்தாரைக் கூன்கிழவியானவள் ராமனைப்பார்த்து ஏராமா நீ பதினன்கு வருடம் பாரவனம் போவாய் உன்தம்பி பரதன் நாடாள்வான் என்று சாபத்தைக் கொடுத்தாள். இந்த சாபத்தைப்பெற்றுக்கொண்டு ராமன் அரண்மனைவந்து சேர்ந்தான்

(வேள்விக்கு இடையூறு செய்யும் தாடகையை அழிக்க
இராமனைத்தன்னுடன் அனுப்புமாறு விசுவாமித்திரர்
தசரதனிடம் கேட்டல்)

இந்தவிதம் தானிருக்க அப்போ
இன்னுமென்ன நடக்குதென்றால்
பவளவாள் மலைதனிலே அந்த
170 பாரமுனி விஸ்வாமுத்திரர்
தாடகையாள் வனமதிலே அந்த
தவமுனிவர் விஸ்வாமுத்திரர்
விண்ணவர்க்கு என்றுசொல்லி நல்ல
வேள்விஒன்று நடத்துகிறார்
175 அந்தநல்ல வேள்வியைத்தான் அங்கு
அழித்தாளே தாடகையாள்

இந்தவிதமாக விஸ்வாமுத்திர மகாமுனிவர் தாடகையாள் மலையில் விண்ணவர்க்கென்று ஒரு வேள்வி நடத்தினர் அந்த வேள்வியை இராவணன் பாட்டியான தாடகைவந்து சிறுநீரால் அழித்து பங்கம் செய்தாள் அதையறிந்த விஸ்வாமுத்திரர்

(அந்த) தாடகையைக் கொல்வதற்கு அந்த
தவமுனிவர் விஸ்வாமுத்திரர்
அய்யோத்தி நாடதற்கு அவர்
180 அவசரமாய் தானும்வந்து
தசரத மன்னனிடம் அந்த
தாடகையைக் கொல்வதற்கு
தரவேணும் ராமனைத்தான் நீ
தானேயிப்போ தசரதனே

166. பாரவனம்-பெரியவனம் (இவ்வாறே பாரமுனி காண்க)

169. விசுவாமித்திரர் வேள்வி செய்யும் இடம் 'பவளவாள் மலை' எனக் கற்பிக்கப்படுகிறது.

170. விஸ்வாமுத்திரர்-விசுவாமித்திரர்.

185 ராச்சதையைக் கொல்வதற்கு நீ
ராமனையும் தந்திடுவாய்

இந்தவிதமாக விஸ்வாமுத்திர மகாமுனிவர் தாடகையைக் கொல்வதற்குத் தசரதரிடம் உன்மகன் ராமனை மட்டும் அனுப்பிடுவாய் என்று கேட்ட மாத்திரத்தில் தசரதர் மனங்கலங்கி என்ன சொல்லுகிறுர் ஆனல்

(மைந்தனை அனுப்பத் தசரதன் மறுத்தல்)

(சுவாமி) அறுபதினுயிரம் வருடமட்டும் நான்
அருமைபாலர் இல்லாமல்
தவமான தவமிருந்து இங்கு
190 தானேபெற்றேன் ராமனையும்
(அவன்) அல்லும் பகலுமாக என்
அருகினிலே தானிருந்து
(என்) கவலைகளை மாற்றிவாருன் எந்தன்
கண்மணிதான் ஸ்ரீராமன்

சுவாமி நான் அறுபதினுயிரம் வருடமாகப் பிள்ளை இல்லாமல் அருந்தவத்தினுல் பெற்றபாலகன் என்மகன் இராமன் ஆகையினுல் ராமனை மட்டும் நான் தரமாட்டேன் வேறு சேனைபடை யானைப்படை குதிரைப்படை தேர்ப்படை எது வேண்டுமானுலும் தருகிறேன் என்று தசரதர் சொன்ன மாத்திரத்தில் முனிவர் கண்கள் சிவக்க கடுங்கோபமாக நின்றுர்.

(வசிட்டரின் அறிவுரையால் தசரதன் இராம
இலக்குவரை அனுப்புதல்)

195 அறிந்தாரே வதிர்ஷ்டமுனி அதை
அன்னேர வேளையிலே
மோசமல்லோ வந்ததென்று அந்த
முனிநாதர் ஏகிவாருர்
தசரதரின் கொலுவைநோக்கி அந்த
200 தவமுனிவர் ஏகிவாருர்

இந்தவிதமாக வதிர்ஷ்டமுனிவர் தசரத மன்னன் கொலுவில் வந்து வாராய் தசரதா உன் மகன் ராமனுக்கு நன்மை செய்ய வந்தவர் அவரை மதியாமல் நீ பேசலாமா. அவர் ஒருகாலத்தில் சூரியகுல வம்சத்தில் பிறந்த அரிச்சேந்திரனை ஆட்டிவைத்தவர் அவர் மகிமை தெரிந்திருந்தும் நீ இப்படிப் பேசலாமா. ஆகையால்

185. ராச்சதை-ராட்சசி, அரக்கி.

நீ செய்த குற்றத்திற்கு உன்மகன் ராமனோடு லெக்ஷ்மணனையும் அனுப்பிவைப்பாய் என்று வசிஷ்டர் சொன்ன மாத்திரத்தில்

தசரதராம் மன்னனவர் — உடனே
தவமுனிவர் சொல்படியே
ராமர் லெக்ஷ்மணர் இருபேரையும் — அப்போ
நலமுடனே அருகழைத்து
205 மாமுனிவர் கையில்கொடுத்து — அந்த
மன்னவனும் ஏதுசொல்வார்

சுவாமி என் மகன்களாகிய ராமன் லெக்ஷ்மணன் இருபேரையும் தங்களிடம் அடைக்கலமாகத் தந்துவிட்டேன். இனி அன்னையும் பிதாவும் குருவும் தாங்களேதான் என்று சொல்லி பாலர்களைக் கொடுத்தார். மகாமுனிவர் இருபாலர்களையும் கூட்டிக்கொண்டு தெருவீதியாக வாறபோது

அய்யோத்தி ஜனங்களெல்லாம் — நல்ல
அரிராமன் வாழ்கவென்று
இராமன் வாழ்க வாழ்கவென்று — அப்போ
210 வாழ்த்திநல்ல விடைகொடுத்தார்
இருபேரையும் கையில்பிடித்து — அப்போ
ஏகிவாருர் மாமுனிவர்
என்ன என்ன விதமாக — அங்கு
ஏகிவாருர் மூன்றுபேரும்

அதாவது விஸ்வாமுத்திர மகாமுனிவர் ராமன் லெக்ஷ்மணன் இருபேரையும் கையில் பிடித்துக்கொண்டு என்னவிதமாக தெருவீதி வருகிருர்கள் என்ருல்

(வேறு)-(6)

தாடிசடை வளர்த்த சன்யாசி முன்னே வாருர்-
சன்யாசி முன்னே வாருர்
மோடிநடை நடந்து என் பாஞ்சாலக் குயிலே
முத்துரெண்டும் வருகுதேஎன் பூஞ்சோலைக் குயிலே

கோதண்டம் கைபிடித்து கோசிகரை முன்னேவிட்டு
-கோசிகரை முன்னேவிட்டு
வாதம்பிஎன்று சொல்லி ஓம் நமோ நாராயணு
வாருரே வீதிவழி ஓதப் பாராயணம்

200-201. இடைஉரை : அரிச்சேந்திரன் - அரிச்சந்திரன். இலக்குவனை அனுப்பியதற்குக் காரணம் இவ்வாறு கூறப்படுகிறது. கற்பிக்க.
170. ல். 6. மோடிநடை-மோடு-நடை, பெருமை கொண்ட நடை, கி.

215 இந்தநல்ல விதமாக அங்கு
ஏகிவாருர் மூன்றுபேரும்
அய்யோத்தி தனைக்கடந்து அப்போ
அவசரமாய் ஏகிவாருர்
காடுநல்ல சோலைவிட்டு நல்ல
220 கரியமலை தனைக்கடந்து
தாடகையாள் வனமதிலே அங்கு
தானேவந்தார் மூன்றுபேரும்

இந்தவிதமாக மூன்றுபேரும் தாடகையாள் மலையில் வந்து ராமன் லெக்ஷ்மணன் இருபேரையும் காவலாகவைத்து மகா முனியாகிய விஸ்வாமுத்திரர் வேள்வியை நடத்துகிருர். அப்போது வேள்விப் புகையானது ஆகாயத்தில் போகிறதைக் கண்ட தாடகை பழையபடி கோபம் கொண்டு

(வேள்வி அழிக்கத் தாடகை வருதல்)

ஆங்கார வேகத்தோடு பாவி
அலறியவள் ஏகிவாருள்
225 (அவள்) ஓடிவரும் வேகத்திலே அங்கே
ஓடிந்திடுமாம் மரங்களெல்லாம்
மலைகளுமே தான்நொறுங்க அந்த
மாயாவி ஓடிவாருள்
தவமுனிவர் வேள்விபக்கம் அந்த
230 தாடகையாள் வந்துநின்று
என்னஎன்ன விதமாக அப்போ
ஏற்றபாவி சொல்லுகிருள்

அடே கிழட்டு முனியே உனக்கு இன்னும் மானமில்லையா சிட்டு தெறிக்கும் வில்லைக் கையில் வைத்திருக்கும் சிறுவர்களைக் கூட்டிவந்து காவலாக வைத்திருக்கிருயே இவர்கள் உயிரை எமனுக்குப் பறிகொடுக்கவா வந்திருக்கிருர்கள் என்று கோபமாகப் பேசிக்கொண்டு

மலையிலுள்ள மரங்களையும் அந்த
மாயன்மேலே வீசுகிருள்
235 கல்களையும் தான்தூக்கி அவள்
கண்டமட்டும் வீசுகிருள்
அறிந்தாரே எம்பெருமான் அதை
அன்னேர வேளையிலே

236. கண்ட மட்டும்-தாறுமாருக.

மோசமல்லோ வந்ததென்று அந்த
240 முகுந்தனுமே தான்நினைத்து
கையிலிருந்த வில்லாலே அந்த
கல்களையும் தட்டலுற்றார்

இந்தவிதமாக எம்பெருமான் தட்டின கல்கள் மரங்கள் அந்த அரக்கிமேல் போய் விழுந்ததாம். மேலும் எம்பெருமான் எப்படி எண்ணுகிறாரென்றால் ஆகா இனி இவளை பெண் என்று எண்ணக் கூடாது அதாவது தன்னைக் கொல்லவரும் பசுவானாலும் தான் கொல்லலாம் என்று வேதவாக்கியம் இருக்கிறது ஆகையால் இவளைக் கொல்லாமல் விடக்கூடாது என்று எண்ணி எம்பெருமான்

(இராம பாணத்தால் தாடகை வீழ்தல்)

வில்லதையும் கைலெடுத்து ராமன்
வேகமாக நாண்பூட்டி
245 அக்கினி அஸ்திரத்தை அவர்
அவசரமாய் வில்லில்வைத்து
காதுவரை தானிழுத்து நல்ல
கண்ணபிரான் இழுத்துவிட்டார்
அந்தநல்ல அஸ்திரம்தான் அப்போ
250 அதிவேகமாய் தானும்வந்து
தாடகையாள் மார்பதிலே. பாணம்
தானேவந்து பாய்ந்திடுமாம்

இந்தவிதமாக எம்பெருமான் விட்ட அக்கினி அஸ்திரமானது தாடகையாள் மார்பில் பாய்ந்து ஊடுருவிச் சென்றது. உடனே தாடகையாள்

அடியற்ற மரம்போலே அவள்
அடித்தலறி கீழ்விழ்ந்தாள்
255 வேரறுந்த மரம்போலே அவள்
விழுந்தாளே பூமியிலே
மலைபோலே தான்விழுந்தாள் அப்போ
மாயவனை காணலுற்றாள்
மாயன் சுருபமதை கண்ணால் கண்டு அந்த
260 மங்கையவள் வணங்குகிறாள்

259, சுருபம்—வடிவும்

சுவாமி நான் மாயன் என்று அறியாமல் மாபாவி கெட்டுவிட்டேன் மேலும் தாங்கள் கையினுல் நான் மடிவதற்கு என்ன தவமிருந்தேனோ சுவாமி என் பெயர் இவ்வுலகத்தில்எப்போதும் விளங்கும்படியாக எனக்கு ஒருவரம் கொடுக்கவேணுமென்று வணங்கினுள்.

(தாடகை பெயர் நிலைக்க இராமன் வரம் அளித்தல்)

அப்போது எம்பெருமான் ஒரு
ஆலோசனை தானும்செய்து
நட்சத்திர மாகவேதான் இந்த
நாட்டிலேயும் துலங்கிடுவாய்
265 தென்கிழக்கு மூலையிலே நீ
திடமுடனே உதித்திடுவாய்
தாடகை வெள்ளியென்று உன்னை
தாரணியில் சொல்லிடுவார்
என்று சொல்லி எம்பெருமான் அப்போ
270 ஏற்றவரம் தான் கொடுத்தார்

இந்தவிதமாக எம்பெருமான் தாடகைக்கு நட்சத்திர பதவி வரம் கொடுக்கவும் தாடகையின் உயிர் பிரிந்து விட்டது.

(மாரீசனும் சுபாகுவும் போர் செய்தல்)

இந்த நல்ல விதமாக ஏற்ற
தாடகையாள் மடிந்தபோது
(அவள்) அருமைமக்கள் இருபேரும் அங்கு
அவசரமாய் ஓடிவந்து
275 என்ன என்ன விதமாக அப்போ
எம்பெருமானிடம் சொல்லுகிறுர்

அடேய் சிறுவர்களே எங்கள் தாயைக் கொன்ற உங்களைக் கொல்லாமல் விடுவதில்லை என்று எம்பெருமானிடம் சண்டை செய்தார்.

உடனே எம்பெருமான் வில்வளைத்து ஒரு கணை தொடுத்தார் அந்தக் கணையானது தாடகையின் மூத்தமகன் சுவாகு தலையை அறுத்தெறிந்தது. இளைய மகன் மாரீசன் அலைகடலில் போய் ஒளித்தான் இந்தவிதமாக இருக்கும் சமயம் மகாமுனிவரான விஸ்வாமுத்திரர்.

---

273. மக்கள் இருபேரும்-மாரீசனும் சுபாகுவும் (தாடகையின் மைந்தர்கள்)

(வேள்வியில் கிடைத்த அஸ்திரங்களை முனிவர் இலக்குவனுக்கு அளித்தல்)

தாடகைசங்காரம் முடிந்ததனால் வேள்வி
தவமுனிவர் பூர்த்தி செய்தார்
வேள்வியிலே தான் கிடைத்த நல்ல
280 வெற்றியுள்ள அஸ்திரங்கள்
மாமுனிவர் கையெடுத்து அப்போ
மாயன் தம்பியிடம் தான் கொடுத்து
என்ன என்ன விதமாக அங்கே
ஏற்றமாமுனிவர் சொல்லுகிறார்.

இந்த விதமாக வேள்வியில் கிடைத்த அஸ்திரங்களை எடுத்து விஸ்வாமுத்திர மகாமுனிவர் ராமன் தம்பியாகிய லெக்ஷ்மண னிடம் கொடுத்து வாராய் லெக்ஷ்மணா நீ இந்த அஸ்திரங்களை வைத்து பதிநாலு வருடம் பதிநாலு நாள் பதிநாலு நாழிகைஊண் உறக்கம் இல்லாமல் பாவித்து வந்தால் இந்த அஸ்திரங்கள் என்ன செய்யுமென்றால்.

285 இலங்கையைத் தான் அழித்திடுமே நல்ல
ஏழு சாகரத்தை ஒடுக்கிடுமே
வரம்பெற்ற இராவணனை மாய்த்து
வைகுந்தம் சேர்த்திடுமே
இந்திரசைத்து ஆனவனை நல்ல
290 எமலோகம் சேர்த்திடுமே

இந்தவிதமாக வார்த்தைகளை லெக்ஷ்மணனிடம் சொல்லி மகா முனிவர் அஸ்திரங்களை இளையவர் கையில் கொடுத்து அன்று இரவு முழுவதும் அந்த வனத்தில் தங்கியிருந்தார்கள்.

(இராமன் அயோத்திக்குத் திரும்ப விரும்புதல்)

மறுநாள் நல்ல தினமதிலே திரு
மாயன் அரி கோபாலன்
விஸ்வா முத்திரர் முகம்பார்த்து அந்த
வேதமாலும் ஏது சொல்வார்
295 என் குருவே மாமுனியே இப்போ
எந்தன் வார்த்தை கேட்டிடுங்கோ

282. வேள்வியில் தோன்றிய அஸ்திரங்களை இலக்குவனிடம் அளித்த தாகக் கூறுதல் காண்க 286, ஏழு சாகரம் -ஏழுகடல்கள் 289. இந்திரசைத்து- இந்திரசித்து

சுவாமி நாங்கள் தாடகை சம்பாரம் செய்யவேணுமென்று வந்தோம் இப்போது தாடகை சம்மாரம் செய்துவிட்டோம்.

ஆகையினால் மாமுனியே இனி
அய்யோத்தி போகவேணும்
(என்று) மாயபிரான் சொன்னபோது அந்த
300 மாமுனிவர் ஏது சொல்வார்

இந்த விதமாக ஸ்ரீராமர் அய்யோத்தி போகவேணுமென்று சொன்ன மாத்திரத்தில் மகாமுனிவர் என்னசொல்லுகிறார் என்றால் வாராய் ராமா உலகில் செல்வச் சிறப்பு நீதி நெறி தவறாத நாடு அய்யோத்தி. ஆனாலும்

(மிதிலை செல்வோமென முனிவர் கூறுதல்)

(அந்த) அய்யோத்தியிலும் அய்ந்து பங்காய் நல்ல
அழகு மிதுலைநகர் இருக்குதப்பா
மிதுலைநகர் பார்க்கவேணும் இப்போ
மேகவர்ண கோபாலா

வாராய் ராமா உங்கள் அய்யோத்தியை விட ஐந்து பங்கு அழகு பொருந்திய நாடு மிதுலைநகர் அந்நகரை ஆண்டு வரும் ஜனகராஜன் திருமகள் ஜானகி என்ற சீதா பிராட்டி அந்த சீதா பதினாறு வயதில் பருவப் பெண்ணாகி கன்னிகாமாடத்தில் தோழிப் பெண்களோடு அமர்ந்திருக்கிறாள் அந்த சீதாவை பல தேசத்து மன்னர்கள் பெண் கேட்டார்கள் அதை அறிந்த ஜனகராஜன் குலகுருவான

305 சதானந்தர் இடத்தில் சென்று அப்போ
சனகராஜன் தானும் சொல்வார்
சீதையைப் பெண் கேட்கும் மன்னர் நமது
சிவதனுசை வளைக்க வேணும்
(அந்த) வில்வளைத்த மன்னனுக்கே மகளை
310 விவாகம் செய்து கொடுப்பேன் என்றார்

இந்த விதமாக ஜனகராஜன் சொல்லியிருக்கிறார் அன்றுமுதல் இன்று வரையில் வில்விழா நடந்து வருகிறது ஆகையால் ராமா அந்த வில்விழா பார்க்கப் போக வேண்டுமா அல்லது அய்யோத்தி

---

296—297. சம்காரம். சம்பாரம் சம்மாரம் சங்காரம் என்றெல்லாம் ஒருசொல் பலவடிவில் வழங்கப்படுகிறது. அனைத்தும் பேச்சு வழக்கில உள்ளன.

302. மிதிலை நகர் 'மிதுலை நகர்' என்று வழங்கப்படுகிறது.

தான் போக வேண்டுமா என்று கேட்ட மாத்திரத்தில் எம் பெருமானுக்கு

வில்லென்று சொன்னபோது ஒரு
வேகமது வந்திடுமாம்
என்குருவே மாமுனியே இப்போ
எந்தன் வார்த்தை கேட்டிடுங்கோ
315 அய்யோத்தி போக வேண்டாம் நல்ல
அழகு மிதுலைநகர் போகவேணும்

என்று எம்பெருமான் சொன்னமாத்திரத்தில்மகாமுனிவர் இரு பேரையும் கூட்டிக்கொண்டு.

(மிதிலைவரும் வழியில் அகலிகை'சாபவிமோனம்' பெறுதல்)

அடந்தவனம் தனைக்கடந்து அவர்
அவசரமாய் ஏகிவாருர்
வனமான வனங் கடந்து அப்போ
320 வாருரே மூன்று பேரும்
அதலிகா வனமதிலே அவர்
அவசரமாய் வாறபோது
(ஒரு) கருங்கல்லின்மேலேயல்லோ நல்ல
கார்வண்ணன் பாதம் பட்டிடுமாம்
325 (அந்த) கல்லுமொரு பெண்ணுகி நின்று
கார்வண்ணனை வணங்கிடுவாள்

இந்தவிதமாக எம்பெருமான் அதலிகை வனத்தில் வாறபோது ஒரு கருங்கல் மீதில் எம்பெருமான் கால் பாதம் பட்ட மாத்திரத்தில் அந்த கல்லும் ஒரு பெண்ணுகி கண்ணன் முன்னே வணங்கி நின்ருளாம்.

அதை அறிந்தார் மாயபிரான் அப்போ
அருள் முனிவர் இடமதிலே
என்னஎன்ன விதமாக அங்கு
330 எம்பெருமான் கேட்கலுற்ருர்
என் குருவே குருநாதா இப்போ
எந்தன் வார்த்தை கேட்டிடுங்கோ

சுவாமி உலகிலுள்ள மானிடர்கள் கால்பாதம் ஒரு கல்லில் பட்டால் ரத்தம் கசிந்து வரும் இங்கு என் பாதமானது இந்த கல்லில் படவும் இந்தக் கல் ஒரு பெண்ணுகி என்னை வணங்கக் காரணம் என்னவென்று

321. அகலிகை வனம், 'அதலிகா வனம்' எனப்படுகிறது.

எம்பெருமான் கேட்டபோது — அங்கு
ஏதுசொல்வார் மாமுனிவர்
335 (ஏ) உலகளந்த மாயவனே — இது
உந்தனுட மகிமையப்பா

வாராய் இராமா இதுவெல்லாம் உன்மகிமையல்லாமல் வேறு ஒன்றும் கிடையாது அதாவது இந்தப் பெண் கௌதமருடைய தேவி. இவள் பெயர்தான் அதலிகை. இவள் கௌதமருக்குச் செய்த குற்றத்திற்காகவேண்டி இந்த பெண்ணை கௌதமர் கல் லாகச் சாபமிட்டார்

அப்போது அதலிகையாள் — அந்த
அருள்முனிவர் இடமதிலே
எந்தனுட சாபமது — சுவாமி
340 எப்போது நிவர்த்தியாகும்
(என்று) அதலிகையாள் கேட்டபோது — நல்ல
அருள்முனிவர் ஏதுசொல்வார்

வாராய் பெண்ணே அதலிகை உனக்கு இந்த சாபம் எப்போது நிவர்த்தியாகுமென்றால் அய்யோத்தி நாட்டு மன்னன் தேவியான கோசலைக்குப் பிள்ளையாகப் பிறந்து வளர்ந்து பதினாறு வயது பிராயத்தில் தவத்திலே சிறந்த

தவமுனியாம் விஸ்வாமுத்திரர் — அந்த
தாடகையாள் வனமதிலே
345 விண்ணவர்க்கு என்றுசொல்லி — நல்ல
வேள்விகளும் நடத்திடுவார்
அந்தநல்ல வேள்விகளை — அப்போ
அழித்திடுவாள் தாடகையாள்

அந்தத் தாடகையைக் கொல்வதற்கு விஸ்வாமுத்திரர் ராமன் லெக்ஷ்மணன் இருபேரையும் கூட்டிவந்து தாடகையை சங்கரித்து வேள்வியை முடித்து

வாழ்மிதுளை போகவென்று — அப்போ
350 வந்திடுவார் மூன்றுபேரும்
அந்தநல்ல சமயத்திலே — நல்ல
அச்சுதனார் திருப்பாதம்

---

336-337. இடைஉரை : அதலிகை-அகலிகை. 'கௌதமருக்குச் செய்த குற்றம் இங்கே விவரிக்கப்படவில்லை.

(இந்த) கல்லதிலே பட்டபோது கருங்
கல்லும்பெண்ணுப் மாறிடுமாம்

என்று கௌதம மகாமுனிவர் சொன்னவாக்கின்படி ராமா உன்பாதம்பட்டவுடன் கல்லும் பெண்ணுக மாறிவிட்டது என்று விஸ்வாமுத்திரர் சொன்ன மாத்திரத்தில்

355 எம்பெருமான் மாயவர்தான் அங்கு
ஏதுசொல்வார் அந்நேரம்
என்குருவே மாமுனியே இப்போ
எந்தன்வார்த்தை கேட்டிடுங்கோ

சுவாமி அப்படியாஞல் இந்த அதலிகை என்ற பெண்ணை கௌதம மகா முனிவரிடம் கூட்டிக்கொண்டுபோய் ஒப்படைத்து விட்டுத்தான் போகவேண்டும் என்று சொல்லவும் அப்படியே அவர்கள் அதலிகையைக் கூட்டிச்சென்று கௌதமரிடம் ஒப்ப டைத்துவிட்டு மீண்டும் எங்கே வருகிறுர்கள் ஆஞல்

(மிதிலை செல்லும் வழியில் மூவரும் வனங்கள்பல
கடந்து செல்லுதல்)

அதலிகையாள் வனங்கடந்து அந்த
360 அச்சுதனுர் ரெகுராமன்
மாமுனிவர் பின்னுலே அப்போ
மாயவனும் வழிநடந்தார்
அருமைத்தம்பி லெக்ஷ்மணனும் தன்
அண்ணன்பின்னுல் வழிநடந்தான்
365 மூன்றுபேரும் ஒன்றுபோலே அப்போ
மும்மூர்த்திபோல் ஏகிவாறுர்

இந்தவிதமாக விஸ்வாமுத்திரர் அதலிகை சாபம்தீர்த்து அடர் வனத்தில் வாறபோது மகாமுனிவர் ராமனைப்பார்த்து ஏராமா இத்த வனத்திலுள்ள அதிசயங்களைப் பார் என்று சொல்லி என்ன விதமாகச் சொல்லுகிறுரென்றுல்

(வேறு) - (7)

அதிசயம் பார்த்துவாருங்கோ-அடர்வனத்தில்
அதிசயம் பார்த்துவாருங்கோ (அதிசயம்)
பதிசதியோடுபுள்ளி மானது மேய்ந்திடுதே
பக்கத்தில் வேங்கை ஓடுதே அடடாஇந்த (அதிசயம்)
காட்டுப் புலியும் மானும் கலந்து உறவாடியே
நீரருந்துதே ஒருதுறையில் அடடா இந்த (அதிசயம்)

பாம்புடன் கீரிப்பிள்ளை பசும்புல்லில் உறவாடி
வீம்பை யடக்கி ஆளுதே அடர்வனத்தில் (அதிசயம்)

இந்த விதமாக வனத்திலுள்ள அதிசயங்களை எடுத்துச்சொல்லி மகாமுனியாகிய விஸ்வாமுத்திரர்

இருபேரையும் கூட்டிக்கொண்டு அங்கு
ஏகிவாருர் வனமதிலே
ஒவ்வொரு வனங்களையும் அந்த
370 உலகளந்தோன் பார்த்துவாருர்
இந்தவிதம் வாறபோது அப்போ
ஏதுசொல்வார் ராமபிரான்

சுவாமி மிதுளையாகிய பட்டணம் போகவென்று வனம் வனுந்திரம் குன்று தீவு மலை இவைகளைக்கடந்து இவ்வளவு வழி நடந்தும்

(மிதிலை நகரினைக் காணுதல்)

இன்னும்காணலையே வாழ்மிதுளை இங்கு
என்குருவே மாமுனியே
375 வாழ்மிதுளை யானதுதான் அதிக
வழிதூரம் இருக்கிறதோ
காதமுண்டோ தூரமுண்டோ அந்த
கனகநல்ல மிதுளைநகர்
(என்று) மாயபிரான் கேட்டபோது அந்த
380 மாமுனிவர் ஏதுசொல்வார்
காதமில்லை தூரமில்லை நல்ல
கனகமிதுளை நகரதுதான்
தெரியுதுபார் அன்னக்கொடி நல்ல
தென்றல்காற்றும் வீசுதுபார்
385 மன்னனுட கொலுமுகமும் பல
மாடமாளிகையும் தெரியுதுபார்

இந்தவிதமாக மகாமுனிவரான விஸ்வாமித்திரர் இருபாலர்களுக்கும் பலகாரணங்களைச் சொல்லி

(மிதிலையின் வடபுறமுள்ள நந்தவனத்தில்
மூவரும் தங்கி இளைப்பாறுதல்)

வாழ்மிதுளை வடபுறமாய் அப்போ
வந்துசேர்ந்தார் மூன்றுபேரும்
நந்தவனம் பக்கமாக அவர்
390 நாடிவாரூர் வேகமாக
மூன்றுபேரும் ஒன்றுபோலே நல்ல
மும்மூர்த்திபோல் ஏகிவாரூர்

இந்தவிதமாக மகாமுனிவர் ராமர் லட்சுமணர் இருபேரையும் கூட்டிக்கொண்டு வாழ்மிதுளைக்கு வடபுறமாக ஒரு நந்தவனச் சோலையின் பக்கம் ஒரு நாவல் மரம் நின்றது. அந்த நாவல்மரத் தடியில் மூன்றுபேரும் போய்

சிவசிவா என்றுசொல்லி நல்ல
தெய்வமுனி தானமர்ந்தார்
395 மாமுனிவர் பக்கத்திலே திரு
மாயபிரான் போயமர்ந்தார்
அண்ணனுட பக்கத்திலே அந்த
அருமைத்தம்பி தானமர்ந்தார்
மூன்றுபேரும் ஒன்றுபோலே அங்கே
400 மும்மூர்த்திபோல் தானமர்ந்தார்
அமர்ந்தபோது மூன்றுபேரும் வெகு
அசதியாகத் தான்படுத்தார்

(கன்னிமாடத்தில் இருந்த சீதை நந்தவனம்
சென்று பந்தாட விரும்புதல்)

இந்தவிதம் தானிருக்க அங்கு
இன்னுமென்ன நடக்குதென்றால்
405 சனகராஜன் திருமகள்தான் அந்த
சானகியாள் பெண்கொடியும்
பதினாறு வயததிலே நல்ல
பருவப்பெண்ணாய் தானுமாகி
கன்னிமாடம் தன்னதிலே அப்போ
410 கன்னிசீதா தானிருந்தாள்

402. அசதியாக-களைப்பாக.

இந்தவிதமாக சனகராஜன் திருமகளாகிய சானகி என்ற பெண்ணுள் பதிஞறுவயதில் பக்குவமடைந்து கன்னிப்பெண்கள் புடைசூழ கன்னிமாடத்தில் அமர்ந்திருந்தாள்

இந்தவிதம் தானிருக்க — அப்போ
ஏதுசொல்வாள் சானகியாள்
அருகிருக்கும் சேடிகளை — அவள்
அவசரமாய்த் தானழைத்து
415 என்னஎன்ன விதமாக — அங்கு
எடுத்துரைத்தாள் சானகியாள்

வாரீர் சேடிகளே நான் இதுவரை நமது கன்னிகா மாடம் தவர வேறு இடம் பார்த்ததில்லை ஆகையால் சேடிகளே நாம் எல்லோரும்

நந்தவனம் தானும்சென்று — நாம்
நாடிப்பந்து ஆடவேணும்
பூங்காவனம் போகவேணும் — நல்ல
420 பூப்பந்து அடிக்கவேணும்
ஆகையிஞல் சேடிகளே — எந்தன்
ஆசைவார்த்தை கேட்டிடுங்கோ

வாரீர் சேடிகளே இன்று நமது நந்தவனம் சென்று பந்து விளையாட என் தந்தையாகிய சனகராஜனிடம் விடைபெற்றுத் தான் போகவேண்டும் ஆகையால் சேடிகளே என்னை அலங்காரம் செய்யுங்கள் என்ருள் சானகியாள்.

(தந்தையிடம் அனுமதிபெறச் செல்லும் சீதையின் ஒப்பனை அழகு)

இந்தவிதம் இருக்கும்போது — அங்கு
ஏதுசெய்தார் சேடியர்கள்
425 சீதாவை அலங்கரிக்க — நல்ல
சேடியர்கள் கூட்டிவந்து
மஞ்சள்நீர் சாலையிலே — அவளை
மஞ்சள்நீர் ஆட்டுகிருர்
பன்னீரு சாலையிலே — அவளை
430 பன்னீரால் நீராட்டி
பன்னீரால் நீராட்டி — நல்ல
பட்டுகொண்டு தலைஉணத்தி

432. தலை உணத்தி-தலை உலர்த்தி.

சம்பங்கி எண்ணெய்தேய்த்து அவர்
தலைவாரிப் பூமுடித்தார்
435 வேணுமென்ற ஆபரணம் அப்போ
விதவிதமாய் பூட்டுகிறார்
காப்புமிட்டார் கொலுசுமிட்டார் அவள்
கைக்குத் தங்க வளையலிட்டார்
முன்னழகு போதாதென்று ஒரு
440 முத்துமாலை தானணிந்தார்
நாவேறு தைக்குமென்று அப்போ
நல்லஅஞ்சனமை தீட்டுகின்றார்
கண்ணேறு தைக்குமென்று நல்ல
கருஞ்சாந்து பொட்டுமிட்டார்

(சீதை தந்தையிடம் அனுமதி கேட்டல்)

இந்தவிதமாக சேடியர்கள் சீதாவை அலங்காரம் செய்தபின்னால் சீதாதேவி சேடிகளைக் கூட்டிக்கொண்டு

445 எங்கேஎங்கே ஏகிவாறாள் அந்த
ஏந்திழையாள் ஜானகியும்
சனகராஜன் அரண்மனைக்கு அப்போ
சானகியும் வழிவாறாள்
தையலரும் முன்னடக்க நல்ல
450 தாதியர்கள் பின்னடக்க
தந்தையுட நேரில்வந்து சானகி
தலைகுனிந்து வணங்கிநின்றாள்

இந்தவிதமாக ஜானகியாள் சேடிகளைக் கூட்டிக்கொண்டு தனது தந்தையாகிய ஜனகராஜன் நேரில்வந்து வணங்கிநின்றாள்

(அதைக்) கண்டாரே ஜனகராஜன் அவர்
கருத்தில்வேறு எண்ணுகிறார்
455 என்மகளே சானகியே நீயும்
இங்குவந்த காரணமேன்
வந்ததொரு காரணத்தை உன்
வாய்திறந்து சொல்லவேணும்

என்று ஜனகராஜன் கேட்டமாத்திரத்தில் ஜானகி என்ன சொல்லுகிறாளென்றால் வாரீர் எனது தந்தையே நான் இதுநாள்

441, 443. சொல்லாலும் பார்வையாலும் விளையும் தீமைகள் நாவேறு, கண்ணேறு எனக் குறிக்கப்பெறுகின்றன.

வரை நமது உப்பரிகை மேடையிலிருந்துதான் பந்து விளையாடி னேன் ஆகையால் இன்று

(நமது) நந்தவனம் போகவேணும் அங்கு
460 நாடிப்பந்து ஆடவேணும்
பூங்காவனம் போகவேணும் அங்கு
பூப்பந்து ஆடவேணும்
ஆகையால் தந்தையரே உங்கள்
அருமைமகள் சானகிக்கு
465 சென்றுநல்ல வருவதற்கு இப்போ
சேமவிடை கொடுத்திடுங்கோ

வாரீர் தந்தையே நான் நமது நந்தவனம்போய் பந்து விளையாட வாழ்த்தி வரங்கொடுங்கோ என்று ஜானகி கேட்டமாத் திரத்தில் ஜனகராஜன் என்ன சொல்லுகிருர் ஆனல்

(தந்தை மறுத்தலும், சீதை மீண்டும் தன் விருப்பத்திற்குரிய காரணங்களைக் கூறி அனுமதி பெறுதலும்)

என்னமகளே ஜானகியே இப்போ
எந்தன்வார்த்தை ஒன்றுகேளாய்
நந்தவனம் போகவேண்டாம் நீயும்
470 நாடிப்பந்து ஆடவேண்டாம்
வேனலது அடித்ததானல் அங்கு
வெயில்பொறுக்க முடியாது
கானலது அடித்ததானல் உனக்கு
கண்மயக்கம் வந்துவிடும்
475 ஆகையினல் என்மகளே உன்
அப்பாவார்த்தை கேட்டிடுவாய்
போகவேண்டாம் நந்தவனம் நல்ல
புத்திஒன்று சொல்லக்கேளாய்

வாராய் என் செல்லமகளே நீ நந்தவனம் போனயானல் வேனல் கானல் அடிக்கும். உனக்குக் கண்மயக்கம் வந்துவிடும். ஆகையால் ஜானகி நீ நந்தவனம் போகவேண்டாம் என்று ஜனக

---

465. 'சென்று நல்ல' என்பதில் 'நல்ல' எனும் சொல் அசையாகவே வந்துள்ளது. இவ்வாறே 'தான்', 'கானே', 'அல்லோ', 'அல்லவோ', 'நல்லோ' போன்ற சொற்கள் பொருள் இன்றி அசையாக வந்து ஓசை நிரப்புதலை வில்லுப் பாட்டிலே பலவிடங்களிலும் காணலாம்.

466-467. இடைஉரை : வரங்கொடுங்கோ-வரம்கொடுங்கள், வரம்தாருங்கள்.

471. வேனல்-கானல்-வெப்பம்.

ராஜன் சொன்னமாத்திரத்தில் செல்லமகளாகிய ஜானகி என்ன சொல்லுகிருள் என்ருல்

எந்தனுட தந்தையரே இப்போ
480 எந்தன்வார்த்தை கேட்டிடுங்கோ
செல்லமகள் ஜானகியாள் நல்ல
செய்திஒன்று சொல்லுகின்றேன்
தேங்காயைப் பார்த்திருக்கேன் நான்
தென்னைமரம் பார்த்ததில்லை
485 மாங்காயைப் பாத்திருக்கேன் எனக்கு
மாமரமும் தெரியாது
கொய்யாக்கனி புசித்திருக்கேன் ஆனல்
கொய்யாமரம் தெரியாது
முல்லைப்பூச் சூடிஇருப்பேன் எனக்கு
490 முல்லைச்செடி தெரியாது
ஆகையினல் எனதுதந்தை நான்
அடர்வனமே பார்க்கவேணும்

என்று சானகியாள் சொன்ன மாத்திரத்தில் ஜனகராஜன் தன்மகள் சொல்லுவது சரிதான் என்று எண்ணி மகளுக்கு விடை கொடுத்து அனுப்பவேண்டுமென்று எண்ணி என்ன செய்கிருர் என்ருல்

(சீதை பல்லக்கில் அமர்ந்து நந்தவனம் செல்லுதல்)

(நம்மகள்) கால்நடையாய் சென்ருளானல் அவள்
கால்பாதம் நோகுமென்று
495 ஓடும்வண்டியில் சென்ருளானல் நல்ல
உடம்பெல்லாம் நோகுமென்று
ஆயிரம்பேர் சுமந்துவரும் ஒரு
அழகுதண்டியலை வரவழைத்து
தண்டியலின் மேலாக அந்த
500 தையலாள் சீதாவுக்கு
வேனலது அடிக்குமென்று நல்ல
வெள்ளைக்குடை கட்டுகிருர்
பூக்குடையும் பொன்னூஞ்சலும் அங்கே
பூவையர்க்குக் கட்டுகிருர்

483. பாத்திருக்கேன்-பார்த்திருக்கிறேன்.
498. தண்டியல்-தண்டிகை, சிவிகை, பல்லக்கு.

இந்தவிதமாக ஜனகராஜன் ஆயிரம்பேர் சுமக்கும் ஒரு தண்டியலே வரவழைத்து அதை அலங்காரம் செய்து வெண்குடையும் பூக்குடையும் பொன்னூஞ்சலும் கட்டி ஊஞ்சலில் சீதாவை அமரச்செய்து ஆயிரம்தாதியர் ஒன்றுகூடி என்னசெய்கிருரென்ருல்

505 (அந்த) தண்டியலேத் தான்தூக்கி
தாதியர்கள் சுமந்துவாருர்
ஏலோலப் பாட்டுப்பாடி
ஏகிவாருர் தாதியர்கள்
நந்தவனம் போகவென்று
510 நங்கையர்கள் சுமந்துவாருர்
பூங்காவனம் ஆனதற்குள்
பொற்கொடியை கொண்டுவந்தார்

இந்தவிதமாக ஆயிரம் தாதியர்களும் தண்டியலேச் சுமந்து கொண்டு நந்தவனம் வந்துசேர்ந்தார்கள். அப்போது நத்தவனமானது சீதாதேவி பந்துவிளையாட வந்து இறங்கிய காரணத்தால் எப்படித் தோன்றுகிறதானுல்

பூக்காத மரங்களெல்லாம் அப்போ
பூப்பூத்து சொரிந்திடுமாம்
615 காய்க்காத மரங்களெல்லாம் நல்ல
காய்காய்த்து சொரிந்திடுமாம்

இந்தவிதமாக நந்தவனம் இருக்கும் அலங்காரத்தைக் கண்ட சீதாதேவி மனமகிழ்ந்து சேடியர்களேப் பார்த்து என்ன சொல்லுகிருளென்ருல் வாரீர் சேடிகளே நமது நந்தவனம் இருக்கும் அலங்காரத்தைப் பாருங்கள் என்று என்னவிதமாகச் சொல்லுகிருளானுல்

(வேறு)-(8)

பூங்காவனப் பெருமை
புகலுவேன்நான் சேடிகளா (பூங்கா)

பாங்காகவே மல்லிகை படருதே நறுமணங்கள்
பாரிசாதமோடு வாசம் கொடுத்திட
நேசமுடனிங்கு ரோசாமலருதே (பூங்கா)

கற்பகப்பூ மரமதிலோர் கானமயிலாடுதுபார்
கண்டுமகிழ்ந்திட வண்டுகள் பாடிட
கங்கையில் தாமரை தண்டு வளந்திட (பூங்கா)

---

505-512: இப்பகுதியின் இசை, விரைவு நடையில் அமைவதால் தனிச்சொல் அமைப்பு இல்லை எனலாம்.

அன்னப்பட்சி பூச்சிட்டுமே ஆனந்தக்கூத்தாடுதுபார்
அந்தரப் பெண்களும் சந்தோஷமாகவே
வந்துதானிங்கே மலர்களைக் கொய்திட (பூங்கா)

இந்தவிதமாக சீதாதேவி சேடிகளிடம் நந்தவனச் சிறப்பை எடுத்துசொல்லிவிட்டு மேலும் என்னசொல்லுகிருளாளுல்

(சீதை பந்தாடுதல்)

வாருங்கடி தாதியரே ஒரு
வார்த்தையது சொல்லக்கேளீர்
பந்தாடப் போறேன்நான் எந்தன்
520 பாவையரே ஒன்ருய்நின்று
நானடிக்கும் பந்தைநீங்கள் இப்போ
நலமுடனே தட்டவேணும்
என்றுசொல்லி ஜானகியாள் அங்கு
எடுத்துரைத்தாள் சேடியர்க்கே

வாரீர் சேடிகளே நான்பந்து விளையாடப்போறேன் நானடிக்கும் பந்தை நீங்கள் ஆயிரம்பேரும் தட்டவேண்டும் அப்படித் தட்டாமல் விட்டால் நான் உங்களுக்குத் தண்டனை கொடுப்பேன் என்று சொல்லிவிட்டு ஜானகியாள் என்னவிதமாகப் பந்தடிக்கப் போருளாளுல்

525 அய்வர்ணப் பந்தெடுத்தாள் நல்ல
அன்னமணி ஜானகியாள்
பஞ்சவர்ணப் பந்தெடுத்தாள் அங்கு
பைங்கிளியாள் சீதையம்மாள்
பூப்பந்தைக் கைலெடுத்தாள் அப்போ
530 பூவையந்த ஜானகியாள்

இந்தவிதமாக சீதாதேவி ஒரு அய்வர்ணப் பந்தை இடது கையில் எடுத்து வலதுகையால் பந்தை என்னவிதமாகத் தட்டு கின்ருளாளுல்

சிவசிவா உண்டுமென்று சொல்லி
சீதாதேவி பந்தடித்தாள்
அரகரா என்றுசொல்லி அப்போ
அடித்தாளே பந்ததைத்தான்
535 ஜானகியாள் அடித்தபந்து அங்கே
தான்கிளம்பி வருகுதையா

529. கைலெடுத்தாள் - கையில் எடுத்தாள்.

அன்னமணி அடித்தபந்து நல்ல
அந்தரமாய் போகுதய்யா

இந்தவிதமாக சீதாதேவி அடித்த பந்து ஆனது சேடியர் கண்ணுக்குத் தோன்றாமல் அந்தரமாகக் கிளம்பி எங்கே வருகிற தென்றால்

(சீதை அடித்த பந்து இராமன் காலடியில் வந்து விழுதல்)

(அந்த) நாராயணன் படுத்திருக்கும் அந்த
540 நவ்வல்மரமே வருகுதய்யா
மாயன்பிரான் இருக்குமிடம் நல்ல
மாதுசீதா அடித்தபந்து
சாமளனும் இருக்குமிடம் அந்த
ஜானகியாள் அடித்தபந்து
545 இராமனையும் பணிவதுபோல் அங்கு
நாடிவந்து விழுந்திடுமாம்

இந்தவிதமாக சீதாதேவி அடித்த பந்தானது சேடியர்கள் கண்களுக்குத் தோன்றாமல் நந்தவனத்தைவிட்டுக் கிளம்பி நவ்வல் மரத்தடியில் படுத்திருக்கும் எம்பெருமான் பாதத்தை வணங்குவது போல் வந்து விழுந்ததாம்.

(கண்விழித்த ராமன் சீதையைக் கண்டு வியத்தல்)

(அந்த) பந்துவந்து விழுந்தவுடன் அதை
பார்த்தாரே கண்விழித்து
கண்ணாலே பார்த்தபோது அவர்
550 கருத்தில்வேறு எண்ணுகிறார்
எண்ணாத எண்ணமெல்லாம் அப்போ
எண்ணுகிறார் எம்பெருமான்

ஆகா இந்த பந்தானது என்ன அழகாகத் தோன்றுகிறது. பார்க்கப் பாாக்க இலங்குகிறதே இந்தப் பந்தை ஆடவர்கள் வைத்து விளையாடமாட்டார்கள். இது பெண்கள் அடிக்கும் பந்து போல் தோன்றுகிறதே ஆகா இந்தப்பந்து இவ்வளவு அழகாக இருந்தால் இந்தப் பந்தைவைத்து விளையாடக் கூடிய பெண்மணி என்ன அழகோடு இருப்பாளோ என்று எண்ணி எம்பெருமான்

540. நவ்வல்மரம்- நாவல்மரம்.
543. சாமளன்-பச்சை நிறத்தோனாகிய இராமன். (சாமளம்-பச்சை).
545. பந்துவந்து இராமன் காலடியில் விழுதல் தற்குறிப்பேற்றமாகக் கூறப் படுகிறது.

(அந்த) பந்துவந்த திசையைநோக்கி — அப்போ
பார்த்தாரே எம்பெருமான்
555 நந்தவனம் ஆனதற்குள் — அந்த
நாயகியாள் சீதாதேவி
ஆயிரம் சேடியோடு — நல்ல
அன்னைசீதா இலங்குகின்முள்
கண்டாரே எம்பெருமான் — அவர்
560 கருத்தில்வேறு எண்ணுகிருர்

இந்தவிதமாகச் சானகியாள் நந்தவனத்துக்குள் ஆயிரம் சேடியர்கள் மத்தியில் நிற்பதைக்கண்ட எம்பெருமான் ஆகா இவள் என்ன அலங்காரம் என்ன ஒய்யாரம் என்ன சிங்காரம் இவ்வளவு அழகுள்ள பெண்ணுள் இவ்வுலகத்தில் பார்த்ததில்லை ஒரு சமயம் இவள்

இந்தரியோ சுந்தரியோ — இங்கு
இவளாரோ தெரியலையே
ஊர்வசியோ மேனகையோ — நல்ல
உள்நாட்டுக் கன்னிகையோ
565 சங்கையுள்ள இந்தமங்கை — அந்த
சமுத்திரா தேவிதானே
நாகலோகம் வாழுகின்ற — நல்ல
நாகராஜன் தேவிதானே

என்று ராகவன் சீதாவைப் பார்த்துப் புகழ்ந்து பேசிக்கொண்டு நாம் இந்தப் பெண்ணைப் பார்த்துக்கொண்டே இருந்தால் தவ முனிவரும் தம்பி லெக்ஷ்மணனும் விழித்துவிட்டால் நம்மைக்கண்டு நகைப்பார்கள் அது கேவலம் என்று மனதிலெண்ணிஎம்பெருமான்

(இராமன் பந்தினைச் சீதையிருக்குமிடம் நோக்கித் தட்டுதல்)

(இந்த) பந்துவந்த திசையைநோக்கி — அந்த
570 பந்தினையும் தட்டப்போமுர்
குனிந்துபந்தை எடுத்தோமானுல் — நம்
குருமுனிவர் பாத்துக்கொள்வார்

---

561. 'சுந்தரியோ' என்பதற்கு 'ஏற்றவாறு' 'இந்தரியோ' எனச் சொல்லப்பட்டது' இந்தரி—இந்திரை, இந்திராணி, பந்தாடும் வசந்தவல்லியைக் குற்றாலக் குறவஞ்சி 'இந்திரையோ இவள் சுந்தரியோ தெய்வரம்பையோ மோகினியோ' எனக் கூறுதல் காணலாம்.

565. சங்கை-ஐயம். ஊர்வசியோ மேனகையோ என்றெல்லாம் ஐயம் கொள்ளத்தக்க அழகுடைய இந்த மங்கை.

இருந்துபந்தை எடுத்தோமானுல் நல்ல
இளையோனும் கண்டுகொள்வான்
575 என்று எண்ணி எம்பெருமான் அங்கு
ஏதுசெய்தார் அன்னேரம்
இடதுகால் பெருவிரலால் அந்த
ஏற்றபந்தையும் தட்டுகிருர்

இந்தவிதமாக ராமபிரான் தனது இடதுகால் பெருவிரலால் தட்டிவிட அப்போது அந்தப் பந்தானது அந்தரமாக வந்து நந்த வனத்தில் ஆயிரம்தாதியர்கள் மத்தியில் நிற்கும் சீதாதேவியுடைய

(பந்து சீதையின் இடது தோள்மேல் விழுதல்)

இடதுதோள் புஜமதிலே அந்த
580 ஏற்றபந்து விழுந்திடுமாம்
பந்துவந்து விழுந்தபோது நல்ல
பாவைசீதா கீழ்விழுந்து
மயங்குகிருள் தயங்குகிருள் அப்போ
மாதுமணி ஜானகியாள்

இந்தவிதமாக எம்பெருமான் அடித்தபந்து ஆனது அன்னை சீதா இடதுதோள் புஜத்தில் விழுந்தபோது சீதா திடீரென்று மயங்கிப் பூமியில் விழுந்தாள்

(மயக்கமுற்ற சீதையை மங்கையர்கள் கன்னிமாடம் சேர்த்தல்)

585 (அதை) கண்டாரே தாதியர்கள் அப்போ
கனமுடனே ஓடிவந்து
தாங்கிநல்ல எடுத்திடுவார் நல்ல
தண்ணீர்கொண்டு கொடுத்திடுவார்
மடிமீது வைத்திடுவார் அங்கு
590 மண்ணைமிக துடைத்திடுவார்
மயக்கமதை தீர்ப்பதற்கு அந்த
மங்கையர்கள் வீசிடுவார்

இந்ததவிதமாக தாதியர்கள் சீதா மயக்கத்தைத் தீர்த்து ஆகா இனி சீதாவை இங்குவைத்திருந்தால் மோசம்வரும் என்று எண்ணி

579. பந்து இடதுதோளில் விழுந்தது என நயமாகக் குறிக்கப்படுகிறது. மங்கையரின் இடதுதோளும் கண்ணும் துடிப்பது இன்பத்திற்கு அறிகுறி என்பர். இடது தோளிலேயே பந்தும் விழுதல் இன்பத்தின் முன்னறிவிப்பாக அமைகிறது எனலாம்.

தாதியர்கள் தண்டியலில் தூக்கிவைத்து சுமந்துகொண்டு அவ ளிருக்கும் கன்னிகாமாடத்தில் கொண்டு சேர்த்தார்கள்.

(முனிவர், இராமன், இலக்குவன் மூவரும்
மிதிலைநகர் வருதல்)

இந்தவிதம் தானிருக்க அங்கு
இன்னுமென்ன நடக்குதென்றால்
595 மாயபிரான் முகம்பார்த்து நல்ல
மாமுனிவர் ஏதுசொல்வார்
வாராயப்பா ஸ்ரீராமா நாம்
வாழ்மிதுலை போகவேணும்
அரசனுட சபையதற்கு இப்போ
600 அவசரமாய் போகவேணும்
என்றுசொல்லி மாமுனிவர் அங்கு
இருபேரையும் கூட்டிவாறார்

இந்தவிதமாக மகாமுனிவர் ராமர் லெக்ஷ்மணன் இருபேரை யும் கூட்டிக்கொண்டு நவ்வல்மரத்தைவிட்டு மூன்றுபேரும் எங்கே வாறார்களானால்

வாழ்மிதுலை பட்டணமே அப்போ
வாறார்கள் மூன்றுபேரும்
605 தெருவான தெருவதிலே அவர்
தீவிரமாய் ஏகிவாறார்
ஏகிவரும் வேளையிலே நல்ல
எம்பெருமான் மாயவர்தான்
மாமுனிவர் முகம்பார்த்து: அந்த
610 மாயவரும் ஏதுசொல்வார்

வாரீர் மகாமுனிவரே இந்த மிதுளாபுரி பட்டணம்வந்து வில் வளைத்து சீதாவை விவாகம் செய்தால் உலகில் இல்லறம் பெரிதா அல்லது துறவறம் பெரிதா என்று ராமபிரான் கேட்டமாத்திரத் தில் தவமுனிவரான விஸ்வாமுத்தரர் என்ன சொல்லுகிறாரானால் வாராய் ராமா இல்லறம் பெரிதா துறவறம் பெரிதா என்பதை இந்த மிதுளாபுரி பட்டணத்திலேயே பார்த்துக்கொள்ளலாம் வாருங்களென்று மகாமுனிவர்

இருபேரையும் கூட்டிக்கொண்டு முனிவர்
ஏகிவாறார் தெருவதிலே
தெருவான தெருகடந்து நல்ல
தேரோடும் வீதிவிட்டு

615 ஒவ்வொரு தெருவாக அங்கே
உலகளந்தோன் பார்த்துவாருர்
வேதியர்கள் தெருவதிலே அப்போ
வேதமாலும் ஏகிவாருர்
அந்தத்தெரு ஆனதிலே ஒரு
620 அதிசயத்தைக் கண்ணுல்கண்டார்

(மூன்றுவகையான இல்லறத்தார் காட்சிகளைக் காணுதல்)

இந்தவிதமாக மகாமுனிவர் ராமன் லெக்ஷ்மணன் இருபேரையும் கூட்டிக்கொண்டு வருகிறபோது அந்த வேதியர்கள் தெருவில் தொண்ணூறு வயதுள்ள பட்டர் எண்பது வயதுள்ள அவரது மனைவியையும் கண்டபோது அந்த பிராமணியானவள் தன் கணவனை பட்டருக்கு அறுவகை ருசியுடன் அன்னங்கள்படைத்து தானும் உண்டு இருபேர்களும் புசித்தபின்பு வேதியர் அன்ன ஊஞ்சலில் வந்துபடுத்தார் அதையறிந்த பிராமணியானவள்

(தனது) மன்னனுட பக்கம்வந்து அப்போ
மங்கையந்த பிராமணியும்
என்னஎன்ன விதமாக அங்கு
எண்ணுகிருள் பிராமணியும்
625 வேர்வையது அடித்ததானுல் நம்
வீரமன்னர் தூங்கமாட்டார்
(என்று) மயிலிறகு விசிறிகொண்டு அந்த
மங்கையவள் வீசுகிருள்

இந்த விதமாக வேதியர் அன்ன ஊஞ்சலில் படுத்திருக்க பிராமணியானவள் விசிறிகொண்டு வீசிக்கொண்டிருப்பதைக் கண்ட மகாமுனிவர் ராமனைப்பார்த்து ஏ ராமா இல்லறத்தின் மகிமையைப் பார்த்தாயா என்று ராமனிடம் சொல்லிக்கொண்டு மேலும் இந்த விதமாக ராமபிரான் வேதியர் தெருவைக்கடந்து செட்டிமக்கள் தெருவில் வாறபோது அந்தத் தெருவில் முப்பது வயதுள்ள ஒருவர் இருபத்தைந்து வயதுள்ள அவர் மனைவி இருவரையும் கண்டார்கள். அந்தப் பெண்ணுள் தன் கணவனுக்கு அறுவகை ருசியுடன் அன்னங்கள் படைத்து தன் கணவனை சாப்பிட உட்காரவைத்து அருகிலே இருந்து இருகரங்கள் கொண்டு வணங்கிநின்ருள் சாப்பிடுங்கள் என்று உபசரணை சொல்லிநின்ருள் அதைக்கண்ணுல் கண்ட

620. இதன் பின்னர் வரும் நிகழ்ச்சிகள்—இல்லறத்தார் காட்சிகள் விலை மாதர் செயல்கள் போன்றவை, பாடுவோரால் அவ்வப்போது புனைந்து சேர்க்கப் பெற்றவை எனலாம்.

மாயபிரான் ஆனவர்தான்
630 மனமகிழ்ச்சி தானுங்கொண்டு
இல்லறத்தின் பெருமையது
எவ்வளவு பெருமையாச்சே
என்றுஎண்ணி எம்பெருமான்
இன்பமது தானடைந்தார்
635 அந்தத்தெரு ஏகிவாருர்
அடுத்ததெரு தனைக்கடந்து
வேடுவர்கள் தெருவதிலே
வேதமாலும் ஏகிவாருர்
அந்தத்தெரு ஆனதிலே ஒரு
640 அதிசயத்தைக் கண்ணுல்கண்டார்

இந்த விதமாக எம்பெருமான் வந்து பார்க்கும்போது இருபத்தைந்து வயதுள்ள ஒருவனும் இருபது வயதுள்ள மனைவியும் ஆக இருபேரும் வீட்டிலிருக்கும் போது அந்தப் பெண் ஆனவள் ஓர் ஆசனத்தில் அமர்ந்துகொண்டு கையிலொரு புத்தகத்தை வைத்துப் படித்துக்கொண்டிருந்தாள்

அந்தநல்ல வேளையிலே
அவள்கணவன் வேடுவனும்
அடுப்பின்முன்னே தானும்வந்து
அனலதையும் மூட்டுகிருன்
645 கண்டாரே மாயபிரான்
கருத்தில்வேறு எண்ணம்கொண்டு
மாமுனிவர் முகம்பார்த்து
மாயவனும் ஏதுசொல்வார்

சுவாமி இந்த வேடுவன் வீட்டில் இல்லறத்தின் மகிமையைப் பாருங்கள் என்று சொல்ல மகாமுனிவர் ராமா இதுதான் உலகம் பலவிதம் என்று சொல்வது என்று கூறிவிட்டு மகாமுனிவர் இரு பேரையும் கூட்டிக்கொண்டு

(மூவரும் கணிகையர் தெருவழியே வருதலும், இராமன் அழகில் அம்மங்கையர் மையல் கொள்ளுதலும்)

அந்தத்தெரு தனைக்கடந்து
650 அடுத்ததெரு ஏகிவாருர்
தெருவான தெருகடந்து
தீவிரமாய் ஏகிவாருர்
தாசியுட தெருவதிலே

626-662. இசை வேறுபாட்டினுல் இப்பாட்டுப் பகுதிகளில் தனிச்சொல் அமைப்பு இல்லை எனலாம்,

தாமோதரன் வழிவாருர்
655 கணிகையர்கள் தெருவதிலே
கார்வண்ணன் தானும்வாருர்
விலேமாதர் தெருவதிலே
வேதமாலும் ஏகிவாருர்
இந்தவிதம் வாறவேளே
660 என்னஎன்ன நடக்குதானுல்
அந்தத்தெரு பெண்களெல்லாம்
அரிராமன்மேல் மையல்கொண்டார்

இந்தவிதமாக எம்பெருமான் தாசிகள் தெருவில் வாறபோது அங்கு ஐம்பது வீட்டுத் தாசிகள் குடியிருந்தனர். அதில் முதல்வீடு அன்னமென்ற தாசிவீடு அந்த அன்னமென்றவள் எம்பெருமான் அழகைக்கண்டு என்னவிதமாக எண்ணுகிருளானுல் ஆகா இந்த அரசகுமாரனுட அழகை நான்

கண்ணுலே கண்டபோது என்
கருத்தெல்லாம் மாறுதிப்போ
665 சிறுவனேயும் பார்த்தவுடன் என்
சிந்தைவேறு ஆகுதிப்போ
பச்சைநல்ல நிறமழகும் இவன்
படர்ந்தமணி மார்பழகும்
கையிலிருக்கும் வில்லழகும் என்
670 கருத்தைமிக மாற்றுதிப்போ
வருவாரோ சேருவாரோ இப்போ
வந்துமுத்தம் கொடுப்பாரோ
என்றுஎண்ணி தாசியவள் அங்கே
எண்ணுது எண்ணுகிருள்

இந்தவிதமாக அன்னமென்ற தாசியானவள் எம்பெருமான் மேல் காதல் கொண்டு நாணமுற்று ராமன் முன்னுலே வந்து என்ன சொல்லுகிருளென்ருல்

675 வலமிருந்து இடம்வருவாள் அவள்
வாய்பொத்தி நின்றிடுவாள்
இடமிருந்து வலம்வருவாள் அவள்
எட்டிப்பார்த்து சிரித்திடுவாள்
முன்னேவந்து நினறிடுவாள் ராமன்
680 முகத்தைப்பார்த்து நகைத்திடுவாள்

666. ஆகுதிப்போ-ஆகிறது இப்போது

| | | |
|---|---|---|
| | கண்சாடை செய்திடுவாள் | அவள் |
| | கலகலவென்று சிரித்திடுவாள் | |
| | மன்னுவென்று கூப்பிடுவாள் | ராமன் |
| | மடியைஎட்டி இழுத்திடுவாள் | |
| 685 | ஆசைமன்னு என்றழைப்பாள் | என் |
| | அரண்மனைக்கு வாருமென்பாள் | |
| | பஞ்சணைகள் விரித்திருக்கேன் | நல்ல |
| | பால்பழங்கள் வைத்திருக்கேன் | |
| | வீட்டிற்கு வாரும்மன்னு | நல்ல |
| 690 | வெற்றிலையும் தின்றிடலாம் | |
| | இந்தவிதம் தானினைத்து | அவள் |
| | எம்பெருமான்மேல் மையல்கொண்டாள் | |

இந்தவிதமாக அன்னமென்ற தாசியானவள் ராமன் முன்னால் வந்து கண்சாடை செய்து காதல்கொள்வதைக் கண்ட மற்றும் நாற்பத்தொன்பது வீட்டு தாசிப் பெண்களும் ஓடிவந்து ராமனைச் சுற்றி வளைத்தார்கள்.

(இராமனின் செயலால் கணிகையர் மனம் திருந்துதல்)

| | | |
|---|---|---|
| | (அதைக்) கண்டாரே ராமநாதன் | தன் |
| | கருத்தில்வேறு எண்ணங்கொண்டு | |
| 695 | தாசிப்பெண்கள் ஆசைதீர | அப்போ |
| | தாமோதரன் ஏதுசெய்தார் | |
| | மன்மதனை வரவழைத்து | நல்ல |
| | மாயன்அரி கோபாலன் | |
| | என்னஎன்ன விதமாக | அங்கு |
| 700 | எம்பெருமான் செய்யலுற்றார் | |

இந்தவிதமாக எம்பெருமான் மன்மதனை வரவழைத்து ஐம்பது தாசிகளுக்கும் ஐம்பது ராமனைப்போல் அந்தத் தாசிப்பெண்கள் பின்னால் அனுப்பிவைத்தார். பெண்களும் ராமனைக் கூட்டிக் கொண்டு அவரவர் அரண்மனைக்கு வந்தார்கள். அப்போது தாசிப் பெண்கள் இடவழியில் வாறபோது ராமனை திரும்பிப்பார்த் தார்கள். ராமன் மாயமாக மறைந்துவிட்டார்.

| | |
|---|---|
| (அதை) கண்டாரே தாசியர்கள் | தங்கள் |
| கருத்தில்வேறு எண்ணுகிறார் | |

700-701. இடையுரை : இடவழியில் வாறபோது –இடைவழியில் வருகிற போது.

எண்ணுத எண்ணமெல்லாம் அவர்
எண்ணிமனம் வாடுகிருர்
705 ஆலோசனை தானும் கொண்டு அந்த
ஆயிழைமார் ஏதுசெய்தார்

ஆகா நாம் இனிமேல் ஆடவர்களிடமிருந்து காசுகளை பிடுங்கி ஆசைகொள்ளும் வேசைத் தொழிலை இன்ருேடு மறந்துவிடவேணு மென்று எண்ணி அதை அடியோடுமறந்து அவரவர் வீட்டில்போய் அமர்ந்தார்கள்

(கன்னிமாடத்திலிருந்த சீதை இராமனைக் காணுதல்)

இந்தவிதம் தானிருக்க அப்போ
எம்பெருமான் மாயவர்தான்
மாமுனிவர் பின்னுலே நல்ல
710 மாயபிரான் ஏகிவாருர்
தாசியுட தெருகடந்து அப்போ
சாமளனும் வழிவாருர்
தெருவான தெருகடந்து நல்ல
தேரோடும் வீதிவிட்டு
715 வன்னியர்கள் தெருகடந்து அங்கு
வலம்சுற்றி ஏகிவாருர்
கன்னிசீதா இருக்குமிடம் அப்போ
கார்வண்ணன் வழிவாருர்

இந்தவிதமாக எம்பெருமான் தாசிகள் தெருவைக் கடந்து ஜனகராஜன் திருமகளாகிய சீதாதேவி இருக்கும் கன்னிகாமாடம் பாதைகூடி எவ்விதமாக வருகிருர்கள் என்ருல்

மாமுனிவர் முன்னடக்க அரி
720 மாயபிரான் பின்னடக்க
அருமைதம்பி லெக்ஷ்மணன் அங்கு
அண்ணன்பின்னுல் வழிவாருர்
மூன்றுபேறும் ஒன்றுகூடி நல்ல
மும்மூர்த்திபோல் ஏகிவாருர்
725 இந்தவிதம் வாறபோது அங்கு
என்னஎன்ன நடக்குதென்ருல்

715. பாடும் இடந்திற்கு ஏற்றவாறு இவ்வாறு சிலசெய்திகளைச் சேர்த்துக் கொள்வர்

இந்தவிதமாக எம்பெருமான் மகாமுனிவர் பின்னால் வழி நடந்து வாறபோது அந்தத் தெருவிலுள்ள பச்சி பறவைகளெல் லாம் என்னவிதமாகப் பாட்டுப்பாடுகிறதென்றால்

சீதைமணவாளன் வாறாரென்று அங்கு
சேர்ந்துகுருவி சத்தமிட
ஜானகிமணவாளர் வாறாரென்று அப்போ
730 சகலகுருவிபாசை பாடுதங்கே
குருவிபாசை பாடுவதை அந்த
கோதைசீதா தானறிந்து
என்னஎன்ன விதமாக அப்போ
எண்ணுகிறாள் ஜானகியாள்

இந்தவிதமாக பச்சிபறவைகள் பாடும் சத்தத்தை யறிந்த சீதாதேவி பச்சிகள் பாசை தெரிந்திருப்பதால் அருகிலிருந்த சேடி களைக் கூட்டிக்கொண்டு கன்னிகாமாடத்தின் மேடையிலிருந்து கீழே பார்க்கும்போது

மாமுனிவர் பின்னாலே நல்ல
மாயபிரான் வாறதைத்தான்
கண்ணாலே தானும்கண்டு அவள்
கருத்தில்வேறு எண்ணுகிறாள்
எண்ணாத எண்ணமெலாம் அப்போ
740 எண்ணுகிறாள் தன்மனதில்
தாதியரை அருகழைத்து நல்ல
ஜானகியும் ஏதுசொல்வாள்

அதாவது மகாமுனிவர் பின்னால் வரும் ராமனைக்கண்ட ஜானகியாள் சேடிகளை அருகில் அழைத்து ராமனைப் பார்க்கச் சொல்லி என்னவிதமாகச் சொல்லுகின்றாளானால் வாரீர் சேடிகளே இதற்குமுன் எத்தனையோ ராஜாக்கள் போனார்களே. ஒருவராவது இந்த அழகோடு இருந்தார்களா இந்த மன்னனைப்பார்க்கும்போது

(வேறு)-(9)

சாமளரூபனடி சாந்தகுணதீரனடி
கோமளச்சிங்காரனடி—என்தோழிகாள்
கொஞ்சுங்கிளி வாசனடி—என்தோழிகாள்

பக்தனவர் முன்னடக்க பாலனவர் பின்னடக்க
மத்தியிலே போறாரடி—என்தோழிகாள்
மாரகுண தீரனடி—என்தோழிகாள்

---

726-727. இடைஉரை : பச்சி பறவைகள் - பலவகையான பறவைகள் (பச்சி-பட்சி).

730. சகல குருவி பாசை -எல்லாவிதமான பறவை மொழிகள்.

வில்விழா பார்க்கவென்று வேடிக்கையாய் வந்தவரோ
மன்மதனும் இருப்பாரோ—என்தோழிகாள்
மாலையிடவந்தவரோ—என்தோழிகாள்

என்று ஜானகியாள் மனமகிழ்ந்து பாடுவதைக்கண்ட சேடியர்கள் அறிந்து ஏ ஜானகி நீ என்ன புத்தி படைத்தாய் வழியில் போகும் ஆடவர்களைக் கண்டு காதல்கொண்டால் இது முறையாகுமா வென்று சொல்லி சேடியர்கள் சீதாவைக் கூட்டிக் கொண்டு கன்னிகாமாடம் சேர்த்தார்கள். அப்போது சீதாதேவிக்கு கன்னிகா மாடத்திலிருக்கும்

(இராமனின் அழகில் மயங்கிய சீதையின் மன நிலை)

| | | |
|---|---|---|
| | கல்தூணைப் பார்த்தாலும் | அந்த |
| | கண்ணன்போல் தோன்றிடுமாம் | |
| 745 | மண்சுவரைப் பார்த்தாலும் | அரி |
| | மாயன்போல் தெரிந்திடுமாம் | |
| | திருவிளக்கைப் பார்த்தாலும் | சீதைக்கு |
| | திருமால்போல் தோன்றிடுமாம் | |
| (இப்படி) | கண்டகண்ட இடங்களெல்லாம் | மாயன் |
| 750 | கண்ணன்போல் தோன்றிடுமாம் | |

இந்தவிதமாக சீதாதேவி ராமபிரானைக் கண்ட நேரம்முதல் ஒரே எண்ணத்தோடு மதிமயங்கி இருந்தாள்

(இராம, இலக்குவர் முனிவருடன் சனகர் அவையினை அடைதல்)

| | | |
|---|---|---|
| | இந்தவிதம் தானிருக்க | அங்கு |
| | எம்பெருமான் மாயவர்தான் | |
| | மன்னனுட சபையைநோக்கி | அரி |
| | மாயபிரான் வாறபோது | |
| 755 | அரசனுட கொலுமுகத்தில் | நல்ல |
| | அன்னக்கொடி பறந்திடுமாம் | |
| | பறக்குமொரு அன்னக்கொடி | அதன் |
| | பாவினையைத் தானறிந்தார் | |

---

758. பாவினை-பாவனை. (பாவனை-எண்ணம்)

758-759. இடைஉரை : கொடி ஆடுதல், மன்னர் மகளை மணக்க வருக என அழைப்பதுபோல உள்ளதென த் தற்குறிப்பேற்றமாகக் கூறப்படுகிறது.

அதாவது ஸ்ரீராமபிரான் ஜனகராஜன் கொலுவை நோக்கி வாறபோது அங்கு பறக்கின்ற அன்னக் கொடி என்ன பாவினை யாக ஆடுகின்றதென்றால், இராமா வாருங்கள், வாருங்கள் எங்கள் நாட்டு மன்னர்மகளை மாலையிட வாருங்கள் என்ற பாவினையாக ஆடுகிறதாம் அன்னக்கொடி.

இந்தவிதம் தானிருக்க — அப்போ
760 எம்பெருமான் மாயவர்தான்
மாமுனிவர் பின்னாலே — அங்கு
மன்னன்சபை அருகில்வந்தார்
(அதை) அறிந்தாரே ஜனகராஜன் — நல்ல
அருள்முனிவர் வருவதைத்தான்
765 கண்ணாலே கண்டபோது — இரு
கரமெடுத்து வணங்குகிறார்

சுவாமி அடியேன் தாங்களைப் பார்ப்பதற்கு என்னதவம் இருந்தேனோ தாங்களை என் கண்ணால் கண்டபோது என் கவலை யெல்லாம் மாறிவிட்டது என்றுசொல்லி மேலும் என்ன சொல் கிறாரானால்

தாங்களுட திருப்பாதம் — இந்த
தாரணியில் பட்டபோது
எந்தன்பாவம் அல்லாமல் — இங்கு
770 எந்தன் குடிசனங்கள் பாவங்களும்
சூரியனைக் கண்டோடும் — நல்ல
துலங்குமொரு பனியதுபோல்
எந்தனுட பாவமெல்லாம் — இங்கு
இன்றோடு தீர்ந்ததையா

என்று சனகராஜன் மகாமுனிவரை அடிபணிந்து வணங்கி ஒரு ஆசனத்தில் அமரச்செய்து மேலும் என்ன சொல்லுகிறார் ஆனால் சுவாமி

775 தங்களுட பின்னாலே — இங்கு
தானே வந்திருக்கும் சிறுவர்கள்
யாருடைய மக்களய்யா — அது
எந்தனுக்குத் தெரியவேணும்
(என்று) சனகராஜன் கேட்டபோது — அந்த
780 தவமுனிவர் ஏதுசொல்வார்

சுவாமி தங்கள் பின்னால் வந்திருக்கும் சிறுபாலர்கள் யார் என்று கேட்டபோது தவமுனிவர் என்ன சொல்லுகிறார் ஆனால்

வாராய் ஜனகபூபதி இந்தச் சிறுவர்கள் இருபேரும் சூரியகுலத்தில் பிறந்த

தசரத மன்னனவர் வெகு
தவமிருந்து பெற்றபாலர்
கோசலையாள் பெற்றெடுத்த நல்ல
கோபாலன் இவனல்லவோ
785 சுமத்திரையாள் பெற்றெடுத்த நல்ல
துரிதமுள்ள லெக்ஷ்மணனும்

வாராய் ஜனகபூபதி இவர்கள் இரண்டு பேரும் அய்யோத்தி நாட்டு மன்னனான தசரதர் பெற்ற பாலர்கள் இவர்கள் பெயர் ராமன் லெக்ஷ்மணன். இவர்கள் தம்பி பரதன் சத்துருக்கன் அய்யோத்தியிலிருக்கிறார்கள். இவர்கள் தாயார் பெயர் கோசலை கைகேசி சுமத்திரை என்ற மூன்றுபேர் என்று மகாமுனிவர் சொன்ன மாத்திரத்தில் ஜனகராஜன்

(சனகர் வில்விழாவுக்கு ஏற்பாடுசெய்தல்)

மனமகிழ்ச்சி தானும்கொண்டு அப்போ
மாமுனிவர் இடமதிலே
என்னஎன்ன விதமாக அங்கு
790 எடுத்துரைத்தார் ஜனகராஜன்
அய்யோத்திநாட்டு மன்னன்மக்கள் இந்த
அரசன்சபை வந்ததினால்
வில்விழாவை நடத்தவேண்டும் இப்போ
விஸ்வாமுத்திர மாமுனியே

என்று ஜனகராஜன் மனமகிழ்ச்சி கொண்டு மகாமுனிவரிடம் ஏ சுவாமி இனி வில்விழாவை நடத்தவேண்டும் என்று சொல்லி என்ன செய்கிறானால்

795 கிங்கிலிவரைத் தானழைத்து அப்போ
கிருபையுடன் ஏதுசொல்வார்
வாரும் பிள்ளாய் கிங்கிலிவரே இங்கு
வார்த்தை ஒன்று சொல்லக்கேளீர்

வாரீர் கிங்கிலிவர்களே இன்று நீங்கள் வில்மணி மண்டபத்தில் போய் வில்லைத் தூக்கிக் கொண்டு சபா மண்டபம் கொண்டுவந்து

795. கிங்கிலிவர் – கிங்கரர், ஏவல் செய்வோர்.

இறக்குங்கள் என்று ஜனகராஜன் தெரிவித்தபோது வில்சுமக்கும் கிங்கிலிவர்கள் என்ன சொல்லுகிறார்கள் ஆனால்

மன்னாதி மன்னவரே — எங்கள்
800 மகுடமுடி ராஜமன்னா
வில்சுமக்க முடியாதையா — நாங்கள்
வேறுதேசம் போயிடுவோம்
சீதாவில்லைச் சுமக்கமாட்டோம் — இனி
சென்றிடுவோம் வேறுதேசம்

வாரீர் ஜனகமகாராஜனே நாங்கள் காலமெல்லாம் வில்சுமந்து எங்களுக்கு வேதனையாகிவிட்டது. இனி வில்சுமக்க முடியாது என்று கிங்கிலிவர்கள் சொன்னமாத்திரத்தில் ஜனகராஜன் என்ன சொல்லுகிறார் ஆனால் வாரீர் கிங்கிலிவர்களே நீங்கள் இன்று ஒரு நாளும் வில்மணி மண்டபத்திலிருந்து வில்லைத்தூக்கி சபா மண்டபம் கொண்டு போட்டால் போதும் என்று ஜனகராஜன் சொன்ன மாத்திரத்தில்

805 ஆயிரம் கிங்கிலிவர் — அங்கு
ஆலோசனை செய்யுகிறார்
ஆலோசனை தானும்செய்து — இப்படி
அரசன்சபை தனைக்கடந்து
வில்மணி மண்டபமே — அங்கு
810 விரைந்து வாறார் கிங்கிலிவர்

இந்தவிதமாக வில்மணிமண்டபம் ஏகிவந்த ஆயிரம் கிங்கிலிவர்களில் ஐநூறுகட்டையர்கள் ஒருபக்கம் ஐநூறு நெட்டையர்கள் ஒரு பக்கமுமாக நின்று வில்தூக்கித் தோளில் வைத்து என்னவிதமாக வாறார்களானால்

ஏலோலப் பாட்டுப்பாடி — அங்கு
ஏகிவாறார் கிங்கிலிவர்
இந்தவில்லும் ஒடியாதோ — இனி
எங்கள் சுமை மாறாதோ
815 ஜானகிவில் ஒடியாதோ — எங்கள்
தலைச்சுமைகள் மாறாதோ

இந்தவிதமாக ஆயிரம் கிங்கிலிவர்களும் வில்லைச் சுமந்து அரசர் சபாமண்டபம் கொண்டுவந்து இறக்கினார்கள்

இந்தவிதம் தானிருக்க — அப்போ
ஏதுசொல்வார் ஜனகராஜன்
அரசருட சபையில்வந்து — மன்னர்
820 அவசரமாய் ஏதுசொல்வார்

வாரீர் அரசமன்னர்களே இந்த சிவ தனுசை யாரெடுத்து வளைத்தாலும் வளைத்தவர்க்கே என்மகள் சீதாவை திருமணம் செய்து கொடுப்பேன் என்று ஜனகராஜன் சொன்ன மாத்திரத்தில்

(மன்னர்கள் கூடியிருந்த அவையில் இராமன் வில் வளைத்தல்)

கொங்குதேச மன்னன் வந்து — இது
கூடாது என்று போனார்
அங்கதேச மன்னன் வந்து — வில்
அசையுதில்லை என்றுபோனார்
825 பாண்டிதேச மன்னன்வந்து — இது
பாரவில்லு என்றுபோனார்
ஈழதேச மன்னன்வந்து — இது
என்னாலே முடியாதென்றார்

இந்தவிதமாக அவனி ஐம்பத்தாறு தேச அரசர்களும் வில்லைத் தொட்டு வணங்கி சபையில் வந்து அமர்ந்தார்கள். யாராலும் சிவ தனுசை எடுத்து வளைக்க முடியாமல் ஆனபோது என்ன நடக்குதானால்

இந்தவிதம் தானிருக்க — அங்கு
830 ஏகிவாறார் நாரதரும்
மன்னர்சபை தானும் வந்து — நாரத
மாமுனிவர் ஏதுசொல்வார்

இந்தவிதமாக நாரத மாமுனிவர் வந்து அவனி ஐம்பத்தாறு தேச ராஜாக்களைப் பார்த்து என்ன சொல்லுகிறார் ஆனால்

(ஏ) மன்னாதி மன்னர்களே — நல்ல
மகுடமுடி ராஜர்களே
835 இத்தனை பேர் இங்குவந்து — யாரும்
இந்தவில்லை வளைக்கலையோ
வீரர்கள் என்றுசொல்லி — நீங்கள்
வீதிவழி வருகலாமா

836. வளைக்கலையோ - வளைக்கவில்லையோ.

மன்னவர்கள் என்றுசொல்லி இந்த
840 மாசபைக்கு வருகலாமா

இந்தவிதமாக நாரத மகாமுனிவர் அரசர்களை அவமதித்துப் பேசிக் கொண்டு நிற்பதைக் கண்ட லட்சுமணன் விஸ்வாமுத்திரர் நேரில் வந்து என்ன சொல்லுகிறாரானால்

என்குருவே மாமுனியே இப்போ
எந்தன் வார்த்தை கேட்டிடுங்கோ
வீரர்கள் இல்லையென்று இவர்
வேதாந்தம் பேசலாமா
845 சூரர்கள் இல்லையென்று இவர்
சொல்லிவசை பேசலாமா

இந்தவிதமாக நாரத மகாமுனிவர் அரசர்களை அவமதித்துப் பேசுவதைக் கண்ட லெக்ஷ்மணன் விஸ்வாமுத்திரர் நேரில் வந்து சுவாமி எனக்கு வில்வளைக்க விடைகொடுங்கள் நான் உடனே சென்று அந்த வில்லை

வளைக்கணுமோ ஒடிக்கணுமோ அதை
வாரிக்கடலில் வீசணுமோ
என்ன என்னசெய்யணுமோ நான்
850 இப்போதே செய்துவாறேன்

என்று லெக்ஷ்மணன் கேட்டபோது அந்த நல்முனிவர் ஏது சொல்வாரானால் வாராய் லெக்ஷ்மணா உனக்கு அந்த வில்லை வளைக்க முடியும் ஒடிக்கவும் முடியும் ஆனால் உன் அண்ணன் இருக்கும்போது நீ வில்வளைத்தால் பெண் உனக்கு ஆகையால் உன் அண்ணன் இருக்கும்போது நீ முன்னால் திருமணம் செய்யக் கூடாது ஆத்திரப்படாதே என்று சொல்லிவிட்டு மகாமுனிவர்

கண்சாடை செய்யுகிறார் அவர்
கண்ணனுட நேரில் நின்று
வில்வளைக்கப் போவதற்கு அங்கு
விடைகொடுக்க வேணுமென்று
855 (தனது) தாடியையும் தானசைத்தார் நல்ல
தவமுனிவர் விஸ்வாமுத்திரர்

838. வருகலாமா - வரலாமா.
847. வளைக்கணுமோ-வளைக்க வேண்டுமோ. (இவ்வாறே பிறவும்கொள்க)

இந்தவிதமாக விஸ்வாமுத்திரர் தாடி அசைவதை அறிந்த ராமன் ஆகா மாமுனிவர் வில்வளைக்க நமக்கு விடைகொடுத்து விட்டார் என்று எண்ணி

வேகமாகத் தானெழுந்து ராமன்
விஸ்வாமுத்திரரைத் தான் வணங்கி
சிவதனுசின் அருகாக அப்போ
860 ஸ்ரீராமன் வந்துநின்றார்

இந்தவிதமாக எம்பெருமான் வில்லின்பக்கமாக வந்து நின்று என்னவிதமாக எண்ணுகிறுராளுல் இந்த வில்லை

குனிந்துநாம் எடுத்தோமானால் நம்
குருமுனிவர் நகைத்திடுவார்
இருந்துவில்லை எடுத்தோமானால் இங்கே
எல்லாமன்னரும் நகைத்திடுவார்
865 என்று எண்ணி ஸ்ரீராமர் அப்போ
ஏதுசெய்வார் அன்னேரம்
வில்லின் கடகோடி வந்துநின்று மாயன்
வேதமால் ஆனவர்தான்
வலதுகால் பெருவிரலால் நல்ல
870 வகையுடனே தான்மிதித்தார்

இந்தவிதமாக ராமன் வில்லின் கடகோடி வந்துநின்று தனது வலது கால் பெருவிரலால் வகையுடன் மிதித்தார் அப்போது வில்லானது

அந்தரமாய் பாய்ந்திடுமாம் அப்போ
அன்னை சீதா வில்லதுதான்
கண்டாரே மாயபிரான் நல்ல
கண்ணடங்கா வேகத்தோடு
875 வில்லையுமே நாண்பூட்டி அரி
வேதமால் ஆனவர்தான்
மண்டியிட்டு வில்வளைத்து நம்
மாயன் அரி கோபாலன்
வளைத்திடட்டா ஒடித்திடட்டா இதை
880 வாரிக்கடலில் எறிந்திடட்டா

867. கடகோடி—கடைசி முனை
879. வளைத்திடட்டா—வளைத்திடவா. (இவ்வாறே பிறவும்கொள்க)

என்று சொல்லி எம்பெருமான் அப்போ
ஏது செய்தார் அந்நேரம்
தம்மடக்கித் தானிழுத்தார் வில்
சடசடவென்று ஒடிந்திடுமாம்
885 வில்லொடிந்த சத்தமது அப்போ
விண்ணுலகம் அலறிடுமாம்
தேவாதி தேவரெல்லாம் அங்கு
தேடிவந்து பூச்சொரிந்தார்

இந்தவிதமாக தேவர்கள் பூச்சொரிந்து ஜெயம் பாடினுர்கள் மேலும் ராமன் ஒடித்த வில்லின் சத்தம் எங்கே கேட்கிறதென்றுல்

(இராமன் வில்லொடித்ததைச் சீதை அறிதல்)

வெள்ளிமலை ஆனதற்கு வில்
890 ஒடிந்தசத்தம் கேட்டிடுமாம்
கன்னிசீதா இருக்குகின்ற அந்த
கன்னிகாமாடமும் கேட்டிடுமாம்
சிவதனுசு ஒடிந்தசத்தம் அப்போ
சீதாதேவி தானறிந்து
895 அருகிருக்கும் சேடியிடம் நம்
அன்னைசீதா ஏதுசொல்வாள்

வாரீர் சேடிகளே வில்லொடிந்த சத்தம் கேட்கிறது. ஆகையால் வில்லொடித்த மன்னவர் யாரென்று அறிந்து வாருங்கள் என்று சொன்ன மாத்திரத்தில் உடனே தாதியர்கள் ஓடிவந்து பார்த்து சீதாவிடம் என்ன சொல்லுகிறுர்களானுல் அராவணை என்ற பாம்பணையில் பள்ளிகொள்ளும் திருமாலைப் போலவே இலங்கும்வீரரும், தவமுனிவருடனும் இளையவனுடனும் இங்கு வந்தவரும் ஆகிய இராமபிரானே வில் ஒடித்தாரென்று தாதியர்கள் சீதாவிற்கு எடுத்துரைத்தார்கள்.

(மற்றமன்னர்களின் சீற்றமும், சீதை மாலை வீசுதலும்)

இந்தவிதம் தானிருக்க அங்கு
இருந்ததொரு மன்னரெல்லாம்
ஜனகராஜன் இடமதிலே வந்து
900 தானே வார்த்தை பேசுகிறுர்

883. தம்மடக்கி—மூச்சடக்கி

இந்த விதமாக அரசர்கள் எல்லோரும் ஒன்றுகூடி ஜனக ராஜனிடம் வந்து என்ன சொல்லுகிறார் ஆனால் வாரீர் ஜனக ராஜனே சீதாவை இந்த சிறுவனுக்கு விவாகம் செய்யக் கூடாது அதாவது இந்தச் சிறுவன் திறமையால் வில்வளைக்கவில்லை இவன் வில் வளைத்ததன் காரணம் என்ன வென்றால் இதோ நிற்கக் கூடிய

கூன்கிழவன் செய்தவித்தை அதனால்
கூடாது மாலையிட
மாமுனிவன் மந்திரத்தால் இந்த
மைந்தன்வில் தானொடித்தான்
905 என்றுசொல்லி அரசரெல்லாம் அங்கே
எதிர்த்துவார்த்தை பேசிநின்றார்
அப்போது ஜனகராஜன் அந்த
அரசரிடம் ஏதுசொல்வார்

வாரீர் அரசமன்னர்களே வில் ஒடித்த பாலகன் மேல் சந்தேக மிருந்தால் உங்கள் மத்தியில் என் மகளாகிய ஜானகியைக் கொண்டு நிறுத்தி சூடாமணிமாலை ஒன்று இருக்கிறது அந்த மாலையை எடுத்து உங்கள் மத்தியில் வீசச்சொல்வோம் அப்போது அந்த மாலையானது யார் கழுத்தில் விழுந்ததோ அவர்களுக்கே சீதாவைத் திருமணம் செய்வோம் என்று சொல்லி ஜனகராஜன்

சேடியரிடம் தானும்சொல்லி அன்னை
910 சீதாவைக் கூட்டிவந்து
அரசமன்னர் சபையதிலே அப்போ
அன்னைசீதா வந்துநின்று
சூடாமணிமாலை கைலெடுத்து அங்கு
சுற்றியுமே வீசுகிறாள்
915 அந்தநல்ல மாலையதும் நல்ல
அரிராமன் கழுத்தில் விழுந்திடுமாம்

இந்தவிதமாக சூடாமணிமாலையும் ஸ்ரீராமர் கழுத்தில் விழுந்ததைக்கண்ட தேசராஜாக்கள் திகிலடைந்தார்கள் இதையறிந்த ஜனகராஜன் மகா முனிவரிடம் வந்து சுவாமி

(இனி) மாலைமணம் சூடவேணும் நல்ல
மாதுசீதா லட்சுமிக்கே
திருமணங்கள் முடிக்கவேணும் எந்தன்
920 தெய்வகுரு மாமுனியே
(என்று) ஜனகராஜன் சொன்னபோது அந்த
தவமுனிவர் ஏதுசொல்வார்

வாராய் ஜனகமன்னு ராமன் கல்யாணத்தை நீயும் நானும் இருந்து முடியக்கூடிய காரியமல்ல அய்யோத்தி நாட்டுக்கு ஒரு தூதுவனை அனுப்பி இராமனுட தந்தை தாயார்கள் தம்பிமார்கள் மற்றும் சேனைபடைகள் குடிஜனங்கள் எல்லோரும் வந்துதான் திருமணம் செய்யவேண்டும். ஆகையால் நான் அய்யோத்திக்கு ஒரு தூதுவனை அனுப்புகிறேன் என்று சொல்லி என்ன விதமாகக் கடிதம் எழுதுகிறுராஞல்

(சீதா கல்யாணம் குறித்த செய்தியை விசுவாமித்திரர் தசரதருக்கு அனுப்புதல்)

(அந்த) அய்யோத்தி நாடாளும் நல்ல
அரசமன்னர் தசரதர்க்கு
925 குலகுருவாம் விசுவாமுத்திரர் இப்போ
கூறுகிறுர் செய்திஒன்று
என்னஎன்ன விதமாக அவர்
எழுதுகிறுர் கடிதமது

மகா ஈ ஈ ஸ்ரீ மகாகனம் தங்கிய தசரதர் அறியவேண்டியது நான் ராமன் லெக்ஷ்மணன் இருபேரையும் கூட்டிவந்து தாடகை சம்மாரம் முடிக்கவேணுமென்று வந்த வேளையில் அந்த தாடகை யானவளால் ஏற்பட்டபல விதமான கொடுமைகள் எல்லாம் வல்லமையுள்ள ஸ்ரீராமனுல் அழிந்து போனதால், என் தவ வேள்வியைப் பூர்ததி செய்து, அதலிகை மோச்சம் கொடுத்து, மிதுலை நகர் வந்து யாபேர்களாலும் வளைக்க முடியாத சிவ தனுசை ஒடித்துவிட சீதாவை திருமணம் செய்யபெரியோர்களால் நிச்சயித்து இருக்கிறது. ஆகையால் தாங்களும் தம்பிமார்களும் மற்றும் குடிபடைகளோடு வந்து திருமணத்தை சிறப்பிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன் இப்படிக்கு விஸ்வாமுத்திர மகாமுனிவர் என்று கடிதம் எழுதி ஒரு தூதுவன் கையில் கொடுத்து அனுப் பினுர்.

(திருமணக் கடிதம் கண்ட தசரதர் மயங்குதல்)

அப்போது தூதுவனும் வெகு
930 அவசரமாய் ஓடிவாருன்
ஒட்டம்நல்ல பெருநடையாய் அப்போ
ஓடிவாருன் தூதுவனும்
காற்றிலுமே வேகமாக அவன்
கால்நடையாய் ஓடிவாருன்

935 அய்யோத்திமா நகரதிலே நல்ல
அரசனுட கொலுவதிலே
தசரதனின் கையில் கொடுத்தான் அந்த
தவமுனிவர் கடிதத்தைத்தான்

இந்தவிதமாக தசரதர் கடிதத்தை வாங்கியவுடன் அதிலுள்ள வாசகங்களை அவதி அவதியாகப் படித்த தசரதர் மதிமயங்கி

(ஒரு) அடியற்ற மரம்போலே மன்னன்
940. அடித்தலறி கீழ்விழுந்தார்
(ஏ) என்மகனே ஸ்ரீராமா இனி
என்னசெய்வேன் நான்பாவி
சண்டாளத் தாடகைக்கோ இப்போ
தான்புசிக்க உனைவளர்த்தேன்
945. அரக்கியவள் புசிப்பதற்கோ உன்னை
அருமையாக நான்வளர்த்தேன்
என்றுசொல்லி தசரதரும் அப்போ
ஏங்கிஏங்கி தானழுதார்
தசரதர்தான் புலம்புஞ்சத்தம் அங்கே
950. தான்கேட்டார் மந்திரியும்

இந்தவிதமாக தசரதர் புலம்பும் சத்தத்தைக் கேட்ட மந்திரி மார்யாபேரும் ஓடோடி வந்து மன்னன் கையில் இருந்த கடிதத்தை வாங்கிப்பார்க்கும்போது அதிலே ராமன் திருமணத்தைப் பற்றி எழுதியிருந்ததை அறிந்த மந்திரிகள் தசரதன் இடத்தில் திருமணக் கடிதம் வந்திருக்கிறது மிதுனை நகரில் இருந்து என்று விவரங்களைச் சொல்லவும் தசரதன் ஒருவாறு மனந்தேறி அளவில் லாத ஆனந்த பரவசனுகியதும் ராமன் திருமணத்தைப் பார்ப்ப தற்காக தசரதர் மூன்று தேவிமார்கள் பரதர்சத்துருக்கன் குடிபடை ஜனங்கள் மந்திரி பிரதானிகள் யாவரும் ஒன்றுகூடி

(தசரதர் யாவருடனும் திருமணம் காணப் புறப்படுதல்)

அய்யோத்தியாபுரி தான்கடந்து
அரசர்படை வருகுதய்யா
சேனைபடை முன்னடக்க
தேரதுவும் பின்னடக்க

---

938 939, இடைஉரை. அவதி அவதியாக— அவசரத்துடன் 936-940 திருமணக் கடிததததை ஆவலுடன் அரைகுறையாகப் படித்த தசரதன் அதிலுள்ள செய்திகளைத் தவருகப் புரிந்துகொண்டு, இராமனுக்கு ஏதோ தீங்கு நேர்ந்ததென நம்பி மூர்ச்சித்து விழுந்தான் என்று கூறப்படுகிறது.

955. வனமான வனங்கடந்து
வருகுதய்யா அரசர்படை
(ஒரு) பாலைவனம் வாறபோது
படைகளுக்கும் தாகமாகி
தாகமது பொறுக்காமல்
960. தவித்திடுமாம் படைகளெல்லாம்.

இந்தவிதமாகப் படைகள் தாகத்தால் பரதவித்து நிற்பதைக் கண்ட தசரதர் இராமனை மனதில் துதித்தார் அப்போது

மாயனுட அருளாலே ஒரு
மாய்கைஆறு ஓடிடுமாம்
அதை யறிந்த அரசர் படை
ஆற்றின்பக்கம் தானும்வந்து
965. தாகவிடை தீர்த்திடுமாம்
தசரதர்தன் படைகளெல்லாம்.

இந்த விதமாக சேனைபடைகளெல்லாம் தாகவிடை தீர்த்து ஆற்றின்பக்கம் ஒன்ருய் கூடிநிற்கும் சமயம்

வாழ்மிதுலை நகர்தனிலே
வாழ்ந்துவரும் ஜனகராஜன்
உப்பரிகை மேடையிலே
970. உலாவிவரும் வேளையிலே
கண்டாரே படைகளைத்தான்
கருத்தில்வேறு எண்ணுகிருர்
ராமனையும் தானழைத்து
நலமுடனே ஏதுசொல்வார்

இந்தவிதமாக ஜனகராஜன் ஆற்றின் ஓரமாக நிற்கும் படைகளைக் கண்டவுடன் இராமனை அழைத்து என்ன விதமாகச் சொல்லுகிருராஞல்.

975. என்னருமை மருமகனே இப்போ
எம்பெருமானே சொல்லக்கேளீர்
மாத்தான்படை வருகுதையா நல்ல
மாலையிடும் மருமகனே
சண்டைசெய்யப்படை வருகுதையா எந்தன்
980. சாரங்கனே கோபாலா

962. மாய்கை ஆறு-மாய ஆறு

என்று ஜனகராஜன் சொன்ன மாத்திரத்தில் சாரங்கனுகிய கோபலன் அறிந்து என்ன சொல்லுகிருராணுல்

எந்தன் மாமா ஜனகமன்னு — இப்போ
எந்தன்வார்த்தை சொல்லக்கேளும்
மாத்தான்படை வரவும்இல்லே — இங்கே
மருகேசன்படை வருகுதய்யா
985. எதிரிபடை வரவும்இல்லே — எங்கள்
அப்பாபடை வருகுதய்யா

என்று ராமபிரான் சொன்னமாத்திரத்தில் ஜனகராஜன் மன மகிழ்ச்சிகொண்டு இருந்தார். அப்போது ஆற்றில் வெள்ளம் குறையாமல் இருப்பதைக் கண்ட தசரதர் மாயனை மனத்தில் துதித்தார் அப்போது ஆற்று வெள்ளமானது

தண்ணீரும் தான்குறைந்து — நல்ல
தரைபோலே ஆக்கிடுமாம்
அறிந்தாரே தசரதரும் — அந்த
990 ஆற்றுவெள்ளம் குறைந்தவுடன்
ஆனைசேனை படைகளையும் — அவர்
அனுப்பிவைத்தார் முன்னாலே
சேனைபடை முன்னடக்க — பல
தேருரதம் பின்னடக்க
995 மாய்கைஆற்றைத் தான்கடந்து — அப்போ
மன்னன்படை வருகுதையா
வாழ்மிதுலை தன்னைநோக்கி — அங்கு
வாருரே தசரதரும்.

இந்தவிதமாக ஆற்றைக்கடந்து தேர், முதலான படைகள் எல்லாம் மிதுலை நகர் அருகாக வந்துகொண்டிருக்க

(சனகர் தசரதரை எதிர்கொண்டு வரவேற்றல்)

அறிந்தாரே ஜனகராஜன்
1000 அன்னேர வேளையிலே
என்ன என்ன விதமாக
எண்ணுகிருர் தன்மனதில்

ஆகா நமது மைத்துனர் தசரதர் வருகிருர் ஆகையால் மருமகனுக்குச் செய்யவேண்டிய சாஸ்திர முறைகளை மைத்துனருக்கும் செய்யவேண்டும்மென்று எண்ணி ஜனகராஜன் என்ன செய்யுகிருராணுல்

எதிர்மாலைக்கொரு பொன்மாலை — அங்கு
ஏற்றவாசத்துக்கோர் பிச்சிமாலை
1005 இந்தவிதம் தான்போட்டு — அப்போ
ஏகிவாருர் மாளிகைக்கே.

இந்தவிதமாக ஜனகமகாராஜன் எதிர்சென்று வரவேற்று மாலைகளைப் போட்டு தசரதரைக் கூட்டிக்கொண்டு மாளிகை வந்து அமர்ந்தார்கள்

(தசரதரின் தேவியர் மூவரும் சீதையைக் காணச் செல்லுதல்)

இந்தவிதம் தானிருக்க — அங்கே
இன்னுமென்ன நடக்குதென்ருல்
மனைவிமார் மூன்றுபேரும் — தங்கள்
1010 மன்னர் தசரதர் இடமதிலே
என்னஎன்ன விதமாக — அப்போ
எடுத்துரைத்தார் தேவியர்கள்

வாருங்கள் என் ஆசைப் பிராணநாதா இராமன் வில்லைத் தான் வளைத்திருப்பான் பெண்ணைப் பார்த்திருக்க மாட்டான் ஆகையால் நாங்கள் மூன்றுபேரும் போய் பெண்ணைப் பார்த்து தான் திருமணம் செய்யவேண்டுமென்று சொல்லிவிட்டு மூன்று பேரும்

எங்கே எங்கே ஏகிவாருர் — அந்த
ஏந்திழைமார் மூன்றுபேரும்
1015 ஜானகியாள் இருக்குமிடம் — அங்கு
தானேவாருர் மாமிமார்கள்
மாமிமார்கள் வருவதைத்தான் — அந்த
மாதுசீதா தானறிந்து
மாமிமார் பாதங்களை — அவள்
1020 மகிழ்ச்சியுடன் தான்வணங்கி
(என்) மன்னவரைப் பெற்றெடுத்த — நல்ல
மாமியரே சரணமென்ருள்
(என்) கொழுந்தனைப் பெற்றெடுத்த — நல்ல
கோதையரே சரணமென்ருள்
1025 என்று சொல்லி ஜானகியாள் — அவர்கள்
இருபாதம் தெண்டனிட்டாள்.

இந்தவிதமாக ஜானகியாள் மாமிமார்களுடைய இருபாதங்களை வணங்கி ஆசனத்தில் அமரச்செய்தாள். ஆசனத்தில் அமர்ந்திருக்கும் மாமியார் மூன்றுபேரும் சீதாவைக் கண்டு மனமகிழ்ச்சி

கொண்டார்கள். மேலும் ஜானகி என்ன அழகோடு இருக்கிறாள் என்றால்

(சீதையின் பேரழகு விவரிக்கப்படுதல்)

குப்பிநல்ல சடையழகாம்
கோதிவிட்ட உச்சழகாம்
மூன்றாம்பிறைச் சந்திரன்போல்
1030 முகத்தினுட திருவழகாம்
வள்ளிக்கொடி தன்னழகில்
வடிவழகி காதுரெண்டாம்
கமுகு நல்ல பாளையைப்போல்
கழுத்தினுட திருவழகாம்
1035 ஆலின்இலை போலேயல்லோ
அடிவயிறு தன்னழகாம்
அரைமதியம் வில்லதுபோல்
அகன்றநெற்றி புருவங்களாம்
இளவாழைத் தண்டதுபோல்
1040 இரண்டுநல்ல துடையழகாம்
கட்டில்கால் கடைந்ததுபோல்
கணுக்கால்கள் தன்னழகாம்
பாம்பினுட படமதுபோல்
பாதத்தின் திருவழகாம்
1045 பயித்தங்காய் சாயலிலே
பத்துவிரல் தன்னழகாம்

மேலும் என்னவிதமான அழகுடன் ஜானகியாள் இருக்கிறாளானால்

சூரியர்க்கு ஆனாலும்
சுற்றிவர கருப்புமுண்டு
சந்திரர்க்கு ஆனாலும்
1050 சற்றேகொஞ்சம் கருப்புமுண்டு
குண்டுமணிக்கு ஆனாலும்
குறுக்கே கொஞ்சம் கருப்புமுண்டு
ஆடுகின்ற நாகத்திற்கு
அடிவயிற்றில் கருப்புமுண்டு
1055 ஓடுகின்ற தண்ணீரில்
உள்சேறு மணலுமுண்டு
தட்டாருட உலையதிலே

1051. குண்டுமணி-குன்றிமணி.

தங்கக் கட்டி வார்த்ததுபோல்
கன்னருட உலையதிலே
1060 கடைந்தெடுத்த உடுக்கதுபோல்
கொல்லருட உலையதிலே
கொலுக்கட்டி வார்த்தது போல்
அள்ளிநல்ல தெளித்தது போல்
அழகுலட்ச தேமல்களாம்
1065 வாரிநல்ல தெளித்ததுபோல்
வண்ணலட்ச தேமல்களாம்
பார்வதியாம் தேவியர்க்கு
பக்கத்திலே தேமலுண்டு
துரோபதா தேவியர்க்கு
1070 தோளிலொரு தேமலுண்டு
இந்திராணி தேவியர்க்கு
இடையிலொரு தேமலுண்டு

ஆனாலும், சீதாதேவியின் அழகு எப்படி மேலும் இருக்கிறதானல்

(அவள்) கூந்தல்தான் கருப்பொழிய
கோதையவள் கருப்புமில்லை
1075 முடியேநல்ல கருப்பொழிய
மொய்குழலாள் கருப்புமில்லை
பொட்டுநல்ல கருப்பொழிய
பூவையவள் கருப்புமில்லை.

இந்தவிதமான அழகோடு இருக்கும் சீதாவைக் கண்ட மாமிமார் மூன்றுபேரும் சீதாவிடம் விடைபெற்றுக் கொண்டு மன்னன் சபையில் வந்து தம் கணவனை

தசரதனும் மன்னரிடம் அந்த
1080 தையலரும் ஏதுசொல்வார்
இனிநமக்கு கவலைவேண்டாம் மூர்த்தம்
இப்போதே வைக்கவேணும்

என்று மனைவிமார் மூன்றுபேரும் சொன்னமாத்திரத்தில் மன்னனை தசரதனும் ஜனகராஜனும்

1064. தேமல்-படர்சுணங்கு. மாதர் மேனியில் காணும் இளமஞ்சள் நிறமான புள்ளிகள்.

1081. மூர்த்தம்-முகூர்த்தம்.

(திருமண நிகழ்ச்சிகள் நடைபெறுதல்)

சோதிடரை வரவழைத்து அவர்
துரிதமுடன் நாள்பார்த்து
1085 மூர்த்தங்களும் தான்குறித்து நல்ல
மூர்த்தக்காலும் நட்டுகிறுர்
பந்தல்களை அலங்கரித்தார் அப்போ
பலதேசத்திற்கும் அறிக்கையிட்டார்,

இந்த விதமாகத் திருமண ஏற்பாடுகளைச் செய்து முடித்து அலங்காரப் பந்தல் போடலுற்ருர். அது எப்படி இருக்குதானுல்

(வேறு—10)

கல்யாணப் பந்தலலங்காரம்—அதைக்
கண்ணுல் பார்க்கவே சிங்காரம் (கல்யாண)
பார்க்க வெகு ஆச்சரியம் பார் பார் — நல்ல
பவளக்கால் தூண்களது நேர் நேர் (கல்யாண)
பச்சவாழைக்குலை தானங்கு தூக்கியே
பஞ்சவர்ணங்களும் பாரில் ஜொலித்திட (கல்யாண)
கொட்டகைப் பந்தலில் குளோப்புகளிட்டார்
குத்துவிளக்கினுல் தீபங்களிட்டார் (கல்யாண)
பார்க்க வெகு ஆச்சரியம் பார் பார்—நல்ல
பவளக்கால் தூண்களது நேர் நேர் (கல்யாண)

இந்த விதமாக கல்யாணப்பந்தல்களை அலங்கரித்து மணவறையும் சோடனை செய்து வேதாவேதியர்கள் வந்து வேதங்களைப் பாடவும் மாப்பிள்ளை ஸ்ரீராமனையும் பெண் சீதாதேவியையும் அலங்கரித்து மணவறையில் உட்கார வைத்து குடிபடை ஜனங்களெல்லாம் புடை சூழ்ந்து நிற்க மேலும்

தம்புருடன் தவில் முழங்க
1090 தானே எக்காளம் ஊதிவர
வாங்காவின் சத்தமது
வையகமெல்லாம் முழங்கிடுமாம்

இந்த விதமாக மேள வாத்தியங்கள் முழங்க திருமாங்கல்யத்தை எடுத்து வேதியர்கள் தொட்டு வணங்கி பெரியோர்களும் தொட்டு வணங்கி இராமன் கையில் கொடுத்தார்கள் அப்போது ஸ்ரீராமர் என்ன விதமாகத் திருப்பூட்டுகிறுர் ஆனுல்

கட்டுமேளம் போடச்சொல்லி
கட்டுகிறார் மாங்கல்யம்
1095 தேவாதி தேவரெல்லாம்
தேடிவந்து பூச்சொரிந்தார்
தெய்வக்கன்னிப் பெண்களெல்லாம்
தேடிவந்து குலவைபாட
கன்னியர்கள் குலவைபாட
1100 கட்டுகிறார் மாங்கல்யம்

இந்த விதமாக எம்பெருமான் சீதாலெட்சுமியை திருப்பூட்டி மேலும் என்ன செய்கிறாரென்றால்

சுண்டுவிரல் கைப்பிடித்து
சுற்றிவந்தார் மணவறையை
அம்மிநல்ல மிதிக்கவைத்து
அருந்ததியைப் பார்க்கவைத்து
1105 சொக்கட்டங்காய் பலகையிலே இருபேரும்
சொகுசாக உட்கார்ந்தார்

இந்தவிதமாக ஸ்ரீராமர் சீதாலெட்சுமிக்கு திருப்பூட்டி சொக்கட்டங்காய் பலகையில் உட்கார்ந்திருக்கும் போது ஜனகமகாராஜன் தன் மகளான சீதாதேவிக்கு சீதனங்களெல்லாம் கொடுத்து விருந்து போஜனங்களெல்லாம் முடித்து இருபேரையும் மனமகிழ்ச்சியோடு விடைகொடுத்து, தசரதர் தாய்மார் தம்பிமார் மந்திரிமார் மற்றும் குடிபடைகள் அத்தனைபேரையும் அன்போடு விடைகொடுத்து அய்யோத்தி செல்லுமாறு அனுப்பி வைத்தார்

இந்தவிதம் தானிருக்க
எம்பெருமான் கோபாலன்
சீதாதேவி தன்னுடனே
1110 ஸ்ரீராமர் ரதமேறி
சேனைபடை புடைசூழ
தேருரதம் முன்னடக்க
மிதுளாபுரி தனைக்கடந்து
மேகநாதன் வழிவாறார்
1115 நாடுவிட்டு நகரம்விட்டு
நல்லதொரு தேசம்விட்டு

1093. கட்டுமேளம் —கெட்டிமேளம். கட்டுமேளம் என்பது மங்கல அணி கட்டும் நேரத்துமேளம் எனப் பொருத்தமாக உள்ளது.

பரசுராமன் வனமதிலே
பரந்தாமன் படை வருகுதையா
கண்டாரே பரசுராமன்
1120 கருத்தில் வேறு எண்ணங்கொண்டு
மாயபிரான் தேரதையும்
மாபாவி போய் மறித்தான்

இந்தவிதமாக பரசுராமன் போய் மறித்தவுடன் ஸ்ரீராமர் கோபம் கொண்டு அவன் கெர்வம் அடங்கும் படியாக அவன் கையிலிருந்த வில்லை வளைத்து அந்த வில்லை சீதாதேவிக்குத் தெரியும் படியாக வருணபகவானிடம் கொடுத்துவிட்டு

ஆரபார கெர்விதமாய்
அரிராமன் ஏகிவாருர்
1125 அய்யோத்தியா பட்டணமே
அனைபேரும் வந்துசேர்ந்தார்

இந்தவிதமாக எம்பெருமான் சீதாதேவியைத் திருமணம் செய்து அய்யோத்தியாபுரி பட்டணம் வந்து சேனைபடைகள் புடைசூழ மங்களமாக வாழ்ந்து வாருர்.

சீதா கல்யாணம் முற்றும்

# நீலி கதை

## காப்பு

பழகைநகர் லச்சுமியாள் மறையவனைப் பழிவாங்கி
அழகுடைய வூர்முழுதும் தானழித்துத் தென்னாடு
வழிவந்து முப்பந்தல் நிலைகொண்ட நீலியவள்
அழியாத கதைபாட அய்ங்கரனே தான்காப்பு

## கதை

(கணிகையுடன் வேதியன் உறவுகொள்ளுதல்)

அழகுடைய பழகைநல்லூர் நல்ல
அம்மையப்பன் திருக்கோவில்
குழலுடைய சங்கீர்தம் நல்ல
கூத்தாடும் முறைகாரி
5 பணிவிடைகள் தான்முடித்து அவள்
படிகடந்தே வெளியில்வாறாள்
கோயில்தன்னில் பூசைசெய்யும் நல்ல
குணமுடைய வேதியனும்
தன்னுடைய பூசைமுறை அப்போ
10 தான்முடித்து வெளியில்வாறான்
வெளியிறங்கி வருகுமந்த நல்ல
வேசைமகள் அழகுகண்டு
விரும்பியந்த கோயில்நம்பி அந்த
வேசைமகள் அருகில்வந்தான்

---

• இக்கதை-இசக்கி கதை, பழகைநல்லூர் நீலிகதை, இயக்கியம்மன் கதை என்றெல்லாம் வழங்கும்.

1. பழகைநல்லூர்-பழையனூர். இப்பெயர் பழகையூர், பழகைநகர் என்னும் வழங்கும்.

15 காரிகைமேல் ஆசைகொண்டு அவன்
கண்ணோட்டம் போட்டல்லவோ
ஆசைமொழி பலதும்பேசி அப்போ
அவளுடனே உறவானான்
வேதியனை வேசைமகள் தன்
20 வீட்டகத்தே கூட்டிவந்தாள்
வீட்டில்வரக் கண்டவுடன் அந்த
வேசையுட தாய்க்கிழவி

(வேதியன் கணிகையின் வசமாதல்)

நாட்டமுடன் நம்பியல்லோ பெண்ணே
நமக்கு ஒரு தெய்வமாச்சே
25 கிருபையுடன் பணம்காசு அவரிடம்
கேளாதே என்மகளே
மறையவனார் தான்நமக்கு நல்ல
மனமிருந்தால் தருவாரம்மா
என்றுசொல்லி தாய்க்கிழவி அப்போ
30 ஏதுசெய்தாள் அன்னேரம்
பச்செலையில் மருந்துஊட்டி அந்த
பழிகாரி ஏதுசெய்தாள்
வெற்றிலையில் மருந்தைஊட்டி அந்த
வேசைமகள் கையில்கொடுத்தாள்
35 மகள் கையிலேதான் கொடுத்தாள் நல்ல
மறையவனை வசப்படுத்த

இப்படியாக தாய்க்கிழவி வெற்றிலையில் வசிய மையை தடவி மகள் கையில்கொடுத்து மறையவனை வசப்படுத்த சொல்ல அதை வாங்கி தாசியானவள் தங்க தாம்பளத்தில் தளிர்போன்ற வெற்றிலையும் வைத்து வேதியன் அருகே சென்று

தாம்பூலம் போடச்சொன்னாள் அந்த
தாசியவள் மறையவனை
சப்பிரமஞ்சம் மீதிருந்து வேதியன்
40 தாம்பூலம் போடலுற்றான்
மங்கைநல்ல தாசியவள் அப்போ
மடித்து கொடுத்தாளே சுருளதுதான்

---

31. பச்செலை-பச்சிலை (மூலிகை) 39. சப்பிரமஞ்சம்-அலங்கரித்த கட்டில்
42. சுருள்-வெற்றிலைச்சுருள்.

தாசியுட கரத்தாலே | வேதியன்
தாம்பூலம் தரித்தபோதே
45 வேசையவள் வலையதிலே | நல்ல
வேதியனும் பட்டல்லவோ
மாயவலை தன்னில் சிக்கி | வேதியன்
மதிமயங்கி ஏதுசெய்தான்
காமன்வலை தன்னில்பட்டு | வேதியன்
50 கைப்பொருள்கள் தானிழந்தான்
வீட்டில்உள்ள உடமைஎல்லாம் | அவன்
விலைகள்செய்து கொண்டல்லவோ
கோவில்நல்ல உடமைகளை | வேதியன்
கொள்ளையிட்டு கொண்டுவந்தான்

இப்படியாக அந்த வேதியன் தாசியின் மாயவலையில் அகப்பட்டு வீட்டில் உள்ள பொருளும் அவன் பூசைசெய்யும் அம்மை அப்பர் நகையும் கைப்பற்றி தாசியே தெய்வம் தாசியே அம்மை அப்பர் தாசியே நமக்கு சொந்தம் அவளை தவர வேறு ஒன்றும் வேண்டாமென்று சகலநகையும் பணமும் எடுத்துக்கொண்டு

55 வேசையவள் பெரிதென்றெண்ணி | அந்த
வேதியனும் வழிநடந்தான்
தாசியுடை அரண்மனைக்குள் | அப்போ
தானேவந்தான் வேதியன்தான்
மாறுகண்ணி கிழவிமகள் | அந்த
60 மறையவனை கண்ணில்கண்டாள்
மறையவனின் மடிப்பணத்தை | அந்த
மங்கையவள் கண்டபோது
மன்னவரே வாருமென்று | அங்கே
மணிவிளக்கு ஏற்றிவைத்தாள்
65 பள்ளிகொள்ள வாருமென்று | நல்ல
பாவையவள் அழைத்தல்லவோ
சுந்தரம்சேர் கட்டிலிலே | நல்ல
தோகையவள் ஏதுசெய்தாள்
பட்டுமெத்தை தனைவிரித்து | அந்த
70 பாவைநல்லாள் அப்பொழுது
மல்லிகைமுல்லை இருவாச்சி | நல்ல
மணமுள்ள ரோஜா மந்தாரை

காம்பரிந்து மலர்விரித்தாள் அந்த
களபமலரால் அலங்கரித்தாள்
75 மன்னவரே வாருமென்று வேதியர்
வலக்கரத்தை தான்பிடித்து
அலங்கார பஞ்சணையில் வேதியரை
அமரும்படி செய்தல்லவோ

அந்த தாசியானவள் வேதியனை பஞ்சணைமேல் வீற்றிருக்கும் படி செய்து களபகஸ்தூரி பரிமளாதிகள் இருபேரும் அணிந்து சப்பிர மஞ்சத்தில் உல்லாசமாய் வீற்றிருக்கும்போது தாசி என்ன செய்தாளாஞல்

தந்திரமாக தோளிலிட்ட அவள்
80 சட்டைதன்னை கழட்டியல்லோ
இதழமுதம் தான்கொடுத்தாள் அப்போ
இன்பமடைந்தான் வேதியனும்
மார்போடு மார்பணைத்து வேதியன்
மருவிமுத்தம் தான் கொடுத்தான்
85 ஈருடலும் ஓர் உடலாய் அவர்
இன்பமது அனுபவித்து
மன்மதனும் ரதியும் போலே அங்கே
மருவிமையல் தீர்ந்தல்லவோ
மாலையிட்ட மன்னனைப் போல் இவர்கள்
90 மகிழ்ந்திருக்கும் நாளையிலே

இவ்விதமாக கணவனும் கன்னியும்போல் வாழும் நாளில் வேதியன் வீட்டில் உள்ள நகையும் கோவில் நகையும் தாசியே பெரிதென்று கொடுத்து விட்டதாலே கையில் பணமில்லாமல் மனது வாடி

(பொருள் யாவும் இழந்த வேதியனைத் தாய்க்கிழவி பழித்தலும் அவன் வனம் செல்லுதலும்)

தாசியுட அரண்மனையே வேதியன்
தஞ்சமென்று தானமர்ந்தான்
அடுத்தோர் பணத்தை அபகரிக்கும் தாசியை
அம்மை அப்பர் எனநினைத்து

---

74. களபம்-கலவைச் சாந்து (மணப்பொருள்)

78-79. இடைஉரை: களப கஸ்தூரி பரிமளாதிகள் – பலவகை மணப் பொருள்கள்

95 வேசையுட வீடதிலே வெளிதிண்ணையில்
வீற்றிருந்தான் வேதியன்தான்
மாறுகண்ணி தாக்கிழவி அந்த
மறையோனை கண்ணில் கண்டாள்
ஆரடவா எந்தன் வீட்டில் இப்போ
100 அண்டியிருக்கும் காரணமேன்
உறக்கம் பிடித்து நீயிருக்காய் எந்தன்
ஒட்டுத்திண்ணை கார்த்துக்கொண்டு
கார்த்திருந்து தூங்குகிறாய் நல்ல
கழுவடியில் நாயதுபோல்
105 செத்தவனே எந்தன் வீட்டு ஏபாவி
திண்ணைவிட்டு கீழிறங்கு

அந்த தாக்கிழவியானவள் வேதியன் பொருள்களை யெல்லாம் கைப்பற்றிக்கொண்டு வேதியனிடத்தில் இனிமேல் கொடுக்கப் பணம் இல்லையென்று தெரிந்து மகளிடம் ஏது சொல்வாளானால்

என்மகளே கண்மணியே இப்போ
எந்தன் வார்த்தை சொல்லக் கேளு
லட்சம் பொன் உடையவனை நாம்
110 நிறுத்திவைத்து சோறிடலாம்
பிச்சை வாங்கும் பார்பானோடு மகளே
பேசுவதால் இன்பமென்ன
என்றுசொல்லி தாக்கிழவி அப்போ
ஏசலுற்றாள் மகள்தனையே
115 கிழவிசொன்ன வார்த்தை யெல்லாம் அங்கே
கேட்டிருந்த வேதியனும்
கோவிலுக்குப் பூசைசெய்ய அந்த
கொட்டகைக்கும் போகாமல்
பட்டணத்தை விட்டல்லவோ வேதியன்
120 பரதேசம் போறானப்போ
எண்ணாத எண்ணமெல்லாம் வேதியன்
எண்ணிமனம் வாடியல்லோ
நாடிழந்தோம் நகரிழந்தோம் நாம்
வீடிழந்தோம் தாசியாலே
125 மாடிழந்தோம் கன்றிழந்தோம் நமது
மனையிழந்தோம் வேசையாலே

---

97. தாக்கிழவி - தாய்க்கிழவி

பொன்னிழந்தோம் பொருளிழந்தோம் கோவில்
பூசையிழந்தோம் தாசியாலே

என்று வேதியன் எண்ணுது ஏங்கி பனமது வாடி வனமதை தேடி வரக்கூடிய நேரம் அந்த தாசியானவள் என்ன செய் தாளானுல்

(கணிகை வேதியனைக் கண்டு வீடுதிரும்ப வேண்டுதல்)

பரதேசம் போறதொரு அந்த
130 பாப்பானை அழைத்துவர
வேசைமகள் அன்னேரம் அதிக
வேகமுடன் வாருளப்போ
நாடுநகர் தான்கடந்து அவள்
நல்லவனம் தேடிவாருள்
135 வனமான வனம்தாண்டி அப்போ
வாருளே பெண்கொடியாள்
காடுசெடி தாண்டியல்லோ அவள்
கண்டாளே வேதியனை
என்கணவா மன்னவரே நீர்
140 என்னைவிட்டு எங்கே போறீர்
மன்னவா நீர் இல்லாமல் இந்த
மங்கைநான் வாழுவேனே
கணவரே நீர் இல்லாமல் சிறு
கன்னிநான் வாழலாமோ

என்று அந்த தாசியானவள் ஓடிவந்து வேதியனை வழிமறித்து நிற்கவும் வேதியன் கண்டு வேசைமகளைப் பார்த்து ஏது சொல் வானுனல்

145 போடிபோடி பெண் கொடியே எனக்குப்
புத்தியது வந்ததடி
காமவலைக் குள்ளாகி நான்
கைப்பொருள்கள் தானிழந்தேன்
வேசைமைய லாலேயல்லோ நான்
150 வீடுவாசல் தானிழந்தேன்
தாசிதன்னை நம்பினேர்க்கு நல்ல
சத்திரமே தஞ்சமடி
தேடியபொருள் நான்கொடுத்தேன் இந்த
தேவடியாள் வாயால் கேள்வி கேட்டேன்

154. கேள்வி கேட்டேன்-பழிச்சொல், வசைச்சொல் கேட்டேன்.

155 நாணயங்கள் தான் கொடுத்தும் வேதியன்
நாமென்றுசொல் கேள்க்கலானேன்
செப்புடைமை இல்லாமல் நான்
தியங்குகிறேன் பெண் கொடியே
கைப்பொருளும் இல்லாமல் மனம்
160 கலங்குகிறேன் பெண்கொடியே
மடிப்பணங்கள் இல்லையடி எந்தன்
மங்கையரே நான்கொடுக்க

என்று வேதியன் சொன்ன வார்த்தையை கேட்டு தாசியானவள் திருமுகம்வாடி வேதியனைப் பார்த்து என்ன வார்த்தை சொன்னாளானால்

என்கணவா மன்னவரே இப்போ
எந்தன் வார்த்தை தன்னைக்கேளும்
165 பொன்னும் வேண்டாம் பொருளும் வேண்டாம் எனக்கு
புருசனாகவே இருந்தால் போதும்
காசிபணம் வேண்டாமய்யா எனக்கு
கணவனாக இருந்தால் போதும்
என்னிடத்தில் கொடுத்த பொருள் நாம்
170 எவ்வளவு காலம் வாழலாமே
அரண்மனைக்குப் போவோமென்று அவள்
அன்புடனே சொல்லியல்லோ
எட்டியவள் தான்பிடித்து அந்த
ஏந்திழையாள் நமஸ்கரித்தாள்
175 வேதியனை நமஸ்கரித்து தாசி
விம்மிவிம்மி தானழுதாள்
மங்கையவள் அழுதிடவும் அந்த
மறையோனும் மனதுவாடி

அந்த தாசியானவள் கண்ணீர்விட்டுக் கதறுவதைக் கண்ட வேதியன் மனம் வாடி மங்கையுடன் கூடி குளிந்த நிழல் தேடி இரு பேரும் எந்த இடம் வாறார்கள் ஆனால்

அடந்தகள்ளி நிழலதிலே அவர்கள்
180 அன்புடனே வநதல்லவோ
வட்டமிட்டு விளையாடி அங்கே
வகையுடனே ஏதுசெய்தார்

---

157 செப்புடைமை இலலாமல்-செல்வமாக ஒரு செப்புக்காசுகூட இல்லாமல்
158 தியங்குதல்-சோர்வு அடைதல்

தாம்பூலம் போடலுற்றார் அந்த
தாசியும் மறையவரும்
185 தாம்பூலமது பிடிக்காமல் அந்த
தார்குழலாள் மயக்கமாகி
என்கணவா மன்னவரே இப்போ
என்ன செய்வேன் ஏதுசெய்வேன்
மடமடன வியர்க்குதய்யா எந்தன்
190 மன்னவரே என்கணவா

வாருங்கள் என் கணவா எனக்கு ஓர் விதமான மயக்கமாய் இருக்கிறபடியால்

(வேதியனின் வஞ்சகச் செயல்)

மடிமேலே நான்படுப்பேன் எந்தன்
மன்னவரே என் கணவா
தலைமயிரைக் கோதுமென்று தாசி
தானே சொல்லும் வேளையிலே
195 வேதியன் மடியதிலே அந்த
வேசை மகள் தலையைவைத்தாள்
பழிகார வேதியன் தான் தாசிக்குப்
பகுந்து முடி கோரலுற்றான்
மங்கையந்த தாசியவள் நல்ல
200 மயக்கத்தால் உறங்கலுற்றாள்
நித்திரையை அறிந்தல்லவோ வேதியன்
நெஞ்சதிலே வயிரங்கொண்டான்

அந்த தாசியானவள் வேதியன் மடியில் உறங்கும்போது வேதியன் மனதில் எண்ணாத எண்ணங்களெல்லாம்எண்ணி மனதில் வைராக்கியம் பிடித்து என்ன சொல்வானானால்

ஆறுலச்சம் பொன்னுடமை நாம்
அடைக்கலமாய் வைத்திருந்தோம்
205 வேறோர் தொழில் செய்யாமல் அதை
வீட்டிலிருந்தும் உண்ணாமல்
மாய வலையில் பட்டல்லவோ நான்
மானங்கெட்டேன் உன்னாலே

189. மடமடன— விரைவாக, மிகுதியாக 193. கோதுதல்—ஒழுங்குசெய்தல்
198. பகுந்து—பகிர்ந்து வகிடு எடுத்து. கோரலுற்றான்—கோதலுற்றான்

கோவிலில் உள்ள உடமை எல்லாம் நான்
210 கொள்ளையிட்டு கொண்டுதந்தேன்
ஆசை மய்யலாலே அல்லோ இன்று
அலையலானேன் வனமதிலே
வீட்டில் உள்ள உடமை எல்லாம் நான்
விலை செய்து கொண்டுவந்தேன்
215 வேசைநல்ல தாக்கிழவி என்னை
விரட்டிவிட்டாளே வீடுவிட்டு
கையில் பொருள் இல்லாமல் நான்
கவலைமிக கொண்டிருந்தேன்

இப்படியாக வேதியன் எண்ணுத எண்ணங்கள் எண்ணி மனதை திடப்படுத்தி என்ன செய்தாஞனல்

(நகைகளைக் கவர்ந்து கணிகையை வேதியன் கொலை புரிதல்)

துடையளவு மணல்கூட்டி அந்த
220 தோகையவளை அதில்கிடத்தி
அசையாமல் வேதியன் தான் தாசி
அணிந்தநகைகள் கழட்டலுற்ருன்
கரைபோட்ட வேட்டியதில் வேதியன்
கட்டிவைத்தான் பொட்டணமாய்
225 என்ன என்ன எண்ணலுற்ருன் அந்த
ஏற்றபிள்ளை வேதியன்தான்
கொல்லாமல் போனமாஞல் நமது
கூடநல்ல வருவாள் என்று
பாரக்கல் தனை எடுத்து நல்ல
230 பாதகனும் ஏதுசெய்தான்
கல்லெடுத்து தலையில் போட்டு அவன்
கள்ளிமரத்தடியில் தான் ஒளித்தான்

இவ்விதமாக வேதியன் பாரக்கல்தூக்கி தாசியின் தலையுடையும்படி போட்டு பக்கத்தில் ஒளித்திருக்க தாசியானவள் அடிபட்டு அலறி துடித்து என்னதெரிவித்தாள் ஆஞல்

அரஉயிரும் குறஉயிரும் அவள்
[illegible]வன்று சத்தமிட்டாள்
235 அடிபிடிநான் செய்யவில்லை நான்
அனியாயம் செய்யவில்லை

227. போனமாஞல்-போஞேம் என்ருல்.
233. அரஉயிரும் குறஉயிரும் - அரைஉயிரும் குறைஉயிரும்.

கேடுநல்லோ நினைக்கவில்லை நான்
கெடுதியது செய்யவில்லை
யாருந்துணை இல்லைஇப்போ இந்த
240 அத்துவான வனமதிலே
எவரும்துணை இல்லை அய்யே எனக்கு
இந்தநல்ல வனமதிலே
கடவுளே நீர் தான்அறிய இந்த
காய்ந்தகள்ளி சாக்ஷி என்றாள்
245 ஈஸ்பரனே நீர் அறிய எனக்கு
இருண்டகள்ளி சாக்ஷி என்றாள்
பரமசிவனாரே நீர்அறிய நல்ல
பசுங்கள்ளியே சாக்ஷி என்றாள்
சந்திர சூரியரே நீர்அறிய எனக்கு
250 சாய்ந்தகள்ளி சாக்ஷி என்றாள்
பாப்பானும் குலைகள் செய்தான் இந்த
பழகைநல்லூர் தழைக்குமோதான்

என்று அந்த தாசியானவள் பலவிதமாய் ஈஸ்பரனை துதித்து கள்ளியை சாக்ஷிவைக்க அதை கண்ட வேதியன் மனதில் என்ன நினைத்தான் ஆனால்

மூச்சிவிட்டுப் பேசுகிறாள் அவளை
முழுதும் கொல்ல வேணும்என்று
255 அடுத்தஒரு கல் எடுத்து வேதியன்
அடித்தானே புடதியோடு
அடித்தநல்ல அடியோடு தாசி
அரனடிதான் சேர்ந்தாளப்போ
தாசியவள் மாண்டபோது அந்த
260 தனிமறையவன் ஏதுசெய்தான்

இந்தவிதமாக அந்த தாசியானவள் பரமபதம் அடையவும் அன்னவள் நகைகள் எல்லாம் பொட்டணமாய் கட்டிக்கொண்டு வேதியன் மனதில் என்ன எண்ணம் கொண்டு வாறானால்

(வேறு—2)

தாசியைக் கொன்ற பழிநமக்கில்லை
தடந்தெரியா தெனவே இனி

240. அத்துவானம்-பாழ்வெளி, பாலைநிலம். 'அத்தான காட்டில்' எனும் பேச்சு வழக்கும் உண்டு. 256. புடதி-பிடரி, பிடர்.

சஞ்சலம் ஒன்றில்லை என்றந்த வேதியன்
கைதட்டிப் பாடலுற்றான் (1)
சண்டையிடவந்த வண்டக் கிழவிமகள்
தங்கச் சரப்பளியை நல்ல
தட்டானிடத்தில் விலைகாட்டலாமென்று
சந்தோசமாய் நடந்தான் (2)
காசிக்கிப் போட்டுமே வாசிக்குத்தேடிய
கப்பலும் வைத்திடலாம் நாம்
கவலையொன்றில்லாமல் கைப்பொருள்வைத்துநாம்
கச்சவடம் செய்யலாம் (3)

இந்தவிதமாக வேதியன் மனதில் எண்ணுது எண்ணி ஏகி வழி நடக்கும் நேரம் என்ன நடந்ததானால்

(வேதியனின் அவல முடிவு)

தாசியைக் கொன்ற பழியதால் வேதியர்க்கு
தண்ணீர் தகையாகி அங்கே
தாங்கும் படிக்கல்லில் ஓங்கும்படிமீது
சற்றே இறக்கிவைத்தான் (4)

அந்த வேதியனுக்கு தாசியைக் கொன்ற ரத்த வெறியால் தாகம் அதிகரித்தவுடனே ஓர் கிணற்றில் சென்று நகைப் பொட்டணத்தை படிக்கல்லில் வைத்து தாகவிடாய் தீர எண்ணம்கொண்டு

வாளி எடுத்துத் தண்ணீர் இறைக்கவும்
வாய்த்ததோர் சர்ப்பமது அங்கே
கல்புடைக்குள்ளே இருந்தந்த வேதியனை
கைதனில் தீண்டிடவும் (5)
கரையில் அவனும் கசத்தில் உடமையும்
கட்டுடனே விழவே ஐயோ
கொண்ட வியாதிக்கி பண்டுவர் உண்டோஎன்று
குதித்துக் குதித்தோட (6)
வைத்தடிவைத்து எடுத்தடிவைக்குமுன்
வாயால் உதிரம்கக்கி பாவி

பாடல்.2 கண்ணி [2] வண்டக்கிழவி-வன்கண்மையுள்ள,குற்றமுள்ள கிழவி. சரப்பளி-கழுத்தணி

கண்ணி [3] காசிக்குப் போட்டு-விலைக்கு விற்று. வாசிக்குத்தேடிய-ஆகாயத்துடன் கிடைத்த. கச்சவடம்-சிறுவணிகம். இப்பொருளில் இச்சொல் மலையாள வழக்கில் உள்ளது. கண்ணி [4] தகை-தாகம். கண்ணி [5] கல்புடை-கல் இடுக்கு.

கண்ணி [6] கசம்-ஆழமான நீர்நிலை. பண்டுவர்-மருத்துவர்.

இந்த உலகுக்கே ஆகாத பாப்பானும்
ஏங்கி இறந்துவிட்டான் (7)

இந்தவிதமாகத் தாசியை வேதியன் கொன்று தாகவிடையால் தண்ணீர் கோர நாகமானது தீண்டவும் வேதியன் மரணம்அடைய இப்படி இருக்கும்போது தாசியுடன் பிறந்த நட்டுவன் என்ன செய்தான் என்ருல் தன்தாயாரை அழைத்து

(கணிகையின் அண்ணன் தங்கையைத் தேடி வருதல்)

அம்மாஅம்மா என்தாயே எந்தன்
அருமைத்தங்கை தன்னைஎங்கே
என்றுநட்டுவன் கேட்டபோது அப்போ
ஏதுசொல்வாள் தாக்கிழவி
265 வாடாவாடா என்மகனே ஒரு
வார்த்தையது சொல்லக்கேளாய்
உன்னுடைய தங்கையவள் நல்ல
உற்றபிள்ளை பெண்கொடிதான்
பரதேசம் போறதொரு அந்த
270 பாப்பானை அழைத்துவர
வேசையவள்என் சொல்மீறி இப்போ
வேகமுடன் போயிருக்காள்
தங்கைதன்னை அழைத்துவாடா எந்தன்
தார்வேந்தா நட்டுவனே
275 பாப்பானை கூப்பிடாதே அவனுல்
பழிகள்வந்து சேருமப்பா

இவ்விதமாக கிழவிசொன்ன வார்த்தையைக் கேட்ட நட்டுவனுக்கு கோபமானது அதிகரித்து தாயாரைப் பார்த்து ஏ சண்டாளி என்தங்கை தன்னையும் அந்த வேதியரையும் வெளியே தள்ளி பொருள்களை அபகரித்து வாழ எண்ணம் கொண்டாயல்லவா என்று மறுபடியும் என்னசொல்வாணுனல்

கிழவிகள் இருக்கும் இடமதிலே நல்ல
கெடுதிகள்வரும் என்பதுபோல்
தேடியபொருள் தன்னைவாங்கி வேதியனை
280 தெருவில்விரட்டி விட்டுவிட்டாய்
கோவில்நகை அத்தனையும் நம்மிடம்
கொண்டுதந்தார் வேதியனும்

பணமெல்லாம் அபகரித்து அவனை
பரதேசி யாக்கலாமா
285 பசுவாகப் பிறந்தாலும் அந்த
பாப்பான் பாவம் விட்டிடுமோ
என்றுசொல்லி நட்டுவன்தான் அப்போ
ஏதுசெய்தான் அன்னேரம்
தங்கைதன்னை தேடியல்லோ அவன்
290 தானேவாருன் கானகமே
காடுநல்ல செடிகடந்து நல்ல
கடியவனம் தேடிவாருன்
கட்டைசுட்டு சரிபுரக்கும் அந்த
கள்ளியடந்த வனமதிலே
295 உயர்ந்தகள்ளி நிழலதிலே நல்ல
உற்றபிள்ளை தன்னைக்கண்டான்
தங்கைநல்ல படுகளத்தை அப்போ
தானேகண்டான் நட்டுவனும்
ஓடிவந்து தான்பார்த்தான் அவன்
300 உற்றபிள்ளை தங்கையைத்தான்

(மாண்டுகிடந்த தங்கையைக் கண்ட அண்ணன் கதறிப் புலம்புதல்)

என்பிறவி தங்கையரே உனக்கு
என்னவிதி வந்ததம்மா
அண்ணன்தனை தான்பிரிந்து நீதான்
அடந்தவனம் மாண்டதென்ன
305 தமையன்தனை தான்பிரிந்து என்தங்கை
தனிவனத்தில் மாண்டதென்ன
சீவித்தலை முடித்துநீதான் நல்ல
தெருவாசல் நின்ருயானுல்
கண்டோர் மதிமயங்கி அவர்கள்
310 காலெடுத்து வைப்பாரோ
பார்த்தோர் மயங்குவாரே இந்த
பழகைநல்லூர் தன்னதிலே
தாமரை மலர்முகமே என்னை
தனியேவிட்டுச் செல்லலாமா
315 மல்லிகைப்பூ வாசகமே என்னை
மருகவிட்டு போகலாமா
உள்ளங்கை நெல்லிக்கனி இன்று
உருண்டதே பூமியிலே

316. மருகவிட்டு - மயங்கவிட்டு 317. 'உள்ளங்கை நெல்லிக்கனிபோல்' என்பது மாறுபட்டதோர் நிலையில் பயன்படுகிறது.

உந்தனையே நான்பிரிந்து பாவி
320 உலகத்தில் வாழணுமோ
தங்கைதனை நான்இழந்து இந்த
தாரணியில் வாழணுமோ
மங்கையேநீ மரணமாக நானும்
மாநிலத்தில் வாழணுமோ
325 பாழான கிழவியாலே நமக்குப்
படுமோசம் வந்துதடி
பாப்பான் குலைகள்செய்தான் இந்த
பழகைநல்லூர் வாழ்ந்திடுமோ

இவ்விதமாக நட்டுவன் தங்கையைப் பார்த்து ஆரூத்துயரங் கொண்டு அவள் முகம் துடைத்து ஏங்கி கண்ணீர்விட்டு கதறி தானும் தங்கையுடன் மாளவேணும் என்று எண்ணம் கொண்டு மறுபடியும் ஏது சொல்வானுனல்

(துயர்தாளாத அண்ணன் தானும் மடிதல்)

மடிமீது தூங்கினளோ சண்டாளன்
330 மண்மீது கிடத்தினளே
என்றுசொல்லி நட்டுவனும் அப்போ
ஏதுசெய்தான் அன்னேரம்
தங்கைதன்னை கொன்றகல்லால் அவன்
தன்னுயிரைப் போக்குதற்கு
335 பாரக்கல் தனைஎடுத்து நல்ல
பாதகனும் ஏதுசெய்தான்
மயேஸ்பரனை தான்நினைத்து அவன்
மண்டையதில் தானடித்தான்
தலையதிலே அடித்தல்லவோ அப்போ
340 தரணியாசை தான்மறந்தான்
மண்ணுலகம் தனைமறந்து அவன்
விண்ணுலகம் சேர்ந்தானே

இப்படியாக தாசியும் வேதியனும் நட்டுவனும் இந்த மூன்று பேரும் மாண்டவுடன் தென்திசைக் கிறைவனுகிய எமன் என்ன செய்தானுனல்

(கணிகை, வேதியன், நட்டுவன் மூவரும் மறுபிறவி எடுத்தல்)

இறந்தவர்கள் மூவரையும் நல்ல
எமராசன் கொண்டுவந்தார்

337. மயேஸ்பரன் — மகேசுவரன்.

345 சென்றவுடன் தானறிந்து — அந்த
சித்திரபுத்திரர் கணக்கெடுத்தார்
கண்டவர்கள் மூவருட — நல்ல
கணக்கெடுத்து பார்க்கும்போது
செம்பிஎனும் சோழராசன் — அவன்
350 திருமனவி திருத்தேவி
கொள்ளிவைக்க பிள்ளையில்லாமல் — அவன்
கோவிலிலே தவமிருந்தாள்
தவமானல் அருந்தவசு — அங்கே
தானிருக்கும் வேளையிலே
355 சாமநல்ல நேரத்திலே — அப்போ
தானும் என்ன கனவுகண்டாள்
முள்ளெலியை ஒருபாம்பு — அங்கே
முடுக்கிவரக் கனவுகண்டாள்
வெள்ளாடு தன்னைதின்ன — ஒரு
360 வெருகுவரக் கண்டாளே
பூனைதன்னை விரட்டியல்லோ — நல்ல
பெருச்சாளி வரவும்கண்டாள்
கூடப்பிறந்ததோர் பிள்ளைக்குத்தான் — அவள்
கொங்கைப்பால் பற்றுமல்
365 மடுவறுத்து பால்குடிக்க — நல்ல
மங்கையவள் கனவுகண்டாள்

பிள்ளையில்லாது அருந்தவம் செய்த திருத்தேவியம்மை இப்பேர்ப்பட்ட கனவுகண்டு ஏங்கி மனம்வாடி என்ன செய்வோம் ஈசனே கயிலை வாசனே பார்பதி நேசனே என்று வருந்தும் நாளில் என்ன நடந்ததானல்

(சோழன் திருத்தேவியின் குழந்தைகளாக கணிகையும் அண்ணனும் பிறக்க, வேதியன் வணிகர் மகனைகப் பிறத்தல்)

அருந்தவமே செய்ததொரு — அந்த
அழகுபிள்ளை திருத்தேவிக்கு
நடனமாது தாசியுடன் — நல்ல
370 நட்டுவனையும் தானடைத்தார்
கேள்வியில்லா பழகைநல்லூர் — நல்ல
கிளையுடனே மடிவதற்கு

349. செம்பிஎனும். — 'செம்பியனும்' என இருக்கவும் கூடும். (செம்பியன் - சோழன்) 365. மடு - பசுவின் மடி.
358. முடுக்கிவர — துரத்திவர, விரட்டிவர.

காவேரி பூம்பட்டணத்தில் நல்ல
கட்டுடை செட்டியார் குலமதிலே
375 செட்டிச்சி திருவயிற்றில் நல்ல
சீரான வேதியன் தனையடைத்தார்
இப்படியாகவே தானடைத்து அங்கு
இருக்கின்றதோர் நாளையிலே
பத்துமாதம் திங்கள் தான்சுமந்து பிள்ளை
380 பெற்றெடுத்தாளே செட்டிச்சியும்
பெற்றெடுத்த பிள்ளைகுத்தான் நல்ல
பெயரிடவே வேணும்என்று
ஆனந்தன் என்றல்லவோ நல்ல
அருமையானதோர் பெயர் கொடுத்து
385 நாளும் ஒரு மேனியுமாய் அவள்
நலமுடனே வளர்த்துவாருள்

இப்படியாக செட்டிச்சி திருவயிற்றில் கட்டிவைத்த திரவியம் போல் பிறந்து ஆனந்தன் என்று அன்புடன் வளர்ந்துவரும் நாளில்

சோழராசன் திருமனைவி நல்ல
தோகை திருத்தேவி கர்ப்பத்திலே
ஒரு சூலில் இரண்டுபிள்ளை அந்த
390 உத்தமியாள் பெற்றெடுத்தாள்
பிறந்ததொரு பிளளைகள்க்கு அப்போ
பிரியமுடன் ஏதுசெய்தார்
கொப்பிள் அறுத்து குளுப்பாட்டி நல்ல
குரவையிட்டார் பெணகொடிமார்
395 வாருர்கள் அரசனிடம் நல்ல
வடிவுடைய தோழியர்கள்
சோழராசன் இடத்தில்சென்று அப்போ
சொல்லுவாராம் வாய்திறந்து

அய்யாவே அரசமன்னு நமது அரசியானவள் ஓர் சூலில் இரு குழந்தை பெற்றிருக்கிருள் என்று சொல்ல உடனே அரசமன்னன் என்ன செய்தார் ஆனுல்

ஆரடவா அறிக்கைக்காரா இப்போ
400 அவசரமாய் ஓடிவாடா
அரண்மனை சோதிடரை இங்கே
அவசரமாய் அழைத்துவாடா

393. காண்க பக்கம்:107,108 . வரி:79-82.

என்றுசொன்ன வேளையிலே அப்போ
ஏதுசெய்தான் அறிக்கைக்காரன்

அந்த அரசமன்னன் சொன்ன வார்த்தைகேட்டு சேவுகனுன வன் சோதிடருடைய அரண்மனைவந்து சோதிடரைக்கண்டு அய்யாவே சோதிடரே உம்மை அரசமன்னன் அழைத்துவரச் சொன்னுர் ஏனென்ருல் நம்முடைய அரசனுக்கு குழந்தைகள் பிறந்திருக்கிறபடியால் அவசரமாக அழைத்தார் என்று சொல்ல அதைக்கேட்ட சோதிடர் உடனே என்ன செய்தார் ஆனுல்

405 ஆரூட சாஸ்த்திரமும் நல்ல
அழகுடைய பஞ்சாங்கமும்
சோதிட சாஸ்த்திரமாம் பரல்
சோவியதும் தானெடுத்து
அரண்மனை தன்னைத்தேடி அப்போ
410 அவசரமாய் வந்தல்லவோ
வந்தவுடன் சோதிடரும் அங்கே
வணங்கியவர் நிற்கும்போது.
கண்டாரே அரசமன்னன் அந்த
கட்டழகன் சோதிடரை
415 வாரும்பிள்ளாய் சோதிடரே ஒரு
வார்த்தை ஒன்று சொல்லக்கேளும்
என்னுடைய மனவியவள் நல்ல
ஏற்றபிள்ளை திருத்தேவி
ஒருசூலில் இரண்டுபிள்ளை இன்று
420 இன்பமுடன் பெற்றதாலே
சாஸ்த்திரம் தன்னைப்பார்த்து அதற்கு
தான்கணியும் சாதகத்தை
என்றுசொன்னுர் அரசமன்னன் அப்போ
ஏதுசெய்தார் சோதிடரும்
425 பஞ்சாங்கம் தனைஎடுத்து அவர்
பஞ்சபச்சி தனைப்பிரித்து
லக்கணமும் பார்த்தல்லவோ சோதிடர்
நலமுடனே ஏதுசொல்வார்

வாருமையா அரசமன்னனே தங்களுக்குப் பிறந்திருக்கும் பிள்ளைகளின் ராசி பலன் என்னவென்ருல் விருச்சிகராசி கேது அபகாரம் ராச்சதகணம் பூரநச்சேத்திரம் சனிக்கிழமையுமாக இருப்பதால் இந்த பிள்ளைகள் தான்

408. சோவி—காண்க. பக்: 137, வரி:622—623 இடைஉரைக் குறிப்பு.
527. லக்கணம்-காண்க.பக் 208

அரண்மனையில் இருந்ததானால் இந்த
430 அரசாங்கம் அழிவதாகும்
நாட்டில் உள்ள ஆடுமாடு இங்கே
நமக்குப் பால்தான் கொடுக்காது
மாடுகளும் ஆடுகளும் இந்த
மக்களாலே அழிவாகும்
435 அரண்மனையில் வைக்காது நல்ல
அடந்தவனம் வைத்தால் நன்மை.

என்று சோதிடர்சொல்ல அதைக் கேட்டசோழராசன் என்ன சொல்வானானால் இந்தப்பிள்ளைகள் பிறந்தலக்கணம் யிப்படி இருந்ததானால் அதற்காக வேண்டி

பாலர்கள்தான் குற்றம் செய்தால் நாமும்
பாங்கிணத்தில் தள்ளலாமா
பிள்ளைகள்தான் குற்றம் செய்தால் அதை
440 பெற்றோர்கள் கொல்வாரோ
மண்டையதில் சிலந்திவந்தால் அதில்
மண்வாரி கொட்டலாமோ
விதிப்பயனும் யாரையும்தான் இப்போ
விட்டிடுமோ சோதிடரே
445 ஆதிசிவன் தன்னெழுத்தை என்றும்
அடிதெழுதப் போகுமோதான்
என்றுசொல்லி சோழராசன் அப்போ
ஏதுசொல்வார் சோதிடரை

வாரும்பிள்ளை சோதிடரே நான்வெகுகாலமாக பிள்ளையில்லா மலடாகி இருக்க அந்த ஆதிகறைக்கண்டன் அருளால் எனக்கு இரு கண்மணிகள் கிடைத்திருப்பதை கானகத்தில் கொண்டுபோய் விட்டு வரும்படி சொன்னீர் ஆகையால் வரும்விதி தவறாது என்று சோதிடர்க்கு இலைபாக்கு கொடுத்து அனுப்பிவிட்டு அரசன் என்ன செய்தானானல்

பிள்ளைகள்தான் பிறந்ததொரு நல்ல
450 பிரபலங்கள் தான்தெரிய
தெருக்களிலே தோரணங்கள் அவரி
திறமையுடன் கட்டச்சொன்னார்
மரகததோரணங்கள் கட்டியல்லோ அந்த
மன்னவர் யேதுசெய்தார்

448. பாங்கிணறு—பாழ்கிணறு, பாழுங்கிணறு.

455 அன்னதானம் சொர்ணதானம் அங்கே
அன்புடனே செய்யலுற்ருர்
இலைபாக்கு சந்தனமும் அவர்
எல்லோர்க்கும் தான்கொடுத்தார்

இப்படியாக சந்தனம் புனுகு கஸ்தூரி இலைபாக்கு சகல பேர்க்கும் கொடுத்து அந்த குழந்தைகளை அன்புடன் வளர்க்க இப்படியிருக்கும் போது

(குழந்தைகளாயிருக்கும் கணிகை, அண்ணன் ஆகியோர் புரியும் கொடுஞ் செயல்கள்)

அன்றைய தினமதிலே நல்ல
460 ஆதித்தன் மறைந்தபோதே
தங்கநல்ல தொட்டிலிலே அவர்கள்
தானே நித்திரை செய்யும்போது
மருத்துவமும் தோழிகளும் நல்ல
மங்கைகளும் உறங்கும்போது
465 சாமவேளை தன்னதிலே நல்ல
சரிசாம வேளையிலே
தொட்டிலிலே தூங்குகின்ற அந்த
தோகையவள் ஏதுசொல்வாள்

அந்த திருத்தேவி பெண்கொடியாள் பெற்ற பிள்ளையானது உடன்பிறந்த அண்ணனை அழைத்து என்ன சொல்வாளானல்

என்பிறவி அண்ணுவே இப்போ
470 எந்தன்வார்த்தை சொல்லக்கேளு
நம்முடையதாய் குங்கைப்பால் நமது
நாவுநல்ல நனையாது
பசியதுதான் பொறுக்குதில்லை நான்
பாவியிப்போ ஏதுசெய்வேன்
475 பெரும்பசியால் துணையிருக்கும் நல்ல
பெண்களைத்தான் உண்ணலாமா
மருந்துபோல் காத்திருக்கும் இந்த
மருத்துவத்தை தின்னலாமா
வனமதிலே சென்றல்லவோ நாம்
480 மாடுஆடுகளை முறித்துதின்போம்
என்றுசொல்லி இருபேரும் அப்போ
இறங்கலுற்ருர் தொட்டில்விட்டு

457. இலைபாக்கு—வெற்றிலைபாக்கு.
463. மருத்துவம்—பேறுகாலம் பார்க்கும் பெண். 471. குங்கைப்பால்—கொங்கைப்பால்.

| | | |
|---|---|---|
| | தாழிட்ட கதவுகளை | அவர் |
| | தாழ்திறந்து வெளியேவந்து | |
| 485 | பசுத்தொழுவை தேடிவாருர் | அந்த |
| | பழிகாரர் இருபேரும் | |
| | ஆயிரம் பசுவதுதான் | அங்கே |
| | அடைத்திருந்த தொழுவதிலே | |
| | தொழுவதிலே புகுந்தல்லவோ | நல்ல |
| 490 | தோகையவள் ஏதுசெய்தாள் | |
| | இருபிளவாய் பிளக்கிறதும் | நல்ல |
| | ஈரக்குலை தின்கிறதும் | |
| | அடித்துமுறித்து தின்றல்லவோ | அவர் |
| | அட்டகாசம் செய்தல்லவோ | |
| 495 | வயிர்நிறைய உண்டல்லவோ | அவர்கள் |
| | வாழும்மனை திரும்பிவாருர் | |
| | அர்த்தசாம நேரமதில் | நல்ல |
| | அரண்மனையில் வந்துசேர்ந்து | |
| | துவண்டநடை பிள்ளைரெண்டும் | அந்த |
| 500 | தொட்டிலிலே தான்படுத்து | |
| | அதறி அழுதிடுமாம் | அவர் |
| | அங்கமெல்லாம் தான்நடுங்க | |

இப்படியாக இருவரும் பதறி அழும்போது பாங்கியர் ஓடி பிள்ளைகளை எடுத்து திருத்தேவியிடம் கொடுக்கவும் அந்த திருத்தேவி மங்கையானவள் பிள்ளைகளை வாங்கி முகம் துடைத்து முத்தமிடும் சமயத்தில் குழந்தைகள்மேல் பிணவாடை யடிப்பதை அறிந்து என்ன செய்தாள் ஆனுல்

| | | |
|---|---|---|
| | வென்னீரால் மேல்கழுவி | அவள் |
| | வெண்பட்டால் தான்துடைத்து | |
| 505 | வாயார முத்தமிட்டு | அந்த |
| | மங்கையவள் பால்கொடுத்து | |
| | அன்புடனே இருக்கும்நாளில் | நல்ல |
| | ஆதித்தன் தான்உதித்தான் | |
| | கதிரோனும் உதித்தபோதே | அந்த |
| 510 | கட்டழகர் கோனவர்கள் | |
| | காலக்கடன் தனைமுடித்து | அவர் |
| | கறவைசெம்பை கையிலெடுத்து | |

510. கோனவர்—ஆவினம் காப்போர். காலக்கடன்-காலை நேரக் கடமைகள்.

பசுத்தொழுவு போவோமென்று அந்த
பாலர்களும் புறப்பட்டாரே

இந்தவிதமாக கோனவர்கள் கூடி என்ன தெரிவித்தார்கள் ஆனால் நம்முடைய அரசமன்னனுக்கு இவ்வளவு காலம் பிள்ளையில்லாமல் இப்பொழுது பிள்ளை பிறந்திருக்கிறபடியால் இன்றைக்கு நமது பசுக்களின் பால் அத்தனையும் அரண்மனைக்கு கொண்டு போக வேண்டுமென்று சொல்லி பசுமந்தை தேடிநடக்கும் சமயத்தில்

515 மாயாண்டி கோனவர்தான் மாட்டு
மந்தைதனை தேடிவந்தார்
பசுமந்தையை வந்துபார்த்து அப்போ
பகீர்என்று வயிர்எரிந்து
(அடே) அண்ணமாரே தம்பிமாரே இப்போ
520 அலங்கோல மானதென்ன
பாடுபட்டுத் தேடியல்லோ நாம்
பால்பசுக்கள் வாங்கிவிட்டோம்
ஆயிரம் பசுக்களுக்கும் வந்த
அவகேடு என்னமோதான்

வாருங்கள் அண்ணமார்களே தம்பிமார்களே நம்முடைய ஆயிரம் பசுக்கள் நிறைந்த தொழுவில் ஒரு பசுவாவது இல்லாமல் மோசம்செய்த தென்ன நம்முடைய சோழராசன் அரசில் இப்படிபபட்ட மோசம நடந்ததில்லை ஆகையால் அரசனிடம் போய் சொல்லவேணும் என்று கோனவர்கள் ஒன்றுகூடி அரண்மனைவந்து அரசனைக்கண்டு அழுது கண்ணீர் வடித்து வாடி இருகரம் குவித்து ஏதுசொல்வாரானால்

525 அய்யாவே அரசமன்னா இப்போ
அடியார்களின் வார்த்தைகேளும்
வெகுகாலம் அரண்மனையில் எங்கள்
வேந்தன் பிள்ளையில்லாமல்
ஆயனவர் திருவருளால் இப்போ
530 அருமைப்பிள்ளைகள் பிறந்ததாலே
பாலர்கள்தான் பிறந்ததாலே நாங்கள்
பால்கொடுக்க ஆசைகொண்டு
பசுத்தொழுவு சென்றோமையா எங்கள்
பசுக்களைத்தான் காணவில்லை

535 ஆயிரம் பசுக்களுக்கும் வந்த
அவகேடு நானறியேன்
புலிகரடி தடமும்இல்லை கள்ளர்
போனதொரு தடமும்யில்லை
என்றுசொல்லி கோனவர்கள் அப்போ
540 ஏக்கமுற்றுத் தானழுதார்

அய்யாவே அரசமன்னரே நாங்கள் போட்ட தொழுவில் ஆயிரம் பசுக்களில் அருமைக்கு ஒரு பசுவாவது இல்லை. எலும்பும் குளம்பும் தோலும் இருப்பதல்லாமல் வேறு ஒன்றையும் காண வில்லை நாங்கள் என்ன செய்வோம் என்று மறுபடியும் ஏது சொல் வாரானல்

பிள்ளையது இல்லாமல் நான்
பெருமலடு தான்இருந்து
ஆதிமாயன் தன்னருளால் எனக்கு
அழகுமங்கை தான்பிறந்தாள்
545 பத்துநல்ல வயததிலே அவள்
பக்குவதி யாகியல்லோ
இருபத்திஓர் வயதாச்சி அந்த
இன்பமுள்ள பெண்கொடிக்கு
சீதனமாய் விட்டிருந்த அவள்
550 சிவலைப் பசுமோசமாச்சே
நிமிசநேரம் காடுதங்கா நல்ல
நெத்திசுட்டி பசுதானும்போச்சே
மந்தைவந்து நின்றழைக்கும் எந்தன்
மாடக்கொம்பு பசுவும் போச்சே
555 என்றுசொல்லி கோனவர்கள் அங்கே
ஏங்கிமனம் வாடலுற்ருர்

அப்போது பார்த்தார் அரசமன்னர் வாருங்கள் கோனவர்களே வருத்தப்படவேண்டாம் இன்றைய தினத்தில் காவலரை அனுப்பி அந்தக் கள்வனைப் பிடித்து முன்போன மாடுகளையும் வாங்கித் தருகிறேன் என்று சொல்லி கோனவர்களை அனுப்பிவிட்டு அரசன் என்ன செய்தாஞல்

வாருங்கள் காவலரே இப்போ
வார்த்தை ஒன்று சொல்லக்கேளும்
இன்றைய தினமதிலே நீங்கள்
560 எல்லோரும் ஒன்றுகூடி

536. அவகேடு—பெருந்தீங்கு 549-554. பல அடையாளங்களுடைய பசு வகைகள் குறிக்கப்பெறுகின்றன. 546 பக்குவதி-பக்குவவதி பூப்படைந்த பெண்.

ஆயர்குல பசுமந்தையை நீங்கள்
அன்புடனே காவல்செய்வீர்
காவலாகத் தானிருந்து கள்ளனை
கைப்பிடியாய் பிடிக்கவேணும்

என்று அரசன் சொன்ன வார்த்தை கேட்டு அப்படியே நல்ல தென்று காவலர்கள் நமஸ்காரம் செய்து அவர்களுக்குடைய ஆயுதங்களை எடுத்து ஆதித்தன் மறையவும் பசுமந்தை போய்ச் சேர்ந்தார்

565 அன்றைய தினமதிலே நல்ல
ஆதித்தன் மறைந்தபோது
சரிசாம வேளையதில் அந்த
சண்டாளி அரசன் மகள்
ஏமசாம வேளையிலே நல்ல
570 இலேகுலுங்கா சாமத்திலே
தங்கத்தொட்டில் உறங்குகின்ற அந்த
சண்டாளி ஏதுசெய்தாள்
அண்ணன் தன்னை அழைத்தாளே நல்ல
அர்த்தசாம வேளையதில்
575 பசியோ பொறுக்குதில்லை என்று
பாவையவள் சொன்னபோது
இருபேரும் ஒன்றுபோலே அப்போ
இறங்கலுற்றார் தொட்டில்விட்டு

அந்த பெண்கொடியானவள் தன் தமையனை அழைக்கவும் அவனும் தொட்டில் விட்டு இறங்கி இருபேரும்ஒன்றுகூடி தாழிட்ட கதவைத் திறந்து வெளியே வந்து என்ன கோலமானாரானால்

வானம்பூமியும் ஒன்றுபோலே அப்போ
580 வடிவதுகொண்டார்கள் இருபேரும்
அரண்மனை வாசல்விட்டு நல்ல
அடந்தவனம் தேடிவாரார்
மாட்டுமந்தை தன்னதிலே அப்போ
வந்துசேர்ந்தார் இருபேரும்
585 அர்த்தசாம நேரத்திலே அவர்
அட்டகாசம் செய்யலுற்றார்
எருமைகளை பிடிக்கிறதும் அதை
இருபிளவாய் பிளக்கிறதும்
உதிரம் உண்டு ஏப்பமிட்டு அவர்
59.) உல்லாசமாய் திரிகின்றதும்

ஏப்பமிடும் சத்தம்கேட்டு அப்போ
என்னசெய்தார் காவலர்கள்

வாருங்கோ தலையாரிகளே இப்போது ஏப்பமிடும் சத்தம் கேள்ப்பதால் நாம் நான்குபுறம் சுற்றிநின்று கள்ளனைப் பிடிக்க வேண்டுமென்று ஆயுதமேந்தி நாலு பக்கமும் சுற்றிவர பார்த்தார்கள் அங்கு ஒருவரையும் காணுமல் மதிமயங்கி இருக்கும் நேரம்

அண்ணனும் தங்கையரும் அங்கே
அன்புடனே தின்றல்லவோ
595 எருமைகளை தின்றல்லவோ அப்போ
ஏகலுற்றுர் அரண்மனைக்கே
அரண்மனையில் வந்துசேர்ந்து நல்ல
அழகுகுழந்தை வடிவமானுர்
தொட்டிலிலே படுத்தவர்தான் அப்போ
600 துள்ளிதுள்ளி தானழுதார்
அழுதகுரல் தன்னைகேட்டு நல்ல
அன்புடைய தோழிமார்கள்
வாரிநல்ல தான்எடுத்து பெற்ற
மாதாகையில் தான்கொடுத்தார்

அப்போது திருத்தேவி மங்கை குழந்தைகளை கையில்வாங்கி முத்தமிட பிள்ளைகள்மேல் பிணவாடை அடிப்பதை அறிந்து என்ன செய்தாள் ஆனுல் கதம்ப கஸ்தூரி பரிமளாதிகள் பூசி அன்புடன் பால்கொடுத்து பாலர்களை மறுபடியும் தொட்டிலில் போட்டு உறங்கவைத்து தானும் நித்திரைசெய்யும் வேளையில்

605 கதிரோனும் உதயமானுர் அப்போ
காவலர்கள் ஏதுசெய்தார்
மாட்டுமந்தை சுற்றிப்பார்த்தார் அங்கே
மாடுகளைக் காணவில்லை
இதுஎன்ன மாயமென்று அப்போ
610 ஏதுசெய்தார் காவலர்கள்
கள்ளர்வந்த தடமும்இல்லை பசுவு
காளைகள் போனதோர் தடமும்இல்லை
என்னசொல்வோம் மன்னரிடம் என்று
ஏங்கிமனம் வாடிவந்து

614-615. இடைஉரை கதம்ப கஸ்தூரி களபகஸ்தூரி காண்க:78-79 இடைஉரை.

இவ்விதமாய் மனம்வருந்திய காவலர்கள் அரசன் முன்வந்து வாய்பொத்தி கைகட்டி என்ன எடுத்துரைப்பார் ஆனல் அய்யாவே அரசமன்னனே நாங்கள் இரவு முழுவதும் மாட்டுமந்தையைச் சுற்றி உலாத்திக்கொண்டு வந்தோம். ஒருவரும் வரக் கண்ணில் கண்டதில்லே பொழுது விடிந்தஉடன் மாட்டு மந்தையைப் பார்க்க கொம்பு குளம்பு எலும்பு இவைகள்தான் குவியலாயிருக்கிறது அல்லாமல் மாடுகளைக் காணவில்லை நாங்கள் சென்று

615 சுற்றிவர தடம்பார்த்தோம் இங்கே
சொல்வதற்கு ஒன்றுமில்லை
கரடிபுலி தடமும்இல்லை நல்ல
கள்ளர்வந்த தடமும்இல்லை
என்னசெய்வோம் ஏதுசெய்வோம் என்று
620 ஏங்கிமனம் வாடிநின்ருர்
இப்படியே இருக்குமநேரம் அப்போ
ஏதுசெய்தார் கோனர்கள்
அடித்துநல்லோ விழுந்தழுது அரசன்
அரண்மனைதான் தேடிவாருர்
625 தலைதனிலே அடித்தவர்தான் அரண்மனை
தலைவாசல் வந்துநின்று

ஆயர்குலத்தில் பிறந்தவர் யாபேரும் வந்து அரசமன்னன் தலைவாசல் முன்வந்து என்ன சொன்னர்கள் ஆனல் ஏ மனுநீதி தவரு மன்னவனே குடிகள் மீது அன்புடைய தயாளனே ஆயர் குலத்தோர்க் கிரங்கும் மன்னனே நீர் ஆளும் தேசத்தில் இப்படி அநியாயம் நடக்குமபடி

யாரிட்ட சாபமோதான் அல்லது
ஆண்டவனின் சோதனையோ
எவர்செய்த தீவினையோ ஆதி
630 ஈஸ்பரனின் தண்டனையோ
செங்கோலும் தவறினதோ நல்ல
செல்வர்பிறந்த காரணமோ
மைந்தர்களின் காரணமோ உங்கள்
மனுநீதி தவறியதோ
635 யாருடைய சோதனையோ எங்கள்
ஆவினங்கள் அழிவாச்சி
ஆயிரம் பசுவும் போச்சி நாங்கள்
அவமானம் அடையலாச்சி

614 - 615. இடைஉரை : உலாத்திக்கொண்டு - உலவிக்கொண்டு.

இருநூறு எருதும் போச்சே நாங்கள்
640 என்னசெய்வோம் மன்னவனே

என்று ஆயர் குலத்தவர் முறையிடுவதை பார்த்த சோழ ராசன் ஆயர்களை அழைத்து வருந்தாதீர்கள் இன்றைய தினத்தில் எந்த விதத்திலும் அந்த கள்வர்களை கைப்பிடியாகப் பிடித்து விடுகிறேன் என்று சொல்லி தலையாரிகளை மாட்டுமந்தைக்கு காவலாக அனுப்பிவிட்டு தானும் அரண்மனை சென்றார்

காவல்தன்னை வைத்தபோது நல்ல
கதிரோனும் தான்மறைந்தார்
அப்போது தலையாரிமார் அங்கே
அன்புடனே ஏதுசெய்தார்
645 காவலுக்கு ஏற்றதொரு நல்ல
கடினமுள்ள நாய்களைத்தான்
என்னஎன்ன நாயதுதான் அங்கே
இன்பமுடன் தானவிழ்த்தார்
வேட்டைஎன்ற சத்தம்கேட்டால் தனது
650 வீடுதேடி ஓடும்நாயும்
பூனைதனை கண்டதானால் உடன்
பின்வால்மடக்கி ஓடும்நாயும்
பாசக்கயிர் தட்டிவிட்டால் நல்ல
பச்சஇலைதேடி ஓடும்நாயும்
655 கூச்சல்சத்தம் கேட்டதானால் நல்ல
குனிந்தநிழல்தேடி உறங்கும்நாயும்
கள்வர்களை கண்டதானால் உடன்
கண்மூடித் தூங்கும்நாயும்
காதறுத்த மூளிநாயும் ஒரு
660 கண்ணில்லாத வெள்ளைநாயும்
மொட்டைவால் செம்பரையும் முழு
மேனிவங்கு பூச்சிநாயும்
எலிதன்னை கண்டவுடன் அங்கே
இருகாதம்ஓடி ஒளிக்கும்நாயும்

இப்பேர்ப்பட்ட நாய்களுடன் தலையாரிகள் காவலில் இருக்க அன்றையதினம் சாமநேரமானவுடன் குழந்தைகள் இருபேரும் ஒன்றாக கூடி தொட்டில் விட்டிறங்கி மாட்டுமந்தை தேடிவந்து என்ன செய்தார்கள் ஆனால்

649 - 664. வேட்டைநாய்கள் பற்றிய தன்மைகள் பலகதைகளிலும் இவ்வாறே நகைச்சுவையுடன் குறிக்கப்படுகின்றன.

665 எருதுகளை பிடிக்கிறதும் அதை
இருபிளவாய் பிளக்கிறதும்
உதிரமதை குடித்தல்லவோ அங்கே
உடனே சதையை தின்னுறதும்
ஆயிரம் எருதுகளை அன்று
670 அத்தனையும் தின்றல்லவோ
ஆதாளி போட்டல்லவோ அங்கே
அலையும்நல்ல வேளையதில்
பார்த்தார்கள் தலையாரிமார் அந்த
பாவிகள்போட்ட சத்தமதை
675 ஏறிட்டு பார்க்கும்போது நல்ல
இருளாக தோன்றிடவே
வானம்பூமியும் ஒன்றுபோலே அந்த
வளரும்இருள் தன்னைக்கண்டார்

வானம் பூமி ஒன்றுபோலே நிற்கும் இருளைக்கண்டு ஏது அதிசயமாய் இருக்கின்றதென்று அந்த இருளைப்பின்பற்றி வரக் கூடிய நேரம் அந்த இருளானது அரண்மனை வாசல்வந்து சிறு பிள்ளையாகி கதவை தாழிட்டுச் செல்வதை தலையாரிகள் அறிந்து அன்று கதிரோன் உதித்த உடன் அரசனைக் கண்டு அவர்கண்ட அதிசயங்களைச் சொல்ல அப்போது அரசன்

(குழந்தைகள் குறித்த உண்மையறிந்த மன்னன் செயல்)

எண்ணுது எண்ணியல்லோ மனம்
680 ஏங்கியவர் ஏதுசொல்வார்
பிள்ளைஎன்று நாமிருந்தோம் அதை
பேய்கள் என்று அறியவில்லை
மைந்தரென்று நானிருந்தேன் சண்டாள
மாயநீலன்நீலி என நான்அறியேன்
685 சாஸ்திரமும் பொய்யாமோ எந்தன்
தலைவிதியும் விட்டிடுமோ
ஆகையினால் சேவகரே இந்த
அரசமன்னன் வார்த்தைகேளும்
ஆரும்ஒருவர் அறியாமல் பிள்ளைகளை
690 அடந்த வனத்தில் வைத்துவிடும்
எவரும் ஒருவர் அறியாமல் நல்ல
இருண்டவனத்தில் விட்டுவிடும்

671. ஆதாளி - ஆவேசம் கொண்டு ஆடுதல்

என்று அரசன் சொல்ல சேவகன் அப்படியே ஆகட்டுமென்று இரு பிள்ளைகளையும் தூக்கி அடந்தவனத்தில் வைத்து அரண்மனை மந்துசேர்ந்தான். அப்போது அந்த பிள்ளைகள் இரண்டும் குழந்தை வடிவம் மாறி மாயரூபமாய் வனத்தில் எவ்விதம் வளர்ந்து வாருர் ஆனல்

(தங்கையும் அண்ணனும் நீலியும் நீலனுமாகி வனத்தில்)
தங்குதலும் நீலன் மடிதலும்)

அடந்தநல்ல வனமதிலே — நல்ல
அத்துவான கானகத்தில்
695 மாயா நீலி நீலனோடும் — அந்த
வனமதிலே இருக்கும்போது
அடந்தநல்ல வேம்பதிலே — அவர்
அன்புடனே வீற்றிருந்தார்
இப்படியே இருக்கும்போது — அந்த
700 இன்பமுள்ள வேம்பதற்கும்
கெடுதிகாலம் வாறதய்யோ — அது
கிளையோடு முடிவதற்கு
பழகை நல்லூர் கொடிமரம்தான் — அது
பழுதாகப் போனதாலே
705 வேம்புதன்னை வெட்டிடவும் — அதில்
வீற்ற நீலன் தான்மடிந்தான்

அந்த பழகை நல்லூர் கோவில் கொடிமரத்திற்காக அந்த ஊரார் வேப்பமரத்தை வெட்டவும் அதில் வீற்றிருந்த நீலன் மடியவும் 'பார்த்தாள் மாய நீலியானவள் காடுசெடிவனம் வனந்திரம் எல்லாம் அலைந்து பழிகார வேதியனை எதிர்பார்த்து திரியும் போது

(ஆனந்தன் வணிகம் செய்யப் புறப்படுதல்)

காவேரிப்பூம் பட்டணத்தில் — நல்ல
கட்டுடைய வணிகர் வர்த்தகர்தான்
பெற்ற மகன் ஆனந்தனை — அவர்
710 பிரியமுடன் அருகழைத்து
என்மகனே கண்மணியே — இப்போ
எந்தன்வார்த்தை சொல்லக்கேளு
சேராத பேர்கள்உடன் — நீதான்
சேராதே என்மகனே
715 அடுத்தவரை கெடுக்காதே — மகனே
அன்னீதம் சொல்லாதே

பேசுபவர் வாய் பார்க்காதே நீதான்
பிறர்சொல்லைக் கேளாதே

என்மகனுகிய ஆனந்தா நாலுபேர் கூடியிருக்கும் இடத்தில் போய் இருக்காமலும் நான் தேடி வைத்த பொருள்கள் அத்தனை யும் இருப்பதால்

கட்டிவைத்த முதல் அழிய நீதான்
720 கச்சவடம் பண்ணுதே
தேவடியாள் குடியிருக்கும் அந்த
தெருவீதி நடக்காதே
தனிவழிநீ நடக்காதே மகனே
தன்பெருமை கொள்ளாதே
725 என்றுசொல்லி செட்டியவர் அப்போ
எடுத்துக்கொடுத்தாரே வச்சிரவாள்
(ஒரு) ஆபத்துக்கு உதவுமென்று நல்ல
அருமைமகன் கையில் கொடுத்து
சிவசிவா வென்று சொல்லி அப்போ
730 சிவலோகம் தானடைந்தார்

இந்தவிதமாக அந்த வணிகரான செட்டியார் மரணம் அடையவும் ஆனந்தன் யீமக்கிரிகை பலதும் முடித்துயிருக்கும் நாளில் ஒரு நாள் தினத்தில் தாயாரை அழைத்து என்ன சொல் வான் ஆனுல்

அம்மா அம்மா மாதாவே இந்த
அடியேனுட வார்த்தை கேளு
யாபாரம் செய்யப் போறேன் நீ
அருமைமகனுக்கு விடைதருவாய்
735 என்றுசொன்ன வேளையிலே அப்போ
ஏதுசொல்வாள் செட்டிச்சியும்

வாடா என்மகனே கண்மணியே உன்தந்தை யில்லாமல் என்னை தனியே விட்டு நீயும் தனியாகப் போவது சரியல்ல வென்று சொல்ல அதைக் கேட்ட ஆனந்தன் என்ன சொல்வான் ஆனுல்

தந்தைவார்த்தை தள்ளமாட்டேன் நான்
தன்பெருமையும் கொள்ளமாட்டேன்
தந்தை தேடிய பொருளோடு நான்
740 தனிப்பொருள் சேர்த்து வைக்கவேணும்

733. யாபாரம்—வியாபாரம், வணிகம்:

தேடிவாறேன் திரவியம்தான் உந்தன்
சிறுவனுக்கு விடைதருவாய்

என்று வணக்கமுடன் கேள்க்க செட்டிச்சியும் மகனுக்கு விடை கொடுத்து ஆசீர்வதித்து அனுப்ப அப்போது செட்டி மகனும் சகலவித மாணிக்கம் முத்து புஸ்பராகம் பவளம் வைரம் வைடூர்யம் கோமேதகம் பச்சை நீலம் ஆகிய ரத்தினம் முதலியது எடுத்து மாதாவை அடிவணங்கி

(நீலி நிற்கும் காட்டுவழியே ஆனந்தன் வருதலும் அவள் மறித்துக் கொள்ளுதலும்)

நாடுநகர் தான்கடந்து அப்போ
நலமுடனே வழிகடந்து
745 தேசமான தேசம்விட்டு அந்த
செல்லப்பிள்ளை வாறபோது
காடுநல்ல செடிதாண்டி நல்ல
கட்டழகன் வாறபோது
அடந்தநல்ல வனமதிலே அந்த
750 ஆனந்தனும் வாறநேரம்
கண்டாளே மாயநீலி நல்ல
கட்டழகன் செட்டியாரை
பழிகாரன் வாருன்என்று அந்த
பாவைநல்ல மாயநீலி
755 வேளைநல்ல சமயம் என்று அவள்
வேகமுடன் ஏதுசெய்தாள்

அந்த ஆனந்தனைக் கண்ட மாயநீலியானவள் அந்த வனத்தில் அலைந்து மேனியெல்லாம் வாடி கைகால் தளர்ந்து தாகமதிகரித்து சோர்ந்து வருவதுபோல் ஆனந்தனிடத்தில் வந்து ஏது கேட்டாளானல்

(வேறு—3)

தாரும் சுண்ணும்பு எனக்கு ஒ செட்டியாரே (தா)
தாரும் சுண்ணும்பெனக்கு பாரும்திருக் கண்ணுலே
வாரும் என் அருகே உக்காரும் இதுசமயம் (தா)

அந்தமாயநீலி தாகம் அதிகரித்தவள் போலும் ஆசையாகிய வார்த்தைகளைப் பேசவும் அதை அறிந்த ஆனந்தன் என்ன சொல்வான் என்ருல் மனமானது பதறி கால் நடுங்குவதோடு

742-743. மாணிக்கம் முதல் நீலம் முடிய நவரத்தினங்கள்.
பாடல் 3. உக்காரும்-உட்காரும், அமரும்

(4)

யாரோ அறிகிலேனம்மா இவ்வனமதில்
வாருமென்றுரைத்த தேதம்மா
யாரும் அறியாத இந்த அடந்தவனமதிலே
வாரும் உக்காரும் என்றபோதே மனம்வாடுதே (யா)

ஆகா தெய்வமே நான் தனியே வரக்கூடிய நேரம் ஓர் பெண்ணுனவள் நீ என்னிடம் வார்த்தையாடியது சரியல்ல சற்று விலகிப் போவென்று ஆனந்தன் சொல்ல அப்போது மாயநீலி மறுபடியும் ஏது சொல்வாளானுல்

(5)

கானவெயில் நடந்து கால்கள் தளர்ந்து
தானேதகையால் மெலிந்து — நானேஉமது
பையைத்தானே கண்டவுடனே—வாய்தனில்
போட்டதொரு பாக்கும் கரைவதற்குள் (தாரும்)

அய்யாவே செட்டியாரே நான் அதிக தாகத்தால் வாயில் பாச்கு போட்டதால் மனதில் வஞ்சகமில்லாமல் கொஞ்சம் சுண்ணும்பு தரவேண்டு மென்று கேள்க்க ஆனந்தன் ஏதுசொல் வாஞனுல்

(6)

சுண்ணும்பு என்னிடமேது எந்தனைநீதான்
துன்பப்படுத்தினுல்தீது
அண்ணுந்து பார்க்கும்போது அங்க முருகுதம்மா
எண்ணுது எண்ணிஎந்தன் இருதயம் நோகுதம்மா (யாரே)

இந்த வனத்தில் வழிமறிந்து வாயில் பாக்கு போட்டேன் என்றும் சுண்ணும்பு தாரும் என்றும் கேள்க்கும் தோகையே நான் இலைபாக்கு அறியேன்என்னிடம் சுண்ணும்புகிடையாது ஆகையால் சற்று விலகு நான் போய் வருகிறேன் என்று சொல்ல நீலி கேட்டு மறுபடியும் என்ன சொல்வாளானுல்

(7)

பெண்ணை நீர் கண்டதில்லையோ என்னிடத்தில்
பேசஉமக்குத் தொல்லையோ
எண்ணுது எண்ணவேண்டாம்
இருதயம் நோகவேண்டாம்
சுண்ணும்பு தந்தீரானுல்
இந்நேரம் போய்விடுவேன் (தாரும்)

வாருமையா செட்டியாரே என்னைக்கண்டு மனம்வாடவேண் டாம் வாயில் போட்ட பாக்குக்கு கொஞ்சம் சுண்ணும்பு தந்தால்

நான் போய்விடுகிறேன் என்று நீலி சொல்ல ஆனந்தன் மன மானது வாடி திருமுகமும் வாடி என்ன செய்வோம் என்று ஏங்கி ஏது சொல்வான் ஆனல்

(8)

ஆதிசிவன் சோதனை—இவ்வனமதில்
ஆனந்தன்படும் வேதனை
ஆரும் துணையில்லாது
அடந்தவனத்தில்வந்தேன்
மாதே சற்று விலகு
மலரடியைத் தொழுதேன் (யாரே)

என்று இருகரம் குவித்து வணங்க அதைக்கண்ட நீலி என்ன சொல்வாளானல் ஓ செட்டியாரே பெண்ணென்று எண்ணி ஏமாற்றிப் போகலாமென்று நினைத்தீரோ என்னை யாருமறியாத வனத்தில் ஒண்டியாகவிட்டுப் போனதை மறந்தீரோ கள்ளி நிணலில் உக்காரச்சொல்லித் தாகம் தீர்க்கச் சென்றதை மறந் தீரோ வனத்தில் வழிமறிக்க மாலையிட்டவள் தவிர மற்றவள் வரு வாளோ இன்னும் ஏமாற்றுவது தருமமாகாது என்று மறுபடியும் ஏதுசொல்வாள் ஆனல்

மணமுடித்த மன்னவனே இந்த
வனமதிலே அலையலாமா
மாலையிட்டு மணமுடித்து நாம்
760 மருவிவிளை யாடும் நாளில்
தாலிகட்டி நாமிருவர் நல்ல
சந்தோசமாய் வாழும் நாளில்
(என்) தாய்வார்த்தை பொறுக்காமல் என்னை
தனியே வைத்து நடக்கலியோ

என்னைநீர் தாலிகட்டி சந்தோசமாய் வாழும் நாளில் என் தாயானவள் சத்தமிடவும் நீர் கோபம் கொண்டு என்னைத் தனியே வைத்து நடக்கவும் அடந்த வனத்தில் ஓடிவந்து தங்களைக் கண்டு

765 மன்னவரே வாருமென்று நான்
மடிபிடித்து இழுக்கலியோ
ஓடிவந்து மறித்தல்லவோ நான்
உண்மை செய்து தந்தேனே
சத்தியத்தை நீர்மறந்து என்னை
770 தனியே விட்டு போகலாமா

வரி 757-க்கு முன் அமைந்த உரை: கள்ளி நிணலில்—கள்ளி மர நிழலில்.

என்று அந்த மாய நீலி கேள்க்க ஆனந்தன் மனதுவாடி மனம் பதறி ஏதுசொல்வானானல்

(மறுத்துரைத்த ஆனந்தனிடம் நீலி மாயச்செயல்கள் பலபுரிதல்)

மாலையதும் நான் அறியேன் நல்ல
மாங்கல்யமும் நான்அறியேன்
கல்யாண மென்ற வார்த்தை நான்
கனவிலேயும் நினைத்ததல்ல
775 அத்துவான கானகத்தில் என்னை
அதட்டுகிறாய் மாயக்காரி
மாயாசெக சாலமெல்லாம் உந்தன்
மர்மமது நானறிவேன்
வம்பு வார்த்தை பேசாதே சற்று
780 வழிவிடுவாய் நான்போறேன்

என்று ஆனந்தன் செட்டி சொல்ல அதைக் கேட்ட நீலி ஏது சொல்வாளானால் வாரும் என்மன்னவரே என்னைத் திருமணம் செய்யவில்லை என்று நீர் சொல்வது உண்மைதானா நீர் தாலி கட்டியதை இல்லையென்று சொன்னாலும் நம் இருபேர்க்கும் சாச்சியாக இருந்த சந்திரன் சூரியன் முப்பத்திமுக்கோடி தேவர் ஆதிகறைக்கண்டனாகிய பரமசிவன் இவர்கள் பொய் சொல்வார் களா. அது அல்லாமல் என்தாய் தகப்பன் அண்ணன் தம்பி அக்காள் தங்கை இவர்கள் உம்மைத்தேடி அலைவார்களா என்று சொல்லி ஒரு கள்ளிக் கொப்பை ஒடித்து வீசவும் அந்தக் கொப் பானது எப்படி வந்ததானால்

தேவலோக ரம்பைபோலே ஒருத்தி
தேடி வாறாள் செட்டியாரை
வாருமய்யா என் கொழுந்தா உங்க
மர்மமது தீர்ந்துபோச்சா
785 அறியாத பிள்ளை தன்னை கானில்
அலையவைத்து போகலாமா
வாருங்கள் அரண்மனைக்கு என்று
மங்கையவள் அழைக்கும் போது

இப்படி அழைத்த வார்த்தை கேட்டு மதிமயங்கி நிற்க அந்த வேளையில் பத்துவயதுடைய ஓர் பாவை ஓடிவந்து செட்டி யார் முன்நின்று என்ன சொல்வாளானால்

வாருங்கள் அத்தானே முக
790 வாட்டமாக நிற்பதென்ன

தேடினேம் வனங்களெல்லாம் உங்கள்
திருமுகத்தை காணுமல்
வாடினுள் எந்தன் அக்காள் உமது
வண்ணமுகம் காணுமல்
795 பசித்தாலும் உண்ணமாட்டாள் உங்கள்
பாதமதை காணுமல்
வாருங்கள் அரண்மனைக்கு என்று
மங்கையவள் சொல்லும் நேரம்

இப்படியாக சொல்லிய வார்த்தைகளை கேட்டு ஆனந்தன் ஆகா ஒன்ருக இருந்து மூன்ருக வந்துவிட்டது என்று எண்ணி நெருப்பில் வைத்த மெழுகு எவ்விதம் உருகுமோ அவ்விதம் உருகி கால்கள் தளர்ந்து நிற்கும் போது நீலியுடைய தாய் தகப்பன் போல் இருபேர் வந்து என்ன சொல்வாராஞல்

வாருமய்யா மருமகனே மனது
800 வாட்டங்கொண்டு நிற்பதென்ன
ஆதிசிவன் சோதனையால் நாம்
அலையலானேம் கானகத்தில்
கைப்பிடித்த தோசம் தானே ஆதி
கறைக்கண்டன் சோதனையோ
805 மாலையிட்ட தோசம்தானே அந்த
மகாதேவன் சோதனையோ
யாருடைய சோதனையோ நாம்
அலையலானேம் கானகத்தில்

வாருங்கள் மருமகனே என் மகளை மணமுடித்து எட்டாம் மாதம் அவளைத்தனியாக விட்டுவந்த நாள் முதல் நாங்கள் தேடாத ஊரும் பாராத காடும் இல்லை. இப்போது கண்டஉடன் எங்கள் கவலையானது சூரியனைக் கண்ட பனி எவ்வாருக விலகுமோ அப்படி கவலை தீர்ந்தது வாருங்கள் அரண்மனைக்கு போவோம் என்று சொல்ல ஆனந்தன் அவர்களை எட்டிப் பார்க்கும் சமயம் எப்படி இருந்ததாஞல்

பரட்டை நல்ல தலையழகாம் பாசி
810 படந்ததோர் பல்லழகாம்
மலைபோன்ற உருவங்களாம் நல்ல
மதயானைபோல் சத்தங்களாம்
கோரநல்ல வடிவம்கண்டு நல்ல
குழந்தையவன் ஏதுசெய்தான்

815 தந்தையவர் தான்கொடுத்த நல்ல
மந்திரவாள் தனைஎடுத்து
வச்சிரவாள் தன்னைவீச அவள்
மாயாசாலம் அழிந்ததப்போ
சாலமது தான்அழிய அந்த
820 சண்டாளி ஏதுசெய்தாள்
கள்ளி கொப்பு தான்முறித்து அவள்
கக்கத்தில் இடுக்கலுற்ருள்
கள்ளியது பிள்ளையாகி அப்போ
கண்டதே செட்டியைத்தான்
825 அப்பா அப்பா என்றல்லவோ அப்போ
அலறியது அழுதிடுமாம்.

இப்படி அந்தப் பிள்ளை அழுவதைக் கண்ட மாயநீலி ஏது சொல்வாளானுல் என்கணவா என்பேரில் கோபமானுலும் இந்த குழந்தையை பார்த்தாவது மனம் இரங்கி வாருங்கள் அரண் மனைக்கி என்று சொல்ல ஆனந்தன் ஏதுசொல்வா ஞனுல்.

வாடிபெண்ணே பெண்கொடியே என்ன
வார்த்தையது சொல்ல வந்தாய்
எனக்கு திருமணமும் முடியலியே அப்போ
830 ஏதடியோ சிறுகுழந்தை
ஆருடைய பெண்ணுேநீ அது
யாருடைய பிள்ளைதானுே
காமன்வலைச் குள்ளாகி இந்த
கானகத்தில் அலையுகிருய்
835 மன்மதனின் பாணத்தாலே கானில்
மதிமயங்கி அலையுகிருய்
வாறபேரை போறபேரை நீதான்
வாதுக்கு இழுக்குகிருய்
மாயாசெக சாலக்காரி உந்தன்
840 மர்மமது நானறிவேன்
காமக் கோட்டி கொண்டவளே எந்தன்
கண்ணெதிரே நிற்காதே

(ஆனந்தன் மீண்டும் மறுத்தலும், நீலி தன்வழக்கினைப் பழகை நல்லூர் ஊராரிடம் தெரிவித்தாலும்)

என்று ஆனந்தன் சொல்லிய வார்த்தையை கேட்ட நீலி ஏது சொல்வாள் ஆனுல் வாரும் செட்டியாரே உம்மிடம் நான் வம்பு

822. இடுப்பில் வைத்துக் கொடுங்கையால் தாங்கிக்கொள்ளுதல்
841. காமக்கோட்டி—காமப் பித்து.

செய்வதும் நீர் என்னிடம் வம்பு சொல்வதும் அதோ தெரியும் பழகை நல்லூரில் சென்று நம்முடைய விவகாரத்தை சொல்லி அவ்வூரார் எவ்விதம் தீர்ப்பு சொல்லுவார்களோ அப்படி கேட்டுக் கொள்வோம் வாருமென்று நீலி சொல்ல ஆனந்தனும் சம்மதித்து இருபேரும் பழகைநல்லூர் வந்து என்ன செய்தார்களானல்

அண்ணமாரே தம்பிமாரே நல்ல
அறிவுடைய பெரியோரே
845 இந்தநல்ல ஊரதிலே குடி
இருக்கும்நல்ல சனங்களிலே
ஊருக்கு நாட்டாமை நல்ல
ஊர்மன்னன் வீடுயெது
என்று கேட்டாள் நீலியவள் அப்போ
ஏதுசெய்தார் பாலர்கள்தான்

வாருமம்மா இந்த ஊர் அம்பலக்காரர் வீடு அதோ தெரியும் தோப்பின் அருகே ஊர்மடம் இருக்கிறது அந்த மடத்தின் அருகே அவருடைய வீடு என்று சொல்ல அந்த வார்த்தை கேட்டு இரு பேரும் ஊர்மடத்தருகே வர அப்போது அந்த மடத்தில் அமர்ந் திருந்த நாட்டாமைக்காரரை கண்டு நீலி ஏது சொல்வாளானல்

வாடியதோர் திருமுகமாய் அவள்
வாய்திறந்து தானழுது
முத்துப்போல் கண்ணீரை ஊரார்
முன்னலே ஓடவிட்டு
855 அலறிநல்லோ அழுதல்லவோ அப்போ
அடிபணிந்து ஏதுசொல்வாள்
அய்யாவே ஊராரே இந்த
அநியாயம் கேளுமையா
புருசன்செய்த கொடுமையதை என்னை
860 பெற்றோரே கேளுமையா

அய்யாவே ஊரார்களே இதோ நிற்கும் என்கணவன் என்னை படித்தியபாடும் இப்போது என்னை வேண்டாமென்று சொல் கிறதும் அதன் விபரம் தெரிவிக்கிறேன் நீங்கள் கேட்டு மண்ணின் மேலிருந்து வழக்கோரம் பேசாமல் தீர்ப்பு சொல்லவேணுமென்று என்ன தெருவித்தாள் ஆனல்

---

847. நாட்டாமை—நாட்டாண்மைக்காரர், அம்பலக்காரர், ஊர்த்தலைவர்.

860 861. இடைஉரை: ஊர்த்தலைவர் மண்ணின்மேல் இருந்து வஞ்சனையின்றித் தீர்ப்பு வழங்கும் முறை குறிக்கப்பெறுதல்.

(ஊரார் உள்ளம் உருகுமாறு நீலி தன்வழக்கினை எடுத்துமொழிதல்)

சந்திரனும் சூரியனும் நல்ல
இந்திரனும் வானவரும்
ஈஸ்பரனும் பார்பதியும் அந்த
இருளும்முகில் வண்ணனையும்
865 அத்திமுகன் கணபதியும் நல்ல
ஆறுமுக வேலனையும்
எல்லோரையும் சாச்சிவைத்து இவர்
என்கழுத்தில் மாலையிட்டு
மாலையிட்டு மணமுடித்து நாங்கள்
870 வாழ்ந்துவரும் நாளையதில்

அந்த ஆதி ஈசன் கிருபையால் நான் கர்ப்பமாகி ஆறுமாத மாகவும் வீட்டில் பலவித கட்டமுண்டு அதையுணர்ந்த என் தாயார் சத்தமிட்டபடியால் என்னைவிட்டு வெளியே போனார் அப்போது நான் அவர் பின் துடந்து வாதாடி அழைக்கும் போது மனம் இரங்கி சந்தோசமாக இருபேரும் நிணலில் இருந்து தாம்பூலம் போட்டோம் அப்போது

தலைமயக்கம் ஆகியல்லோ நான்
தான்படுத்தேன் துடையதிலே
அயர்ந்து உறங்கிவிட்டேன் அந்த
அத்துவான வனமதிலே
875 துடையளவு மணல்கூட்டி என்னை
தூக்கிஅதின் மேல்கிடத்தி
மாயமாய் மறைந்துவிட்டார் இந்த
மங்கையரும் கண்விழித்தேன்
கணவன் தன்னை காணுமல் இந்த
880 காடெல்லாம் நான்அலைந்தேன்
காய்கிழங்கு இலைகள் தின்று சிறு
கண்மணியை பெற்றெடுத்தேன்
தாயாரும் பிள்ளையுமாய் இன்று
தனிவனத்தில் வாறநேரம்
885 கண்டுநல்லோ பிடித்தேனே எந்தன்
கண்நிறைந்த மன்னவரை
அரண்மனைக்கு அழைத்ததற்கு என்னை
அதட்டியவர் பேசுகிறார்
நீயாரோ நான்யாரோ என்று
890 நேர்வாதம் பேசுகிறார்

என்று நீலியானவள் சொன்ன வார்த்தையை கேட்ட ஊரார்கள் ஆலோசித்து ஆனந்தனை பார்த்து வாரும்பிள்ளாய் செட்டியாரே மாலையிட்ட பெண்மேல் உமக்கு இவ்வளவு வருத்த மான விசயம் ஏது என்று கேள்க்க அப்போது ஆனந்தன் ஏது சொல்வானானால்

(ஆனந்தன் மறுத்துரைத்தல்)

ஐயாவே ஊரவரே சிறு
அடியேனுட வார்த்தைகேளும்
யாரோ இந்த பெண்கொடிதான் இந்த
அடியேனுக்கு தெரியாது
895 அத்துவான வனமதிலே நல்ல
அடந்ததொரு கானகத்தில்
கண்டுவழி மறித்திவள்தான் என்னை
கணவன் என்று சொல்லுகிறாள்

ஆனால் எனக்கு திருமணம் ஆகவில்லை நான் யாபாரம் செய்ய வேண்டு மென்று வரும் வழியில் என்னை மறித்து துன்பப்படுத்து கிறாள் அவள் யாரென்று தெரியாது என்று ஆனந்தன் சொல்ல அதைக் கேட்ட நீலி என்ன சொல்வாளானால் என்னை மணம் முடிக்கவில்லை என்று சொல்கிறார் ஆகையால் இந்த ஊர் கூட்டத்தில் எவ்வளவோ சனங்கள் நிறைந்திருக்கிறது என் குழந் தையை நான் கீழே இறக்கி விடுகிறேன் அந்த குழந்தை யாரிடம் போகிறது பாருங்கள் அப்போதாவது என்னை மணமுடித்ததும் இல்லை என்பதும் உங்களுக்கு தெரியும் என்று சொல்ல அப்படியே ஒப்புக்கொண்டு சரிசொன்ன உடன் நீலி ஏதுசெய்தாள் ஆனால்

(குழந்தையைக் காட்டி நீலி செய்த வஞ்சகச் செயல்)

பார்த்தாளே மாயநீலி அந்த
900 பழிகாரி ஏதுசெய்தாள்
இடுப்பில்வைத்த பிள்ளையைத்தான் அப்போ
இறக்கிவிட்டாள் பூமியதில்
தவழும்நல்ல பிள்ளையது அங்கே
தட்டிமுட்டி வாறதையா
905 அப்பெரிய கூட்டத்திலே நல்ல
ஆனந்தனை தேடுதையா
தண்டையோடு சிலம்புகொஞ்ச அங்கே
தவண்டுவந்த குழந்தையது

908. தவண்டு - தவழ்ந்து

ஆனந்தன் செட்டியவன் நல்ல
910 அன்புடைய துடையதிலே
மடிமீதில் இருந்தல்லவோ செட்டி
மதிமுகத்தை பார்த்திடுமாம்

இப்படியாக அந்தப்பிள்ளை சகல கூட்டமும் கடந்து ஆனந்தன் மடியில் போயிருந்து அவனுடைய முகம் பார்ப்பதை அறிந்த ஊரார் செட்டியைப் பார்த்து வாரும் செட்டியாரே நீர் சொல்வது தவறு நாங்கள் இவ்வளவுபேர் இருக்கும் சபையில் எங்களை விட்டு அந்த குழந்தை உன்னைத் தேடி வர காரணம் என்ன இதோ நிற்கும் பெண் உன் மனவி என்பதற்கு சந்தேகம் இல்லை அவளை அழைத்துச் சென்று சந்தோசமாய் வாழும் என்று சொல்ல ஆனந்தன் என்ன சொல்வானுனல்

அய்யாவே ஊரவரே இந்த
அடியேனுட வார்த்தைகேளும்
615 தாய்தந்தை குருதெய்வம் நல்ல
சத்தியமாய் எந்தனுக்கு
மாலைமணம் ஆகவில்லை இது
மாயாசால வித்தையிது
என்றுசொல்லி ஆனந்தனும் அப்போ
920 ஏங்கிமனம் வாடலுற்றுன்
கண்ணீர் சொரிந்திடவே நல்ல
கதிரோனும் தான்மறைந்தான்

(தீர்வுகாண முடியாமல் ஊரார் இருவரையும் மடத்தில் தங்கி இரவினைக் கழிக்கச்சொல்லுதல்)

இப்படியாக ஆனந்தன் சொன்ன வார்த்தையை கேட்டு ஊரவர்கள் ஒருவர்க்கொருவர் ஆலோசனை செய்யும் சமயம் ஆதித்தன் மறையவும் எல்லோரும் ஒன்றுகூடி நாளை உதயத்தில் இந்த இருபேர்க்கும் பதில் கூறுவோம் இவர்கள் இருபேரையும் இந்த மடத்தில் வைத்துப் பூட்டுங்கள் என்று நாட்டாமைக்காரர் சொல்ல அப்படியே இருபேரையும் மடத்தில் அழைத்து அவரவர் வீடு சேர்ந்தார்கள். இப்படியிருக்கும்போது நீலியானவள் ஏது செய்தாள் ஆனுல்

(நினைத்தவாறே நீலி ஆனந்தனைப் பழிவாங்கிவிடுதல்)

வேளைஎப்போ சமயமென்று அங்கே
வீற்றிருந்தாள் மாயநீலி

925 சாமம் நல்ல சாமத்திலே — நல்ல
சரிசாம வேளையதில்
ஏமசாம வேளையிலே — நல்ல
இலைகுலுங்கா வேளையதில்
நஞ்சிதின்று நெஞ்சறுக்கும் — அந்த
930 நடுச்சாம வேளையதில்
மாயநீலி சண்டாளி — அந்த
மைந்தன்தன்னை ஏதுசெய்தாள்
பூமியதில் அடித்திடவும் — பிள்ளை
போனதய்யா கள்ளிக்கொப்பாய்

இப்படியாக அந்த நீலியானவள் பிள்ளையை பூமியில் அடித்த உடன்அந்த பிள்ளையானது கள்ளிக்கொப்பாக மாறவும் இதுதான் சமயம் என்று சண்டாளி நீலி ஏதுசெய்தாள் ஆனால்

935 ஆங்கார கோபத்துடன் — அந்த
அடங்காத நீலியவள்
பழிக்கிநல்ல பழிகொடடா — நல்ல
பழிகார வேதியனே
என்று சொல்லி மாயநீலி — அப்போ
940 ஏதுசெய்தாள் அந்நேரம்
(அவன்) நெஞ்சிமேல் ஏறியல்லோ — அப்போ
நேராகத் தான்கிழித்தாள்
ஈரக்குலை தாமரக்காய் — அவள்
எடுத்துமாலை போட்டல்லவோ
945 மடத்தைய்வள் தான்கடந்து — நல்ல
மாயநீலி குலவைபோட்டாள்

இப்படியாக அந்த நீலியானவள் ஆனந்தனைக் கொன்று ஈரக் குலை தாமரக்காய் மாலையிட்டு மடத்தை விட்டு வெளியே சென்று குரவை போட்டு நின்ற நேரம் சூரியன் உதயமானான் அதுகண்டு நீலியானவள் என்ன செய்தாள் ஆனால்

*(நீலி ஆனந்தனின் தாய்போல வடிவம்தாங்கி ஊரார் அனைவரையும் அஞ்சி ஓடச்செய்தல்)*

(பக்கப்) பழுத்தநல்ல கிழவியைப் போல் — அந்த
பழிகார கோலம் கொண்டு
தோலும் நல்ல நரம்புகளும் — நல்ல
950 தொங்கியதோர் கன்னங்களும்

---

943 ஈரக்குலை தாமரக்காய்—ஈரல், இருதயம் முதலானவை

தள்ளாடி தடிபிடித்து அவள்
மெள்ள மெள்ள தான்நடந்து
பழகைநல்லூர் தன்னதிலே அந்த
பழுத்தகிழவி வந்தல்லவோ
955 என்ன என்ன செய்தாள் ஆனால் நல்ல
ஏற்றதொரு கிழவியவள்
என்மகனே ஆனந்தா நீதான்
எங்குசென்றாய் நானறியேன்
தாயுக்கொரு பிள்ளையாக மகனே
960 சண்டாளி வளர்த்தேனே
கண்ணாக உனைவளர்த்து இந்த
கானகத்தில் விட்டல்லவோ
மகனே உன்னை நான் வளர்த்து இந்த
மறுதேசம் விட்டல்லவோ
965 சண்டாளி நான் உலகில் பாவி
தனித்திருந்து வாழலாமோ

என்று ஏங்கி கண்ணீர் விட்டுக் கதறி பழகைநல்லூர் வந்து அங்குள்ள பாலரிடம் என்ன கேட்டாள் ஆனால் வாருங்கள் அன்புடைய பாலர்களே என்மகன் ஆனந்தன் யாபாரம் கொண்டு இந்த ஊர் வரக் கண்டீர்களா என்று கேள்க்க அப்போது அங்குள்ள பாலர்கள் நேற்று யாரோ ஓர் ஆணும் ஓர் பெண்ணும் ஒரு குழந்தையும் வந்தார்கள் அவர்களைப் பற்றி அம்பலக்காரர் இடம் கேட்டால் தெரியும் என்று சொல்ல சண்டாள கிழவி அம்பலக் காரரைத் தேடி அவரிடம் என்ன கேட்டாளானால்

அய்யாவே பெரியவரே எந்தன்
அருமைமகன் ஆனந்தன்தான்
யாபாரம் செய்வதற்கு இங்கே
970 நலமுடனே வந்ததுண்டா
என்று கேள்க்கும் வேளையதில் அப்போ
ஏதுசொல்வார் அம்பலத்தார்
வாருமம்மா மாதாவே ஒரு
வார்த்தையது சொல்லக்கேளு
975 ஆனந்தன் செட்டிக்கு தான் நல்ல
அருமையுள்ள மனவியுண்டா

என்று அம்பலக்காரர் கேள்க்க அந்த மாயக்கிழவியானவள் என் மகனுக்கு மணமுடிக்கவில்லை அவன் பெண் முகம் அறியாதவன் என்று சொல்ல அம்பலக்காரர் யோசித்து ஆனந்தனும் அவனுடன் ஓர் பெண்ணும் பிள்ளையுமாக வந்தார்கள் அந்தப் பெண் ஆனந்தனை கணவன் என்றும் அந்தக் குழந்தை அவனுடைய

தென்றும் சொன்னுள் ஆனந்தன் மணமுடிக்கவில்லையா சத்தியமாய் சொல் பொழுது போனபடியால் நாளை விசாரிப்போம் என்று ஊர் மடத்தில் வைத்திருக்கிறோம் வாரும் என்று அழைத்து வந்து

ஊரார்கள் கூடிவந்து அந்த
ஊர்மடத்தை தான்திறந்தார்
தாழிட்ட கதவுதன்னை அவர்
980 தான்திறந்து பார்க்கும்போது
ஆனந்தன் மடிந்ததை தான் அங்கே
யாவருமே பார்த்தபோது
பெண்தனேயே காணுமல் அவர்
பேசுதற்கு நாவோஇல்லை
985 பார்த்தாளே கிழவியவள் நல்ல
பாலகன்தன் படுகளத்தை
அடித்து நல்லோ துடித்தாளே அப்போ
அலறியவள் ஓடிவந்து
வாரிநல்லோ எடுத்தல்லவோ மகனே
990 மார்போடு தான்அணைத்து

அடே என்மகனே ஆனந்தா சண்டாளி நான் உன்னே தனியே போகவேண்டாம் என்று சொன்ன வார்த்தை கேளாமல் என்னேத் தனியாக்கி இந்த பழகைநல்லூரார் கையால் மாண்டாயோ மகனே என்று

பழிகார நீலியவள் அங்கே
பதறியவள் தான்அழுதாள்
என்மகனே ஆனந்தா உனக்கு
இந்தவிதி வந்ததென்ன
995 காற்றடிக்க சம்மதியேன் மகனே
காலனுக்கோ நான்வளர்த்தேன்
பச்சைக்குடம் உடைப்பாயென்று நான்
பாலூட்டி வளர்த்தேனே
(என்வாயில்) அரிசியது இடுவாய் என்று உன்னே
1000 அன்புடனே வளர்த்தேனே
கணவனுக்குப் பின்னுலே எந்தன்
கண்மணியே தஞ்சமென்று
எண்ணியதோர் என்வயிற்றில் இப்போ
ஈரமண்ணைப் போட்டாயே

997 பச்சைக்குடம்-கொள்ளிக்குடம் 999 அரிசியது-வாய்க்கரிசியை

1005 கொள்ளிவைக்கும் பிள்ளையைத்தான் இப்போ
குலைசெய்தார் பழகையூரார்
பழிக்குப்பழி வாங்காமல் நான்
பழகைவிட்டு போவதில்லை

ஏ சண்டாள பழகைநல்லூராரே என் மகன் ஆனந்தனை நீங்கள் குலைசெய்ததால் ஒரு குலைக்கு இந்த ஊர் அத்தனையும் கருவின் பிள்ளை முதலாக குலை செய்யாது போவதில்லை என்று ஆங்காரமாய் சத்தமிட்ட கிழவியின் வார்த்தை கேட்ட ஊரார்கள் ஆணும் பெண்ணும் பிள்ளைகளும் நாடுவிட்டுஓடவேண்டும் என்றுஎண்ணிய சமயம் கிழவி ஏதுசெய்தாள் ஆனல்

ஆங்கார கோபத்துடன் அப்போ
1010 அதட்டியவள் கூச்சலிட்டாள்
பார்த்தார்கள் ஊரவர்கள் அந்த
பழிகாரி கோபமதை
ஊருவிட்டு ஓடுதற்கு அந்த
ஊரார்கள் பயணமானுர்

அந்த சண்டாளி கோபத்தை அறிந்த ஊரார்கள் என்ன செய்தார்கள் ஆனல் அந்த மாயக் கிழவியைக் கண்டபோது

1015 கரம் குவித்து சேவிப்போரும்
காடு தேடி ஓடுவோரும்
பாதமதை பணிந்தல்லவோ
பாழும்வனம் ஓடுவோரும்
நாங்கள் ஒன்றும் அறியோம் என்று
1020 நாடுவிட்டு ஓடுவோரும்
தெரியாது தாயேஎன்று
தேசம்விட்டு ஓடுவோரும்
பெண்டுடனே பிள்ளைவிட்டு
பெருவனமேஓடுவோரும்
1025 மன்னன்தனை மறந்தல்லவோ
மங்கையர்கள் வோடுவதும்
பிள்ளைதனை மறந்தல்லவோ
பெற்றதாய்கள் ஓடுவதும்
தலைவாசல் அடையாமல்
1030 தனியேவழி ஓடுவதும்
கன்றிழந்து மாடிழந்து
காடுதேடி ஓடிடவும்

இப்படியாக பழகைநல்லூர் சனங்கள் யாபேரும் அரண்மனை விட்டு காடு செடி வனம் வனந்திரம் தேடி ஓடவும் அதைக்கண்ட மாயநீலி ஏதுசெய்தாளானல்

ஓடஓட விரட்டுகிருள் அந்த
ஊரில்உள்ள சனங்களைத்தான்
1035 நாடுநகர் தான்கடந்து நல்ல
நடுவனத்தில் வந்துசேர்ந்து
கால்கைதான் நடுங்கியல்லோ அவர்
கானகத்தில் வாடுகிருர்
அடர்ந்தநல்ல செடிமறவில் நல்ல
1040 அங்கம்வாடி தானிருந்தார்

அம்பலக்காரரின் மகள் வடிவில் நீலி செய்த வஞ்சனையால் ஊரார் அனைவரும் மடிதல்)

இப்படியாக அடந்த வனத்தில் கண்ணீர்விட்டு கதறி அலையும் போது மாயநீலி ஏதுசெய்தாள் ஆனுல் இவர்களை பழிக்குப்பழி வாங்காமல் விடக் கூடாதென்று பழகை நல்லூரை அழிக்க வேணும் என்று என்ன செய்தாள் ஆனுல் பச்சைபபானை உண்டு பண்ணி கள்ளிப்பால் கறந்து அம்பலக்காரர் மகள்போல் வடிவம் கொண்டு

சண்டாள மாயநீலி அவள்
தனிவனமே தேடிவாருள்
மோர்பானை தலையில்வைத்து அவள்
முகனையுடன் தான்நடந்தாள்
1045 கானகத்தில் வந்தல்லவோ அப்போ
கண்டாளே ஊராரை
கண்டவுடன் மாயநீலி அந்த
கட்டழகி ஏதுசொல்வாள்
அண்ணமாரே தம்பிமாரே எந்தன்
1050 அக்காள்தங்கை தாய்மாரே
சண்டாள பாவியாலே இந்த
தனிவனத்தில் அலையணுமோ

என்பிறவி அண்ணமார்களே அக்காமார்களே தம்பிதங்கை தாய் தகப்பமார்களே அந்த சண்டாளி கிழவியானவள் நாள் எட்டாணுலும் பழக நல்லூர் வாழ்ந்தவர்களை என் பிள்ளை பழிக்கு

1039. செடிமறவிம்-செடிமறைவில். 1044. முகனையுடன்—முனைப்புடன்.

பழிவாங்காமல் போவதில்லே என்று ஊர்மடத்தில் அமர்ந்து இருக்கிருள் நான் அவளுக்கு தெரியாமல் எல்லோரும் தாகத்தால் வாடுவார்கள் என்று மோர் பானேயை தூக்கிவந்தேன் ஆகையால் சீக்கிரமா சாப்பிடுங்கள் என்றுசொல்லி

மோர்தன்னே கொடுக்கலுற்ருள் அந்த
மோசக்கார பெண்கொடிதான்
1055 ஊரில்உள்ள சனங்கள்எல்லாம் அதை
உண்மையென்று சாப்பிடவும்
ஆணும்பெண்ணும் பிள்ளேகளும் அங்கு
அன்புடனே சாப்பிடவும்
கள்ளிப்பால் சாப்பிட்டல்லோ அவர்
1060 கண்மூடி மரணமாஞர்
காயுடனே பிஞ்சிபூவும் நல்ல
கனிந்தநல்ல பழமுடனே
சகலரையும் கொன்றல்லவோ அந்த
சண்டாளி பார்க்கும் நேரம்

(இறுதியில் எஞ்சிய கிழவனேயும் பழி வாங்குதல்)

இப்படியாக பழகைநல்லூர் சனங்களே கள்ளிப்பால் கொடுத்து ஆண்பெண் பாலர்கள் சகலபேர்களேயும் கொன்றும் இன்னும் யார் இருக்கிருர் என்று பார்த்துவரும் சமயம் ஓர் தள்ளாடிய கிழவன் ஓர் நஞ்சை நிலத்தை ஏர்பூட்டி உழுதுகொண்டு நிற்பதை அறிந்து

1065 விடுவேனே கிழவனேத்தான் இவனே
விட்டுவிட போகுமோதான்
என்றுசொல்லி மாயநீலி அப்போ
எடுத்தாளே ஒருகோலம்
ஏருழுவோன் மகள்தனேப்போல் சண்டாளி
1070 இன்பமுடன் வடிவம்கொண்டு
கஞ்சிநல்ல கலசம்தூக்கி அவள்
கடுநடையாய் தான்நடந்தாள்
கிழவனேத்தான் கண்டபோது நல்ல
கிளிபோல்வாய் திறந்தல்லவோ

ஏ என்தகப்பா என்னகாலம் நமது பழகநல்லூருக்கு அனத்தம் வந்து யாரோ ஓர்கிழவி வந்து ஊரில் யாரும் இல்லாமல் கொன்று விட்டாள் நம்முடைய ஊர்பாழாகிவிட்டது நான் அந்த சண்டாளி கண்ணில் தென்படாமல் ஓடிவந்தேன் எப்படியோ

என்னைக் கண்டு விரட்டி வருகிறாள் ஆகையால் சீக்கிரம் பசி யாறுங்கள் பசிதீர்த்து பாவிகையால் மாண்டாலும் மோச்சமுண்டு என்று சொல்லி கிழவனை அழைக்க அந்த கிழவன்

1075 மகள்தானென்று மனதில்எண்ணி அவன்
வாரிஉண்டான் கூழுதன்னை
கூழுதன்னை உண்டுமல்லோ அப்போ
குணமுடனே ஏதுசொல்வான்
என்மகளே கண்மணியே இப்போ
1080 என்வார்த்தை தன்னைக்கேளு

அந்த சண்டாளி கிழவி சரத்தால் நான் மடிவதைப் பார்க்கிலும் உன் திருக்கரத்தால் மடிவது நன்மை ஆகையால் நான் இந்த சால்தடத்தில் படுத்துக் கொள்கிறேன் உன் கரத்தால் ஏரை ஓட்டி என் நெஞ்சைக் கிழித்துவிட்டு உன் உயிரையும் மாய்த்துக் கொள் என்று சொல்லி

சால்தடத்தில் தான்படுத்தான் அந்த
சண்டாளி ஏர் உழுதாள்
நெஞ்சிமேலே கொழுவைஏற்றி அப்போ
நேராக தான்கிழித்தாள்
1085 ஈரக்குலை தாமரக்காய் அவள்
எடுத்துமாலை போட்டல்லவோ
பாப்பானுல் அழிவாச்சி நல்ல
பழகைநல்லூர் அத்தனையும்
என்றுமவள் குரவையிட்டாள் அந்த
1090 இன்பமுள்ள நீலியவள்
(இனி) இங்கிருக்க கூடாது என்று
ஏகலுற்றாள் தென்னாடு

(நீலி தென்னாடு வருதல்)

அந்த நீலியானவள் நாம் யிப்படி யிருந்தால் நமது பேரும் கீர்த்தியும் தெரியாதென்று தென்னாடு தேடிவரக்கூடிய நேரம்

அடந்தவனம் தன்னதிலே நீலி
ஆதாளி போட்டுவாறாள்
1095 மலைவனங்கள் தான்கடந்து நல்ல
மதயானை போலவாறாள்
காடுசெடி தான்கடந்து அவள்
கதறிவாறாள் மாயநீலி

சாலைநல்ல பெருவழியில் அந்த
1100 சண்டாளி வந்தல்லவோ

அந்த நீலியானவள் சாலையில் வந்து ஓர் நிழலில் அமர்ந்து என்ன எண்ணம் கொண்டாள் ஆனால்

பத்துநல்ல வயதுடைய நல்ல
பாவையர் போல் வடிவெடுத்து
வண்டி தன்னை கண்டாள் ஆனால் அவள்
மனம்வாடி நிற்பவள்போல்
1105 என்பிறவி அண்ணாவே இந்த
ஏந்திழையாள் வார்த்தை கேளு
கடுநடைநான் நடந்ததாலே என்
கால்கள் எல்லாம் நோகுதண்ணா

ஆகையால் உன்னுடன் பிறந்த தங்கைபோல் என்னை நினைத்து கொஞ்சதூரம் வண்டியில் ஏற்றிச் செல்லவேணும் என்று சொல்ல அந்த வண்டிக்காரன் ஏது சொல்வான் ஆனால்

அதிகபாரம் வைத்திருக்கேன் இதில்
1110 ஆள்ஏற்ற முடியாது
மங்கையே நீ இருந்தாயானால் எந்தன்
மாடதுதான் இழுக்காது
என்றுசொல்லி போகும்போது அப்போ
ஏதுசெய்வாள் மாயநீலி
1115 சக்கரத்தை தான்பிடிப்பாள் வண்டியை
தான்திருப்பி விட்டிடுவாள்
தெற்கேபோகும் வண்டிகளை சண்டாளி
வடக்கே நல்லோ திருப்பிடுவாள்

இப்படியாக சாலையில் வரும் வண்டிகளை திசைமிரட்டி விட்டு வம்பு செய்து கொண்டு இருக்கும் போது மற்றொரு வண்டியைக் கண்டு அவசரமாய் வந்து

அண்ணா அண்ணா என்பிறவி இந்த
1120 அடியாளின் வார்த்தைகேளு
தூரவழி நான்நடந்து எந்தன்
துடையதுதான் நோகுதண்ணா
உன்னுடைய வண்டியதில் நான்
உக்கார்ந்து தானிருப்பேன்
1125 மங்கைதன்னை யேற்றி சென்றால் உனக்குஇந்த
வையகத்தில் லாபமுண்டு

அனுதி தன்னை ஏற்றிசென்றால் நல்ல
அதிகலாபம் உனக்குஉண்டு

என்று சொல்லிய வார்த்தை கேட்டு வண்டிக்காரன் என்ன சொல்வானுனால் என் வண்டியில் பாரம் அதிகமாய் வைத்திருப்பதால் கோட்டைக்குள் எப்படி போவதென்று மனம்வாடி வரும்போது உன்னையும் ஏற்றினால் என்கெதி எப்படி முடியுமோ என்று சொல்ல அதைக்கேட்ட நீலி மறு படியும் ஏதுசொல்வாள்ஆனால்

ஒன்றுக்கும் நீர் அஞ்சவேண்டாம் இந்த
1130 உற்றபிள்ளை நான் இருந்தால்
கோட்டை பக்கம் போகும்போது நான்
குதித்திடுவேன் பூமியிலே
(நீர்) கோட்டைக்குள் போகும்போது ஒரு
குற்றமதும் நேராது
1135 கன்னியுட வார்த்தைதனை நம்பி
கவலையற்று போய்விடலாம்

என்று சொன்ன வார்த்தை கேட்டு அந்த வண்டிக்காரன் சந்தோசமாய் வண்டியில் ஏற்றிவரும் போது

(நீலி முப்பந்தல் இசக்கியாக நிலையம் கொள்ளுதல்)

சாலைவழிதான் கடந்து அப்போ
தானேவாருள் மாயநீலி
ஆரும்பள்ளி கோட்டைகண்டு அவள்
1140 ஆனந்தம் கொண்டல்லவோ
முப்பந்தல் தன்னைக்கண்டு நல்ல
முகனையுடன் தானிறங்கி
வண்டிக்காரன் தனையழைத்து அந்த
மங்கைவாக்கு தான்கொடுத்து
1145 முப்பந்தல் தன்னதிலே நல்ல
மூர்க்கமுடன் கொலுவிருந்து
வாறபேரை போறபேரை அவள்
வலியமுந்தி பிடித்திழுப்பாள்
நேரமறியாமல் வாறபேரை சண்டாளி
1150 ரெத்தங் கக்க அடிக்கிறதும்
சூலிகளை பாலிகளை அவள்
துடந்துநல்ல பிடிக்கிறதும்

1127. அனுதி,—நாதியற்றவள், அனாதை
1139. ஆரும் பள்ளி—ஆரல் வாய்மொழி

வண்டிகளை மறிக்கிறதும் அவன்
வாங்குவதும் காணிக்கைகள்
1155 இன்பமுடன் வாறபேரை நல்ல
இருகரத்தால் வாழ்த்துவதும்
பாதமது பணிபவரை அவள்
பால் வெண்ணீர் கொடுக்கிறதும்
துஸ்டர்களை கண்டாள் ஆனால் உடன்
1160 தூக்கியவள் அடிக்கிறதும்
முப்பந்தல் இசக்கிஎன்று நல்ல
மூவுலகும் பேர்பெற்றல்லோ
வருசம் ஒரு திருநாளும் அவளுக்கு
வகைவகையாய் காணிக்கையும்
1165 மாப்பிள்ளை மஞ்சப்பிள்ளை நல்ல
வகையுடனே சேலைப்பிள்ளை
தேரோடும் திருநாளும் அங்கே
சிறப்புடனே தான் நடக்க
அண்டியபேர் தன்னை காத்து நல்ல
1170 அம்மையவள் வாழ்ந்துவாறாள்
ஆலதுபோல் தான்தழைத்து அங்கே
அறுகதுபோல் வேரூன்றி
மூங்கில் போல் அன்னசுற்றம் நல்ல
முப்பந்தல் இசக்கி வாழ்ந்து வாறான்;

**நீலிகதை முற்றிற்று.**

---

1158 பால் வெண்ணீர்—பால்வெண்ணீறு
1165-66. அம்மைக்கு நேர்த்திக்கடனாகச் செலுத்தப்படுவன

## சொல் அகராதி

(எண்: பக்க எண்)

# தமிழ்ப் பதிப்பக வெளியீடுகள்